அனைத்திந்திய நூல் வரிசை

# பணீஷ்வர்நாத் ரேணு கதைகள்

தொகுப்பு
பாரத் யாயாவர்

தமிழாக்கம்
டாக்டர்.எச். பாலசுப்பிரமணியம்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ISBN 81-237-2509-4

முதற்பதிப்பு 1998 (சக 1920)


Phanishwarnath Renu Ki Shreshtha Kahaniyan (*Original Title in Hindi*)
Phanishwarnath Renu Kathaikal (*Title in Tamil*)

ரூ. **85.00**

வெளியீடு: இயக்குநர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
ஏ-5, கிரீன் பார்க், புதுதில்லி 110 016

# உள்ளடக்கம்

# முகவுரை

*இந்திச் சிறுகதை தன்னுடைய வளர்ச்சிப் பயணத்தில் பல பாசறைகளை - கட்டங்களைக் கடந்துவிட்டது. முதற்கட்டத்திலேயே பிரேம் சந்த் போன்ற கதைச் சிற்பிகளின் கைவண்ணம் பெற்றுவிட்ட இது ஓர் உச்சியை எட்டிப்பிடித்தது. பிரேம்சந்த் தன் படைப்புகளின் மூலமாக புதுப்புதுக் கதைக்களங்களை இந்திச் சிறுகதையில் முதன் முதலாகப் புகுத்தினார்; கதை சொல்லும் பாணியிலும் அவர் புதுப்புது உத்திகளைக் கையாண்டார். பிரேம்சந்தைத் தொடர்ந்து வந்த ஜைனேந்திர, அஜ்ஞேய, யஷ்பால் போன்ற படைப்பாளிகள் இந்திச் சிறுகதைக்குப் புதிய பரிமாணங்களை அளித்தனர். பிரேம்சந்தின் பாணியிலிருந்து சற்று விலகி இவர்கள் நகர்ப்புற வாழ்க்கையின் நுணுக்கங்களை மனவியல் அடிப்படையில் கலைத்திறனுடன் படம்பிடித்துக் காட்டினர். ஆனால் பிரேம்சந்தின் பாரம்பரியத்தை அதன் யதார்த்த உருவில் காத்து, மாறிவரும் சமூகச் சூழ்நிலைக்கு ஏற்ப அதற்கு புதுப் பொலிவும், உயிரோட்டமும் அளித்த பெருமை பணீஷ்வர்நாத் ரேணுவையே சாரும். ரேணு, இந்திச் சிறுகதையின் இரண்டு கால கட்டங்களுக்கு நடுவில் ஓர் இணைப்புப் பாலம்போலத் திகழ்கின்றார். அதாவது, பிரேம்சந்த், ஜைனேந்திர, அஜ்ஞேய, யஷ்பால் இவர்களது காலத்தையும், சுதந்திரத்துக்குப்பின் மலர்ந்த புதுக்கதை யுகத்தையும் இணைக்கும் ரேணு, மேற்குறித்த இரு காலகட்டங்களின் பிரதிநிதியாக விளங்குகிறார். எனவே, ரேணுவை அஜ்ஞேய, யஷ்பால் போன்ற மூத்த படைப்பாளிகளின் வரிசையிலும் சேர்க்கலாம்; அதேசமயம் 'புதுக்கதை'களைப் படைப்பவர்களின் வரிசையிலும் சேர்க்கலாம்.*

*ரேணுவின் புகழ்பெற்ற புதினம் 'மைலா ஆஞ்சல்' 1954 ஆகஸ்டு மாதம் வெளிவந்தது. இதற்குச் சரியாகப் பத்தாண்டுகளுக்கு முன் 1944 ஆகஸ்டு மாதம் அவருடைய முதல் சிறுகதை 'வட் பாபா' (ஆலமரத் தாத்தா) கல்கத்தாவிலிருந்து வெளியாகும் 'விசுவாமித்திர' வார இதழில் பிரசுரமாயிற்று. அதாவது 'மைலா ஆஞ்சலு'க்குப் பத்து வருடங்கள் முன்பிருந்தே ரேணுவின் கதைகள் பல்வேறு இதழ்களில் வெளியாகத் தொடங்கின. அவருடைய முக்கியமான படைப்புகள், ஐம்பதுகளில் பிரசுரமாயின. இந்தக் கதைகளை இன்று மதிப்பிடும் போது ஒரு விஷயம் தெள்ளத் தெளிவாகப் புலனாகிறது. 'மைலா*

ஆஞ்சல்’, ‘பர்த்தீ பரிகதா’ போன்ற தரமான புதினங்கள் படைக்க விருக்கும் முதிர்ந்த கதைச் சிற்பியின் விழிப்பு மிகுந்த கலைக் கண்ணோட்டம், ஆழ்ந்த மனித உணர்வுகள், மாறிவரும் சமூக- அரசியல் ஆதுர்சங்களைக் கையாள்வதில் உறுதியான பிடிப்பு ஆகிய இயல்புகள் தொடக்ககாலக் கதைகளில் இம்மியளவும் குறையாமல் அப்படியே காணக் கிடைக்கின்றன; ஆம், இந்தக் கதைகளில் மகத்தான படைப்பாளியாக உருவாகும் இவரது ஆற்றல் பிரதிபலிக்கக் காண கிறோம். ஆனால் ‘மைலா ஆஞ்சல்’, ‘பர்த்தீ பரிகதா’ போன்ற படைப்புகளுக்குக் கிடைத்த அமோக வரவேற்பு மற்றும் அதே நேரத்தில் அவ்விரு புதினங்கள் குறித்து தொடக்கத்தில் எழுந்த சர்ச்சைகள், விவாதங்களின் விளைவாக ரேணுவின் சிறுகதைகள் சரியாக மதிப்பீடு செய்யப்பெறவில்லை.

இந்திக் கதைகளின் மரபில் பணீஷ்வர்நாத் ரேணுவின் கதைகள், கட்டமைப்பிலும், இயல்பிலும், வடிவமைப்பிலும், சுவையிலும் தனித் துவம் பெற்று விளங்குகின்றன. உண்மையாகவே ஒரு புதிய கதைமரபு ரேணுவிடமிருந்து தொடங்குகிறது. இவருடைய கதைகள் பிரேம்சந்த் உருவாக்கிய அதே நிலைக்களனில் அமைந்தபோதிலும், பிரேம்சந்தின் படைப்புகளினின்றும் மாறுபட்டவை; அதே நேரத்தில் உடனொத்த கதாசிரியர்களின் படைப்புகளிலிருந்தும் வேறானவை. ஆகவே, ரேணுவின் கதைகளை உள்ளபடி மதிப்பீடு செய்ய புதிய அழகியல் கொள்கை வகுக்க வேண்டிய அவசியம் உள்ளது.

ரேணு குறிப்பாக நான்கு படைப்பாளிகளிடமிருந்து தூண்டுதல் பெற்றார். ருஷ்யக் கதைச் சிற்பி மிக்கைல் ஷொலோக்கோவ், வங்க மொழிக் கதாசிரியர்களான தாராசங்கர் பானர்ஜி, சதீநாத் பாதுரி, இந்திக் கதைச் சக்கரவர்த்தி பிரேம்சந்த். ரேணுவின் கதைகளில் இந்த நால்வரின் செல்வாக்கையும், தாக்கத்தையும் பரவலாகக் காணலாம். இன்னும் தெளிவாகக் கூறினால், பிரேம்சந்த் உருவாக்கிய கதைக் களனை ஏற்றுக்கொண்டு அதில் ஷொலோக்கோவின் பாணியில் பண்பாட்டுநயம் என்ற மெருகேற்றி, சதீநாத் பாதுரியைப் பின்பற்றி வடிவமைப்பிலே புதுமைகண்டு, தாராசங்கரின் வழியில் அதற்கு வட்டார வழக்கின் சுவையூட்டுகிறார் ரேணு. இதன் விளைவாக, பிரேம்சந்த் வடித்துத் தந்த அதே இந்திய கிராம சமூகச் சூழல் ரேணுவின் தூரிகை வண்ணத்தினால் மேன்மேலும் சுவையும், உயிரோட்டமும், புதிய பரிமாணமும் பெற்றுத் திகழ்கிறது.

‘புதுக்கதை இயக்கம்’ என்ற பெயரில் அறியப்படும் சுதந்திரத் துக்குப் பிந்தைய இந்திக் கதைப் பயணத்தின்போது கிராமப்புறக் கதை, நகர்ப்புறக்கதை என்ற சர்ச்சைகள் தீவிரமாக நடந்தன. ரேணு இந்த விவாதங்களுக்கு அப்பாற்பட்டு, தன்னைப் படைப்பாக்கத்தில் ஈடுபடுத்திக்கொண்டார். ஆகவே, அவருடைய கதைகள் காலந்தாழ்ந்து

தான் விமர்சகர்களின் கவனத்தை ஈர்த்தன. 'கஹானி' என்ற ஏட்டின் 1956ஆம் வருடத்திய சிறப்பிதழில் டாக்டர் நாம்வர்சிங் முதன்முறையாக ரேணுவைப் பற்றி இவ்வாறு குறிப்பிட்டார். "(பலதரப்பட்ட வட்டார மக்களின் வாழ்க்கையைச் சித்திரிக்கும்) இந்தக் கதைகள் உண்மையிலேயே புதுமையானவை. பிரேம்சந்த் அமைத்துத்தந்த நிலைக்களனில் உருவாகியுள்ளபோதிலும், இவை புதுமையும், தனிப் பொலிவும் பெற்று விளங்குகின்றன. பணீஷ்வர்நாத் ரேணு, மார்க்கண்டேய, கேசவமிச்ர, சிவப்பிரசாத் சிங் ஆகியவர்களின் படைப்புகள் இத்துறையில் புது நம்பிக்கைக்கு வழிவகுக்கின்றன." பின்னர், புதுக்கதை இயக்கத்தின் படைப்பாளிகளும் ரேணுவைத் தலைசிறந்த கதைச் சிற்பியாகக் கோடிட்டுக் காட்டினர். இவர்களில் ராஜேந்திர யாதவ், நிர்மல் வர்மா, பீஷ்ம ஸாஹ்னி, கமலேஷ்வர் முக்கியமானவர்கள். ரேணுவுக்குப் பத்தாண்டுகளுக்கு முன்பே இலக்கியத் துறைக்கு வந்து விட்ட யஷ்பால், அஜ்ஞேய ஆகிய மூத்த படைப்பாளிகளும் ரேணுவின் படைப்பாற்றலை வியந்து போற்றினர். ரேணுவின் சிறப்பை கமலேஷ்வர் இவ்வாறு விளக்குகிறார்—"இருபதாம் நூற்றாண்டின் இந்த சஞ்சயன் உரு, ஒளி, ஓசை, வடிவம் ஆகிய ஊடகங்களைப் பயன்படுத்தி 'மகாபாரதத்தின்' ஒட்டுமொத்தமான யதார்த்தத்தை, அதில் காணும் உண்மை—போலிகள், ஏற்றம்—குறைகள், அன்பு, பாசம்—வெறுப்பு, துவேஷங்கள், விபத்துகள்—போராட்டங்கள், ஆதங்கங்கள்—ஆக்ரோஷங்களை உள்ளபடியே வருணிக்கிறார். இவருக்கு வேதவியாச முனிவரின் பரிபூரணமான ஆசியும், அருளும் இருக்கிறது". ரேணுவை 'மண்ணின் செல்வர்' என்று புகழ்கிறார் அஜ்ஞேய. ரேணுவின் மானுடக் கண்ணோட்டத்தைக் கோடிட்டுக் காட்டுகையில் நிர்மல் வர்மா, 'இன்றைய கதாசிரியர்களுள் ஒரு தவச்செல்வர்' என்று போற்றுகிறார். "பீகாரின் சிறுநிலப்பரப்பு என்னும் உள்ளங்கைக்குள் இவர் வடமாநிலங்களில் வாழும் விவசாயிகளின் தலையெழுத்தைத் துல்லியமாகக் குறிக்கிறார்," என்று அவர் எழுதுகிறார்.

இந்திக் கதையின் வரலாற்றில் ரேணு பெற்றுள்ள உயரிய மதிப்பினை இந்திக் கதையுலகின் தலைசிறந்த படைப்பாளிகள் ஏகோபித்த குரலில் ஒப்புக் கொள்கின்றனர். விமர்சனத்துறையில் டாக்டர் நாம்வர்சிங்கை அடுத்து டாக்டர் சிவசாகர் மிச்ர முக்கியமான புள்ளி. "பிரேம்சந்துக்குப் பிறகு இடைப்பட்ட காலத்தில் கதைக்கருவில் மத்தியதர நகர்ப்புற வாழ்க்கை மையம் பெற்ற காரணத்தினால், இந்தியப் பண்பாட்டின் ஆத்மாவிலிருந்து அற்றுப்போன கதை இலக்கியத்தை மீண்டும் பிரேம்சந்தின் பாரம்பரியத்துடன் சேர்த்த படைப்பாளிகளில் ரேணு முக்கியமானவர்" என்று 'பிரேம்சந்தின் பாரம்பரியமும் பணீஷ்வர்நாத் ரேணுவும்' என்னும் தமது நூலில் அவர் எழுதுகிறார். இந்த நோக்கில் ரேணு இந்தி மொழியின்

தலைசிறந்த படைப்பாளிகளின் முன் வரிசையில் எண்ணப்படுவதைக் காண்கிறோம். அவருடைய சிறப்பு ஐயத்துக்கு இடமின்றி மேலோங்கி நிற்கிறது.

இப்போது ரேணுவின் படைப்புகளின் அடிப்படைச் சிறப்புக் களை ஆராயலாம்.

'உயிரில் கலந்துள்ள உல்லாசத்தை', 'உள்ளத்தின் களியாட்டத்தை' அதாவது மனிதனின் விருப்பு—வெறுப்புகளை, அன்பினை, துன்பம் மற்றும் இரக்க உணர்வினை, மகிழ்ச்சி மற்றும் வேதனை உணர்ச்சி களை ஒருங்கிணைத்துக்கொண்டு 'ஆன்மாவின் சிற்பி'யாகச் செயல் படும் படைப்பாளி ரேணு என்று அறுதியிட்டுக் கூறலாம். அத்துடன் அவர் ஓர் உறுதியான நிலைக்களத்தில், ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவினுள் மனித உள்ளத்தைத் திறம்படச் சித்திரிக்கிறார். ஆனால், அதே நேரத்தில் வட்டாரத்தன்மை என்னும் குறுநிலச் சூழலில், வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட காலக்கெடுவில் மூச்சுவிட்டுக் கொண் டிருந்தாலும் அவருடைய பாத்திரங்கள் அனைத்துலக சந்தர்ப்பத்தில் தற்கால வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றன. ரேணுவின் சிறப்பு வட்டார இலக்கியத்தில் அடங்கியது என்று கூறுவதைவிட மேலோங்கி யிருக்கிறது என்று கூறுவது பொருத்தமானதே.

ரேணுவின் மனம்—'மூன்றுபுள்ளி'களில் கண்டபடி 'கடுகுப் பொட்டலம்' போன்றது. அவர் தன்னுடைய கதைக்கோர்வையின் நடுவே வரும் வெற்றிடங்களை மும்மூன்று கடுகுமணிகளினால் நிரப்புகிறார். இந்த 'மூன்று புள்ளிகள்' அதாவது 'டாட்-டாட்-டாட்' தான் ரேணுவின் கதைகளில் மறைந்துநிற்கும் அந்தரங்க மனத்தின் ஒலிகள். இந்த இடத்தில்தான் அவருடைய படைப்பாளி மனம் ஒளிந்திருக்கிறது. இந்த இடங்கள் கண்களை உறுத்துவதில்லை, கதை யின் இயல்பான ஓட்டத்தை மட்டுப்படுத்துவதும் இல்லை; மாறாக, இவை சுவைமிக்க ரசக்குமிழ்களாகத் திகழ்கின்றன.

'செய்தித் தூதுவன்' என்ற கதையில் வரும் ஹர்கோவிந்த் போலவே கிராமப்புற வட்டாரத்தில் துயரக் கடலில் சிக்கித் தவிக்கும் ஆதரவற்ற பாத்திரங்களின் செய்தியை—உள்ளக்கிடக்கையை வாசகர்களின் முன் எடுத்துரைக்க வருகிறார் ரேணு. அவர்களுடைய வேதனை தோய்ந்த துயரங்களை, சோகக் குமுறல்களை தமது உள்ளத்திலே தாங்கிக்கொண்டு, அவற்றைப் பொருத்தமான சொற் களில், உரையாடல்களில் வடிக்க முடியாமல் அவர் திணறுகிறார். ஆனால், கடைசியில் எவ்வாறோ உள்ளுணர்ச்சியின் முழுமையான வெளியீடு நிறைவேறிவிடுகிறது.

ரேணு மானுடனின் லீலைகளை உணர்ச்சிப்பூர்வமாகச் சித்திரிக் கிறார். இத்துறையில் அவருடைய கவனம் செல்லக் காரணம் என்ன? மனிதனின் வாழ்க்கைப் போராட்டங்கள், இல்லாமை—இயலாமைகள்.

இவற்றுக்கிடையே மனிதனின் இந்த 'லீலை'தான் அவனுடைய வாழ்க்கைக்கு ஆதாரமாக நின்று, அதை உடைந்து போகாமல் பாது காக்கிறது; அத்துடன், அவனுடைய போராட்ட மனப்பான்மையை வளர்க்கிறது. ரேணுவின் ஒரு படைப்பின் தலைப்பே 'நித்ய லீலா'தான். மனிதனின் இந்த லீலா விநோதத்தை அவருடைய 'டும்ரி' பாங்கான கதைகளில் மிகையாகவே காணலாம். அவருடைய படைப்புகளில் இரண்டு எதிரிடையான உணர்ச்சிகள் ஒரே நேரத்தில் எழுந்து மோது கின்றன. விளைவு, நிராசைச் சூழல் உருவாகும் அதே நேரத்தில் மறு பக்கம் உற்சாகமும், களிப்பும் எக்காளமிடுகின்றன. இதற்கு நடுவிலே இயற்கையின் புதிய பொலிவும் சோபையும் அர்த்தமுள்ளதாக வெளிப் படுகின்றன. வாழ்க்கை மற்றும் இயற்கையின் மெல்லிதான கோடு களால் உருவான இக்கதைகள் வாசகர்களின் உள்ளத்தில் கீதத்தின் நாதம்போல ஒலிக்கின்றன. 'ஒரு நீசமான அவலக் கதை'யில் அகப்பட்ட வாழ்க்கையின் சித்திரிப்புகூட ஊக்கமளிப்பதாக அமைகிறது.

சின்னாபின்னமாகச் சிதைந்துகொண்டிருக்கும் ஆதர்சங்களை— நொறுங்கும் வாழ்க்கை இலட்சியங்களை ரேணு தன் கதைகளில் வேதனையுடன் எடுத்துக்காட்டுகிறார் (உருக்குலையும் கணங்கள்); அதே நேரத்தில் இன்னும் இரண்டடி முன்னே சென்று புதிய ஆதர்சங் களுக்கு உருவம் கொடுப்பதிலும் முனைப்பாக நிற்கிறார். 'ரஸப்ரியா', 'ஆத்ம சாட்சி', 'உருக்குலையும் கணங்கள்', 'உச்சாடன மந்திரம்' போன்ற கதைகளில் அவர் மாறிவரும் கிராம வாழ்க்கையின் யதார்த்தத்தைப் புதிய கோணத்தில் திறந்து காட்டுகிறார். பழைய கோட்பாடுகள் உருக்குலைந்து சிதறுவதைக் கோடிட்டுக் காட்டும் இக்கதைகள் மனித உள்ளத்தின் மோனம் நிறைந்த அலறலையும் வெளிப்படுத்துகின்றன. மாறிவரும் சூழ்நிலையைச் சித்திரிக்கையில் ரேணுவின் படைப்பாளி இதயம் இரக்கத்தினால், கருணையினால் கசிந்துருகிக் காணப்படுகிறது. இந்த நிலைமைகளை அவர் அவலம் நிறைந்த கதைகளாகக் கருதுகிறார். அச்சமுற்று நடுங்கும் இன்றைய கிராமச்சூழலில் ரேணு 'பயில்வானின் மத்தள'த்திலிருந்து எழும் 'கமக ஒலி'யைக் கேட்க விரும்புகிறார். 'தனித்தே நட மகனே' என்ற கதையில் வருவதுபோல நிலத்தகராறுகளையும், சச்சரவுகளையும் தீர்ப்பதற்காக உயிரைத் தியாகம் செய்த கிஸன் மகாராஜ் ஏற்படுத்திக் கொண்ட சரியான மானுடப் போராட்டப் பாதையில் ரேணு முன்னேற விழை கிறார். 'ரஸப்பிரியா'வின் பஞ்ச்கௌடி மிருதங்கக்காரன், 'திரை மறைவில் நடிகனி'ல் வரும் பார்சி நாடகக்கலைஞர், 'சுவர் சித்திரத்துப் பெண்மயில்' கதையின் பெண்கலைஞர் அல்லது 'ரஸூல் மேஸ்திரி' என்ற தொழில் கலைஞர் போன்று திரைமறைவில் வாழும் நாடோடிக் கலைஞர்களுக்கும், தெருக்கூத்து நடிகர்களுக்கும் தன் கதைகளில் இடமளித்து ஏற்றம் தந்த ஒப்பற்ற கதைச்சிற்பி பணீஷ்வர்நாத் ரேணு.

ரேணுவின் கதைகளின் சூழல்கள் கிராம வாழ்க்கையிலிருந்து நகரவாழ்க்கை வரையிலும் விரிந்து பரந்தவை. புழுதி நிறைந்த, ஆரவமற்ற, எல்லையில்லாத பிரதேசங்களில் நாதியற்று வாழும் ஏழை எளிய மக்களின் துயர்மிகுந்த வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டும் அதே எழுதுகோல், எத்தனை நேர்த்தியாக நகர வாழ்க்கைச் சூழலில் 'டேபிள், 'தர்ம சங்கடம்', 'லீலை', 'கோடுகள்: வட்டங்கள்', 'தீ விழுங்கி' போன்ற கதைகளையும் தீட்டியுள்ளன.

ரேணுவின் கதைகள் ஒற்றைநாடி உடல்படைத்தவை அல்ல. ஒரு மூலக்கதையில் பல கிளைக்கதைகள் இணைந்திருக்கின்றன; முக்கியமான பாத்திரங்களுடன் பல்வேறு பாத்திரங்களும் இணைந்து எழுச்சி பெறுகின்றன. பரந்து விரிந்த காட்சியின் நடுவே அவர் தம்முடைய பாத்திரங்களுக்கு வண்ணம் தீட்டுகிறார்.

இந்தக் கதைகள் ஏதாவது ஒரு கருத்தையோ, ஆதர்சத்தையோ மையமாகக் கொண்டு பின்னப்பட்டவை அல்ல. இவை வாழ்வின் அப்பட்டமான யதார்த்தத்துக்குள் நம்மை மூழ்கடிக்கும் வலிமை வாய்ந்தவை, ஆகவே இக்கதைகளின் உட்கருத்தை யாரும் அத்தனை எளிதாகக் கண்டுகொள்ள இயலாது.

ரேணுவின் கதைச்சூழல் வாசகர்களுக்கு நன்கு பரிச்சயமானது தான், எனினும் அது கவர்ச்சிமிக்கது. அது மட்டுமல்ல, இவற்றில்வரும் சம்பவங்கள் புதிதாக நிகழ்வதுபோல கண்முன் விரிகின்றன. சூழல்களை ஊனும், உயிரும், வாசமும், ஓசையும் கலந்து உருவாக்கும் அவருடைய கைவண்ணம் அற்புதமானது. சாதாரண வாழ்க்கையில் நுகரக் கிடைக்காத சூழல் இது. இசைக் கலைஞர்கள் சங்கீத சாதகம் செய்யும்போது இசையுடன் வாசத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று யோசனை கூறுகிறார் ரேணு (மூன்று புள்ளிகள்). கீதமும் நாதமும் கலந்திருப்பதால் ரேணுவின் கதைகள் உயிரோட்டம் பெறுகின்றன. சில நேரங்களில் அது மௌன கீதமாகவும், மற்ற நேரங்களில் நாத கீதமாகவும் ஒலிக்கிறது.

ரேணுவின் மொழிநடை நாடோடி மொழி வழக்கு எனும் வளமான நிலத்தில் மிடுக்காக நடை பயிலுகிறது. இடைக்காலத்தில் தோன்றி மக்களிடையே வாழ்ந்த கபீர், சூர்தாஸ், துளசிதாஸர், மீரா, ஜாயஸி போன்ற பக்திச் செல்வர்களின் மொழிநடைக்கு அணுக்கமானது இந்த நடை. காட்டருவி வெள்ளம்போல் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கும் ரேணுவின் மொழிநடை, புதுப்புது ஓசைகளையும், சந்தத்தையும் பெற்று புதுமைகள் புரிகின்றது.

—பாரத் யாயாவர்

# பயில்வானின் மத்தளம்

நல்ல குளிர்காலம். அமாவாசை இரவு—குளிர் நடுக்கும் கரிய இரவு. மலேரியாவும், கொள்ளைநோயும் தாண்டவமாடும் அந்தக் கிராமம் பயம் கொண்ட சிசுவைப்போல வெடவெடவென்று நடுங்கிக் கொண் டிருந்தது. பழைய ஓலைக்குடிசைகளில் இருளும் நிசப்தமும் சேர்ந்து கொடுங்கோலோச்சுகின்றன! கும்மிருட்டு, பயங்கர நிசப்தம்.

இருள் நிறைந்த இரவு மௌனமாகக் கண்ணீர் வடித்துக் கொண் டிருந்தது. நிசப்தம் என்னும் காரிகை தீனமான விம்மல்களையும், விசும்பல்களையும் தன் உள்ளத்தினுள் அடக்கிக்கொள்ள முயன்று கொண்டிருந்தாள். ஆகாயத்தில் அங்கொன்றும், இங்கொன்றுமாக சில தாரகைகள் மின்னிக் கொண்டிருந்தன. பூமியிலோ பெயருக்கும்கூட ஒளியில்லை. உணர்ச்சிவசப்பட்ட ஒரு தாரகை பூமிக்கு வர எண்ணியது. ஆனால், அந்தோ! அதன் ஒளியும், ஆற்றலும் பாதி வழி யிலேயே இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டதே! மற்ற தாரகைகள் அதன் நெகிழ்ந்த நெஞ்சத்தைக் கண்டு—தோல்வியைக் கண்டு எள்ளி நகையாடின.

நரிகளின் ஓலமும், ஆந்தையின் அச்சுறுத்தும் கூப்பாடும் அவ்வப் போது நிசப்தத்தைக் கிழித்தன. கிராமத்துக் குடிசைகளிலிருந்து முனகல் ஒலி- இடையிடையே வாந்தி எடுக்கும் சப்தம்- 'ஹரே ராம்! சிவ சிவ! கடவுளே!' ஓலம். சில வேளைகளில் குழந்தைகளும் ஈனக்குரலில் 'அம்மா, அம்மா-' என்று அழுதன. ஆனால், இவற்றினால் இரவின் நிசப்தத்துக்கு எவ்வித இடைஞ்சலும் நேரவில்லை.

சுற்றுச் சூழலையும், வரக்கூடிய அபாயங்களையும் அறியும் கூருணர்வு நாய்களுக்கு உண்டு. பகல் முழுதும் சாம்பல் குவியல்களில் துணிமூட்டைபோல முடங்கிக் கிடந்தன. அந்தி மயங்கும் வேளை யிலும் நள்ளிரவிலும் கூட்டமாகச் சேர்ந்து அவலக் குரலில் அழுதன.

இரவு என்னும் அரக்கியின் பயங்கர ஆட்சி நடந்து கொண் டிருந்தது. அவளுடைய பயங்கர விளையாட்டை எதிர்க்க எவருக்கும் துணிவில்லை. வகையாகத் தாளம் போட்டு அதற்குச் சவால்விடும் துணிவு பயில்வானின் மத்தளத்துக்கு மட்டுமே இருந்தது. இரவின் முதல் சாமத்திலிருந்து பொழுது புலரும் வரை ஒரே கதியில் ஒலித்துக் கொண்டிருந்தது. 'சட்-தா, கிட்-தா- சட்-தா, கிட்-தா-' அதாவது 'வாடா-

பிடிடா, வாடா– மோதுடா!' இடையிடையே 'சடாக்-சட்-தா– சடாக்-சட்-தா!" — 'அலாக்கா எடு-டா– எடு-டா- புடை-டா!'

மரித்துக் கொண்டிருந்த அந்த கிராமத்தில் இந்த ஒலி சஞ்சீவி போல சக்தி அளித்துக் கொண்டிருந்தது.

லுட்டன்சிங் பயில்வான்!

"லுட்டன்சிங் பயில்வானை 'ஹோல்-இண்டியா'விலே எல்லாருக்கும் தெரியும்" என்று அவன் அடிக்கடி பெருமையடித்துக் கொள்வான். அவனுடைய கற்பனையில் 'ஹோல்-இண்டியா' என்பது ஒரு மாவட்ட அளவில் அடங்கியதாக இருக்கும். அதற்குமேல் விசாலமான இந்தியா அவன் கற்பனைக்கு எட்டாதது. இந்த அளவில் அவன் அகில இந்தியப் புகழ்வாய்ந்தவன்தான். அந்த மாவட்டத்தில் அனேகமாக எல்லாரும் அவனை அறிவார்கள்.

லுட்டனின் ஒன்பது வயதிலேயே தாய்தந்தையர் அவனை அனாதையாக விட்டுவிட்டு மேலுலகம் சென்றுவிட்டனர். அதிர்ஷ்டவசமாக அந்த வயசிலேயே 'கண்ணாலம்' கட்டியிருந்ததால் லுட்டன் பிழைத்தான். இல்லாவிட்டால் கவனிக்க நாதியற்று அவனும் அப்பா-அம்மா போனவழியே போயிருப்பான். விதவையான மாமியார்தான் அவனை வளர்த்துப் பெரியவனாக்கினாள். சிறு பிராயத்தில் லுட்டன் மாடு மேய்ப்பான், மாடு மேய்த்தவாறே கறந்த பாலை அதே சூட்டுடன் குடிப்பான். ஒழுங்காக தேகப்பயிற்சி செய்வான். எப்பொழுது பார்த்தாலும் தண்டால்-பஸ்கி எடுப்பான். கிராமத்து மக்கள் தனித்திருந்த லுட்டனின் மாமியாருக்குப் பல விதத்திலும் தொல்லை தந்தனர். உண்மையில் லுட்டன் தேகப்பயிற்சி செய்ய ஆரம்பித்ததே அவர்களைப் பழிவாங்கும் எண்ணத்துடன்தான். ஒழுங்காகப் பயிற்சி செய்ததால் இளமையிலேயே அவனுடைய புஜங்கள் திரண்டு வந்தன; உடல் வலிவும், வனப்பும் பெற்று விளங்கியது. பதினெட்டு வயதில் கிராமத்திலேயே சிறந்த பயில்வான் என்று பெயரெடுத்தான். கிராமத்தினர் லுட்டனைக்கண்டு அஞ்சலானார்கள். வீதியில் இறங்கியதுமே அவன் தன்னுடைய புஜங்களை நாற்பத்தைந்து டிகிரி அளவுக்கு விரித்து பெரிய பயில்வான்களைப்போல கம்பீரமாக நடைபோடுவான். அவ்வப்போது குஸ்திச் சண்டைகளிலும் ஈடுபடலானான்.

ஒருமுறை சியாம்நகர் மேளாவில் (திருவிழாவில்) குஸ்திச் சண்டை பார்க்கப் போயிருந்தான் லுட்டன். பயில்வான்கள் ஆர்ப்பாட்டமாக மற்போர் புரிவதைப் பார்த்துக்கொண்டு அவனால் சும்மா இருக்க முடியவில்லை. இளமைப் பருவத்துக்கே உரிய மதர்ப்பும், மத்தளத்தின்

சவால் விடும் ஓசையும் சேர்ந்து அவனுடைய நரம்புகளில் மின் சாரத்தைப் பாய்ச்சியது. முன்பின் யோசியாமல் அவன் போர்க் களத்தில் 'சிங்கக்குட்டி'யை மல்லுக்கு அழைத்தான்.

'சிங்கக்குட்டி'யின் நிஜப்பெயர் சாந்த்சிங். அவன் தன்னுடைய குருவான பயில்வான் பாதல் சிங்குடன் பஞ்சாபிலிருந்து முதல் முறையாக சியாம்நகர் திருவிழாவுக்கு வந்திருந்தான். அழகும், வலிமையும் வாய்ந்த இளைஞன். உடலின் ஒவ்வொரு அங்கத்திலும் இளமையின் வனப்பு சொட்டிக் கொண்டிருந்தது. மூன்று நாட்கள் தொடர்ந்து பல கோதாக்களில் இறங்கி தன்னையொத்த பஞ்சாபிய, பட்டாணிய பயில்வான்களை மண்கவ்வ வைத்து 'சிங்கக் குட்டி' என்ற பட்டத்தைப் பெற்றிருந்தான். ஆகவே, மைதானத்தில் லங்கோட்டி தரித்துக்கொண்டு அவன் அட்டகாசமாக ஓசை எழுப்பியவாறு மதர்ப்புடன் திரிந்து கொண்டிருந்தான். உள்ளூர் பயில்வான்களுக்கு அவனைக் கண்டதுமே உதறல் எடுத்தது. தன்னுடைய பட்டப்பெயரை ருசுப்படுத்துவதற்காக அந்த 'சிங்கக்குட்டி' இடையிடையே கர்ஜனை வேறு புரிந்தான்!

சியாம் நகர் திருவிழாவில் குஸ்தி சூடு பிடித்திருப்பதை அறிந்த குத்துச்சண்டைப் பிரியரான வயோதிக அரசர் தர்பாரிலேயே மற்போர் நடத்த ஆணையிட்டார். லுட்டன், சிங்கக்குட்டிக்கு சவால் விட்டது அந்த நேரத்தில்தான். பெயரும் புகழும் பெற்ற சாந்த் சிங், லுட்டனின் சவாலைக்கேட்டு மெல்லச் சிரித்தான். பிறகு பருந்துபோல பாய்ந்தான்.

குத்துச் சண்டையை சாந்தமாகப் பார்த்துக் கொண்டிருந்த பார்வையாளர்களிடையே சலசலப்பு ஏற்பட்டது—“பைத்தியம், சரியான பைத்தியம். இவன் இன்னிக்குச் சாகத்தான் போகிறான்- பாருடோய் தொலைஞ்சான்-!” “அட, பய விட்டான் இல்லை! எதிரியின் உடும்புப் பிடியிலிருந்து வெகு லாவகமாகத் தப்பி நிமிர்ந்து நிற்கிறானே லுட்டன்—புஜங்களையும், தொடைகளையும் தட்டிக் கொண்டு!” ராஜா குத்துச் சண்டையைச் சற்றுநேரம் நிறுத்தும்படி சமிக்ஞை செய்தார். பிறகு லுட்டனை அருகில் அழைத்து, “வீணாக உதைபடாதே. நான் சொல்வதைக் கேளு. பேசாமல் வாபஸ் வாங்கி விடு” என்று எடுத்துரைத்தார். லுட்டன் கேட்கவில்லை. கடைசியில் அவனுடைய தைரியத்தை மெச்சி, பத்து ரூபாய் நோட்டை அவன் கையில் வைத்து “நல்லது, பிள்ளாய்! திருவிழா பார்த்துவிட்டு இருக்கிற உடம்போடு நல்ல பிள்ளையாய் வீட்டுக்குப் போய்ச்சேரு” என்று உபதேசம் செய்தார்.

“கருணை செய்ய வேண்டும் பிரபு! சண்டையிடத்தான் விரும்பு கிறேன்- ஆணையிடுங்கள் அரசே-!”

“உனக்குப் பைத்தியம்தான் பிடிச்சிருக்கு- போ!”

மானேஜர் முதல் சிப்பாய் வரை எல்லாரும் லுட்டனை மிரட்டிப் பார்த்தார்கள். “உடம்பில் தசையே இல்லை, சண்டைபோட

வந்துட்டான் பாரு சிங்கக்குட்டிகிட்டே—! மகாராஜா இவ்வளவு பொறுமையா எடுத்துச் சொல்றாங்க—!"

"உத்தரவு தரணும் அரசே! இல்லாட்டி, இங்கேயே இந்தப் பாறையிலே மண்டையை மோதிக்கிட்டு உயிரை விட்டுருவேன்—உத்தரவு தாங்க!" லுட்டன் கைகூப்பியவாறு கெஞ்சினான்.

கூட்டம் பொறுமை இழந்து கொண்டிருந்தது. வாத்திய முழக்கம் நின்றுவிட்டது. பஞ்சாபிய பயில்வான்கள் கோஷ்டி கோபவெறியில் லுட்டன் மீது வசைமாரி பொழிந்தது. இதைக்கண்டு பார்வையாளர்கள் ஒரேயடியாக ஆவேசமடைந்தனர். ஒரு சிலர் லுட்டனை ஆதரித்து கோஷம் எழுப்பினர்—"லுட்டனை சண்டையிட விடுங்க—"

களத்தில் சாந்த் சிங் மட்டும் நின்றுகொண்டு வெற்றுப்புன்னகை புரிய முயன்றுகொண்டிருந்தான். முதல் பிடியிலேயே அவனுக்கு எதிரியின் பலத்தைப் பற்றிய அனுமானம் ஏற்பட்டுவிட்டது.

வேறு வழியின்றி அரசர் உத்தரவளித்தார் "சண்டை நடக்கட்டும்"

வாத்தியங்கள் முழங்கின. பார்வையாளர்கள் ஆவேசமடைந்தனர். பரபரப்பு அதிகமானது. திருவிழாவில் கடை வைத்திருந்தவர்கள் கடைகளை மூடிவிட்டு ஓடிவந்தனர். "சாந்த் சிங்குக்கு இணையான பயில்வான்—டோய்! சாந்த் பயில்வானின் குத்துச் சண்டை நடக்குது!"

'சட்-தா— கிட்-தா— சட்-தா— கிட்-தா—'

கணீரென்ற குரலில் ஒரு மத்தளம்-இதுவரையில் சத்தமிடாத மத்தளம்-பேச ஆரம்பித்தது.

'டாக்-டினா— டாக்-டினா— டாக்-டினா—'

(சிங்கண்டா! சிங்கண்டா!) லுட்டனை சாந்த் இறுகப்பிடித்து அழுத்தத் தொடங்கினான்.

"பய செத்தான் டோய்! தொலைஞ்சான்—!" பார்வையாளர்கள் கைதட்டினார்கள் "சட்னியாகி விடுவான் பாரு— இன்னிக்கு சட்டினி தான் பயல்! விளையாட்டா—? சிங்கக் குட்டியாக்கும்!"

'சட்-கிட்-தா— சட்-கிட்-தா— சட்-கிட்-தா—'

(அஞ்சாதடா, அஞ்சாதடா, அஞ்சாதடா—)

லுட்டனின் கழுத்தைப் பிடித்து சாந்த் அவனைக் கீழே தள்ள முயன்று கொண்டிருந்தான்.

"அங்கேயே குழிச்சு மூடுடா, வீராதி வீரா!" பாதல்சிங் தன் சீடனை உற்சாகப்படுத்தினான்.

லுட்டனின் விழி பிதுங்கிக் கொண்டிருந்தது. மூச்சுத் தடைப் பட்டு நெஞ்சு வெடித்துவிடுமோ என்ற நிலை. அரசவையும், பெரு வாரியான மக்களும் சாந்த் சிங் கட்சி. நாலா பக்கத்திலிருந்தும் மக்கள் அவனுக்கே உற்சாகம் அளித்துக் கொண்டிருந்தனர். லுட்டன் கட்சியில்

மத்தளம் மட்டுமே வாதாடியது. அதனுடைய தாளத்தை அடியொற்றி அவன் தன்னுடைய போர் முறைகளை மாற்றியமைத்துக் கொண்டிருந்தான். தனக்குத்தானே உற்சாகமளித்துக் கொண்டிருந்தான். திடீரென ஒரு மத்தளத்தின் சன்னமான குரல் கேட்டது—

'தக்-தினா- திரிகிட-தினா- தக்-தினா- திரிகிட-தினா-!'

லுட்டன் இதற்கு இவ்வாறு பொருள் கொண்டான்— "பிடியை வெட்டு, வெளியே வாடா- பிடியை வெட்டு, வெளியே வாடா!"

லுட்டன் லாவகமாக பிடியை வெட்டி வெளியே வந்துவிட்டான். அதோடு விடவில்லை. சாந்தின் கழுத்தை வளைத்துப் பிடித்தான். மக்களின் வியப்புக்கு எல்லையே இல்லை. ஒரே ஆரவாரம்!

"பலே! இந்த மண்ணின் சிங்கமே! சபாஷ்!"

"ஓகோ! வெளியே வந்துட்டானா? அதனாலதான்-" மக்கள் ஆதரவு கட்சி மாறிக் கொண்டிருந்தது.

கரகரவென்று துடித்த குரலில் சப்தமிட்ட மத்தளம் பேசியது.

சடாக்-சட்-தா- சடாக்-சட்-தா-!

(அலாக்கா எடுடா- எடு-டா- புடை-டா!)

லுட்டன் மிக்க தந்திரத்துடன் முழு வலிமையும் பிரயோகித்து சாந்தை நிலத்தில் விழச் செய்துவிட்டான்.

'திக்-தினா- திக்-தினா!' (வெல்லடா, வெல்லடா!)

லுட்டன் தன் பலத்தை எல்லாம் திரட்டினான்—சாந்தைப் பிடித்துக் கிடத்தினான். சாந்த் சிங்கின் கை கால்கள் தளர்ந்தன. தோற்றுவிட்டான் அவன்.

'தா-கிட்-கிட்- தா-கிட்-கிட்- தா-கிட்-கிட்-'

(பலே சிங்கம்! பலே சிங்கம்!)

பார்வையாளர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. 'வாழ்க' கோஷம் யாருக்காக எழுப்ப வேண்டும் என்பதை நிர்ணயிக்க முடியவில்லை. எனவே அவரவர் விருப்பப்படி 'ஜெய் துர்க்கா!', 'ஜெய் ஹனுமான்!' என்று கூவினார்கள். ஒரு சிலர் 'ராஜா சியாமானந்த் ஜெய்!" என்று கோஷமிட்டார்கள். ஆக, கூட்டாக எழும்பிய 'வாழ்க' கோஷம் விண்ணைப் பிளந்தது.

வெற்றிவாகை சூடிய லுட்டன் எம்பிக் குதித்தான்; தொடைகளைத்தட்டி ஆர்ப்பரித்தான். பிறகு முதலில் வாத்திய கோஷ்டியினர் பக்கம் தாவி ஓடினான். மத்தளங்களை பக்தி சிரத்தையுடன் வணங்கினான். பிறகு ஓடிச்சென்று உற்சாகத்தில் அரசரை இரண்டு கைகளாலும் உயரத் தூக்கிவிட்டான். மன்னர்பிரானின் சரிகை உடைகளில் புழுதி. மானேஜர் ஆட்சேபம் தெரிவித்தார்—"அடடே- என்ன காரியம் செய்தாய்?" ஆனால் அரசர் லுட்டனைத் தழுவிக் கொண்டு நா தழுதழுக்கக் கூறினார்—"மகனே, வாழ்க! இந்த மண்ணின் மானத்தைக் காத்த வீராதி வீரனே, வாழ்க!"

பஞ்சாபிய பயில்வான்களின் கோஷ்டி சாந்த் சிங்கின் கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தது. லுட்டனுக்கு அரசர் பரிசளித்துக் கௌரவித்தார். அது மட்டுமல்ல, அவனை நிரந்தரமாக அரசவையிலேயே வைத்துக் கொண்டார். அப்போதிலிருந்து லுட்டன் 'ஆஸ்தான பயில்வான்' ஆகிவிட்டான். அரசர் அவனை லுட்டன்சிங் என்று அழைக்கலானார். அரசவைப் பண்டிதர்கள் முகம் சிணுங்கி "மன்னா! சாதியிலே துஸாத்- சிங் எனலாமா" என்றார்கள்.

மானேஜர் க்ஷத்திரிய சாதியைச் சேர்ந்தவர். க்ளீனாக ஷேவ் செய்த தன்னுடைய முகத்தைச் சுருக்கிக்கொண்டு முழுபலத்துடன் மூக்கு மயிரைக் கையினால் பறித்தார். அக்கிரமக்காரனான அந்த மயிரை விரல்களினால் நசுக்கியவாறு—"ஆம் அரசே! இது நியாயம் இல்லை!" என்றார்.

ராஜா சாகப் புன்னகை புரிந்து "இவனுடைய சாதனை க்ஷத்திரியர்களுக்கு உகந்ததல்லவா!" என்று கூறினார்.

அதிலிருந்து லுட்டன்சிங் பயில்வானின் புகழ் பரவலாயிற்று. நல்ல உணவு, முறையான உடற்பயிற்சி, ராஜா சாகபின் அன்பான ஆதரவு— இவையெல்லாம் சேர்ந்து அவன் வலிமையையும், புகழையும் மேலும் ஓங்கச் செய்தன. அடுத்த சில வருடங்களில் திருவிழாக்களில் பெரிய பயில்வான்களை எல்லாம் அவன் மற்போரில் வென்றான்.

காலா கான் பயில்வானின் பெயரைக் கேட்டாலே போதும், சப்த நாடியும் ஒடுங்கிவிடும். காலே கான் 'ஆ-லீ!' என்று கூவிக் கொண்டு களத்தில் இறங்கினாலே எதிர்க்கட்சி பயில்வான் பக்கவாதம் கண்டு சுருண்டு விழுவான் என்று கூறும் அளவுக்கு அவன் பிரபலம். லுட்டன் அப்பேர்ப்பட்ட காலா கானை மண்ணைக் கவ்வச் செய்து, பிறகு விண்ணைக்காட்டி தன்னுடைய 'சிங்' தகுதியை நிரூபித்து விட்டான்! பிறகு யாருக்கும் சந்தேகம் எழவில்லை.

அது முதற்கொண்டு லுட்டன் சிங் அரசவையில் பார்க்க வேண்டிய 'வஸ்து'வாக விளங்கினான். மிருகக் காட்சி சாலையில் தன்னுடைய கூண்டின் கம்பிகளை உலுக்கி ஆட்டிக் கொண்டு நிஜச் சிங்கம் கர்ஜிக்கும்— 'ஹாங்- வூ, ஹாங்- வூ!' தூர இருந்து கேட்பவர்கள், "ராஜா சாகபின் சிங்கம் கர்ஜிக்கிறது" என்பார்கள்.

அனுமார் கோயிலுக்கு எதிரில் நின்று பயில்வான் "மஹா-வீர்!" என்று கர்ஜிப்பான். 'இதோ பயில்வான் பேசுகிறான்' என்பார்கள்.

திருவிழாக்காலங்களில் முட்டிவரையிலும் நீண்ட அங்கி அணிந்து தலைப்பாகையை அலட்சியமாகக் கட்டிக்கொண்டு மதம் பிடித்த

யானைபோல ஆடி ஆடி நடப்பான். கடைக்காரர்களுக்கு அவனைச் சீண்டிப் பார்க்க வேண்டும் என்று ஆசை தோன்றும். மிட்டாய்க் கடைக்காரன் அவனை தன் கடைக்கு அழைப்பான்—"அண்ணே! புதுசா ரசகுல்லா போட்டிருக்குது, நாஸ்தா பண்ண வாங்களேன்!"

பயில்வான் குழந்தையைப்போலச் சிரிப்பான். "அட, என்ன பெரிய நாஸ்தா? கொண்டுவா, ஒண்ணரைச் சேர்!" என்று கூறியவாறு கடையில் உட்கார்ந்து விடுவான்.

இரண்டு சேர் ரசகுல்லாவை விழுங்கிய பிறகு, வாயில் எட்டு-பத்து பீடாக்களை அடைத்துக்கொள்வான். எல்லாம் கடைக்காரர்கள் உபயம்! வாயிலிருந்து வெற்றிலைத் தாம்பூலம் சொட்டச் சொட்ட கடைத் தெருவெங்கும் நடப்பான். திருவிழாவிலிருந்து அரசவைக்குத் திரும்பும்போது அவனுடைய வேஷத்தையும், நடையையும் பார்க்க வேண்டுமே—கலர் மூக்குக் கண்ணாடி, கையில் கிலுகிலுப்பை, விளை யாட்டுப் பொம்மைகளை ஆட்டிக்கொண்டு, ஊதலை ஊதிக் கொண்டு, சிரித்துக் கும்மாளமிட்டுக்கொண்டு அவன் திரும்புவதைக் காண்பதே ஒரு காட்சியாக இருக்கும். உடல் வலிமை அதிகரித்த அளவுக்கு, தலையில் மூளையின் பரிமாணம் சிறுத்தது! மொத்தத்தில் அவனுக்கு குழந்தைத் தனமான புத்தி என்று கூறலாம்.

குத்துச் சண்டையின்போது மத்தளத்தின் ஒலி கேட்டதுமே அவன் தன்னுடைய பெரிய உடம்பைப் பிரகடனம் செய்ய ஆரம்பிப் பான். அவனுக்கு இணையான பயில்வான் கிடைக்கவே இல்லை. அப்படி யாராவது அவனுடன் சண்டையிட முன்வந்தாலும், அரசர் புதியவனுக்கு உத்தரவு அளிக்க மாட்டார். ஆகவே, அவன் நிராசை யுடன், லங்கோடு தரித்து உடல் முழுக்க புழுதியைப் புரட்டிக்கொண்டு எம்பி எம்பிக் குதிப்பான்—பொலிகாளையைப் போல, எருமைக்கடா போல! வயோதிக அரசர் அவனுடைய இந்த சேஷ்டைகளைப் புன்னகையுடன் ரசித்துக் கொண்டிருப்பார்.

இப்படியே பதினைந்து ஆண்டுகள் ஓடி மறைந்தன. பயில்வான் வெல்ல முடியாதவனாக விளங்கினான். அவன் சண்டைக் களத்தில் தன் இரண்டு பையன்களுடன் இறங்குவான். அவனுடைய மாமியார் காலமாகி விட்டாள். மனைவி இரண்டு சிறு பயில்வான்களைத் தந்து விட்டு கண்ணை மூடிவிட்டாள். இரண்டு பையன்களும் தகப்பனைப் போலவே கட்டுமஸ்தான உடல்வாகுடன் கொழுத்து வளர்ந்தார்கள். களத்தில் இவர்களைப் பார்ப்பவர்கள் மூக்கின்மேல் விரலை வைத்து, "பலே, அப்பனை மிஞ்சிடும்டா குட்டிங்க" என்பார்கள்.

இரண்டு பையன்களும் அரசவையின் எதிர்கால பயில்வான் களாக அறிவிக்கப்பட்டுவிட்டனர். அதனால் அவர்களுடைய பரா

மரிப்பு அரசாங்கச் செலவிலேயே நடந்து வந்தது. தினமும் காலையில் பயில்வான் தானே மத்தளம் வாசித்து அவர்கள் இருவரையும் தேகப் பயிற்சி செய்வித்தான். மதிய வேளைகளில், படுத்துக்கொண்டே அவன் தன்னுடைய அருமைப் பிள்ளைகளுக்கு உலக அறிவையும் புகட்டினான்—"தெரிஞ்சுதா, மத்தளம் எப்படிப் பேசுதுங்கறதைக் கவனமா கேட்டுக்கிடணும். ஆமாம், என்னுடைய வாத்தியார் எந்த பயில்வானும் இல்லே, இந்த மத்தளம்தான். புரிஞ்சுதா! மத்தள ஒலியின் மகிமையினால்தான் நான் பயில்வான் ஆனேன். களத்தில் இறங்கியதும் முதலில் மத்தளங்களுக்கு வணக்கம் செலுத்தணும். தெரிஞ்சுதா..!" இப்படியே பல விஷயங்களையும் சொல்லுவான். பிறகு எஜமானரை எப்படி சந்தோஷமாக வைத்துக்கொள்வது, அவரிடம் எப்படி பவ்யமாகப் பழகுவது என்பதையும் எடுத்துக்கூற மறக்கமாட்டான்.

ஆனால் அவனுடைய பயிற்சி, போதனை, உபதேசமொழிகள் எல்லாமே ஒருநாள் விழலுக்கு இறைத்த நீர் போல வீணாகிவிட்டன. வயோதிக அரசர் சொர்க்கபுரிக்குச் சென்றுவிட்டார். அப்போதுதான் படிப்பை முடித்துக் கொண்டு சீமையிலிருந்து திரும்பிய அரசகுமாரன் அரசாட்சியை மேற்கொண்டான். அரசரின் காலத்தில் ஏற்பட்டிருந்த மெத்தனமான போக்குகளுக்கு அரசகுமாரன் வந்ததுமே முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. புரட்சிகரமான பல மாற்றங்கள் ஏற்பட்டன. உருளுகின்ற காலச்சக்கரத்தினடியில் ஒருநாள் பயில்வானும் சிக்கினான். குத்துச்சண்டைக்களம் குதிரைப்பந்தய மைதானமாக மாறியது!

பயில்வான் மற்றும் எதிர்கால பயில்வான்களின் தினசரிச் செலவைப் பற்றிக்கேட்ட அரசகுமாரன் கூவினான்—"டெரிபிள்..!"

புது மானேஜர் அதே குரலில் சொன்னார். "ஹாரிபிள்..!"

பயில்வானின் சீட்டு கிழிக்கப்பட்டுவிட்டது. அவனுக்கு தன் வழக்கை மன்றாடக்கூட அவகாசம் அளிக்கப்படவில்லை.

அன்றே மத்தளத்தைத் தோளில் தொங்கப்போட்டுக் கொண்டு, தன் மகன்களுடன் சொந்த ஊருக்குத் திரும்பினான். கிராமத்திலேயே இருக்கலானான். ஊர்க்காரர்கள் கிராமத்தின் ஒரு பகுதியில் குடிசை வேய்ந்து கொடுத்தார்கள். அங்கேயே இருந்து கொண்டு ஊர் இளைஞர்களுக்கும், மாடுமேய்க்கும் சிறுவர்களுக்கும் குத்துச்சண்டைப் பயிற்சியளிக்கத் தொடங்கினான். சாப்பாட்டுச் செலவு கிராமவாசிகளின் பொறுப்பு. காலை, மாலை இரண்டு வேளைகளிலும் மத்தளம் அடித்துக்கொண்டு அவன் தன்னுடைய சீடர்களுக்கும், பிள்ளைகளுக்கும் சண்டையின் நுணுக்கங்களைக் கற்பித்து வந்தான்.

குஸ்தி பயில்வது என்றால் சாதாரண விஷயமா என்ன? வக்கற்ற குடியானவர்களும், விவசாயத் தொழிலாளர்களும் சத்தான உணவுக்கு

எங்கே போவார்கள்! நாளாவட்டத்தில் பயில்வானின் பள்ளியில் மாணவர்களே வராதநிலை ஏற்பட்டது. கடைசியில் அவன் தன் குமாரர்கள் இருவரையும் மத்தள ஒலியின் இடையே சண்டையிடச் செய்துவந்தான். இரண்டு பையன்களும் நாள் முழுதும் எங்காவது கூலிவேலை செய்து சம்பாதித்து வருவார்கள். அதை வைத்துக் கொண்டு ஒருவாறு சமாளித்தார்கள்.

திடீரென இயற்கையின் தொல்லை ஏற்பட்டது. முதலில் மழை பொய்த்து, பஞ்சம் வந்தது. பின்னர் மலேரியாவும், கொள்ளைநோயும் சேர்ந்துகொண்டன. வாணலியில் வறுபடும் கடலைகளைப் போல மக்கள் தவித்தார்கள். தெறித்துவிழும் கடலைகள்போல செத்தார்கள்.

கிராமம் அநேகமாக வெறிச்சோடிவிட்டது. பல வீடுகள் காலி யாகிவிட்டன. தினமும் இரண்டு மூன்று பிணங்கள் விழுந்தன. எங்கும் அவலக்குரல். மக்களை அச்சம் கவ்விக் கொண்டது. பகல் நேரத்தில்— 'ஐயோ அப்பா!' என்ற அலறலும், நெஞ்சைப்பிளக்கும் ஒப்பாரியும் கேட்டாலும் ஜனங்களின் முகத்தில் கொஞ்சமாவது ஒளியைக் காண முடிந்தது. ஒருவேளை ஆதவன் அளிக்கும் சக்தி இதற்குக் காரணமாக இருக்கலாம். விடிந்ததுமே மக்கள் இருமிக்கொண்டும், முனகிக் கொண்டும் தங்கள் வீடுகளிலிருந்து கிளம்பி அக்கம் பக்கத்து வீடு களுக்குச் சென்று உற்றாருக்கும், மற்றவர்களுக்கும் ஆறுதல் வார்த்தை களைச் சொல்வார்கள், அவர்களுக்குத் தைரியம் அளிப்பார்கள்.

"அழுது என்ன பிரயோசனம் அம்மா! போனவன் போய் விட்டான், அவன் உன்னுடையவன் இல்லேன்னு நினைச்சுக்க; நீயும் அழுதுகிட்டிருந்தா இருக்கிறவங்களுக்கு யாரு ஆதரவு?"

"தம்பி! வீட்டிலே பிணத்தைப் போட்டுக்கிட்டு எத்தனை நேரம் தான் அழுவே? சவக்கோடியா? அது என்னாத்துக்கு? பேசாமல் இழுத்து ஆத்துலே போட்டுட்டு வா."

ஆனால், ஆதவன் மறைந்ததும் மக்கள் அவரவர் குடிசைகளில் புகுந்துகொண்ட பிறகு மூச்சுக்காட்ட மாட்டார்கள். பாவம், அவர்கள் பேசும் ஆற்றலையே இழந்துவிடுவார்கள். பக்கத்திலேயே பிராணனை விடும் மகனைப் பார்த்து 'அய்யோ மகனே!' என்று அரற்றக்கூட சக்தி இருக்காது தாய்மார்களுக்கு!

இரவின் இந்த பயங்கரத்துக்குச் சவால்விடும் துணிவு பயில் வானின் மத்தளத்துக்கு மட்டுமே இருந்தது. பயில்வான் அந்திமயங்கும் வேளையிலிருந்து விடிகாலை வரையிலும் என்ன நினைத்துக்கொண்டு மத்தளம் அடிப்பானோ தெரியாது, ஆனால் பாதி உயிருடன்— மருந்தோ, சிகிச்சையோ, பத்தியமோ இல்லாமல்—வசிக்கும் பிராணி களுக்கு இந்த மத்தள ஒலி சஞ்சீவி போல ஊக்கமளித்தது. கிழவர்கள், இளைஞர்கள், சிறுவர்களின் ஒளிமங்கிய கண்களின் முன்னால் சண்டைக்களத்தின் காட்சிகள் ஒவ்வொன்றாக விரியும். துடிப்புச்

சக்தியை இழந்த நரம்புகளில்கூட மின்சாரசக்தி பாய்வது போலத் தோன்றும். மத்தளத்தின் ஒலியில் மலேரியா சுரத்தைப் போக்கும் மருந்தோ, கொள்ளைநோயின் அழிவுச் சக்தியைத் தடுக்கும் ஆற்றலோ கலந்திருக்கவில்லை என்பது உண்மையே. ஆனாலும் மரணத்தைத் தழுவும் ஏழைக் கிராமவாசிகளுக்கு தங்கள் கண்களை மூடும்போது எந்தவிதமான கஷ்டமும் தெரியவில்லை. இதனால் மரணத்தைக் கண்டு அவர்கள் அஞ்சவில்லை என்பதில் சந்தேகமே இல்லை.

பயில்வானின் இரண்டு பிள்ளைகளும் காலனின் பிடியில் சிக்குண்ட அன்று, தாங்க முடியாத வேதனையுடன் இருவரும் கூறினார்கள்— "அப்பா! 'எடுடா- புடை-டா-' என்ற ஜதியை வாசிங்களேன்!"

"சடாக்-சட்-தா- சடாக்-சட்-தா-"—இரவு முழுதும் மத்தளத்தை அடித்துக்கொண்டே இருந்தான் பயில்வான். இடையிடையே பயில் வான்களின் மொழியில் அவர்களை உற்சாகப்படுத்தினான்—"விடாதே, அடிடா! சிங்கண்டா!"

காலையில் பார்க்கும்போது இரண்டு குட்டி பயில்வான்களும் பேச்சு மூச்சற்றுக் கிடந்தனர். இரண்டுபேரும் கவிழ்ந்து கிடந்தனர். ஒருவன் தன்னுடைய பற்களினால் சிறிதளவு மண்ணைத் தோண்டிப் போட்டிருந்தான். நீண்ட பெருமூச்சுடன் பயில்வான் சிரிக்க முயன்று கொண்டே சொன்னான்—"இரண்டு வீரர்களும் விழுந்துட்டாங்க!"

அன்று பயில்வான் சியாமானந்த மன்னர் சன்மானமாக அளித்த பட்டு லங்கோட்டை அணிந்துகொண்டான். உடல் முழுதும் புழுதியைத் தேய்த்துக்கொண்டு சிறிதுநேரம் தேகப்பயிற்சி செய்தான். பிறகு இரண்டு செல்வங்களையும் தோளில் எடுத்துக்கொண்டு ஆற்றில் விட்டுவந்தான். சேதி கேட்டவர்கள் அயர்ந்துவிட்டார்கள். தைரியத்தை இழந்தவர்கள் எத்தனையோ பேர்!

ஆனால், இரவில் மீண்டும் பயில்வானின் மத்தளம் தினம் போலவே கேட்டது. மக்களுக்கு இரட்டிப்புச் சக்தி ஏற்பட்டது. துயரத் தால் பரிதவிக்கும் தாய்-தந்தையர் பேசிக் கொண்டார்கள்— "இரண்டு சிங்கக் குட்டிகளும் இறந்தும்கூட, பயில்வானின் தைரியத்தைப் பார்த்தியா! உருக்கைப்போல நெஞ்சு-!"

நாலைந்து நாட்களுக்குப்பிறகு, ஓர் இரவில் மத்தள ஒலி கேட்கவில்லை.

தைரியசாலியான, ஆனால் சீக்குப்பிடித்த சீடர்கள் காலையில் சென்று பார்த்தனர்—பயில்வானின் பிணம் 'நிமிர்ந்து' கிடந்தது. காலையில் நரிகள் வந்து அவனுடைய திரண்ட இடது தொடை யிலிருந்து மாமிசத்தைப் புசித்திருந்தன. ஆ- வயிற்றிலுமா-

கண்ணீரைத் துடைத்தவாறு ஒருவன் சொன்னான்— “வாத்தியார் எப்பவும் சொல்லுவார், நான் இறந்தபிறகு, என் உடலை நிமிர்த்தி வெச்சு கொளுத்தாதீங்க, கவுத்துப்போட்டு கொள்ளி வையுங்க. ஏன்னா, வாழ்நாள் முழுக்க எந்தச் சண்டையிலும் நான் கவிழலே இல்லை. பிறகு கொள்ளி வைக்கும்போது மறக்காம மத்தளம் தட்டுங்க.” அவனால் அதற்குமேல் பேச இயலவில்லை.

மத்தளம் உருண்டு கிடந்தது. நரிகள் அதையும் ஏதோ ‘சாப்பாட்டுப்பொருள்’ என்று எண்ணி அதன் தோலைக் கிழித்திருந்தன.

(1944)

# கட்சிப் பேய்

நண்பர்களைக் கண்டால் நடுங்குகிறேன்.

"நீ எந்தக் கட்சி என்றால் என்ன சொல்வேன்?" கவலையினால் உருகி ஒல்லிக் குச்சியாகிவிட்டேன். கண்கள் குழிவிழுந்துவிட்டன. தலைமயிர் காடுபோல வளர்ந்துவிட்டது. பைஜாமா கிழிந்து, செருப்பும் அறுந்துவிட்டது. காதலிலே தோல்வி கண்டவன்போல திரிகிறேன். பகலில் நிம்மதி இல்லை. இரவிலோ, உறக்கம் வருவதில்லை. வந்தாலும் ஏதேதோ கெட்ட கனவுகள் கண்டு திடீரென விழித்துக் கொள்கிறேன். ஆனால் நீங்கள் நினைக்கிற அந்த வியாதி இல்லை. அதுவாக இருந் தால்தான் தேவலாமே! வேலைவெட்டி இல்லாமல் வெற்றுப்பொழுது போக்கிக் கொண்டு காதலிக்காக காத்திருக்கும் சுகத்தையாவது அனு பவிக்கலாமே! நிச்சயமாகச் சொல்கிறேன் இது அந்த நோய் இல்லை. பின்னே என்னதான் வியாதி என்றுதானே கேட்கிறீர்கள்! இது 'கீழ்ப்பாக்கத்துக்கு' டிக்கட் வாங்குகிற கேஸ். போகிற போக்கைப் பார்த்தால் அந்த நாள் வெகுவிரைவிலேயே வந்துவிடும் என்று படுகிறது. ஆகவே என்னைப் பிடித்த நோயின் வரலாற்றை வெளியிடு வதைக் கடமையாகக் கருதுகிறேன். பிறகு நோய் முற்றிப்போய் 'நீ யாரோ நான் யாரோ' என்னும் நிலைமை வந்துவிட்டால் இதையெல் லாம் சொல்ல முடியாதல்லவா? நிஜத்தைச் சொல்வதானால், என்னை பிசாசு பிடித்திருக்கிறது. ஆம், 'கட்சிப்பேய்' என் தலைமீது ஏறி என்னை இஷ்டப்படி ஆட்டிப் படைக்கிறது. இது என்னை உருப்படாமல் அடித்துவிட்டது. இளம் பிராயத்திலேயே இந்தப் பேய்க்கு நான் ஆளாகிவிட்டேன்.

பள்ளி நாளிலிருந்தே ஆரம்பிக்கிறேன்.

ஒருநாள் அப்பா பக்கத்தில் உட்கார்ந்து 'பாலபாடம்' படித்துக் கொண்டிருந்தேன். அந்த நேரத்தில் அப்பாவைப் பார்க்க கிராமப் பள்ளியின் ஆசிரியர் வந்துசேர்ந்தார். வெகுநேரம் வரையில் இருவரும் ஏதேதோ பேசினார்கள். கடைசியில் ஆசிரியர் விஷயத்துக்கு வந்தார். தன்னை சுதாரித்துக்கொண்டு தணிந்த குரலில் அவர் அப்பாவிடம் சொன்னார். "வழக்கோ சண்டையோ எதுவானாலும் பெரிய மனுசங்க

சமாச்சாரம்– எனக்கு இதிலே சம்பந்தமே கிடையாது. நீங்கள்ளாம் ஊரிலே பெரிய மனுசங்க. ஒரே காட்டில் இரண்டு சிங்கங்கள் ஒன்னோடொண்ணு மோதிக்கிறமாதிரி– ஒரே கிராமத்திலே– ஹீ-ஹீ– அது போகட்டும், அதெல்லாம் இறைவனின் நியதி. ஆனால் பள்ளிக் கூடம் ஒன்னும் அவங்களோடது (எதிர்க்கட்சித் தலைவருடையது) இல்லையே; பள்ளிக் கூடத்திலே இருக்கிறது நான்தானே– எனக்கு எல்லாக் குழந்தைகளும் ஒண்ணுதான்–"

"நீங்க சரியாப் புரிஞ்சுக்கலேன்னு நினைக்கிறேன்" அப்பா இடை மறித்துக் கூறினார். "பள்ளிக்கூடம் அந்தக் கட்சியைச் சேர்ந்தது. அதனாலே, என் குழந்தையை என்ன, இந்தக் கிராமத்திலே உள்ள எந்தப் பையனையும் அந்தப் பள்ளிக்கு அனுப்பமாட்டேன்– ஆமா– மீறி அனுப்பினா, அது எங்க கட்சிக்கே அவமானம், தெரியுதா?"

ஆசிரியர் மீண்டும் பல்லை இளித்தவாறு கூறினார், "ஐயா சரியாத்தான் சொல்றீங்க, ஆனா– நான்– என்னை நம்புங்க– நான் உங்களுக்கு சேவை செய்ய நினைக்கிறேன்."

ஆசிரியர் இருமினார். அது செயற்கையாக இருந்தது. சுற்றுமுற்றும் பார்த்தவாறு அப்பாவிடம் என்னென்னமோ பேசினார். அவர் சில உண்மைகளை எடுத்துச் சொல்லியிருக்கலாம். பலன்: எனக்கும் எங்கள் கிராமத்தைச் சேர்ந்த மற்ற சிறுவர்களுக்கும் பள்ளியில் படிக்க அனுமதி கிடைத்துவிட்டது.

மறுநாளே நான் என் சகாக்களுடன் பள்ளியில் சேர்ந்தேன். அக்கம் பக்கமெங்கும் இதைப் பற்றியே பேசினார்கள். நீதிமன்றத்து 'பார் லைப்ரரி'யிலும் விஷயம் அலசப்பட்டது. கேள்விக் கணைகள் தொடுக்கப்பட்டன. "அப்ப, கிராமத்துலெ ஒத்துமை வந்துடுச்சா?" காசு வாங்கிக் கொண்டு சாட்சி சொல்வதையே தொழிலாகக் கொண்டவர்கள் தலையில் அடித்துக் கொண்டார்கள்.

"ஓஹோ! இவனுங்கள்ளாம் சண்டையை மறந்துட்டு ஒரே பந்தில சாப்பிடுவாங்களாக்கும்; சம்பந்தம் கூடச் செஞ்சுப்பாங்களோ?" சமுதாய முக்கியஸ்தர்கள் பொருமினார்கள்.

"அப்படின்னா இப்ப கோர்ட்டிலே போட்டிருக்கிற வழக்கு-விவகாரம் எல்லாம் என்ன ஆகும்? கிரிமினல் கேஸெல்லாம் வாபஸ் வாங்கிப்பாங்களா என்ன"—வக்கீல்கள் பெருமூச்சுவிட்டனர்.

ஆனால் அப்படி எதுவும் நடந்துவிடவில்லை. கட்சிகள் முன் மாதிரியே தொடர்ந்தன, பள்ளிக்கூடத்திலும் கட்சிகள் ஏற்பட்டன. மாலையில் பள்ளிவிட்டதும் அடிதடி, சில்லறை வழக்குகள், கல்வீச்சு. ஆசிரியரின் பிரம்பு முடிந்தவரையில் அமைதியை நிலைநாட்டப் போராடியது. சண்டை சச்சரவுகளில் நான் முனைப்பாகப் பங்கெடுத் ததும் இல்லை, ஆசிரியரின் பிரம்பு என் முதுகைப் பதம் பார்த்ததும் இல்லை. ஆனாலும் எப்பொழுதும் நான் என் கட்சியின் வெற்றியையே

விரும்பி வந்தேன் என்பதில் எந்தவித ஐயமும் இல்லை. கட்சியின் வெற்றிக்காக ஆலோசனை சொல்வதும் உண்டு. அதனால், என் கட்சியின் போர்வீரர்கள் என்னை அவர்களுடைய 'ஹீரோ'வாகவே கருதி வந்தார்கள்.

இவ்வாறு கட்சிப் போராட்டங்கள் நடந்துவருகையில், ஒருநாள் பள்ளியில் வந்து சேர்ந்தாள் சுட்டிப்பெண் சந்து—எதிர்கட்சித் தலைவரின் செல்லப்பெண். அன்று மாலை மணியடித்ததும் நான் என் கட்சியைச் சார்ந்த வீரர்களிடம் அமைதியின் மாட்சியை எடுத்துரைத்தேன். வீண் சண்டையால் ஒரு பயனுமில்லை என்று வலியுறுத்தினேன். அன்றிலிருந்து சில்லறை வழக்குகளுக்கு முற்றுப் புள்ளி இடப்பட்டது. அந்தக் கட்சியினர் ஓரிரு முறை வம்புக்கிழுக்க முயன்றார்கள். ஆனால் எங்கள் கட்சித் தொண்டர்கள் சண்டை செய்யாமல் வாளாவிருக்கவே அவர்களும் நிராசையுடன் அமைதியானார்கள்.

இன்று 'பாலியல்' தொடர்பான சில அரிய நூல்களைப் பயிலும் போது அன்று 'சந்து' என்ற சுந்தரியின்பால் எனக்கு ஏற்பட்ட ஈர்ப்பின் அடிப்படை நன்றாகவே புரிகிறது. 'லைலா-மஜ்னு' கதை எங்கள் பாடநூலில் இடம் பெற்றிருக்கவில்லை. ஆனால் வரலாற்றுக் கதைத் தொடரில் 'பிருத்விராஜ்-சம்யுக்தை'யின் கதையை நான் ஆவலுடன் படித்தேன். பிருத்வி ராஜனைப்போலவே நான் 'சந்து'வை அடைய விரும்பினேன்.

தனிமையில் சந்துவைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தபோது நான் அவளிடம் கூறினேன், "சந்து! பிருத்விராஜ்-சம்யுக்தையின் கதை."

"என்கிட்டே ஒண்ணும் பேசவேண்டாம். நீ அந்தக் கட்சியைச் சேர்ந்தவன். தூர விலகு." அவள் செம்மையாக அதட்டினாள்.

"இல்லே, இல்லே. நான் அந்தப் பார்ட்டி ஆளு இல்லே!" கெஞ்சும் குரலில் மறுத்தேன்.

"பின்னே?"—போய்க்கொண்டிருந்தவள் நின்றாள்.

"நான் உன்னுடைய கட்சி"—என்றேன்.

"நிஜமாகவா?" அவள் என்னை நெருங்கி வந்தாள்.

நான் அவளுடைய மெல்லிய கரங்களைப் பற்றிக்கொண்டு சொன்னேன்—'நிசம்மா.'

பூச்செடிகளுக்குப் பின்னால் ஒளிந்திருந்தான் என் கட்சியைச் சேர்ந்த குண்டோதரன் ரஜனா. அவன் சரியான நேரத்தில் எங்கள் முன்னே வந்து குதித்தான்—பூசை வேளையில் கரடி புகுந்ததுபோல; பற்களை நறநறவென்று கடித்தவாறு அவன் என்னைப் பார்த்துக் கூவினான்—'சதிகாரா!'

என்னுடைய அந்த பிருத்விராஜ்-சம்யுக்தை நாடகம் பாதியிலேயே நின்றுவிட்டது. சந்து கையை விடுவித்துக்கொண்டு போய் விட்டாள். வரலாற்றிலே ராமகதை மட்டுமே படித்தவர்கள்கூட

என்னை பிருத்விராஜ் என்பதற்குப் பதிலா 'ஜெயச்சந்திரன்' என்று அழைக்கலானார்கள்.

உயர்நிலைப்பள்ளி—

மிடில் ஸ்கூல் படிப்பை முடித்துக்கொண்டு நான் நகரத்தில் ஹைஸ்கூலில் நுழைவு பெற்றேன். நல்ல காலமோ, கெட்ட காலமோ அறியேன், என் தந்தையின் வக்கீல் ஒரு வங்காளிப் பிரமுகர்—அந்த ஊரில் குடியிருந்தார். அவர் என்னை மகிழ்ச்சியுடன் தன் குடும்பத்தில் ஒருவனாக ஏற்றுக் கொண்டார். வங்காளிகளுடன் நெருக்கம் ஏற்பட்டது. அத்துடன், வங்கமொழி, இசையின்பால் அலாதியான ஈர்ப்பும் உண்டாயிற்று. நான் வங்காளியல்ல என்பதில் ஓரிரு வருடங்களில் எனக்கே ஐயம் உண்டாக ஆரம்பித்தது. அந்த அளவுக்கு நான் வங்க மொழி அன்பர்களுடன் ஒன்றிவிட்டேன். அதன்பின் சில நாட்களிலேயே 'வங்காளி—வங்காளியல்லாதவர்'களிடையே பூசல் கிளம்பியது; இருதரப்பிலும் ஏசலும், பேசலும் மிகுந்தன.

வங்காளியல்லாதவர் வசைமொழி கூவினர், "வங்காளி ஜாதி பயங்கொள்ளி ஜாதி! ஈனச் சாதி."

வங்காளிகள் பதிலுக்கு வசைபாடினார்கள்.

"சாத்துகோர்! கோட்டா!" (சத்துமா தின்னிப் பனாதைகள்! சின்னப்பயல்கள்)

கொதித்தெழுந்த வங்காளியல்லாதவர்கள் பலமுறை அத்துமீறி நடந்தார்கள். வசவு மொழிகளைக்கேட்டு என். உள்ளம் நடுங்கியது. ரவீந்திரநாத் தாகூர், ஜெகதீஷ்சந்திரபோஸ், சரத்சந்திரர், சுபாஷ் போஸ் இவர்களும் வங்காளிகள் அல்லவா!

வங்காளிகளும் வசவுகளுக்குச் செம்மையான பதிலடி தந்தனர். செங்கல்லுக்குப் பதில் பாறைக்கற்களை வீசுவதுபோல.

எனக்குள்ளேயிருந்த வங்காளியல்லாதவன், வங்காளியைப் பழித்தான்.

வங்காளி நண்பர்கள் என்னைப் பற்றி அபிப்பிராயம் தெரிவித்தார்கள்—"இந்துஸ்தானி (வங்காளிகள் தங்கள் மொழியினரல்லாதாரை இந்துஸ்தானி என்று வழங்கினர்) கடைசியில் இந்துஸ்தானிதானே!"

வங்காளியல்லாதவர்கள் என் முதுகை வருடியவாறு "இப்பச் சொல்லு, இவங்க சங்காத்தம் எப்படிப்பட்டதுன்னு? இப்பவாச்சும் புரிஞ்சுதா! கெட்டவங்க யாருன்னு"

"பேசாம இருக்க மாட்டீங்க?" அலுத்தவாறு நான் அவர்கள் வாயையும் அடைத்தேன்.

"அப்படியா சேதி?" என்று கொதித்தெழுந்த வங்காளியல்லாதவர்கள் ஏகமனதாக ஒரு மசோதாவை நிறைவேற்றினர்—"வங்காளி

களின் வசைமொழிகளை நாம் லட்சியம் செய்யவில்லை, ஏனெனில் அவர்களுடைய பேச்சும், செயலும் மாநில வெறியினால் உந்தப் பட்டவையாகும். ஆனால் வங்காளியல்லாதவராக இருந்து கொண்டு வங்காளிகளுக்கு வால்பிடிப்பவர்கள் சதிகாரக் கும்பலைச் சேர்ந் தவர்கள். மீர் ஜாபர் இனத்தைச் சேர்ந்தவர்கள். நாம் இந்த மாதிரியான கயவர்களுடன் எந்தவிதமான தொடர்பும் வைக்கக்கூடாது."

கல்லூரிக் கதை சற்று நீண்டது. ஆனால் சுவையானது.

பள்ளியில் பெற்ற மேற்படி அடைமொழிகளுடன் நான் கல்லூரியில் காலடிவைத்தேன். மாநிலப்பற்று என்ற வலையில் இனியும் விழக்கூடாது என்று நான் முதலிலேயே உறுதியெடுத்துக் கொண்டேன்.

முதல் ஆண்டு அப்படி, இப்படியாக குறிப்பிடத்தக்க சம்பவங்கள் ஏதுமின்றி உருண்டோடிவிட்டது. இரண்டாவது ஆண்டில் காலடி எடுத்து வைத்ததும் நான் மாறுதல் ஏற்படுத்திக்கொள்ள எண்ணி னேன். எடுத்துக் கூறத்தக்க மாறுதல் எதுவும் இல்லை. வேட்டியை விட்டு பைஜாமா போட ஆரம்பித்தேன். கழுத்தில் ஒன்றரை அங்குலம் பட்டையான காலர் வைத்த நீண்ட ஜிப்பா தைத்துக் கொண்டேன்.

ஒரு நன்னாளில் புதிய வேடமணிந்து சினிமா தியேட்டரை நோக்கிப் பயணமானேன். வாடகைக் குதிரைவண்டியில் என்னுடன் பயணம் செய்துகொண்டிருந்த அன்பர் என்னுடைய பெயர், வயது, படிக்கும் விஷயங்கள், விடுதி, அறை எண் இத்யாதி விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டபின் கேட்டாரே ஒரு கேள்வி—

"நீங்கள் எந்தக் கட்சி?"

நான் ஒரேயடியாக பயந்துவிட்டேன். பதில் எதுவும் கூறவில்லை.

"சிபியா?" (கம்யூனிஸ்டு பார்ட்டியா?) புன்சிரிப்புடன் கேட்டார்.

"ஆமாம்." இது ஏதோ ஐந்துநிமிட வியாபாரம்தானே என்று நினைத்து நான் 'ஆமாம்' போட்டேன்.

'ஐஸி' என்று சிரித்தவாறே சற்றும் கருணையின்றி அவர் என் முதுகிலே ஓர் அறைவிட்டார். நான் திடுக்கிட்டேன்.

"வீ ஆர் காம்ரேட்ஸ். பயப்படாதீங்க" அவர் என் தோளில் கை வைத்துக் கொண்டு அன்பொழுகக் கூறினார்.

அன்று 'காஷ்மீர் கேபின்' பில்லுக்கு அவர்தான் பணம் செலுத்தினார். சினிமா தியேட்டரில் முதல் வகுப்பு டிக்கெட்டும் அவரே வாங்கினார்.

மறுநாள் வகுப்பறையில் நுழைந்ததும் என்னுடைய ஆப்த நண்பன் வினோத் புன்னகை தவழ, "பேஷ், பக்கா சோஷலிஸ்டு போலத்

தெரிகிறாயே!" என்று என்னைப் பாராட்டினான்.

"என்ன வேணும்னாலும் சொல்லிக்கோப்பா" என்றேன்.

"சொல்லிக்கோ இல்லப்பா, ஆகத்தான் வேணும்" என்றான் வினோத்.

"என்ன ஆகணும்?" நான் வியப்புடன் அவனைக் கேட்டேன்.

"மெம்பர். வேறென்ன? உனக்குப் பார்ட்டி-பாலிடிக்ஸ் இதிலெல் லாம் நாட்டம் கிடையாதுன்னு நினைச்சிருந்தேன். ஆனா, இப்பல்ல புரியுது, நீயும் வெத்து வேட்டு இல்லேன்னு"—அவன் சிரித்துக் கொண்டே சொன்னான்.

என்னிடம் எந்தச் சிறப்பியல்புகளைக் கண்டு வினோத் நான் பார்ட்டி-பாலிடிக்ஸ் ஈடுபாடு கொண்டவன் என்பதைக் கண்டு பிடித்தான் என்பது எனக்கு இன்றும் புரியாத புதிராகவே இருக்கிறது. எப்படியாயினும் என்னுடைய பெயர் 'ஸ்டூடென்ட்ஸ் ஃபெடரேஷன்' (கம்யூனிஸ்டு க்ரூப்) பதிவேட்டில் பதிந்த அன்றே நான் 'ஸ்டூடன்ட்ஸ் ஃபெடரேஷன்' (சோஷலிஸ்டு க்ரூப்) செயற்குழுவில் உறுப்பினராக எடுத்துக்கொள்ளப்பட்டேன் என்ற தகவலும் எனக்குக் கிடைத்தது.

இந்த இரண்டோடு நின்றிருந்தாலும் பரவாயில்லை. ஒருநாள் நான் மூன்றாவதொரு பார்ட்டியின் வலையிலும் சிக்கினேன்.

'க்யால்க்யாடா கஃபே'யில் (பெயர்ப் பலகையில் அப்படித்தான் எழுதியிருந்தது) அமர்ந்து டீ குடித்துக் கொண்டிருந்தேன். என் கையில் வங்கமொழிப் பத்திரிகை ஒன்று இருந்தது. என் பக்கத்தில் என் வயதுள்ள ஒரு இளைஞர் தேநீர் பருகிக் கொண்டிருந்தார். அவர் என்னையும், என் கையிலிருந்த பத்திரிகையையும் பலமுறை வெறித்துப் பார்த்தார். பிறகு கேட்டே விட்டார், 'ஆப்னி பங்காளி? (நீங்க வங்காளியா?) 'சத்துமாதின்னி' என்ற அவப்பெயரிலிருந்து தப்ப நினைத்து, 'ஆக்யே ஹாங்' (ஆமாம்) என்றேன்.

"ஓ! எங்கே படிக்கிறீங்க? என்ன படிக்கிறீங்க?"

"செகண்ட் இயர் ஆர்ட்ஸ்"

"பாவோ!" (நல்லது) என்று கூறிய அவர் கஃபேயின் ஒரு மூலையில் அமர்ந்து ஏதோ சர்ச்சை செய்துகொண்டிருந்த இளைஞர் களை அழைத்தார்— "ஏய், ஹாபூ, போலா, காலூ, நீலூ, ஃபேலா! செகண்டு இயர் ஆர்ட்ஸிலேருந்து மெம்பரே இல்லேன்னு அன்னிக்கு சொல்லிக்கிட்டிருந்தீங்க இல்லே! இதோ இருக்கிறார் பாருங்க."

"ஓஹோ அப்படியா?" என்று கூவிக்கொண்டே அவர்கள் அனை வரும் ஓடிவந்து என்னைச் சூழ்ந்துகொண்டு அமர்ந்தனர். பிறகு டீக்கு ஆர்டர் செய்யப்பட்டது. முகமன் கூறி உரையாடல் தொடங்கியது. இனிமேல் அடிக்கடி சந்திப்போம் என்ற உறுதிமொழி எடுக்கப்பட்டது. மாணவர் அமைப்பை ஏற்படுத்தவேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப் பட்டது. இதில் மிக்க சுவாரசியமான விஷயம் என்னவென்றால்

அவர்கள் எந்தக் கட்சியைப் பற்றிப் பேசுகிறார்கள் என்பதை அறியாமலேயே நான் தலையாட்டிக் கொண்டிருந்தேன். அவர்களுள் ஓர் இளைஞன் கஃபேயின் மேனேஜரிடம் சென்று ஏதோ கூறினான். பிறகு என்னருகே வந்து "இன்னிலேயிருந்து உங்களுக்கும் இங்கே கன்செஷன் கிடைக்கும், புரிஞ்சுதா? நம்ம பார்ட்டி கஃபே இது. நீங்க நம்ம ப்ளாக் மெம்பர்னு இவங்களுக்குத் தெரியலே?" என்று மெல்லிய குரலில் தெரிவித்தான்.

அன்றுமுதல் ஃபார்வர்டு ப்ளாக் கட்சியின் பெயரால் நான் 'க்யால்க்யாடா கஃபே'யில் சலுகை விலையில் 'டீ-கட்லெட்' சாப்பிட ஆரம்பித்தேன்.

ஞாயிற்றுக்கிழமை அறையில் ஓய்வாகப் படுத்தவாறு பிரேம்சந்த் எழுதிய 'கோதான்' புத்தகம் வாசித்துக் கொண்டிருந்தேன். அப்போது வினோத், தடதடவென்று ஓடிவந்து, "ஐயா, செயற்குழு உறுப்பினரே! சங்கதி தெரியுமா? காம்ரேடு ராமப்ரதாப் வர்றாங்க. இன்னைக்கு செயற்குழுவின் அவசரக்கூட்டம் நடக்குது, நாலுமணிக்கு. புரிஞ்சுதா? பிறகு நாளைக்கு பூங்காவிலே பொதுக்கூட்டம்- அட, இது என்ன படிக்கிறீங்க, கோதானா? ஸில்லி-" என்றான்.

"ஏன்" பெருவியப்புடன் கேட்டேன்.

"இட்'ஸ் எ ரியாக்ஷனரி புக்! நல்லது, நாலுமணிக்கு வர்றே இல்லே?" என்று கேட்டுவிட்டு வந்தபடியே திரும்பினான் வினோத். நான் அகராதியைப் புரட்டி 'ரியாக்ஷனரி' என்ற சொல்லுக்கு என்ன பொருள் என்று தேடத் தொடங்கினேன்.

சரியாக மூன்றரை மணிக்கு நான் டீக்காக உடையணிந்து புறப் பட்டேன். வாயிலில் கவர்ச்சி மிகுந்த பெண்ணொருத்தி தோட்டக் காரனிடம் ஏதோ கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் அணிந்திருந்த 'அப்டு டேட்' உடையைக் கண்ட நான் செருப்பிலிருந்து ஆரம்பித்து பைஜாமா குர்த்தா வழியாக கண்களை ஓடவிட்டு என் பர்சனா லிடியை எடை போடலானேன். தோட்டக்காரன் என்னைக் கண் டதும், 'அவர்தாங்க!' என்றான். அந்த எழில் மடந்தை புன்னகை தவழும் வதனத்துடன் என்னை நோக்கி வரலானாள். என்னருகே வந்ததும் காம்ரேடுகளின் பாணியில் வணக்கம் செலுத்தினாள். என் கையில் ஓர் உறையை வைத்தவாறு 'அர்ஜென்டு லெட்டர்' என்றாள். நான் உறையைப் பிரித்துக் கடிதத்தைப் படிக்கலானேன். "-சோஷ லிஸ்டு லீடர் ராமப்ரதாப் வருகிறார். நமது கட்சி அவருக்கு ரெயில் நிலையத்தில் கறுப்புக்கொடி காட்ட முடிவெடுத்துள்ளது. நீங்கள் மிஸ். ரோஸாவுடன் இப்பொழுதே கிளம்பி வாருங்கள். நாளைக் காலை முதலே அங்குள்ள உறுப்பினர்களை ஒன்றுதிரட்டி பிளாட்பாரத்தில்

சித்தமாக இருக்கவேண்டும். பஞ்சாப் மெயில் வந்ததுமே 'ராமப்ரதாப் ஒழிக' போன்ற கட்சிக்கோஷங்களுடன் கறுப்புக்கொடி காட்ட வேண்டும்—செயலர்."

கடிதத்தைப் படித்து முடித்ததும் மறுமொழி கூறுவதற்காக சற்றே பார்வையை அவள்பால் ஓடவிட்டேன். மறுகணமே உச்சிமுதல் உள்ளங்கால்வரை புளகாங்கிதமடைவதை அனுபவபூர்வமாக உணர்ந்தேன். மிஸ். ரோஸா போன்ற பேரழகி இந்த எளியேனை அன்புரசம் ததும்ப அப்படியொரு பார்வை பார்ப்பாள் என்று நான் கனவிலும் நினைத்துப் பார்த்திருக்க முடியாது. நெப்போலியன் உண்மையிலேயே அதிபுத்திசாலியான மாமேதை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். நான் மீண்டும் ஒருமுறை அவளை நோக்கி னேன். அவள் புன்னகை மலர கற்கண்டினும் இனிய மொழியில் கேட்டாள்—"வர்றீங்க இல்லே?"

"போகலாம் வாங்க" நான் உவகைப் பெருக்குடன் பதிலளித்தேன்.

நாங்கள் குதிரை வண்டியில் ரெயில் நிலையத்துக்குப் போய்க் கொண்டிருந்தோம். சற்றைக்கெல்லாம் என்னுள் 'பிரக்ஞை' விழித்துக் கொண்டது போன்ற உணர்வு ஏற்பட்டது. என் உள்ளம் அவலக்குரல் எழுப்பியது. "ஐயோ, என்ன செய்யத் துணிந்தேன்! இத்தனை மதிப்பு வைத்து தெய்வம் போலக் கொண்டாடும் அந்தத் தலைவரையல்லவா அவமதிக்கப் போகிறேன்-! அதுவும் காரணமில்லாமல்! இல்லை, இது முடியாது, இது என்னால் இயலாது!"

"நீங்க சிகரெட் பிடிப்பதில்லையா?"

"—"

"நீங்க சிகரெட் பிடிப்பதில்லையா?"

"உம்- என்ன?- இல்லீங்க" என் எண்ணம் தடைப்பட்டது.

அவள் என் கண்களை நோக்கியபடி கேட்டாள்—"அப்படி என்ன யோசனை, சொல்லுங்க காம்ரேட்!"

"யோசனையா-? வந்து- நான் என்ன நினைச்சிட்டிருந்தேன்னா, இல்லே, ஒண்ணும் நினைக்கலே." என் கண்கள் தாமாகக் குனிந்தன.

"இதப் பாருங்க- நான் நம்ப மாட்டேன். உங்க மனசிலே என்னமோ யோசனை ஓடிக்கிட்டுத்தான் இருந்தது- அதை விடுங்க- நீங்க 'ஸ்மோக்' பண்றதுண்டா? இல்லை சிகரெட்டைக் கையாலேயே தொடமாட்டேன்னு சத்தியம் செஞ்சிருக்கீங்களா?"

"அப்படியெல்லாம் இல்லை- பழக்கம் கிடையாது. அவ்வளவு தான்- எப்பவாச்சும் புகைப்பதுண்டு."

"அப்ப- ஒரு 'தம்' அடிக்கறதுதானே"—என்றாள் கொஞ்சலுடன்.

ஜட்கா வண்டிக்காரன் சிகரெட் வாங்கிவர, அவள் பாக் கெட்டை அழகாகப் பிரித்தாள். ஒரு சிகரெட்டை நளினமாக எடுத்து என்னுடைய உதட்டில் செருகினாள். அதோடு நில்லாமல் நெருப்புக்

குச்சியைக் கிழித்து சிகரெட்டைப் பற்றவைக்கவும் உதவினாள். புகையை உள்ளே இழுத்தவாறு நான் அவளைக் கேட்டேன்.

"நீங்க-".

"நான் பிடிப்பதில்லே"—பெரிய சினிமா நட்சத்திரத்தின் ஸ்டைலில் முகவாயை அசைத்தாள். நான் வாயைப் பிளந்தவாறு அவளை வைத்தகண் வாங்காமல் பார்த்தேன்.

"உங்களுக்கு ஆச்சரியமா இருக்கு இல்லே? பல விஷயங்களில் எனக்குன்னு சில சொந்த அபிப்பிராயங்கள் உண்டு"—என்றவள் 'கேட்டால் சொல்லுவேன்' என்ற பாவனையில் முறுவலித்தாள்.

"அதாவது-?" சிகரெட் புகையை வெளிப்பக்கமாக விட்டவாறு கேட்டேன்.

"புகையை அந்தப் பக்கமா ஏன் விடறீங்க?" அவள் கேட்டாள்.

"பின்னே, எந்தப் பக்கம் விடணும்?"

"என் பக்கம் விடக்கூடாதா?" குழந்தை போலக் கொஞ்சினாள்.

"உங்க பக்கமா?"

"ஆமா என் பக்கமாத்தான். நான் சொன்னேன்ல, சில விஷயங்களில் எனக்குன்னு சொந்த அபிப்ராயம் உண்டுன்னு. சிகரெட்டைத்தான் எடுத்துக்குங்களேன். சிகரெட் புகையின் வாசனை இல்லாமல் ஒரு ஆம்பளைகூட இருப்பதை நான் விரும்பறதில்லை. சிகரெட்டுங்கறது ஆம்பளைங்க புகைக்கிற சமாச்சாரம். ஆனா, அதனோட புகை பெண்கள் ரசிக்கிற பொருள்." தன்னுடைய இந்த அபிப்ராயம் நம்பர் ஒன்றை அவள் வெகு சீரியஸாக எடுத்துரைத்தாள். நான் அந்த சிகரெட் தத்துவ விளக்கத்தில் மூழ்கி முக்குளியிட்டுக் கொண்டு உலகையே மறந்திருந்தேன்.

"என் அபிப்ராயம் நம்பர் இரண்டை இப்பச் சொல்றதா இல்லே-" என்றாள் அழுத்தமாக. அப்போது அவளுடைய முகபாவம் பொய்க் கோபத்தை வரவழைத்துக் கொள்ளும் கதாநாயகிபோல இருந்தது.

"சொல்லும்மா-" நானும் நயம் கலந்த குரலில் கொஞ்சினேன்.

"மொதல்ல நீங்க சொல்லுங்க, என்ன நினைச்சிட்டிருந்தீங்க?"

"நான் யோசிச்சிட்டிருந்தேன்- வந்து-"

"உம்- மேலே சொல்லுங்க"

"என்ன சொல்ல?" நான் அவளை நோக்கிப் புன்னகைத்தேன்.

"நீங்க பெரிய 'இது'தான். என்னமோ கத்துக்குட்டி கணக்கா பேசறீங்களே!"

"நான் யோசிச்சிட்டிருந்தது- வந்து- நான்- நீங்க"

"போதும் எனக்கு புரிஞ்சுடுச்சி," அவள் கலகலவென்று சிரித்தாள். இத்தனை நேரத்துக்குப் பிறகு நான் சுதாரித்துக்கொண்டேன். எங்கள் இருவரையும் தவிர உலகம், சாலை, வழிப்போக்கர்கள், கடை, ஜட்கா வண்டிக்காரன் எல்லாம் இருப்பதை உணர்ந்தேன். பதைபதைப்புடன்

நாலாபக்கமும் நோக்கினேன்.

"என்ன பாவ்லா பண்ணறீங்க? அசந்திருந்தா ஆளையே 'அபேஸ்' பண்ணிடுவீங்க போங்க. ஒண்ணும் தெரியாத மாதிரி இருந்துக்கிட்டு என்னையே அளக்கப்பாக்குறீங்க! கேளுங்க, என்னோட இரண்டாவது அபிப்பிராயம் ஆம்பளைங்க தாடியைப் பத்தினது தெரிஞ்சுதா? நான் "டெய்லி ஷேவை" விரும்பறதில்லே. ஒருநாள் விட்டு ஒருநாள் ஷேவ் செய்துக்கற கன்னம் இருக்கே..."

'சிகரெட் புகைத் தத்துவத்தை ஒப்பிடும்போது இந்த முகச்சவரத் தத்துவம்' ஆழமானதாகத் தெரியவில்லை.

பறந்துகொண்டிருந்த என் சிந்தனைக் குதிரை தடாலெனக் கீழே இறங்கியதுபோலத் தோன்றியது. என்னை அறியாமலேயே 'மை–காட்' என்றேன். உடனேயே நான் கம்யூனிஸ்டு அல்லவா என்ற நினைவு வரவே, ஆண்டவனின் லீலை என்றே சொல்லவேண்டும், "– ரேஜ்" என்று முடித்தேன்.

"மை காட்ரேஜ்? அப்படின்னா?" அவள் கேட்டாள்.

"காட்ரேஜ்! அதான் காட்ரேஜ், நம்பர் ஒண்ணு சாவி, இரண்டாவது சுதேசி அதாவது காட்ரேஜ் ஷேவிங்—ஸ்டிக்" சாமர்த்தியமாக பேச்சை மாற்றும் திறமை தந்த ஆண்டவனுக்கு நன்றி செலுத்தினேன்.

"ஓ! முகச்சவரம் பத்தி பேசினதும் உங்களுக்கு ஷேவிங் ஸ்டிக் நினைவுக்கு வந்ததாக்கும்? நீங்க காட்ரேஜ் ஸ்டிக்தான் பயன் படுத்தறீங்களா?"

"ஆமாம்" என்றேன் சுருக்கமாக.

"ஆனா..."

ஜட்கா வண்டி ரயில்வே ஸ்டேஷனை அடைந்தது. வண்டிக் காரன் கூறினான், "ஐயா, வண்டி பிளாட்பாரத்துக்கு வந்துடுச்சிங்க."

ரெயிலில் அமர்ந்ததும், போர்ட்டருக்கு காசு கொடுப்பதற்கு முன் அவள் சிகரெட் பாக்கெட்டை என்னிடம் நீட்டினாள். வண்டி 'விசில்' அடித்தது. நானும் புகையை சன்னல் வழியாக 'பக்' என்று வெளியே விட்டேன். உடனேயே தவறு புரிந்துவிட்டது. இதற்காக கண்களாலேயே மன்னிப்புக் கேட்டவாறு தொடர்ந்து அவளுடைய முகத்தை நோக்கி புகைச் சுருளை வீசினேன். புகைமண்டலம் பலூன் போல அவளைத் தாக்கியது. அவளது கண்கள் புகையின் இந்த இனிமையான ஆக்கிரமிப்பைப் பொறுத்துக்கொண்டு மூடித் திறந்தன. ஆனால் அவளுடைய கூர்மையான நாசியோ, இருபுறமும் புடைத்துக் கொண்டு சிகரெட் வாசனையை நுகர்ந்துகொண்டிருந்தது.

மறுநாள் காலை நேரம்.

வண்டி வந்து பிளாட்பாரத்தில் நின்றது. நான் இருபது–

இருபத்தைந்து கட்சித் தோழர்களுடன் (இவர்களுள் பெரும்பாலான வர்கள் இளைஞர்கள்-யுவதிகள்) கோஷமிட்டேன். "ராம்ப்ரதாப் ஒழிக" பிளாட்பாரம் நெடுக கறுப்புக்கொடிகள்.

"ராமப்ரதாப், காங்கிரசின் அடியாள்!" இந்தக் கோஷம் எழுப் பியது மிஸ். ரோஸா.

"ராமப்ரதாப் காங்கிரஸ் கீ தும்!" (காங்கிரஸின் வால்) என்று நான் இந்துஸ்தானியில் மொழிபெயர்த்துக் கூவினேன்.

கோஷம் போடுவதும், கொடி காண்பிப்பதும் என்ன பெரிய விஷயம்? அப்போது இருந்த நிலையில் மிஸ். ரோஸா விரலை அசைத் தால் நான் யாருடைய கழுத்தையும் திருகத் தயாராக இருந்தேன். ஒன்றைவிட ஒன்று கனத்த கோஷங்கள் எழும்பின. ஒரு பெட்டியின் கதவு திறந்தது. கம்பீரமான நெற்றி, அயரவைக்கும் பார்வை, தலைவர் கதவருகே வந்து நின்றார். உதடுகளிலே மோகனப்புன்னகை. இதற்குத் தான் புனிதமான புன்னகை என்று பெயரோ?

"இவர்தான். இவர்தான்!" ரோஸா சொன்னாள்.

"உம்"

"ராமப்ரதாப் ஒழிக!" ரோஸா கூவலானாள்.

"—" நான் என்ன சொல்லி கோஷமிட்டேன் என்று எனக்கே தெரியவில்லை.

வண்டி நகர்ந்தது. தலைவரின் முகபாவத்தில் எந்த மாறுதலும் இல்லை. அதே மாதிரி புன்னகைத்தவாறு நின்று கொண்டிருந்தார்.

"கரடியாகக் கத்தினோம். ஆனா அவரு முகத்திலே ஒரு சுளிப்புக் கூடத் தெரியலே." என்று நான் சொல்கையில் ரோஸா இடைமறித்துக் கூறினாள். "அட நீங்க ஒண்ணு. எல்லா பகட்டுத் தனமும் காந்திஜி கிட்டே இருந்து கத்துக்கிட்டிருக்காங்க. செருப்படி பட்டாலும் இவங்க சிரிப்பாங்க. சீ! சாயம் பூசின நரிங்க! பெரிய சோஷலிஸ்டு வேஷம் வேற போடறாங்க! புரட்சி செய்வாங்களாம்! வெளிவேஷக்காரங்க!"

ஹாஸ்டல் போய்ச் சேர்ந்ததும் நான் இரண்டு விஷயங்களை அச்சத்துடன் எதிர்பார்த்தேன். ஒன்று வினோதின் நட்பு முறிவை, இரண்டாவது, பார்ட்டிக்காரர்களிடமிருந்து செம்மையான வசவுகளை. இதில் ஏதாவது நடந்தால் குறைந்த பட்சம் அந்தப் பார்ட்டியிலிருந்து விடுதலை கிடைத்துவிடுமே! ஆனால், எதுவுமே நடக்கவில்லை. வினோத் வந்து, நான் வராமல் இருந்ததற்கு அங்கலாய்த்தான். பிறகு கூட்டம் வெற்றிகரமாக நடந்தது பற்றி மணிக்கணக்கில் பேசினான்.

ஓரிரு மாதங்கள் இப்படியே உருண்டோடின. சில நேரங்களில் இந்தப் படிப்புக்கு முழுக்குப் போட்டுவிட்டு ஊரை நோக்கி ஓடி விடலாம் என்ற எண்ணம் எழும்பும். ஒரே நேரத்தில் மூன்று கட்சி களின் உறுப்பினராக இருந்துகொண்டு ஒருவன் எதுவரை தன்னுடைய மரியாதையைக் காப்பாற்ற இயலும்?

'க்யால் க்யாடா கஃபேயில்' கிடைக்கும் கன்செஷனை அனுபவிப்பதற்காக மற்ற இரண்டு கட்சிகளையும் காவு கொடுக்க நினைத்தால் மிஸ். ரோஸாவின் கவிதை பேசும் கண்கள் வழிமறித்தன. ஒருநாள் ஒரு 'பார்வர்டு ப்ளாக்' உறுப்பினர் என்னைத் தனிமையில் அழைத்து வங்காளியில் துண்டுப் பிரசுரம் ஒன்றைத் தந்தார். அதை நான் இந்தியில் மொழியாக்கம் செய்ய வேண்டுமாம். நான் உடனே அதனை மொழிபெயர்த்தேன். இரவோடிரவாக அச்சு வாகனம் ஏறியது. மறுநாள் காலையில் நான் 'சௌக்'கிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தபோது ஜட்காவை நிறுத்தி இரண்டு துண்டுப் பிரசுரக் கட்டுகளை என்னிடம் ஒப்படைத்தார்கள். வினியோகம் செய்ய வேண்டும். ஆள் கிடைக்கா விட்டால் நானே அந்தப் பணியைச் செய்ய வேண்டும். கட்சியின் கட்டளை! தாய் தந்தையின் கட்டளைக்குத் தனிமதிப்புக் கொடுக்கும் காலம் இருந்தது. 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்று மனிதர்கள் காடு, மலை, வனாந்தரங்களில் அலைந்து திரிந்தார்கள். அந்தக் காலமெல்லாம் மலையேறிவிட்டது. பெற்றோர் சொல்லை மீறுவதே இப்போது புரட்சிக்காரர்களின் தலையாய கடமை. அதனால், இந்தத் துண்டுப் பிரசுரத்தில் நல்லதோ கெட்டதோ எது இருந்தாலும், அல்லது அது 'அணுகுண்டே' ஆனாலும் அதை வினியோகம் செய்யத்தான் வேண்டும். ஜட்கா அடுத்த நாற்சந்திற்குப் போய்ச்சேரவில்லை அதற்குள் யாரோ அழைக்கும் குரல் கேட்டது "காம்ரேட்!"

மிஸ். ரோஸா; அவள் தன்னுடைய ஜட்காவிலிருந்து இறங்கி என் வண்டியில் ஏறினாள். காடு, மலை எல்லாம் தேடி கடைசியில் என்னைக் கண்டு கொண்டவள் போன்ற மகிழ்ச்சியுடன் என்னருகே வந்து அமர்ந்தாள். முகமன் கூறிய பிறகு நாங்கள் கோர்வையாகப் பேச ஆரம்பிக்கவில்லை; பத்தடி நகர்ந்ததும் மீண்டும் வண்டி நிறுத்தப் பட்டது. அந்தத்தடை கடைசித் தடையாக முடிந்தது. சி.ஐடி. இன்ஸ் பெக்டர் நின்று கொண்டிருந்தார். எங்கள் இருவரையும் ஒரே இடத்தில் சந்தித்ததில் அவர் தன்னுடைய மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார். தேவைக்கு அதிகமான பணிவுடன் அவர் தெரிவித்தார்—"மன்னிக்க வேண்டும். உங்களைச் சோதனை செய்ய விரும்புகிறேன்."

காவல் நிலையம் பக்கத்திலேயே இருந்தது. அங்கே அழைத்துச் செல்லப்பட்டோம். முறைப்படி சோதனை நடந்தது. மிஸ். ரோஸாவின் கைப்பையிலிருந்து 'சென்ட்' வாசனையுடன் சில கடிதங்கள் உறைகளுடன் அகப்பட்டன. ஓரக்கண்ணால் ஒரு கடிதத்தை நோட்டம் விட்டேன். அது இப்படியாக ஆரம்பித்திருந்தது—'என் ராணி!' எனது இதயம் ஏற்கெனவே வேகமாகத் துடித்துக்கொண்டிருந்தது. இப்போது கண்களும் இருண்டதுபோலத் தோன்றியது.

என்னுடைய பையிலிருந்த துண்டுப் பிரசுரக்கட்டை போலீஸ்

எடுத்ததும் நான் ஓர் உடைந்த நாற்காலியில் அயர்ந்து உட்கார்ந்து விட்டேன். கட்டு பிரிக்கப்பட்டது. போலீஸ்காரர்களின் கண்கள் அகல விரிந்தன—"ஹியர் யூ ஆர்"

"சொல்லுங்க மிஸ்டர்! இந்தப் பையிலே அலங்காரப் பொருட்களும், சேலைகளும் இருந்ததாகச் சொன்னீங்களே! அதெல்லாம் எங்கே போச்சு இப்ப." இன்ஸ்பெக்டர் குத்தலாகக் கேட்டார்.

நான் பேசவில்லை. ரோஸாவின் முகம் வெளிறியது. அவள் மெல்லிய குரலில் கிறீச்சிட்டாள், "மென்ஸ்விக்!"

எங்களை சிறைச்சாலைக்கு அழைத்துச் சென்றார்கள். 'லேடீஸ் வார்டு'க்கு அழைத்துச் செல்கையில் புரட்சியின் உருவமான மிஸ். ரோஸா குலுங்கிக் குலுங்கி அழுதாள். ஜெயிலுக்குள் சென்றதும் நான் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டேன் நிம்மதியாக.

மறுநாள் ஒரு பத்திரிகையில் செய்தி, வெளியாகியது, ஸ்டூடன்ட்ஸ் ஃபெடரேஷன் (கம்யூனிஸ்டு கட்சி) உறுப்பினர்கள் தோழர் பி. ராயும், மிஸ். ரோஸாவும் ஆட்சேபகரமான துண்டுப் பிரசுரங்களுடன் கைது!"

இன்னொரு பத்திரிகை இவ்வாறு வெளியிட்டிருந்தது— "ஸ்டூடன்ட்ஸ் ஃபெடரேஷன்' (பொதுவுடைமைக் கட்சி) செயற்குழு உறுப்பினர் காம்ரேட் பிரபுல்ல ஆட்சேபகரமான துண்டுப் பிரசுரங்களுடன் கைது!"

மூன்றாவது பத்திரிகை எழுதியது, "ஃபார்வர்டு பிளாக்கின் பெயர் போன வங்காளித் தொண்டர் மிஸ்டர் ராய் அரசாங்க விருந்தினர் ஆனார்."

நிஜமாகவே முதல் வகுப்பு அரசியல் கைதிகள் சிறையில் வீட்டை விட சொகுசாக இருக்கலாம். வேளாவேளைக்கு நல்ல சாப்பாடு, படிக்கப் புத்தகங்கள், எந்தக் கவலையும் கிடையாது. அப்படியாக நாட்கள் ஆனந்தமாகக் கழிந்தன. ரோஸா இரண்டு நாட்களிலேயே விடுதலையானாள். ஆனால் கோர்ட்டில் எனக்கு மூன்று வருட தண்டனை கிடைத்தது. மனதில் அலாதியான ஒரு நிம்மதி. கட்சி என்கிற ஒரு பயங்கரப் பேயிலிருந்து விடுதலை கிடைத்ததே என்று மகிழ்ச்சி அடைந்தேன். இதனிடையே 1942 ஆகஸ்டுப் புரட்சி நாடெங்கும் பரவியது. தண்டச்சோறு, சுகமான நித்திரை, தொண்டை கிழியச் சொற்போர்—பொழுதுபோய்விடும். சிறையில் கம்யூனிஸ்டுகள் எண்ணிக்கை மிகக் குறைவாகவே இருந்தது. அவர்கள் பருப்பு வேகாது என்ற நிலை. காந்திஜியின் பக்தர்கள் சர்க்காவில் நூல் நூற்பது தவிர படிப்பு, சிந்தனை இவற்றையும் கட்சியின் தொண்டாகவே கருதினார்கள். அதனால் வேறெந்தத் தொல்லைக்கும் வரமாட்டார்கள்.

வாக்குவாதம் என்ன, சிறை அலுவலர்களின் பொல்லாப்புகளுக் கெதிராகக் குரல் எழுப்புவதுகூட 'அஹிம்சைக் கொள்கை'க்கு எதிரானது என்று நினைப்பவர்கள். சோஷலிஸ்டுகள் அதிகமாக இருந்தார்கள். எனவே, நானும் என்னை சோஷலிஸ்டு என்று சொல்லிக் கொள்வதே நல்லது என்று கருதினேன். கம்யூனிஸ்டு பார்ட்டி சிறையினுள் கிடக்கும் கட்சித் தோழர்களை விடுவிக்க முயற்சி செய்கிறது என்ற செய்தி சிலநாட்களுக்கெல்லாம் தெரியவந்தது. அவர்களுடைய நற்செயல்களைப் பற்றிக் கேட்கக் கேட்க முயற்சி திருவினையாக்கும் என்ற முழு நம்பிக்கை ஏற்பட்டது. எனவே, ஒரு நாள், 'என்னை மறந்துடாதீங்க காம்ரேட்ஸ்' என்று மறைவாக அவர்களுக்கு நினைவூட்டினேன். சிறையிலே எந்தவிதமான தொல் லையும் இருக்கவில்லை; இருந்தாலும் ஏனோ மனம் விடுதலைக்காகத் துடித்துக் கொண்டிருந்தது. சிறையிலிருந்து விடுதலை பெற்றால் கட்சிக் குட்டையிலிருந்து விடுதலை கிடைக்குமே என்ற சபலம். அந்த அளவுக்கு சிறைக்குள்ளே கட்சி என்ற சேறு பெருகிவிட்டது. இந்தச் சேற்றிலிருந்து மீள நான் எவ்வளவு முயன்றேனோ அந்த அளவு அதனுள்ளே அழுந்தினேன். பகலெல்லாம் உலகாயதவாதம் படித்து கடவுள் இல்லை என்று உருப்போட்டேன். ஆனால் இரவெல்லாம் கொசு வலைக்குள் கிடந்து ஆண்டவனிடம் விடுதலைக்காக அழுது முறையிட்டேன். என் போன்ற ஆழ்ந்த பக்தனின் முறையீட்டுக்குக் கடவுள் ஒருநாள் செவிசாய்த்தார். நான் நோய்வாய்ப்பட்டேன். நோய் தன் கைவரிசையைக் காண்பித்தது. பத்திரிகைகள் எனக்காக வரிந்து வரிந்து எழுதின. அரசாங்கத்தின் கவனம் ஈர்க்கப்பட்டது. ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டேன். சிகிச்சை தொடங்கியது. 'வெயிட்' அதிகரித்தது. சுரம் குறையத் தொடங்கியது. இதையெல்லாம்விட கட்சிப்பேயின் பிடியிலிருந்து விடுதலை கிடைத்ததே அது பெரிய விஷயம். மருத்துவமனையில் ஏ.ஆர்.பி பயிற்சிக்காக வந்திருந்த படிப்பும், அழகும் வாய்ந்த வங்காளி நர்சுகள் நோயாளிகளைக் கவனித்து வந்தார்கள். ஆனால், எல்லா நர்சுகளுமே என்னிடமிருந்து விலகிச் செல்வதாக எனக்குப்பட்டது. ஒருநாள் தந்திரமாக இவர்களின் இந்தப் போக்குக்கான காரணத்தை ஆராய்ந்து தெரிந்துகொண்டேன். பஞ்ச தந்திரத்தில் வருமே சக்கரம் சுழலும் கதை—அதேபோல இங்கும் கட்சியின் சக்கரம் சுழல்வதை உணர்ந்தேன். நான் காந்தியவாதி என்று கருதி என்மேல் வங்காளி நர்சுகளுக்குக் கோபம்! காந்திஜி சுபாஷ் போஸை ஏமாற்றிவிட்டார், அதுதான் காரணமாம்! என்னை ஆட்டு விக்கும் சக்தியினால் உந்தப்பட்டு, அவர்கள் எதிரில் காந்தியவாதிகளை நிந்தனை செய்தேன். பிறகு அவர்கள் கேள்விகளைச் சரமாரியாகத் தொடுத்து நான் ஃபார்வர்டு பிளாக் கட்சியைச் சேர்ந்தவன் என்று தெரிந்து கொண்டனர். அப்புறம் கேட்பானேன்! விழுந்து விழுந்து

உபசாரம்தான் போங்கள்! விரல் அசைத்தால் இரண்டுபேர், நாவசைத்தால் நான்குபேர் வந்து நிற்பார்கள்! அரசாங்கம் என்னை விரைவிலேயே விடுதலை செய்து தன் புத்திசாலித்தனத்தை நிரூபித்தது. இல்லாவிட்டால், நான் ஒரு புதிய நோய்க்கு இரையாகி இருப்பேன்.

விடுதலை பெற்றதும் இனிமேல் கட்சி-கிட்சி என்ற பேச்சைக் கேட்டாலே அங்கிருந்து ஓட்டம் பிடிப்பது என்று உறுதிமொழி எடுத்துக்கொண்டேன். ஆனால் என்ன பயன்? வீட்டை அடைவதற்கு முன்பே, ஒரு கட்சி அனுதாபியைச் சந்திக்க நேர்ந்தது. முன்னமேயே தெரிந்தவர், தட்டிக்கழிக்க முடியாத நிலை. பேச்சின் நடுவே அவர் தன்னுடைய கட்சி மூட்டையை அவிழ்த்தார். 'பம்பாய்த்திட்டத்துக்கு எதிராக 'ராய் திட்ட'த்தின் ஒரு நகலை அவர் என்னிடம் தந்தார். "இதப்பாருங்க, இதுதான் தோழர் ராயின் திட்டம்" என்றார். விவாதத்தில் இறங்கினால் எங்கே மீளமுடியாதோ என்ற அச்சத்தினால் கழன்றுகொள்ள எண்ணினேன். என் திருவாயிலிருந்து 'திட்டம் நல்லா இருக்கே!' என்ற வார்த்தைகள் உதிர்ந்த பிறகுதான் அவர் நகர்ந்தார்.

வீட்டை அடைந்ததுமே செய்தித்தாளைப் பிரித்தேன். என்ன ஆச்சரியம்! கொட்டை எழுத்துக்களில் என்னைப் பற்றிய ஒரு செய்தி தென்பட்டது.

'தோழர் பிரபுல்லராய் விடுதலையானதும் பம்பாய்த் திட்டத்தை 'சுரண்டல்காரர்களின் திட்டம்' என்று பழித்தார். ராய்திட்டத்துடன் இதை எந்த வகையிலும் ஒப்பிடமுடியாது என்று தெரிவித்த அவர், 'ராய் திட்டம்'தான் உண்மையில் 'பாட்டாளி மக்களின் திட்டம்' என்று திட்டவட்டமாக அறிவித்தார்.'

படிப்புக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. பெற்றோர் திருமணப் பல்லவியை திரும்பத் திரும்பப் பாடினர். சிறை புகுவதற்கு முன்பு என்னை ஏதோ விலையுயர்ந்த பண்டம் என்ற நினைப்பில் பெண் வீட்டார் தொடர்ந்து படையெடுத்தவண்ணம் இருந்தனர். ஆனால், இப்போதோ 'அர்த்தமில்லாத விஷயங்களுக்காக' அடிக்கடி சிறை செல்லும் என் போன்ற பொறுப்பற்றவர்களுக்கு பெண் கொடுப்பது பெண்ணைக் கிணற்றிலே தள்ளுவதற்கு ஒப்பாகும் என்று கருதலானார்கள். இருந்தாலும் 'சௌபாக்கியவதி'யாக விரும்பும் ஒரு மணமகளின் துணிச்சலான தந்தைக்கு என் பேரில் ஏனோ நம்பிக்கை ஏற்பட்டது. பெற்றோரின் நச்சரிப்புத் தாளாமல் நானும் தலையசைத்தேன். பெண் பார்க்க அழைத்தார்கள். சீவி மினுக்கிக்கொண்டு அவர்கள் இல்லத்தை அடைந்தேன். 'வருங்கால மாப்பிள்ளை' போலவே வரவேற்பும், உபசாரமும் நடந்தன.

பெண்ணின் தந்தை முற்போக்கு எண்ணங்களுக்கு ஏற்றம்

தருபவர். இன்றைய உலகம்—நாட்டு நடப்புக்கள் பற்றி தனியான கருத்துக்களை உடையவர். எனவே, பெண்பார்க்கும் படலம் முடிந்ததும் அவர் தற்கால அரசியல் பற்றி உரையாற்ற ஆரம்பித்தார். அவர் பேசிக்கொண்டே போனார், நான் தலையாட்டி பொம்மைபோல கேட்டுக்கொண்டே இருந்தேன். ஒரு நிலை வந்ததும், படுதாவுக்குப் பின்னால் நிற்கும் 'மக்கள்' என்னுடைய மேலான கருத்துக்களைக் கேட்க நினைப்பதாக எனக்குப்பட்டது. என்னை எங்கேயாவது 'ஆமாம் சாமி' என்றோ 'பூம் பூம் பூம் மாடு' என்றோ நினைத்தால் என்ன ஆவது? கொஞ்ச நேரம் முன்னால் என் வருங்கால இல்லத்தரசியைக் கண்டு, அவளுக்காக என் கற்பனை உலகில் புதுப்புது டிசைன்களில் பங்களாக்கள் கட்டிக் கொண்டிருந்தேன். ஆகவே, 'விடக்கூடாது. மைதானத்தில் இறங்கி ஒரு கைபார்த்துவிட வேண்டியதுதான்!' என்று தீர்மானித்தேன்.

பேச்சு 'க்விட் இண்டியா' அதாவது 'வெள்ளையனே வெளியேறு' என்ற தலைப்புக்குத் திரும்பியது. என்னுடைய வருங்கால மாமனார், "காங்கிரஸ் கட்சி 'க்விட் இண்டியா' தீர்மானம் கொண்டுவந்தது இருக்கே, அது சிறுபிள்ளைத்தனமான காரியம்" என்றார் ஆணித்தரமாக. இந்த மடத்தனமான கருத்தை நான் எதிர்க்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. விவாதம் சூடுபிடித்தது. அங்கே, படுதாவுக்குப் பின்னால் 'மக்கள்' உற்சாகம் கரைபுரள்வதாக நான் உணர்ந்தேன். அவ்வளவுதான், என் குரல் தடித்து உச்சஸ்தாயியை எட்டியது— "எங்கள் கனவு நனவாகும் நன்னாள் வெகு தொலைவில் இல்லை, 1942க்குப் பிறகு நாடு_" நான் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தேன்.

"இதைக் கொஞ்சம் கேளுங்க"—என்று கூறியவாறு என்னுடைய வருங்கால மைத்துன துரை தன் அறையிலிருந்து வெளியே வந்தார்— மாமனாரின் ஒரே மகன்—செல்லப்பிள்ளை. அவனுடைய இளமைத் துடிப்பில் நம்பிக்கை வைத்து நான் கேட்டேன்: "என்ன மோகன் பாபு! நான் சொல்றது தவறா? நீங்க சொல்லுங்க!"

அவர் அழுத்தமான குரலில் பேச ஆரம்பித்தார்: "பாருங்க பிரபுல்ல பாபு! இது வரையிலும் உங்க பேச்சைப் பொறுத்துப் பார்த்தேன். என்னுள் சக்தி இருந்தவரை என்னையே ஏமாற்ற முயன்றேன்! அதாவது என் மனச்சாட்சியை அடக்கப் பார்த்தேன். ஆனா, உங்க பேச்சு எல்லை மீறிப்போச்சு. கேட்டுக்கொண்டு பேசாமல் இருப்பது துரோகம் என்று தோணுது_"

"நிச்சயமா_" நான் உற்சாகமாகக் கூறினேன்.

"நீங்க கடைசியா சோஷலிஸ்டுகாரங்க போலப் பேசினீங்க. இதெல்லாம் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் வருது. கடமையின் கண்ணியத்தை நீங்களும் உணர்ந்திருப்பீங்கன்னுதான் நினைக்கிறேன். இந்த நிலையிலே, நான் என் கடமையைச் சரிவரச் செய்யலேன்னு

எனக்குப்படுது. இது துரோகம் இல்லாமெ என்ன..?" அவர் தன் தகப்பனாரின் சிகரெட்-கேஸிலிருந்து ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தார்.

பெரியவர் புன்னகைத்தவாறு என்னிடம், "நம்ம பையனுக்கு இப்பத்தான் பொறுப்பு வந்திருக்கு. அவன் வருத்தப்படறதை இப்பத் தான் முதல் தடவையாகப் பாக்கறேன்" என்றார் பெருமிதத்துடன்.

"என்ன பேசறீங்க..?" இம்முறை குரல் படுதாவுக்குப் பின்னால் இருந்து வந்தது. "பையனுக்கு இப்பத்தான் கவர்மென்டு வேலெ கெடச்சிருக்கு. வேலெ உயர்வுக்கு முயற்சி பண்ணுவீங்களா, இல்லே ரெயிலெக் கவுக்கறதுக்காக பாலத்துக்கடியிலே குண்டு வக்கிறவங் களோட சம்பந்தம் வச்சுக்கிட்டு கெடச்ச வேலையைத் தலை முழுகப் போறீங்களா? என் பொண்ணு கன்னியாகவே இருந்துட்டுப் போகட்டும், எனக்கு வேண்டியதில்லை இந்தச் சம்பந்தம்!"

இது என் மாமியார்க்காரியின் கடுமையான சொல்லம்பு. இதெல்லாம் என்ன மாய்மாலம் என்று முதலிலே புரியவில்லை எனக்கு. பிறகுதான், மோகன் பாபு சிஐடி துறையில் வேலைக்குச் சேர்ந்திருக்கிற விவரம் தெரிய வந்தது. கண்கூடாகப் பார்த்த பிறகும் சொந்தக் காதுகளால் கேட்ட பிறகும், இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் குற்றம் சாட்டப்பட வேண்டிய ஒரு நபரைச் சும்மா விட நேர்ந்தது அவருக்கு முதல் அனுபவம் போலும். கருணை கூர்ந்து அவர் எனக்கு இரண்டு மணிநேர அவகாசம் அளித்தார்.

நான் பதினைந்தே நிமிடத்தில் தயாராகி அவரது வீட்டை 'க்விட்' செய்துவிட்டேன். கூடவே, அந்த வீட்டில் என் கல்யாணம் நடக்கலாம் என்று கொஞ்சநஞ்சம் இருந்த நப்பாசையையும் 'க்விட்' செய்தேன். அந்த 'சௌபாக்கியவதி' சன்னலுக்குப் பின்னால் பரிதாபகரமாக நின்றுகொண்டு மலங்க மலங்கப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய அகன்ற கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் முத்துப் போலத்தெரிந்தன. ஆனால் ஒரு நீண்ட பெருமூச்சுடன் 'வாபஸ்' வாங்குவதைத் தவிர வேறு வழி?

வணிக முக்கியத்துவம் பெற்ற இந்தச் சிற்றூரில் கட்சி அரசியலுக்கு இடம் ஏது என்ற எண்ணத்துடன் நான் அங்கே ஒரு சிறிய வேலையில் சேர்ந்தேன். ஊரின் வண்டவாளம் பிறகல்லவா தெரிந்தது! இங்கே ஏக அரசியல், நூறு கட்சிகள்: கட்சியிலிருந்து விலகி ஓரடி நடப்பதுகூட கடினமான காரியம். திருவாளர் 'அ'விடம் நான் சற்றே சிரித்துப் பேசியது திருவாளர் 'க'வுக்குப் பிடிக்கவில்லை. பண்டித் 'ச' வீட்டில் நான் டியூஷன் கற்பிக்கச் சென்றதைக் கண்டு முன்ஷி 'த' முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டார். திருவாளர் 'ப' மில் முதலாளி; ஒருநாள்

அவருடைய அழைப்பை ஏற்றுக்கொண்டு நான் அவர் வீட்டில் பாயசம் சாப்பிட்டதால் காரல் மார்க்ஸின் 'காபிடலு'க்கே களங்கம் ஏற்பட்டுவிட்டது! பெரிய வியாபார நிறுவனங்களை விடுங்கள், தெருத் தெருவாகச் சுற்றி சாமான் விற்பவர்களுக்கும் கட்சிகள் உண்டு.

ஒருநாள் மார்க்கெட்டிலிருந்து சிகரெட் மாயமாக மறைந்து விட்டது. சிகரெட் பிடிப்பவர்கள் நாயாய் அலைந்து இரும்புக் கடையில்கூட சிகரெட்டைத் தேடித் திரிந்தார்கள். எனக்கு டீயும், சிகரெட்டும் தடையில்லாமல் சப்ளை செய்யும் திருவாளர் சிவத்திடம் ஒருநாள் கேட்டேன்— "ஏன்யா! உமக்கு மட்டும் சிகரெட் எங்கே யிருந்து கெடைக்குது?" அவர் பற்கள் முப்பத்திரண்டையும் வெளியே காட்டிக்கொண்டு, "ஐயா! நம்ம கட்சி ஆளுங்களுக்கு இல்லேன்னு சொல்ல முடியுமா?- ஹீ-ஹீ- ப்ளாக் மார்க்கெட்டிலிருந்து-" என்றாரே பார்க்கலாம்! 'ஓஹோ! அப்படியா சேதி! பார்ட்டியின் புண்ணியத் திலேதான் எனக்கு சிகரெட் கிடைக்கிறது. அவரும், நானும் ஒரே கட்சி' என்பதெல்லாம் புரிந்தது.

காங்கிரஸ் கட்சி தேர்தலில் போட்டியிடப் போவதாக அறிக்கை விடுத்ததும், நம் நண்பர்கள் நிறம் மாற ஆரம்பித்தனர். வெள்ளைக்கார துரைத்தனத்தாரிடம் 'எந்தப் பார்ட்டியிலும் சேரமாட்டேன்' என்று சத்தியப் பிரமாணம் எடுத்தவர்கள்கூட, 1942இல் சலவைசெய்து பெட்டியில் பத்திரமாக மடித்துவைத்த காந்தி குல்லாயைத் தரிக்க ஆரம்பித்தார்கள். 'காங்கிரஸ்' என்ற சொல்லை உச்சரிப்பதற்கு முன்னால் சுற்றுமுற்றும் பார்ப்பவர்கள் இன்று நம் வழியை மறித்து தேர்தல் பற்றி விவாதிக்கிறார்கள். நான்கூட இன்ன கட்சியைச் சேர்ந்தவன் என்று என்னை அறிவிக்கலாம். கம்யூனிஸ்டுகளிடம் எனக்கு விருப்பம் ஏற்படவில்லை. காரணம், மிஸ். ரோஸா ஓர் அமெரிக்க சோல்ஜரைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு சர்வதேசக் கொள்கையை செயல்படுத்திவிட்டாள். சோஷலிஸ்டுகளுக்கு மக்கள் ஆதரவு நன்றாக இருக்கிறது. பார்வர்ட் பிளாக்கிற்கும், காங்கிரசுக்கும் வேறுபாடே இல்லாமல் போய்விட்டது. வழி நன்றாய் புலப்படுகிறது. ஆனால் கட்சி என்ற பெயரை எடுத்தாலே இதயத்துடிப்பு நிற்பது போலத் தோன்றுகிறது. தலைசுற்றுகிறது. எதையும் நிதானித்து முடிவு எடுக்க முடியவில்லை. நாளெல்லாம் நூறு கேள்விகள் எழுகின்றன.

"திருவாளர்கள் 'ம'வும், 'ர'வும் காங்கிரஸ் டிக்கெட்டுலே நிக்கணும்னு நினைக்கிறாங்களே, ரெண்டு பேரிலே யார் 'ஃபிட்'ன்னு நீங்க நினைக்கிறீங்க?"

"திருவாளர் 'தி' பேரிலே மேலிடம் ஏதாவது நடவடிக்கை எடுத்ததுண்டா?"

"ராஜா சாகப் காங்கிரசை எதிர்த்து நிக்கப்போறதாகக் கேள்விப் பட்டேனே!"

"ஏன் சார்! திருவாளர் 'ய' ஹிந்து சபா டிக்கெட்டுலே நிக்கப் போறாராமே! அவர் உங்களுக்கு நெருங்கிய நண்பராச்சே! அவருக்கு நீங்க நிச்சயம் உதவிசெய்ய வேண்டியிருக்கும்"—இப்படி பலப்பல கேள்விகள்.

நான் மௌனம் சாதிப்பேன். எனது மௌனத்துக்கும் புதுப்புது விளக்கம் கண்டுபிடிக்கப்பட்டது. ஒவ்வொரு பார்ட்டி மெம்பரும் என்னை எதிர்க்கட்சியின் உளவாளி என்று கருதினார். பெரிய தொல்லையாயிற்று. நான் எல்லாக் கட்சியிலும் இருக்கிறேன். ஆனால் ஒரு கட்சியிலும் இல்லை. இந்த நிலையில் ஏதாவதொரு கட்சியைத் தேர்ந்தெடுப்பது தவிர வழியே இல்லை! 'எந்தப் பார்ட்டி' என்பதுதான் கேள்வி. புரியாத புதிர். தலை தட்டாமலையாகச் சுற்றுகிறது.

பகலில் நிம்மதி இல்லை, இரவிலே உறக்கம் வருவதில்லை. நான் நடுரோட்டிலே ஓடுகிறேன். வேலை வெட்டியில்லாமல் ஊர்சுற்றும் பொறுக்கிப் பயல்கள் என் பின்னால் தகரடப்பாவைத் தட்டிக் கொண்டு ஓடி வருகிறார்கள். அவர்கள் கூக்குரலிட்டுக் கேட்கிறார்கள்—"நீங்கள் எந்தக் கட்சி சொல்லுங்க? எந்தக் கட்சி சொல்லுங்க?" நான் அவர்களை அடிப்பதற்காக ஓடுகிறேன். பையன்கள் என் மேல் கல்லை விட்டெறிகிறார்கள். கை கொட்டிச் சிரிக்கிறார்கள். சாலையில் ஓடுகிறேன், தையல்காரர் ஓலமிடுகிறார். "சாலை 'த' கட்சியினுடையது". சாலையை விட்டு ஒற்றையடிப்பாதை வழியாக ஓடுகிறேன். நாவிதர் குரல் கொடுக்கிறார்—"ஒத்தையடிப்பாதை 'ந' கட்சியோடது." ஒற்றை யடிப் பாதையைவிட்டு சாக்கடையில் விழுகிறேன்–

கட்டிலிலிருந்து கீழே விழுந்து கனவு கலைகிறது. எழுந்திருக்க உடலில் வலுவில்லை. கடுஞ்சுரத்திலிருந்து எழுந்த வேலைக்கார புத்தன் எப்படியோ கைத்தாங்கலாக எழுப்பி கட்டிலில் உட்கார வைக்கிறான். "ஒன்றும் ஆகலீங்க, பயப்படாதீங்க. நான் இன்னைக்குச் சாயங்காலமே கிராமத்துக்குப்போய் எங்க சித்தப்பனை இட்டுக்கிட்டு வாறேன். அவரு வந்து சாமியாடி விபூதி பூசுவாரு—எல்லாம் சரி யாயிடும். இந்தப் பேயெல்லாம் அவரு முன்னால நிக்காது!" என்று தேற்றினான்.

என்னைப் பேய் பிடித்திருக்கிறது என்று நானும் எண்ணுகிறேன். பேய்—பிசாசு—பூதம் இதில் நம்பிக்கை இல்லாதவர்களிடம் நான் குறைந்தபட்சம் இந்தப் பேயையாவது நம்புங்கள் என்று மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன்.

(1945)

# ரஸூல் மேஸ்திரி

மிகக் குறுகிய காலகட்டத்திலேயே அந்தச் சிற்றூரில்தான் எத்தனை மாறுதல்கள்! நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு—தேவைக்கு அதிகமான மாறுதல்கள் என்று கூடச் சொல்லலாம்.

அதோ உயர்ந்து நிற்கிறதே பள்ளிக் கட்டிடமும், மாணவர் விடுதியும், அவற்றின் முந்தைய உருவம் கற்பனைக்கும் எட்டாதது. ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு இந்தப் பள்ளியின் வகுப்புகள் பெரும் பாலும் ஆலமரத்தடியில்தான் நடந்தன என்றால் நீங்கள் நம்புவீர்களா? நல்ல மழைக்கால இரவுகளில் அந்தப் பக்கமாக நடந்தால் ஹாஸ்டல் மாணவர்கள்—'கொட்டுதையோ வானம் சொட்டுதையோ விடுதி' என்று இரவெல்லாம் உச்சஸ்தாயியில் பாடுவதைக் கேட்கலாம்.

ஊர்ச்சனங்கள் குப்பைகளைக் கொட்டும் இடத்தில் இன்று விசாலமான டவுன்ஹால், கிளப், நூல்நிலையம் என்று வரிசையாக எழும்பியுள்ளன அழகழகான கட்டிடங்கள்.

கஃபூர் மியான் தோல் பதனிடும் கொட்டடி சினிமாக் கொட் டகையாகி விட்டது. முன்பெல்லாம் அந்த வழியாகப் போகும்போது துப்புரவுத் தொழிலாளி பகியாகூட வாயைக் கோணிக் கொண்டு மூக்கை முந்தானையால் மூடிக்கொள்வாள். இன்றோ, சென்ட் வாசனை கமழ அங்கு நடைபயிலும் மிஸ். சாயாதேவியின் உதடுகளில் மெல்லிய பாட்டு தவழுகிறது—'சிங்காரத்தெருவிலே சுற்றி வர ஆசை!'

கலீஃபா பரீத்மியானின் கடையில் பழைய சிங்கர் தையல் மெஷின் கடபுடா என்று ஓடும் காலம் மலையேறிவிட்டது. 'பரக் பரக்' என்று துணியைக் கிழிக்கும் அவருடைய பழைய கத்தரியும் பழங்கதையாகி விட்டது இப்போதெல்லாம் 'மாடர்ன் கட்ஃபிட்' லத்தூ மாஸ்டர் போன்ற டிப்டாப் டெய்லர்களுக்குத்தான் காலம்.

'ரெஸ்டாரென்டு'கள், 'டீஸ்டால்'கள் காய்கறிக் கடைகளைவிட அதிகமாகப் பெருகிவிட்டன. உலகப்போர் காரணமாக அகவிலை ஏகமாக ஏறிவிட்டாலும் தினமும் புதிய புதிய திட்டங்கள் உருவா கின்றன. உருக்குலைகின்றன. மொத்தத்தில் பட்டணமும், கடைத் தெருவும் அடையாளம் காண முடியாதபடி மாறிவிட்டன.

ஆனால் சதர் சாலையில் பழைய அரசமரத்தின் அருகே ரஸூல் மியானின் ரிப்பேர் கடை மட்டும் காலம் மாறியதை உணரவே

இல்லை போலும்! கடுகளவாவது மாறுதல் வேண்டுமே, ஊஹூம், கிடையாது. ஒரு புதுமையும் வரவில்லை. இந்தக் கடையில் முன் போலவே ரஸூலும், அவரது மகன் ரஹீமும் பழைய சமுக்காளத்தில் அமர்ந்து ரிப்பேர் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்கள் இருவரும் உட்காரும் இடம்கூட மாறவில்லை. அவர்களைச் சுற்றி மானா வாரியாகக் கிடக்கின்றன ரிப்பேருக்காக வந்த சாமான்கள்—பழைய சைக்கிள் சக்கரம், டியூப், சீட், பெடல், செயின், ப்ரேக், பெட்ரோமாக்ஸ் விளக்கு, ஸ்டவ், ஹார்மோனியம், கிராமஃபோன் இத்யாதிகள். இவற்றைச் சுற்றிலும் பணிக்கருவிகள், ஆயுதங்கள், திருப்புளி; ஒரு பழைய மரப்பெட்டியில் பற்பல கருவிகளின் பகுதிகள், ரிஞ்ச், சின்ன ரம்பம், உளி, சுத்தியல், ஸ்க்ரூடிரைவர், உடைந்த ஸ்பிரிங்குகள்; பக்கத்திலுள்ள சிறிய அலமாரியில் பழைய புதிய மாடல்களில் பழுதடைந்த கடிகாரங்கள்; இரண்டு மூன்று காலி டன்லப்—ட்யூப் டப்பாக்கள், சிறிதும் பெரிதுமாக ஏதேதோ தட்டுமுட்டுச் சாமான்கள், ஆனால் ஒன்றும் உருப்படியாக இல்லை. எல்லாம் ஓட்டை உடைசல், அலமாரிக்கு மேலே ஒரு பழைய கிராமஃபோனின் துருத்திபோன்ற ஒலிபெருக்கி கவிழ்த்தியபடிக்கு இருக்கிறது. சுவரில் டன்லப், குட்இயர் மற்றும் வாட்ச் கம்பெனிகளின் 1934, 36, 38ஆம் வருடத்திய பழைய காலண்டர்கள், சினிமா நடிகை மிஸ். கஜ்ஜனின் கிழிந்த கலர்ப்படம் தொங்குகிறது. இரண்டு சுவர்க்கடிகாரங்கள்—ஒன்றில் டயல் இல்லை, மற்றதில் பெண்டுலம் இல்லை. பெண்டுலம் இல்லாத கடிகாரம் எத்தனையோ நாளாக மூன்று மணியையே காட்டுகிறது. இன்னொன்று எக்ஸ்ரே படம்போல தன்னுடைய உள்ளுறுப்புக்களை வெளிக்காட்டிக் கொண்டிருக்கிறது. அதனுடைய ஸ்பிரிங்குக்கு அருகே சிலந்தியொன்று ஆனந்தமாக வலைபின்னிக்கொண்டு குடும்பத்துடன் குடியிருக்கிறது.

ரஹீம் இன்னொரு பக்கம் உட்கார்ந்து பேசாமல் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறான். தகர நாற்காலியில் அமர்ந்து வாடிக்கை யாளர் தம்முடைய சாமான் பழுதுபார்க்கப்படுவதை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருக்கிறார்.

எதிரில் அரசமரத்தின்மேல் தினமும் புதிய கடைகளின் விளம்பரங்கள், டாக்டர் மற்றும் மருந்து விளம்பரங்கள், போர் அணி களின் கோஷங்கள், சினிமா போஸ்டர்கள் எல்லாம் மாறி மாறி ஒட்டப்படுகின்றன. ஒரு தகரத் தகட்டின்மீது எழுதி மாட்டிய ஒரு விளம்பரம் மட்டும் எத்தனையோ வருடங்களாக அப்படியே தொங்கு கிறது. அதில் கோணல் மாணலாக இவ்வாறு எழுதியிருக்கிறது— 'ரஸூல் மேஸ்திரி—இங்கு ரிப்பேர் செய்யப்படும்'.

இந்த விளம்பரப்பலகை பலமுறை நகரத்துப் படிப்பாளிகளின் விமர்சனத்துக்கு உள்ளாகி இருக்கிறது. அவர்கள் இதைப்பற்றி நையாண்டி செய்திருக்கிறார்கள். ரஸூல் மேஸ்திரி முன்னிலையில்

எத்தனையோ முறை திருத்த மசோதாக்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும், இன்றளவும் அது சற்றேனும் மாறாமல் அப்படியே தொங்குகிறது. அண்மையில், ஏதோ ஒரு பொல்லாத சிறுவன் இந்த விளம்பரத் தகட்டில் தன் கையால் ஒரு வாசகத்தை எழுதிச் சேர்த் திருக்கிறான். 'இங்கு முதுகும் ரிப்பேர் செய்யப்படும்'—ஆனால், அப்படி விஷமத்தனமாக எழுதிய வாசகத்தை அழிக்கவேண்டிய அவசியத் தையும் யாரும் உணரவில்லை போலும்.

ரஸூல் மேஸ்திரி

நடுத்தர உயரம், தொழிலாளிகளுக்கே உரித்தான உடற்கட்டு, நீண்ட கூர்மையான முகத்தில் கைப்பிடியளவு தாடி—கறுப்பு மயிரும், வெள்ளை மயிரும், எள்ளும் அரிசியும்போல கலந்த தாடி. அறுபது வயதை அடைந்த தளர்ச்சி உடலில் காணப்படவில்லை. என்ன சுறு சுறுப்பு, வேகம்! வாலிபர்கள் பிச்சை வாங்கவேண்டும். எளிமை என்றால் இதல்லவா எளிமை—கனமான துணியில் ஒரு லுங்கி, அதே போல காடாத் துணியில் ஒரு ஜிப்பா. வெற்றிலை-பாக்கு, டீ, பீடி இத்யாதிகளின் பிரவலர். நிமிட நேரமாவது கை சும்மா இராது. துருதுரு வென்று ஏதோ வேலை செய்துகொண்டிருக்கும். 'சரடு' விடுவதில் மன்னன், அவர் 'ரீல்' விடுவதைக் கேட்டுக்கொண்டே இருக்கலாம். ஆனால் வாய்ச்சவடால் அல்ல. நாணயமானவர். பொறுப்பைத் தட்டிக் கழிக்க மாட்டார். கை வேலை செய்து கொண்டே இருக்கும், வாய் உலக நடப்புகளை அளந்து கொண்டிருக்கும்.

'டக்டக்டகடக் டக்டகடக்டக்"

"அப்ப தெரிஞ்சுக்குங்க அண்ணே, 'தோஜக்— பஹிஸ்து' அதாவது சொர்க்கம் நரகம் எல்லாம் இங்கேயே இருக்கு. ஆமா, இங்கேதான் இருக்கு. நாம செய்யற நன்மை, தீமைங்களுக்கு இங்கேயே கூலி கிடைக்குது. நம்ம ராமச்சந்தர் பாபு இல்லே? ஏ ரஹீம்! அந்த ஸ்க்ரூ டிரைவரை இந்தப் பக்கமா கடாசு. அதான் ராமச்சந்தர் பாபு. ஆமாம் தம்பி! அந்தக் குட்டையன்தான். கெட்டிக்கார ஆளு. ஆமா, இதைத்தான் கேட்டேன்!"

ரஹீம்!

ரஸூல் மேஸ்திரியின் ஒரே மகன். மாநிறத்துக்கும் கொஞ்சம் கம்மி. கொழுகொழுவென்று இருப்பான். 'வாப்பா'விடம் ரொம்பவும் மரியாதை உள்ள பையன். அவசியத்துக்கு அதிகமாகவே பணிவும், அடக்கமும் உடையவன்.

அவன் தன்னுடைய தந்தையின் முன்னால் உரக்கப் பேசிச்

சிரித்ததை யாருமே பார்த்ததில்லை. ரிப்பேருக்காக பழைய சாமான்களுடன் மூன்று நான்கு பேர் வந்துவிட்டால்போதும், ஆரம்பித்துவிடும் ரஹீமுக்குச் சோதனைக் காலம்! சின்னச்சின்ன தவறுகளுக்குக்கூட ரஸூல்மியான் மகனைக் கடிந்துகொள்வார். பகல்பூராவும் குனிந்த தலைநிமிராமல் வேலை பார்த்தாலும்கூட 'சோம்பேறி, உதவாக்கரைப் பையன், ஊர்சுற்றிக் கழுதை' போன்ற வசவுமொழிகள் விழுந்து கொண்டே இருக்கும். ஆனால் ரஹீமின் முகம் கொஞ்சமாவது மாற வேண்டுமே! ரஸூல் மியான் பிதற்றிக்கொண்டே இருப்பார். ரஹீமோ அமைதியாக வாடிக்கையாளரிடம் பேசிக் கொண்டிருப்பான்— "பாருங்க, இதனோட ஸ்பிரிங் உடைஞ்சுபோச்சு- அப்புறம் ஹோல்டிங் நட்டு-" ரஸூல்மியான் வாயைவைத்துக்கொண்டு சும்மா இருக்க மாட்டார், குறுக்கே புகுந்துவிடுவார், "கொண்டு வா இங்கே- என்ன ஆச்சுன்னு நானும் பாக்குறேன். ஓஹோ, போடா சின்னப்பயலே! ஸ்பிரிங் மட்டும்தானா போயிருக்கு. இதப்பாரு- ஸ்பிரிங் மாத்திட்டேன்- நீ சொன்னமாதிரி ஹோல்டிங் நட்டையும் பொருத்திட்டேன்- எங்கே, மெஷினை ஓட்டி ரிகார்டைப் பாட வை பார்க்கலாம்! அப்பத்தான் நீ பக்கா மேஸ்திரின்னு சொல்லுவேன்... அட மண்ணாந்தைப் பயலே! பாலன்ஸைப் பர்த்தியா? பாலன்சு இல்லாம எப்படிடா ஓடும்?-" ரஹீம் சற்றே வெட்கம் கலந்த புன்னகையுடன் தரையைப் பார்த்துக்கொண்டு நிற்பான்.

ஊருக்குக் கிழக்கே இரண்டுமைல் தொலைவில் ஒரு சிறிய கிராமம். அங்கேதான் மேஸ்திரியின் வீடு இருக்கிறது. மேஸ்திரியின் மூதாதையர்கள் ஒரு காலத்தில் நிலம், நீச்சு என்று செழிப்பாக வாழ்ந்தவர்கள். இன்று மாடு, மனை, சொத்து, சுகம் என்ற பெயரில் எஞ்சியிருப்பது மூன்று குடிசைகளும், நாலைந்து ஆடுகளும், ஒரு சில சேவல் கோழிகளும் மட்டுமே. வருவாயைப் பற்றிக் கேட்டால், ரிப்பேர்க் கடை இல்லாத நாட்களில் வயிற்றுக்கும் விடுமுறை. செலவோ, நவாப் கணக்குதான்! மாதம் முப்பதுநாளும் சமையலில் கறி, ஈரல், ஹல்வா சேமியா இவை இடம்பெறாமல் இருக்காது. மகனும், மருமகளும் வாயே திறக்க மாட்டார்கள். கிழவி இருக்கிறாளே, அதான் ரஸூலின் பீபி, தன்னுடைய நல்லகாலத்தில் எவ்வளவோ முயன்று பார்த்து விட்டாள்— வாயைக்கட்டி, வயிற்றைக்கட்டி நாலு காசு மிச்சம் வைக்க வேண்டும் என்று. ரஸூல் மியான்விட்டால்தானே! இப்போது அதெல்லாம் ஒன்றும் பிரயோசனம் இல்லை என்று விட்டுவிட்டாள். ரஸூல் மியான் உமர்கயாம்போல தத்துவம் பேசி அவள் வாயை அடக்கி விடுவார். ஆக, அவள் சொன்னது ஒருநாளும் எடுபட்டதில்லை. இருந்தாலும், இன்றும் அவள் தன் கருத்தைச் சொல்லாமல்

விடுவதில்லை. ரஹீமின் கையில் பொட்டலத்தைப் பார்த்துக் கேட்பாள்—"அந்தப் பொட்டலத்திலே என்னது ரஹீம்?"

"ஈரல்..."—ரஹீம் குழைந்துகொண்டே பதில் கூறுவான்.

"எம்புட்டு இருக்கும்? ஒரு சேர் இருக்கும் போலிருக்குதே. என்ன விலை? ஏ அல்லா..! ரெண்டு ரூபா சேரா? இப்படித் துன்னாட்டி என்னா? அந்த நாக்கிலே தீயை வைக்க! ரெண்டு ரூபா சேர் ஈரலாம்! ரஹீம் உன்னைத்தான் கேக்குறேன்.. அல்லாமியான் ஊருக்கெல்லாம் புத்தியும், அறிவும் குடுத்த நேரத்தில எங்கேடா போய்த் தொலைஞ்சே? உங்க வாப்பா தலையிலே சைத்தான்தான் பிடிச்சிருக்கு! உன் வாயிலேயோ அல்லா பூட்டைப்போட்டு பூட்டி வெச்சிருக்காரு" கிழவி ரஸூல் மியானின் ஈரல் தின்னும் ஆசையை ஆசைதீரத் திட்டி நொறுக்குவாள். ரஹீம் அங்கிருந்து மெதுவாக நழுவிவிடுவான். கிழவியின் மடியில் உட்கார்ந்திருக்கும் பேரன் ஈரல் பொட்டலத்தைத் தாவித்தாவி எடுக்கப் பார்ப்பான். கிழவி குழந்தையைத் தடுப்பாள்—"அய்யோ ஆண்டவனே, என்னதான் செய்வேன், ஒண்ணும் புரிய மாட்டேங்குதே..." அங்கலாய்த்துக்கொண்டே அவள் முணு முணுப்பாள், மணிக்கணக்காக—"அப்பன், மகன் இரண்டு பேருக்கும் புத்தி மேயத்தான் போயிருக்கு. இப்படி வக்கணையாத் தின்னுக் கிட்டிருந்தா.. என்னைக்கும் இப்படியே நடக்குமான்னு யோசனை பண்ண வேண்டாம்?"

நாவின் ருசிக்கு அடிமையாகி நொடித்துப்போன சில குடும்பங் களின் கதைகளை எடுத்துக்காட்டி இவங்க செத்தா சவக்கோடிக்குக் கூட வக்கு இருக்காது என்பாள். இப்படி அவள் தன் விதியை நொந்து கொண்டிருக்கையில் ரஸூல்மியான் வந்து சேருவார். முதலில் ஈரல் பொட்டலம் பிரிக்கப்படாமல் ஏன் அப்படியே கிடக்கிறது என்பதற் கான காரணம் கேட்பார். கிழவியோ வாய்திறவாமல் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொள்வாள். ரஸூல்மியான் மேலங்கியைக் கழற்றி மாட்டிவிட்டு திண்ணையில் சென்று உட்கார்ந்துவிடுவார். மருமகள் ஹுக்கா தயாரித்து அவர் முன்னால் வைப்பாள். இரண்டு வயதுப் பேரன், சுட்டிப்பயல் கரீம் பாட்டியின் மடியை விட்டிறங்கி தாத்தாவின் மடியில் ஏறி அமர்ந்து கொள்வான். பிறகு பாட்டியை விரலால் சுட்டிக்காட்டி மழலை மொழியில் கூறுவான்— "தொண.. தொண.. பாத்தி" தாத்தாவிடமிருந்து லெமன் மிட்டாயும், பிஸ்கட்டும் கிடைக்கும். இன்னும் உரத்த குரலில் பாட்டியை எரிச்சலூட்டுவான்— "தொண தொண பாத்தி, தொண தொண பாத்தி."

ரஸூல் மேஸ்திரி ஹுக்கா புகையை இழுப்பார். முகத்தில் எப்போதும் காணும் இயல்பான சாந்தம் மாறும். சற்றே சினந்த குரலில் மனைவியிடம் கேட்பார்: "உன்னைத்தான் கேக்குறேன் புள்ளே, நித்தநித்தம் தொணதொணக்குற இந்தக் குணம் இருக்கே, எப்ப

மாறப்போகுது? எப்பப்பாரு இதே பாட்டுதான், எப்பக்கேளு இதே ராகம்தான். உனக்குக் கொஞ்சமாவது வெக்–"

"என்னோட வெக்கம், மானம் பத்தி இங்கே யாரும் பேச வேண்டியதில்லே"—கிழவி படபடப்பாள்.

ரஸூல்மியானுக்கும் சூடு ஏறும்—"இப்படிப் பேசினா என் வாயை அடக்கிடலாம்னு நெனப்பா? ஒருதரம்இல்லே, ஆயிரம் தரம் சொல்லுவேன், உனக்கு வெக்கம், மானம் இல்லேன்னு. எல்லாத்தையும் ஊத்திலே விட்டாச்சு. உன்னால் மட்டும் முடிஞ்சா எங்க எல்லாரையும் பட்டினி போட்டே கொன்னிருப்பே. ஏதோ ஆசைப்பட்டு வாங்கிட்டு வந்திருக்கோம். தொணதொணக்காட்டி உனக்குப் பொழுது போகாது."

"தொண-தொண- பாத்தீ"—கரீம் பிஸ்கட்டைத் தின்றுகொண்டே கையைத் தட்டி ஆரவாரம் செய்வான். பாவம், கிழவி அழுது விடுவாள். அல்லா சீக்கிரம் தன்னை அழைத்துக் கொள்ளக்கூடாதா, என்ன சுகத்தைக் காண இப்படி உயிர்வாழ வேண்டும். இதை எல்லாம் பேச எனக்கு வக்கு ஏது? நல்லதைச் சொல்லவந்து வெட்கம் கெட்டவள் என்ற பொல்லாப்பையும் கட்டிக்கொண்டேனே– என்றெல்லாம் எண்ணமிடுவாள். மருமகள், ஈரலை எடுத்துக்கொண்டுபோய் அரியத் தொடங்குவாள். ரஹீம் மெதுவாக அறையிலிருந்து எங்கேயாவது போய்விடுவான். கிழவி உட்கார்ந்து விசும்பிக் கொண்டிருப்பாள்.

"ரஸூல் காக்கா இருக்காங்களா," வெளியிலிருந்து வருகிறது ஒரு குரல்.

"யாரு? ஃபக்ருதீனா? வாய்யா வா. சொல்லு, என்ன சேதி–" ரஸூல்மியான் புகைக் குழாயிலிருந்து வாயை அகற்றியவாறு கேட்பார்.

"காக்கா, ரஷீதுக்கு இரண்டு நாளா வாந்தி, வயிற்றுப்போக்கு, மருந்து கேக்கவே இல்லே, உடம்பு வேறே சில்லிட்டுக்கிடக்கு–"

"எங்கேயோ எருமைமாட்டு மேலே எண்ணெய் மழை பெய்யுதுன்னு சும்மா இருந்தியாக்கும் ரெண்டுநாளா?" ரஸூல் மியான் இடைமறித்துக் கேட்டவாறு எழுந்து விடுவார்! "–பார்க்கலாம் வா. பயப்படாதே ஒண்ணும் ஆகாது. கண்டதைக் கடியதைத் தின்னிருக்கும் எல்லாம் சரியாப்போகும்" என்றவாறு உள்ளே போவார்.

"இஸ்மைலு எப்படி இருக்கு ஃபக்ரூ" கிழவி கேட்பாள்.

"உங்க ஆசியிலே இப்ப நல்லா இருக்கிறான், காக்கி. நீங்கதான் அந்தப் பக்கம் வர்றதே இல்லே. இஸ்மைலு அம்மா கேக்குது - காக்கிக்கு ஏதானும் கோபமா நம்ம மேலே? அப்படீன்னு."

"போடா பைத்தியக்காரா! நா எதுக்குக் கோவிச்சுக்குறேன்? இந்தத் துக்கிரி கரீமைப் பார்த்துக்கவே நேரம் சரியாப்போகுது."

ரஸூல்மியான் பையில் சிறியதும் பெரியதுமாக மருந்து சீசாக்களை அடைத்துக்கொண்டு கிளம்புவார்—"வா போகலாம்." கிழவி சொல்லுவாள்—"நல்லா ஆற அமர கவனிங்க. கையிலே இல்லாத

மருந்துன்னா பட்டணத்திலேருந்து வாங்கிவரச் சொல்லுங்க."

தாத்தா புறப்பட்டுப்போனதும் கரீம் மெதுவாக பாட்டியின் அருகே வந்து சேருவான், அர்த்தமில்லாமல் சும்மா சிரித்துக்கொண்டு, சமாதான உடன்படிக்கைக்கு பேச வருவதுபோல. ஏதேதோ பேசி பாட்டியின் கோபத்தைத் தணிக்க முயலுவான். தான் பாதி தின்ற பிஸ்கட்டை பாட்டி தின்னால்தான் ஆயிற்று என்று அடம் பிடிப்பான்.

"போடா போக்கிரிப்பயலே, சைத்தான்! இங்கே ஒண்ணும் வர வேண்டாம். உங்க தாத்தாகிட்டேயே போ. பெரிசா வந்துட்டான் பிஸ்கட்டை எடுத்துக்கிட்டு சமாதானத்துக்கு. போ போ, நான் தொண தொண பாட்டிதானே!" என்று சொல்லி கோபத்தைவிடாமல் நடிப்பாள். ஆனால் இந்த மாதிரி சந்தர்ப்பத்திலே எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்று கரீம்மியானுக்கு நன்றாகத் தெரியும். பலவந்தமாக பாட்டி மடியில் ஏறி உட்கார்ந்துகொண்டு தாத்தாவைக் குற்றம் சொல்லத் தொடங்குவான்— "தாத்தா பக்கி(ரி)ட சட்டோ(ர்)"— (தாத்தா பக்கிரி- தாத்தா சப்புக்கொட்டி). அப்போது பாட்டியின் உதடுகளில் தவழும் புன்னகையைக் கவனித்துக் கொள்வான். பிறகு தனக்கே உரிய வினோதமான மழலை மொழியில் ஏதேதோ பேசி பாட்டியை வசப்படுத்துவான். மழலைப் பேச்சில் அவன் கூறுவதன் சாராம்சம் இப்படித்தான் இருக்க வேண்டும்—'தாத்தா எப்பவாவது தானே வூட்டுக்கு வர்றாரு. நான் அவருகிட்டே போறதெல்லாம் பிஸ்கெட் வாங்கிக் கொள்ளத்தான். அதுக்கு மட்டும்தான் அவரு கிட்டெ சிநேகிதம். அவரை ஏமாத்தி எப்படி பிஸ்கெட் வாங்கினேன் பாத்தியா? இதுதான் பாட்டி நம்ம ராஜ தந்திரம்!'

ஈரலை அரிந்துகொண்டே கரீமின் அம்மா கண்களை உருட்டி அவனிடம் கூறுவாள்—"அப்படியா சேதி! தாத்தா வரட்டும். உன்னோட வண்டவாளம் எல்லாம் வெளியாகப் போவுதுபாரு."

கரீம் மியான் தன் தாயின் சொல்லை எப்படிப் பொறுத்துக் கொண்டு சும்மா இருப்பான்? அம்மாதான் வீட்டிலேயே பலவீனமான பிராணி, வாயில்லாப் பூச்சி. கரீம் மியான் அம்மாவை ஒருபோதும் காக்காய் பிடித்ததில்லை; பிடிக்கவும் போவதில்லை. என்னைப் பயமுறுத்த அவளுக்கு இத்தனை துணிச்சலா? சிறிது நேரம் மௌனமாக இருப்பான். அம்மா புன்னகை புரிவாள். உடனே அவளை ஏசுவான்— "பேசாம கிர-"

"தாத்தா வரட்டும் சொல்றேன்"—அம்மா மீண்டும் பயமுறுத் துவாள். இதைக்கேட்டு கரீம்மியான் வெகுண்டு எழுவான். அருகில் அடிக்க லாயக்காக ஏதாவது பொருள் கிடைக்குமா என்று நோட்டம் விடுவான். பெரிய தடிக்கம்பைத் தூக்க வலுவிருக்காது. வெறுங்கையை ஓங்கிக் கொண்டு அம்மாவை ஆக்கிரமிப்பான். தலைமுடியைப் பிடித்து இழுப்பான். அம்மா ஓலமிடுவாள்— "விடுடா சைத்தான், என்னை

விட்டுடு. தாத்தாகிட்டெ சொல்ல மாட்டேன். விடுப்பா கண்ணு."

பாட்டி சிரித்துக்கொண்டே போய் அவனைப் பிடித்துக்கொண்டு வருவாள். கரீம்மியான் தன்னுடைய மொழியில் பயமுறுத்துவான்— "பக்கிரித் தாத்தாவையும் அப்பாவையும், உன்னையும் அடித்து துரத்திடுவேன், வீட்டைவிட்டு."

அம்மா திரும்பவும் கோபமடைந்தால் போர்க்களத்தில் இறங்கி விடுவான். ஆனால் பாட்டி தடுப்பாள். பல்லை நறநறவென்று கடித்துக் கொண்டு விறைப்பாக உட்காருவான். பாட்டிக்கும், அம்மாவுக்கும் இந்த சங்கேத மொழி தெரியும். பாட்டி சொல்லுவாள்—"இன்னிக்கு பால்குடிக்கும்போது உன்னை அழவிட்டுத்தான் மறுவேலை. உண்டு இல்லைன்னு பண்ணிடுவான். கவனமா இருந்துக்க."

கரீம் சில நாட்களாக ஒரு புது உத்தியைக் கண்டுபிடித்திருக் கிறான். பால்குடிக்கும்போது அதைக் கையாளுவான். தாய், 'அம்மாடீ' என்று கத்துவாள். அப்போது தன்னுடைய வெற்றியில் கரீம் பெருமிதம் கொள்ளுவான்.

சமையலறையில் மருமகள் ஈரல் சறி சமைத்துக் கொண்டிருப் பாள். அப்போது கிழவி உரக்கக் குரல் கொடுப்பாள்—"பாரும்மா, பதமாக இருக்கட்டும், இல்லேன்னா புயலைக் கிளப்பிடுவாரு." உப்பு, உறைப்பு, மசாலா போடுவதைப் பற்றி வெளியிலிருந்தே ஓரிருமுறை எச்சரிக்கை விடுத்த பிறகு தானே சமையலறையில் புகுந்துவிடுவாள். மருமகள் மடியில் குழந்தையை விட்டவாறு கூறுவாள்—"கொஞ்சம் அம்மாகிட்டெ இரு, நான் போய்க் குழம்பைக் கவனிக்கிறேன்." மருமகள் முறுவலித்துக் கொண்டு சமையலறையிலிருந்து வெளியே வருவாள். அதற்குள் கிராமத்தை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு ரஹீம் திரும்பி வருவான். அப்பா, அம்மா, குழந்தை மூன்றுபேரும் சேர்ந்து பழைய ஜப்பானிய கிராமஃபோனில் கமலா ஜரியாவின் பாட்டைப்போட்டு ரசிப்பார்கள்—'அதாஸே ஆயா கரோ பனகட் பர், ஜப்தக் ரஹே ஜிகர் மே தம்' (வந்திடுவாய் ஒயிலாக ஆற்றுத் துறைப்பக்கம், அதுவரை துடிக்கட்டும் என் இதயம்).

ரஸூல்மியான் திரும்பும்போது கையில் கள்ளுக்குவளையும் இருக்கும். அடுத்த காட்சி—சாப்பாட்டுக்காக முற்றத்தில் விரிப்பு விரித்தல். கொட்டாவி விட்டுக் கொண்டே கரீம்மியானும் சாப்பிட எழுந்திருப்பான். தட்டு, கிண்ணம், கிளாஸ் இவற்றை ஒவ்வொன்றாக மெல்லத் தூக்கிக்கொண்டு தாத்தா பக்கத்தில் வருவான். மூன்று பேரும் சேர்ந்து திருப்தியாக சப்பாத்தி—ஈரல் கறியை ஒருகை பார்ப்பார்கள். நடுநடுவே மதுபானமும் நடக்கும். கிழவி பக்கத்தில் உட்கார்ந்து பரிமாறுவாள். "வாஹ், இன்னிக்கு குழம்பு வெகுஜோர்" என்று சொல்லி விட்டால்போதும், உச்சி குளிர்ந்துவிடும் கிழவிக்கு.

கரீம் மியானும் ஓரிரு மிடறு குடித்துவிட்டு களியாட்டம்

போடுவான். குவளையில் மீந்திருக்கும் கள்ளை கிழவியிடம் கொடுத்தவாறு ரஸுல்மியான் கூறுவார்—"ஒரு கிளாஸ் போல இருக்கும், மருமகளுக்குக் கொடு. உடம்பு வவ்வால் கணக்கா வத்திக்கிடக்கு. தினமும் ஒரு கிளாஸ் குடிச்சா, மதமதன்னு பழைய உடம்பு வரும். கள்ளாக்கும், சாராயம் இல்லே தெரிஞ்சுக்கோ. நீதான் குடிச்சதே இல்லையே— உனக்கு எங்க தெரியப்போகுது!"

சற்று நேரத்துக்கெல்லாம் குடிசைகளில் நித்திரைக்கன்னி கோலோச்சுவாள். யாராவது வந்து கூப்பிட்டால் ரஸுல் மியான் இரவிலும் ஏதாவது நோயாளியைப் பார்க்கப் போய்விடுவார். ஒவ்வொரு சமயம் இரவெல்லாம் வைத்தியம் செய்யப்போக வேண்டியிருக்கும்.

காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு ரஸுல்மியான் பட்டணத்துக்குப் புறப்பட்டுவிடுவார். மதியச் சாப்பாட்டை ரஹீம் எடுத்துச் செல்வான். ரஸுல் மியான் காலையில் சரியான நேரத்துக்குக் கிளம்பிச் சென்றாலும், சாப்பாட்டை எடுத்துச் செல்லும் ரஹீம்தான் அனேகமாக முதலில் கடைக்குப் போய்ச்சேருவான். வீட்டிலிருந்து புறப்பட்ட பிறகு நாலெட்டுக்கு ஒருமுறை நின்று ஊர்க்காரர்களின் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொண்டே போவார். எத்தனை எத்தனை பிரச்சினைகள்—திருமணம், அடிதடி, சண்டை, வழக்கு, பஞ்சாயத்து, வியாதி-வெட்டை, மருந்து-பத்தியம் என்று தனித்தனியாக ஒவ்வொருவருக்கும் ஆலோசனை கூறியவாறு கிராமத்திலிருந்து வெளிவரும்போதே மணி பன்னிரெண்டு அடித்துவிடும். பிறகு வயல் வரப்பு வழியாக நடக்கும் போது வயலில் வேலை செய்பவர்களிடம் 'விவசாய சம்பந்தமாக' இரண்டு வார்த்தை பேசாமல் நகர முடியுமா?

"அடே மஹங்கூ, நீ திருவிழாச் சந்தையிலே வாங்கினேல்ல, ஒரு கன்னுக்குட்டி, எங்கே அது?"

"என்னத்தைச் சொல்ல மாமா, ரெண்டு நாளா அது புல்லும் தின்னலே, தண்ணியும் குடிக்கலே, அதுக்கு என்ன ஆச்சோ, ஏதோ– ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்!"

அவ்வளவுதான், ரஸுல்மியான் திரும்பிவிடுவார். கன்றுக் குட்டியைப் பார்த்து, என்ன நோய் என்று நிதானித்து—அதற்கு என்ன பச்சிலை மருந்து கொடுக்கவேண்டும், அந்தப் பச்சிலை யார் தோட்டத்தில், எந்த மரத்தடியில் கிடைக்கும் என்பதையும் விளக்குவார், அல்லது தானே போய்க் கொண்டுவருவார்.

கடைக்குப்போய் இருக்கையில் அமர்ந்ததும் சொல்லுவார்—"ஓ, இன்னிக்கு ரொம்ப நேரமாயிடுச்சி." பிறகு ரஹீம் செய்யும் வேலையை சிறிதுநேரம் உன்னிப்பாகக் கவனித்துவிட்டு, "இங்கே கொடு அதை,

நான் பார்க்கிறேன். அது வரையிலும் நீ போலாவின் கடிகாரத்தைப் பாரு," என்பார்.

பழைய நாற்காலியில் அமர்ந்திருக்கும் ஆள், "யாரந்த போலா"? என்று கேட்டால் போதும் ஆரம்பித்துவிடும் போலா புராணம்—"அதாங்கறேன், அந்த போலாதான்- தெரியலையா? காங்கிரஸ்காரன். இப்ப புரிஞ்சுதா? ஜெயில்லேயே பிஏ. பரீட்சை தேறினான். பெயருக்கு ஏத்த மாதிரி நல்ல பையன்- போலா-! இதப் பாருங்க, உங்க கடிகாரத்தின் இயர்ஸ்பிரிங் எவ்வளவு லோலமா இருக்கு. அதானலேதான் சொல்றாங்க, மலிவாக்கிடைக்குதுன்னு வாங்கினா அடிக்கடி அழ வேண்டியதுதான்- ஆனா, இந்த போலா இருக்கிறானே, கருத்தானவன், எதை நினைச்சாலும் செஞ்சு முடிப்பான். நானும்தான் எத்தனையோ பையன்களைப் பார்த்திருக்கிறேன்-"

கதை கேட்பவர், தனக்கு அறிமுகமில்லாத போலாவைப் பற்றிய கதையின் முகவுரை நீளுவதைக் கண்டு குறுக்குக் கேள்வி கேட்பார்—"மியான், எந்த போலாவைப்பத்தி இவ்வளவு உசத்திப் பேசறீங்க? நீளமா தலைமுடியை வளர்த்திக்கிட்டிருக்கிறானே, அவன்தானே-"

"இல்லய்யா, அவன் இல்லை-"ரஸூல் இடைமறிப்பார், "நீளமா தலைமுடி வளர்த்துக்கிட்டிருக்கிறது அவனிந்தர். அவன் போலாவுக்குச் சேக்காளிதான். அவனும் அமைதியான பையன். கவிதை எழுதுறதுலே படுகெட்டி. பசுப்போல சாதுவான பையன். பாக்குறதுக்கு ஊர்சுற்றிப் பயல்போல தெரிகிறான், ஆனால்-"

"ஓ ரஸூல் காக்கா! இங்கே கொஞ்சம் வாங்க- பாருங்க இதை-" பால்காரப்பெண் விசும்பிக் கொண்டே வந்துநிற்பாள்—"பாருங்க ரஸூல் காக்கா, பானையை உடைச்சுட்டு- கையைப் பிடிச்சு இளுக்கறான்-"

"யார் அவன்"?

"சதீஷ்பாபு மகன்."

"சதீஷ்பாபுகிட்ட சொல்லலியா நீ?"

"சொன்னேன் காக்கா, அவரு, பையனைக் கண்டிக்கறதுக்குப் பதிலா என்னை விரட்டறாரு—கெட்ட வார்த்தை சொல்லி திட்டறாரு." இதைக் கேட்டதும் ரஸூல்மியான் புருவத்தை நெரித்துக் கொண்டு எழுந்துவிடுவார். வேலையை 'அம்போ' என்று விட்டுவிட்டு கோபத்தில் கத்த ஆரம்பிப்பார்—"எவ்வளவு பெரிய பணக்காரனோ அவன்கிட்ட அந்த அளவுக்கு சின்னத்தனம் இருக்கும். ஒண்ணாம் நம்பர் சோட்டா, நீ போயி, சௌதாகர் சிங்கைக் கூட்டியா, சுதாமியா." பால்காரி சுதாமியா கண்ணீரைத் துடைத்துக்கொண்டு போவாள். ரஸூல்மியான் விடாமல் படபடப்பார்—"காசு கொழுத்துப் போச்சு- இவனுங்க பொம்பிளை கற்பிலேயே கையை வைக்கிறான் பிசாசு!-"

"மேஸ்திரி, இந்தப் பொம்பளைங்களை லேசுப்பட்டதுன்னு

நினைக்காதீங்க, பலே கைகாரிங்க. ஆளைச் சொக்கவச்சு வம்புக் கிழுக்கும். ஆமா, இந்த மாதிரி வயசுப் பொண்ணுங்களை பட்டணத் துலே பால்விக்க அனுப்பாட்டி என்ன?"

"சும்மா இருங்க, நீங்க ஒண்ணு! இந்தப் புள்ளே என் மகளைப் போல. கிராமத்துப் புள்ளங்களுக்குக் கள்ளம் கிடையாது, தெரிஞ்சுக் குங்க. உங்க பட்டணத்துப் பெண்களைப்போல இல்லே. பால் வித்துத் தான் சீவனம் நடக்கணும். இவ வீட்டிலே இந்தப் புள்ளையைத் தவிர எல்லாருக்கும் சீக்கு. வைத்தியரைக் கூப்பிடவும் பால் விக்கவும் இவ போகலேன்னா யார் போறது? சொல்லுங்க! பெண்களுடைய உண்மை நிலையை உணராமல் இந்தக் கயவாளிங்க அவளுடைய கஷ்ட நிலைமையைத் தன்னுடைய சுயநலத்துக்குப் பயன்படுத்தறாங்க."

சுதாமியா வந்து கூறுவாள்—"சௌதாகர் காக்கா வீட்டிலே இல்லே." ரஸுல் மியான் சுதாமியாகூட தனியாகவே கிளம்பிவிடுவார்.

பொழுது சாயத்தொடங்கும்போது கடைக்கு வந்துசேருவார். அப்போதும் படபடத்துக்கொண்டே வருவார்— "நீயும் ஒரு நாளைக்குக் கிராமத்துப்பக்கம் வராமலா போவே? நடுரோட்டிலே நிக்க வச்சு உன் தோலை உரிக்காட்டி என் பேரு ரஸுல் இல்லே, ஆமா."

பிறகு கடையில் ஓர் ஓரமாக உட்கார்ந்து கொண்டிருக்கும் காய் கறிக்காரிகளை நோக்கிக் கேட்பார்—"என்ன அப்துல்லா அம்மா, இப்பத்தான் பொழுது விடிஞ்சுதா?" இதைக் கேட்டதும் காய்கறிக் காரிகள் எல்லாரும் கோரஸ்போல ஒரே குரலில் பதில் சொல்லு வார்கள் "எப்பப் புடிச்சி காத்துக்கிட்டு கிடக்கோம்? கொஞ்சம் கணக்குப் பண்ணிச் சொல்லுங்களேன்."

"பொறுங்க, பொறுங்க, ஒவ்வொருத்தரா வாங்க—உங்கிட்டே எவ்வளவு பாவக்காய் இருந்திச்சு? ஹமீதன்..? பதிமூணு சேர். என்ன விலைக்கு வித்தே..? நாலணாவா..? ஆமா, பதிமூணு நாலு அய்ம்பத்தி ரெண்டு- அய்ம்பத்திரெண்டு அணான்னு சொன்னா மூணேகால் ரூபா- பைசா எங்கே? ஆங் சரிதான். அப்புறம்- நீ கொண்டுபோனது என்ன பரவலா..? இந்தாய்யா, உள்ளே ரஹீம் கிட்டே போய்க் காட்டுங்க. பார்த்தா தெரியலையா? எனக்கு இதற்கெல்லாம் நேரமில்லை இப்போ."

கணக்குப் பார்த்து செல்லாக்காசா, நல்லதா என்று சோதித்து முடிக்கும்போது பொழுது சாய்ந்துவிடும். ரஹீம் வேலையை முடித்துக் கொண்டு வீட்டுக்குப் போகத் தயாராகிவிடுவான். "இவங்களுக்குத் துணையாப் போயிட்டிரு, ரஹீம், இருட்டுதுல்லே? நான் கொஞ்சம் அந்தப் பக்கமா போய்விட்டு வர்றேன்" என்பார். காய்கறிக்காரிகள்கூட ரஹீம் நடப்பான். காய்கறிக்காரப் பெண்மணிகள் தேனுஷாவின் மிட்டாய்க் கடையைப் பார்த்ததும் இரண்டு பைசாவுக்கு ஜிலேபியும், சீனிப்பாராவும் வாங்குவதிலேயே ஒருமணி நேரத்தைக் கடத்தி

விடுவார்கள். ரஹீம் எல்லாரும் வரும் வரையில் சாலையோரத்தில் பொறுமையாக நின்று கொண்டிருப்பான்.

என்னதான் சொன்னாலும் ரஸூல் மியான் கடையில் பழுது பார்க்கப்பட்ட பொருள் உறுதியாக இருக்கும். எல்லாரும் தங்கள் பொருள்களை ரஸூல்மியான்தான் ரிப்பேர் செய்யவேண்டும் என்று விரும்புவார்கள். ஆனால் எல்லாரும் பொதுவாகச் சொல்லக்கூடிய குறை இதுதான்—"ஆனா அவரு கடையிலே அடங்கி உட்காருவது எங்கே? அப்படியே உட்கார்ந்தாலும் பாதி வேலையை மகன் தலைலே கட்டிட்டு ஓடிப்போயிடுவாரு." ரஸூல்மியானின் நாக்குக்குக் காரம் அதிகம். மனசுக்குத் தோன்றுவதைப் பட்பட்டென்று பேசி விடுவார். அதனால் வாடிக்கையாளர்கள் அவர் கடைக்கு அதிகம் வருவதில்லை. ரஸூல்மியான் கடையில் வேலைக்கு இருந்த ரகு இப்பொழுது சொந்தமாகப் பட்டறை வைத்து நூற்றுக்கணக்காக சம்பாதிக்கிறான். ஆனால் ரஸூல்மியானின் உலகம் அன்று போலவே இப்பொழுதும் மாறாமல் இருக்கிறது.

பதினோரு வருடங்களுக்கு முன்னால் என்று நினைக்கிறேன், ஸ்டவ் ரிப்பேர் செய்ய ரஸூல் மியான் கடைக்குப் போனேன். ஸ்டவ்வைத் திறந்து பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது ஒரு கிராமத்து ஆசாமி—நடுத்தர வயது இருக்கும். வந்து தொண்டை இடற முறையிட்டான்—"நகையைத் திருப்பிக் கொடுக்க மாட்டேங்குறான். இன்னும் வட்டி வேணுமாம்."

இதைக் கேட்டதுமே ரஸூல்மியான் வேலையை பாதியில் விட்டு விட்டு எழுந்தார். நன் இடைமறித்தேன்—"அப்ப, ஸ்டவ்?"

"நாளைக்குப் பார்க்கிறேன்."

"அப்படின்னா நான் ஸ்டவை எடுத்திட்டுப்போகிறேன்"—சற்றே சினத்துடன் கூறினேன். "கொண்டுபோ தாராளமா!" ரஸூல் வெடுக்கென்று பதிலளித்தார். "இங்கே ஒரு மனுசனுடைய மானம் கப்பலேறிக் கிட்டிருக்கு. இன்னொருவருக்கு தன் வேலைதான் பெரிசுன்னு படுது. இவருடைய பெண்ணுக்கு இன்னிக்கு கௌனா (முதலிரவு) நடக்கணும். நகை பணயத்திலே நிற்கிறது. லேவா தேவிக்காரன் நகையைக் கொடுக்க மாட்டேங்கறான். நீ என்னடான்னா."

நான் என்னுடைய ஸ்டவ்வைக் கையில் எடுத்துக்கொண்டேன். இனிமேல் ரஸூல் கடைக்கு வருவதில்லை என்று சபதமும் எடுத்துக் கொண்டேன். நானும் வரமாட்டேன், என் தோழர்களையும் வரவிட மாட்டேன். ஆமாம்!

ஆனால் இன்று ரஸூல்மியானை நான் நன்றாகப் புரிந்து கொண்டுள்ளேன். சின்ன வயதில் நான் செய்த தவறான சபதத்துக்காக

வருந்துகிறேன். இப்போது ஒரு பழைய சைக்கிளை பழுதுபார்க்கக் கொடுத்திருக்கிறேன். பதினைந்து நாளைக்குப் பிறகு கிராமத்துக்குத் திரும்பி வந்தேன். ஆனால், ரஸூல்மியானைக் காணவே முடிவதில்லை. அவர் வந்தால்தான் நடக்கும் என்று ரஹீம் சொல்லிவிட்டான். எப்பொழுதாவது ரஸூலைச் சந்திக்கிறேன். என் சைக்கிளை ரிப்பேர் செய்வதைவிட முக்கியமான எத்தனையோ வேலைகள் அவர் கையில் இருக்கிறன்றன என்பதையும் கவனிக்கிறேன். "பாவம் இந்த ஏழைப் பெண்கள் க்யூவிலே நின்னு துணி கிடைக்காமெ திண்டாடுது. இதுங்களுக்கு உதவ வேண்டும்" என்பார்.

இன்னொரு நாள் செல்கிறேன், ரஸூலைக் காணவில்லை. விபரம் தெரிய வருகிறது—கிராமத்தில் மலேரியா பரவி இருக்கிறது. குனைன் கிடைப்பதில்லை. மேஸ்திரி பச்சிலை மருந்தைக்கொண்டு கஷாயம் வைத்து கிராமத்தில் எல்லாருக்கும் கொடுக்கிறார்.

தினமும் இந்த மாதிரி சால்ஜாப்புகளைக் கேட்டுக்கொண்டு மௌனமாகத் திரும்புகிறேன். தினமும் அரச மரத்தில் அந்த விளம்பரப் பலகையைப் படிக்கிறேன்— 'ரஸூல் மேஸ்திரி—இங்கு பழுது பார்க்கப்படும்.' சாக்கட்டியினால் யாரோ ஒரு பொல்லாத சிறுவன் அதன் கீழே எழுதிய வாசகமும் கண்ணில் படுகிறது— 'இங்கே முதுகும் ரிப்பேர் செய்யப்படும்!' இந்த வாக்கியத்தை முழுமனதுடன் வழிமொழிந்தவாறு வீடு திரும்புகிறேன். சைக்கிள் இல்லாமல் எனக்கு எவ்வளவு இடைஞ்சல் என்பதை மறந்துவிடுகிறேன்.

(1946)

# மூன்று புள்ளிகள்

கீதாலி தாஸுக்கு ராகம்—நாதம்தான் வாழ்க்கையின் ஆதாரம். எனவே அவள் தன்னை 'ராகஜீவி'யாக—நாதத்தில் வாழ்பவளாகக் கருதுகிறாள். நாத—ராக—தாளங்களின் துணைகொண்டுதான் கீதாலி வாழ்க்கையின் இந்த உயர்ந்த கட்டத்தை எட்டிப் பிடித்திருக்கிறாள். அவளுடைய அயராத உழைப்பு—அசுர சாதகம்தான் அவளது வெற்றிக்கு மூல காரணம் என்பது மக்களின் கணிப்பு. பிறருடைய சாதனைகளை ஒரே வாக்கியத்தில் கணித்து மதிப்பிடுபவர்களிடம் இதற்கான அளவு கோல் எது என்று அவள் கேட்க விரும்புகிறாள். சங்கீத வாசனையே இல்லாத எத்தனையோ சூழல்களை கீதாலி கீதமயமாக—நாதமயமாக மாற்றிவிடுகிறாள் என்பது நிதரிசனமான உண்மை. ஆகவேதான் இசை–கலைநிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்பவர்கள் இன்றும் கீதாலியின் பெயரை விளம்பரப்படுத்தி ஏராளமான இசையன்பர்களைத் திரட்டி விடுகிறார்கள். ஆனால் இதெல்லாம் இன்னும் எத்தனை நாளைக்கு? 'மீதாலி தீதி'யின் வெற்றிகரமான சாதனை என்ன ஆயிற்று? கீதாலி தன் தமக்கை மீதாலியின் தவறுகளிலிருந்து பாடம் கற்றிருக்கிறாள்—

தனி 'டும்ரீ' (இந்துஸ்தானி சங்கீதத்தின் ஒரு வகை) பாடகி மீதாலியின் வெற்றிகரமான வாழ்க்கை இருபத்து நான்கு மாதங்களே நீடித்தது. இதை ஒப்பிட்டுக்கொண்டு கீதாலி தன்னுடைய நாத வாழ்க்கையின் பிலிம் சுருளை மெல்லப் பிரித்துப் பார்க்கிறாள். ஆம், ஒன்பது வருடங்கள்—நூற்றெட்டு மாதங்கள்—குறைவானதல்ல—!

கீதாலி இப்பொழுதெல்லாம் தன் மனதில் உதிக்கும் சக நாதத்தை ஆராய்ந்து பார்க்கிறாள்— சகநாதம்! இதை 'ஓவர்டோன்' எனலாம். நாதம் ஒரு பொழுதும் தனித்து எழும்புவதில்லை. அதனுடன் மற்ற நாதங்களும் பிறக்கின்றன. மூலநாதத்திலிருந்து பிறப்பதால் இது 'சக நாதம்' எனப்படுகிறது. சுயமாகவே பிறப்பதால் இதனை 'சுயம்பு' ஸ்வரம் எனலாம். கீதாலி இம்மாதிரி சகநாதங்களின்—ராகங்களின்—உதவியால் சாதனை புரிந்திருக்கிறாள், பிரபலமாகி விளங்குகிறாள். பிரார்த்தனை ராகம்போல ஒலிக்கும் வாழ்க்கை நாதத்தின் லய-தாளங்களின் எல்லையை விரிவுபடுத்தி இருக்கிறாள். அவ்வளவே— ஆனால் இப்போது சில நாட்களாக அவளை ஒருவிதமான இனம் தெரியா அச்சம் பற்றிக்கொண்டிருக்கிறது. பாடும்பொழுது உருக்கொள்ளும்

ராகம், ஒவ்வொரு சமயம் உருக்குலைந்து மங்கிப் போவதை உணருகிறாள்.

ஆம்- வாழ்க்கை ஒரு பிரார்த்தனை கீதம் போன்றது!

இந்த வாழ்க்கையின் சில பகுதிகளை—கணங்களை, கீதாலி பிரித்தெடுக்கிறாள். துகள்துகளாக்கி அதனைக் கசக்குகிறாள். பின்னர், தூள் தூளாகிவிட்ட அக்கணங்களை நாதத்தின் உபஸ்வரங்களோடு இணைத்து ஆய்ந்தறிகிறாள். டாட்-டாட்-டாட்- கீதாலி இந்த நுட்பமான சிறிய புள்ளிகளை, கண்ணெதிரே, சூனியத்தில் எழும் தாரகைகளை, இப்பொழுது நல்லதொரு கண்ணோட்டத்துடன் பார்க்கிறாள். மங்களகரமான இந்த அடையாளத்தைப் புரிந்து கொள்கிறாள்.

கீதாலி நாத ஜீவி; ராகத்திலேயே வாழ்பவள் என்றாலும், இலக்கிய உலகின் சாதனைகள், முன்னேற்றம் பற்றியும் ஓரளவுக்குத் தெரிந்து வைத்திருக்கிறாள். அவளுடைய அக்காள் கணவர் ஜமாய் பாபு தன்னை, வாய்ப்புக்காகக் காத்திருக்கிற, நாளைக்கே பிரபலமடையக் கூடிய, மறைமுக விமர்சகனாக நினைத்துக் கொண்டிருக்கிறார். டைம் பாமா! இல்லை ஆலூ பாம்—உருளைக் கிழங்கு பாம்! சூடான உருளைக்கிழங்கு சாப்ஸ் தட்டை எடுத்துக் கொண்டு கீதாலி அவருடைய அறையினுள் நுழைந்தாள். தோழியர்கள் சுதர்சனாவும், அதர்சனாவும் இரு மருங்கிலும் இருந்தார்கள். விஷமத்தனமான சிரிப்பை அடக்கியபடி முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டு கீதாலி கூறினாள்—"பாருங்க ஜமாய் பாபு! இது என்ன தெரியுமா? இது உருளைக் கிழங்கு பாம், ஆமாம் உருளைக் கிழங்கு புர்த்தா. சிப்பியினுள்ளே பச்சைப்பட்டாணி நிரப்பியது- சுத்தமான நெய்யில் வறுத்தெடுத்த இந்த வெடிக்காத பாம்களுக்கு இப்போது வாய்ப்புக் கிடைத்திருக்கிறது—வெடிக்க அல்ல, இணைவதற்கான வாய்ப்பு- உருளைக் கிழங்கு வடிவில் இதுவும் வாய்ப்பை எதிர்நோக்கிக் காத்திருந்தது."

பொல்லாத சுதர்சனா, முகத்தில் பொத்துக்கொண்டு வரும் குறும்பை மறைத்துக்கொண்டு, "இல்லை, கீதாலி! உருளைக்கிழங்குன்னு சொல்லக்கூடாது. வாய்ப்புக் கிடைத்தால் ஜமாய் பாபு சீறிப்பாயும் விலங்காகக்கூட மாறிவிடுவார். இரைமட்டும் எதிரில் வர வேண்டும்." என்றாள். இதைக்கேட்டு ஜமாய்பாபுவும் ஹோ-ஹோ- என்று சிரித்துவிட்டார். ஆனால் அக்காள் மீதாலிக்கு இவர்களின் கேலி பிடிக்கவில்லை. இது எப்படியானாலும் ஜமாய் பாபுவின் அடிக்கடி புத்தகம் வாங்கும் அலாதி குணத்தினால் வெகுவாகப் பயனடைந்தவர்கள் கீதாலியும், தோழிகள் சுதர்சனா, அதர்சனாவும்தான். நாவல் இலக்கியத்தில் நல்ல நூல்கள் அவர்களுக்குப் படிக்கக் கிடைத்தன.

நாவல் இலக்கியத்தில் 'புள்ளிக்காரர்கள்' என்று ஒரு இனத்தினர்

உண்டு. டாட்-டாட்-டாட்! இது வரையிலும் இவர்களைப் பற்றிக் கேள்வி எதுவும் எழவில்லை. இம்மாதிரி டாட்—டாட் புள்ளிவைக்கும் இலக்கியகர்த்தாக்களின் மூளையில் புள்ளிகளைத் தவிர வேறு எதுவும் இல்லையா என்ற கேள்வி எழக்கூடும். இவர்களின் மண்டையில் மூளைக்குப் பதிலாக இருப்பது எண்ணிறந்த மீன் முட்டைகள் நிறைந்த பை தானா. என்ற வினாவும் எழலாம். சாதாரண வாசகர்களுக்கு புள்ளி புள்ளியிட்ட படைப்புகள் அவ்வளவாக ரசிப்பதில்லை. புத்தகம் முழுக்க—பக்கம் பக்கமாக—வரிவரியாக கடுகு மணிகள் சிதறிக் கிடப்பதுபோல் பரவிக் கிடக்கும் புள்ளிகளைப் பார்த்து வாசகர்களின் கண்களில் பஞ்சு பறக்கும், பிறகு தலை சுற்றுவதுபோலத் தோன்றும்!.

கீதாலி இந்தப் புள்ளிகளை வெளியே தென்படாத உள்ளுலகைக் காட்டும் சன்னலாக எண்ணிக் கொள்வாள், வட்டவடிவமான மூன்று சிவப்புக் கண்ணாடிச் சன்னல்கள். உள்ளே வெளிச்சம் இடப் பட்டதுமே, உள்ளுலக நடப்புகள் தெரிய ஆரம்பிக்கின்றன.

மூன்று புள்ளிகளைப் பயன்படுத்தி சந்தர்ப்பத்துக்குப் பொருந் தாத கட்டங்களையும், ஒட்டாத இடங்களையும் உருவகப்படுத்துகிற—ஏதோ வேறுலகக் காட்சியை விலகி இருந்து காண்பிக்கிற—வெங்காயத் தோலியை உரிக்கிற—சொற்சிற்பிகளைக் குறித்து கீதாலி கருத்துத் தெரிவிப்பாள். "நீங்கள் ஒப்புக்கொண்டாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; இவை உபஸ்வரங்களின் (சக நாதத்தின்) சின்னங்கள்." மேலும் கேள்விகளை அடுக்கிக்கொண்டே போவாள். இந்த ஓவர்டோன், அதாவது சகநாதம் தானாக உண்டாகாதா என்ன? மனதின் எண் ணற்ற சன்னல்களின் வழியே எட்டிப்பார்க்கும் முகங்கள் தானாகப் பேசாதா என்ன? வினாக்களுக்கு விடையும் அவள் மனதில் பிறக்கும். சொற்சிற்பியின் மனப்பறவை சிறகடிப்பதுபோல: 'சங்கதி பேசும், நான் பேசமாட்டேன். மர்மத்தைத் திறப்பது நானல்ல. சங்கதியே.

கீதாலிக்கு திடீரென தந்தி வாத்தியங்கள் தயாரிக்கும் ஹாராதன் மாஸ்டரின் நினைவு வந்தது. பற்பல முகங்கள் தோன்றி மறைந்தபிறகு டாட்-டாட்-டாட்! மீண்டும் அவளுடைய மனச்சுவரில் ஹாராதன் மேஸ்திரியின் ஆயில் பெயின்ட் ஓவியம் தொங்குகிறது. மாஸ்டர் ஹாராதன் இப்போது எங்கிருக்கிறாரோ என்னமோ! கீதாலி இரண்டு கைகளையும் கூப்பி வெறுமையை நோக்கி பயபக்தியுடன் அஞ்சலி செலுத்தினாள்.

வாழ்க்கையைச் சுற்றிலும் முழக்கமிட்டுக்கொண்டு சஞ்சாரம் செய்கிற சக நாதங்களை முதன்முதலில் அவளுக்கு அறிமுகப்படுத் தியது ஹாராதன் மேஸ்திரிதான்.

இசைக்கருவிகளை உருவாக்கும் ஹாராதனை, அவள் மேஸ்திரி

யாக, மாஸ்டராக நினைக்கவில்லை, குருவாகவே கருதுகிறாள். அந்த இசைக்கருவியாளரின் மந்திரசக்தியின்பால் கீதாலி பைத்தியமானாள். அவருடைய வார்த்தைகள் இன்றும் செவியில் எதிரொலிக்கின்றன—"தெரியுமாம்மா, நல்ல வேட்டைக்காரர்களிடமும் பயிற்சி பெற வேண்டும்; கரடி, சிங்கங்களை வேட்டையாடுபவர்கள் முதலில் வேடுவன், புள்ளுவன், பாம்பாட்டி இவர்களுடனும் நன்றாக நெருங்கிப் பழகி நுணுக்கங்களைப் புரிந்துகொள்ளவேண்டும். தெரிந்ததா? என்னை நீ எப்படி வேணும்னாலும் நினைச்சுக்க- குழந்தாய்! இசைக் கருவிக்காரர், மேஸ்திரி, தொழிற்கலைஞன்- நீ என்னுடைய பேத்தி வயசு. இந்தத் தாத்தா சொல்வதைக் கேட்பாயா? இசைக்கருவியின் உதவிகொண்டு நீ உபஸ்வரங்களின் உணர்ச்சி கொந்தளிக்கும் ஐயாயிரம் தொனிகளை நுணுக்கமாகத் தெரிந்து கொண்டு அவற்றைப் பயன்படுத்த முடியும். எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கிற, மிகப் பரிச்சயமான சுருதியில் உன்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் நாதமயமாக ஒலிக்கும்-"

கண்களுக்குப் புலனாகாத உள்ளுலகில், பத்தாண்டுகளுக்கு முன்பு கூறப்பட்ட வார்த்தைகள் ஒலித்துக் கொண்டிருக்கின்றன-

'ஸ்வர மந்திர்' மானேஜரிடம் கடுமையாகப் பேசவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது கீதாலிக்கு. நகரிலேயே பழமையான, நம்பகமான இசைக் கருவிகளின் கடை இந்த நிலைமைக்கு வந்துவிட்டதே என்று கோபமடைந்தாள்—"ஒரே வாரத்தில் மூன்று தடவை தம்பூராவை சரி செய்து கொண்டு போனேன். ஆனாலும் சரியாகவில்லை. பாட்டுக்கு நடுவிலேயே சுருதி தப்பிவிடுகிறது. இதற்கு என்ன சீக்குன்னு கண்டு பிடிக்கிற ஒரு நிபுணர்கூட உங்க கடையிலே கிடையாதா? இது ஸ்வர மந்திரா இல்லே அசுரமந்திரா?" மானேஜரின் திறந்த வாய், மைக்போல உருண்டை வடிவில் காட்சியளித்தது. கீதாலி தம்பூராவை எடுத்துக் கொண்டு, இனி இந்தக் கடைப்பக்கம் தலைவைத்துப் படுக்கக்கூடாது என்று சபதம் செய்தவாறு படி இறங்கினாள்.

"ஓ- அக்கா- நில்லுங்க-" தன்னை யாரோ அழைப்பதைக் கேட்டு கீதாலி திரும்பினாள்—குள்ளக் கத்தரிக்காய்போல ஒரு குண்டு மணி நடைபாதையில் உருண்டு வந்துகொண்டிருந்தான். யார் இந்தப் பையன்? வித்தைக்காரனுடன் வரும் வாண்டுப்பயல்போல வேடிக்கை யாக இருக்கிறானே! பையன் பக்கத்தில் வந்து வணக்கம் தெரிவித்தான்—"நீங்க- கீதாலி தீதிதானே? ஹீ-ஹீ- தம்பூரா மட்டும் என்ன, ஸ்வர மந்திரில் எல்லா வாத்தியங்களையும் இப்படித்தான் கழுத்தை நெறிக்கிறாங்க, மேஸ்திரி ஹாராதன் ஸ்வரமந்திருக்கு சலாம் போட்டுட்டுப்போனபிறகு, அது அசுரமந்திர் ஆயிடுச்சி. நீங்க கணக்காத்தான் சொன்னீங்க அக்கா-!"

கீதாலி அவனை உற்றுக் கவனித்தாள், அவன் வயதுக்கு முதிர்ந்த

பையனல்ல, ஏதோ சுரப்பிக்கோளாறுக்கு இரையானவன் என்று தெரியவந்தது. குட்டை மட்டுமல்ல, மீசை மயிரே முளைக்காமல் மழுங்கலான மூஞ்சி! அவன் தன் பெயரைத் தெரிவித்தான்—குக்லூ-அசாமில் ஏதோ ஊரில் பிறந்தவனாம். பதினைந்து ஆண்டுகளாக ஹாராதன் மேஸ்திரியுடன் இருக்கிறானாம். கல்கத்தாவில் ஏழெட்டு வருஷம், அங்கே இங்கே இரண்டு மூன்று வருஷம், இங்கே வந்து கிட்டத்தட்ட ஆறேழு வருஷம் ஆயிற்று.

குக்லூ தெரிவித்தான், "மேஸ்திரி ஹாராதன் இப்போ எந்தக் கடையிலும் வேலை பார்க்கிறதில்லே. அவர் தெருவை விட்டு எங்கும் போகிறதுமில்லே. தெருவை விட்டுத் தள்ளுங்க, தன்னுடைய அறையை விட்டு வெளியிலே வரவே ஓய்வு இல்லே, அவ்வளவு வேலை!" சில பிரபல சங்கீத வித்வான்கள், புதிய வித்வான்களின் பெயர்களை அடுக்கியவாறு குக்லூ கூறினான்—"யாருக்குத் தேவையோ, அவங்க ஹாராதன் மேஸ்திரியோட விலாசத்தை விசாரிச்சுக்கிட்டு வர்றாங்க."

கீதாலி இதைக்கேட்டதுமே ஹாராதன் மாஸ்டரைச் சந்திக்கத் தயாராகிவிட்டாள். குக்லூ ரிக்ஷாக்காரனுக்கு குரல் கொடுத்தான்—"ஏ ரிக்ஷாவாலா, தூத்கூப் தெருவுக்கு வர்றியா?"

தூத்கூப் தெருவின் ஒரு சந்தில் கொஞ்சதூரம் போனபிறகு குக்லூ ஓடுவேய்ந்த ஒரு வீட்டினருகே நின்றான். மூடிய கதவின் துவாரம் வழியாக உள்ளே நிலவும் சூழலை நிதானித்துக் கொண்டான். பிறகு கதவுச் சங்கிலியை ஆட்டினான். வீட்டினுள்ளேயிருந்து ஒரு விரக்தியடைந்த ஆத்மாவின் கனைப்பு ஒலி கேட்டது. உள்ளே இருக்கும் நபர் உடனே திறக்கவில்லை. குக்லூ அவருடைய நூறு கேள்விகளுக்குப் பதில் சொல்லி அவரைத் திருப்தியடையச் செய்தான். பிறகு ஒரு வழியாகக் கதவு திறந்தது. உள்ளே இருப்பவர் அறையினுள் அமர்ந்தவாறே கயிற்றை இழுத்து தாழ்ப்பாளைத் திறந்திருக்க வேண்டும், அப்படித்தான் ஓசை கேட்டது. குக்லூ உள்ளே புகுந்தான். கரகரத்த குரலில் அவனைத் திட்டுவது கேட்டது— "இன்னும் யாரை அழைச்சிக்கிட்டு வந்திருக்கே? எங்கிருந்து?"

குக்லூ தணிந்த குரலில் பேசுவதிலிருந்து அவன் சமாதானப் படுத்துகிறான் என்று புரிந்தது—"இல்லே மாஸ்டர், அப்படிச் சொல்லாதீங்க. நீங்க நல்ல மனசு பண்ணலேன்னா அவங்க சாதகமே நடக்காது."

வெளியே நின்று இதைக் கேட்டுக்கொண்டிருந்த கீதாலிக்கு குக்லூவின் இந்தக் குழைவு சிறிதும் பிடிக்கவில்லை. ஆனால் ஸ்வரம் கெட்டுக்கிடக்கும் வாத்தியத்தை வைத்துக்கொண்டு சாதகம் எப்படிச் செய்வது? அவள் பேசாமல் நின்று கொண்டிருந்தாள். சற்று விகாரமான முகமுடைய நடுவயதுக்காரர் கதவுக்கு வெளியே எட்டிப் பார்த்துக் கேட்டார், "என்னாச்சு? ஸ்வர மந்திர்க்காரங்க கெடுத்துட்டானுகளா தம்பூராவை? தலைவலிபோய் திருகுவலி வந்திருக்கும்.

அதை வச்சிட்டுப்போ. மூணு நாளைக்குப் பிறகு வா- பலே! இதன் மேலுறை கன ஜோரா இருக்கே! இதை அவிழ்த்து சாதகம் பண்றது உண்டா- இல்லே சும்மா மூட்டை கட்டி-"

இசைக்கருவிக்காரர் கரகரத்த குரலில் பேசினாலும் பொருள் பொதிந்த அவருடைய பேச்சினால் கீதாலி கவரப்பட்டாள். பாடிப் பழகிய ராகம், ஆனால் ஏதோ பிசிறு தட்டி இருக்கிறது என்று தெரிந்தது. அவள் வாய் திறக்கவில்லை. இசைக்கருவிக்காரர் சிறிது நேரம் கீதாலியின் சிந்தனை ஓட்டத்தை அறிய அவளை நோட்டம் விட்டார். பிறகு கேட்டார்—"என்ன யோசிக்கிறேம்மா?" குரலில் தானாகவே கனிவு பிறந்தது. "ஸ்வரம் கெட்ட வாத்தியத்துக்கு ஸ்வரம் ஏத்தறது என்பது பத்து நிமிஷ வேலை இல்ல- வா, உள்ளே வா-!"

ஹாராதன் மாஸ்டரின் அறையினுள் பிரவேசித்த கீதாலியின் உள்ளம் உவகை கொண்டது. கிராமஃபோன் கம்பெனிகளால் பிரபல மான அகில இந்தியப் புகழ் பெற்ற கலைஞர்களின் படங்கள் சுவர் களை அலங்கரித்தன. கூடவே சான்றிதழ்—அறிமுகக் கடிதங்கள் ரகத்தில் ஒன்றிரண்டு! தரைமீது பல்வேறு இசைக்கருவிகள் பரந்து கிடந்தன- ரேடியோவில் வாத்திய இசைநிகழ்ச்சி ஒலித்துக் கொண் டிருந்தது—ஸரோட் வாசிப்பு- அக்ராம்! இளம்கலைஞர் அக்ராம் தானே இயற்றிய 'அர்ச்சனை கீத'த்தை ஸரோடில் இசைத்துக் கொண்டிருந்தார்; இனிமையான நீளமான சங்கொலியும், ரம்மியமான மணியோசையும் பூசையின் புனிதச் சூழலை ஏற்படுத்தியிருந்தது. ஹாராதன் மாஸ்டர் தன் விரலினால் சின்னஞ்சிறிய பழைய ரேடியோ செட்டைச் சுட்டியவாறு, "கேட்கிறதா? அக்ராமின் இந்த ஸரோட் வாத்தியத்துக்கு ஏழு வயசுன்னு சொல்லலாம். சுருதி மாறாமல் அப்படியே ஒலிக்கிறது. இசைக்கருவியை வைத்து சாதகம் பண்றது, வாத்தியத்தைப் பூசை செய்வதுபோல- இசை வழிபாடு அது."

சிதார், ஸரோட், சுர்பஹார், தில்ருபா, வீணை போன்ற வாத்தியங் களை வாசிக்கும் பிரபல வித்துவான்களின் பெயர்களை அடுக்கிக் கொண்டே போனார் ஹாராதன். இசைக்கருவிக்காரர் சொல்வதை யெல்லாம் இந்த ஐந்து நிமிட அறிமுகத்தில் கீதாலி அப்படியே கிரகித்துக்கொள்ளத் தயாராக இல்லை. இந்த உண்மையை ஹாராதன் மாஸ்டரும் புரிந்துகொண்டார் போலும். தன்னுடைய பெட்டி யிலிருந்து புதிதும், பழையதுமான கடிதங்களை வெளியே எடுத்து கீதாலியின் முன்னே பரப்பியவாறு சொன்னார், "வாசித்துப்பாரு!"

கல்கத்தாவிலிருந்து அகில இந்தியப் புகழ்பெற்ற ஸிதார் வித்வான் உஸ்தாத் காதிர் ஹுஸைன் பிரியமாக, தன்மையாக எழுதிய கடிதம், ஐந்து வருடங்கள் முன்னால் எழுதப்பட்டது; "அன்பு சகோதரன் ஹாராதனுக்கு! என்னைப் பொறுத்தவரையில் நீ எனக்கு இன்றி யமையாத பொக்கிஷம் போல- பார், என்னுடைய வாத்தியத்துக்கு

என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை. கண்டவர்கள் கையில் அதைக் கொடுக்கத் துணிவும் இல்லை. நீ கல்கத்தா வரமாட்டாய் என்று எனக்கு நன்றாகத் தெரியும். அதனால், நானே நேரில் வருகிறேன்."

அப்போது ரேடியோவில் யோகேந்திர சூரியின் வயலின் ஹேமந்த ராகத்தை விரிவாக ஆலாபனை செய்ய முஸ்தீபு எடுத்துக் கொண்டிருந்தது. வாத்தியம் உயிரற்ற பொருள் என்று யாராவது சொல்ல முடியுமா?

கீதாலி ஹாராதனின் திறமையையும், பிரபல இசைக்கலைஞர்கள் அவருக்குத்தரும் மதிப்பையும் கண்டு பிரமித்தாள். முன்னணிக்கு வரக்கூடியவர்கள், வந்தவர்கள் என்று எத்தனை வித்துவான்களின் பாராட்டுக் கடிதங்கள்! இதோ ரேடியோவில் கேட்ட அக்ராமின் ஸரோட், யோகேந்திர சூரியின் வயலின், குக்லூவின் குருபக்தி எல்லாம் சேர்ந்து ஹாராதன் மாஸ்டரின் உண்மை உருவத்தை கீதாலியின் முன் படம் பிடித்துக் காட்டின.

குக்லூ 'ஸ்டவ்' பற்றவைத்து தேநீர் தயாரித்துக் கொண் டிருந்தான்—"தபலா மகாதேவலால் மனிதர் இல்லை தீதி, மாணிக்கம் கான் சாகப் கொடைவள்ளல்தான், ஜேபியிலே கையை விட்டு அள்ளி எடுப்பார் நோட்டை, எண்ணாமலேயே கொடுப்பார். சாரங்கி முன்னூஜிக்கு அன்னிக்குப் பிடிச்சு என்கிட்டே ஒரே கோபம்."

குக்லூ டீ கொணர்ந்து வைத்தான். கோப்பையிலிருந்து டீயை ஒருமுறை உறிஞ்சியவாறு ஹாராதன் மாஸ்டர் கூறினார்—"என்னை இசைக்கருவிக்காரர்னு சொல்லு, இல்லேன்னா தொழிற் கலைஞன்னு சொல்லு. சுருதியைக் கெடுத்தவன்னு யாரும் இதுவரையிலும் சொன்ன தில்லை. ஆனா, என்னுடைய கர்மவினையை நான்தானே அனுபவிச் சாகணும்! உயிரற்ற மரத்தடி, தந்தி அல்லது காய்ந்த தோலில் சுருதி யேற்றிக்கொண்டே வாழ்க்கையை ஓட்டுகிறேன். இதைத்தவிர வேறு ஒருவழியும் கிடையாது. சாபக்கேடான வாழ்க்கை! இப்படியும் ஒரு காலம் வரும்னு நினைக்கவே இல்லை. உனக்கு என் பேத்தி வயசுதான் இருக்கும் குழந்தாய்! நானும் ஒரு காலத்தில் பாடிக்கொண்டிருந்தேன் என்பதைச் சொன்னா நீ நம்பமாட்டாய். என்னுடைய குரலைக்கேட்டு மான்கள் கூட்டம் கூட்டமா ஓடிவரும் தெரியுமா?."

இசைக்கலைஞர் தன்னுடைய பெட்டியின் மூடியைத் திறந்தார். ஏதோ தேடியவாறு சொன்னார்—"நீ இதைச் சுத்தமா நம்பலேன்னு எனக்கு நல்லாத் தெரியுது. விளக்கமாச் சொன்னாத்தானே புரியும். ஜீவச்பூர் சமஸ்தானம் என்று கேள்விப்பட்டிருக்கிறாயா? அந்த சமஸ் தான ராஜா ஜீவத்ச நாராயண தேவஜூவின் பெயராவது நிச்சயம் தெரிந்திருக்கும். வேட்டையாடிய அனுபவத்தை வைத்து ஒரு பெரிய புத்தகமே எழுதியிருக்காரு ஆங்கிலத்திலே. அதைப் படிச்சுப்பாரு. பப்ளிக் லைப்ரரியிலே கிடைக்கும் புஸ்தகம்... அதிலே, பக்கம்

பனிரெண்டு, இருபத்திரெண்டு, நாற்பது, ஐம்பத்து ஐந்தாம் பக்கத்திலே என்னைப்பற்றி எழுதியிருக்கிறார். க்ரூப் போட்டோவிலே இருக்கிற என்னுடைய படத்தையும் பார்த்து இன்னிக்கு யாராவது என்னையும் பார்த்தா அடையாளமே புரியாது- ராஜா சாகபுக்கு வேட்டை, சங்கீதம் இரண்டிலேயும் உயிர். சங்கீதத்தைப் பற்றி ஆரம்பிச்சா மணிக் கணக்காப் பேசுவார். அவர் வேட்டைக்கு எடுத்துப்போகிற சாமான் களிலே ஜெஃப்ரி கர்டாயின் 333—போர் துப்பாக்கியுடன் சிதார் வாத்தியமும் அவசியம் இருக்கும். மாளிகையின் முன்மண்டபத்திலே எந்தநேரமும் மூன்று நான்கு வித்வான்களும், டஜன் கணக்கிலே சீடர் களும் சாதகம் பண்ணிட்டிருப்பதைப் பார்க்கலாம். வேளா வேளைக்கு நல்ல சாப்பாடு! என்னுடைய குருஜி பண்டித் சிவபாலக் ஜா, ஜீவத்ச ராஜாவுடைய தர்பாரில் ஆஸ்தான வித்துவானாக இருந்தார்-"

கீதாலி தன் கைக்கடிகாரத்தில் மணி பார்த்தாள். குக்லூ இம்முறை டீ தயாரித்து கண்ணாடி டம்ளரில் எடுத்துவந்தான். டீயை வைத்தவாறு, "இந்தக் கதையைச் சொல்லும்போது 'இஸ்பெசல்' டீ குடிப்பது வழக்கம்" என்றான்.

சட்டைப் பையிலிருந்து ஒரு அழுக்கடைந்த கைக்குட்டையை எடுத்து அதைக்கொண்டு சூடான டீ கிளாசை கையில் பிடித்தவாறு இசைக்கருவிக்காரர் கீதாலியை ஒருமுறை கூர்ந்து பார்த்தார்— "குழந்தாய், உனக்கு நேரமாகிவிடும். மான்கள் கூட்டம் எப்படி ஓடிவந்தது என்கிற கதையை அப்புறமா சொல்றேன்."

கீதாலி சிரித்தாள்—"பாதிக்கதை கேட்டால் ஒற்றைத் தலைவலி வந்துடும்னு சொல்லுவாங்க."

"கதையைக் கேட்டா வருமா ஒற்றைத் தலைவலி, இல்லே சொன்னா வருமா? அது எப்படியோ போகட்டும், எனக்குக் கவலையே கிடையாது. தலை இருக்கிறவங்கதானே தலைவலிக்குப் பயப்படணும். எனக்கு வயிறுதான் உண்டு!"

கீதாலி மீண்டும் சிரித்தாள்- கீதாலி சிரிக்கும் போதெல்லாம் ஹாராதனின் காதருகே மடிப்பு விழுந்த சருமம் எழும்பி எழும்பி நடனமிடும். சுருக்கம் நிறைந்த, விகாரமான அந்த முகத்தில் ஒளிபரவும்.

"அப்படீன்னா கேளு-"

-அந்தத் தடவை குருஜியின் கருணைக் கண் ஹாராதன்மீது விழுந்தது. அவரையும் வேட்டைக்குழுவுடன் காட்டுக்குச் செல்லும்படி கட்டளை பிறந்தது. வனாந்தரத்தை தேவலோகமாக மாற்றிய எத் தனையோ கதைகளை இந்த சந்தர்ப்பத்தில் ஹாராதன் வருணித்தார். தொகுத்து எழுதினால் ஒரு பெரிய புத்தகமே தயாரித்து விடலாம்- ராஜா சாகப் உண்மையிலேயே நல்ல வேட்டைக்காரர்.

-நேப்பாளப் பள்ளத்தாக்கின் அருகே மதுமாரா காட்டில் கிராதர்களின் தலைவன் சிறுத்தை வேட்டையாடிக் காட்டினான்-

காடுகளின் அருகில் சற்றே திறந்தவெளிபோன்ற ஓர் இடம் இருக்கிறது. இதை ஆங்கிலத்தில் 'கிளேடு' என்பார்கள். பால் நிலவு இங்கே தேக்குமரத்தின் உச்சியில் தொங்கி நிற்காமல், பச்சைப்பசேல் என்ற மிருதுவான புல்மீது பரவிக்கிடப்பது அருமையான காட்சி. அருகிலேயே ஆறு ஓடுகிறது, அது சலசலத்து ஆரவாரம் செய்வதில்லை. கிசுகிசுக்கும் குரலில் காற்று ஏதோ பேசுகிறது- சித்திரை மாத நிலவு! பால் நிலவின் நடுவே ஒரு மொட்டைமரம் வியப்புடன் மலங்க மலங்க விழித்துக்கொண்டு நிற்கிறது. நிழலில் யாரோ சைகை மொழியில் என்ன சொன்னார்கள் என்று தெரியவில்லை. பள்ளத்தாக்கு எங்கிலும், அதனை அடுத்த காடுகளிலும் ஏதோ வேதனை நிறைந்த கூக்குரல் சுற்றியலைந்தது. காமநோயால் பீடிக்கப்பட்ட பெண்மானின் ஓலம்! ஆற்றின் குளிர்ந்த நீரைப் பருகி தாகத்தைத் தணித்துக்கொண்ட ஆண்மான்களின் அந்தரங்கத்தில் வேறொரு தாகம் தவிக்கிறது, தகதகவென்று. பெண்மான் மீண்டும் மீண்டும் ஓலமிடுகிறது- வெண்ணிலவில் இதோ ஆண்மான்களின் கூட்டம்! ஒவ்வொரு மானின் உடலிலும் புள்ளிகள் தெளிவாகத் தெரிகின்றன. வெளிச்சத்தில் நிற்கும் மொட்டை மரம் வியப்பினாலா அல்லது உணர்ச்சிப் பெருக்கினாலா தெரியவில்லை, ஆடி அசைகிறது. நிழலில் மீண்டும் சைகை மொழி—ஸிஸ்-ஸிஸ்! மீண்டும் நிலவொளியில் நட்சத்திரங்களின் பிரகாசம்- பளிச் பளிச் என-!

-இதன்பிறகு செத்துக்கிடக்கும் காதலர்களின் (மான்களின்) உடல்களிலிருந்து அம்புகளை உருவி எடுத்தவாறு கிராதர்களின் கூட்டம் ஆட ஆரம்பித்தது- ஹா-ஹிரா-ஹா-ஹிரா-ஹா- ஹிர்-ர்-ர்-ர்ஆ-!

-ஒரு பெண்மானை சிறு பிராயத்திலிருந்தே வளர்த்து, பொய்க் குரல் எழுப்பக் கற்பிக்கிறார்கள். பயிற்சியளித்தவர் பெண் மானின் கழுத்துக்குக் கீழே வருடுகிறார். அது அடிக்கடி ஓலமிடுகிறது.

-இந்த வேட்டையைப் பார்த்த பிறகு ராஜா சாகபின் உடலும், உள்ளமும் சோர்ந்து சுரம் வந்துவிட்டது. மான் வேட்டையில் நாட்டம் போய்விட்டது. ஆனால் ஹாராதன் தலையில் வேட்டைப்பித்து ஏறிவிட்டது. காமநோய் பிடித்த மான்களின் ஓலம், வேதனைக்குரல், பிறகு துடிதுடித்துக்கொண்டு உயிரை விடுதல்! இதையெல்லாம் பார்த்து அவருக்குள்ளே இருக்கும் கிராதனுக்கு ஆனந்தத்தினால் கிளுகிளுப்பு ஏற்பட்டுவிட்டது! சங்கீத சாதகத்தை விட்டுவிட்டு ஹாராதன் கிராதர்களின் தலைவனுடன் ஓடிப்போய் விட்டார்.

-ஒவ்வோர் ஆண்டும், சித்திரை மாத நிலவுள்ள இரவுகளில் மூன்று நான்கு முறை இதேமாதிரி வேட்டை நடைபெறும். பயிற்சி பெற்ற பெண்மானையும், அதனைப் பயிற்றுவித்தவரையும் பூசிக்கிறார்கள் கிராதர்கள். இம்மாதிரியான மான் விலைமதிப்பற்ற, காணக் கிடைக்காத மாணிக்கம்போல போற்றப்படுகிறது- ஆண்டு முழுதும்

மான் இறைச்சியின் உலர்ந்த துண்டுகளை நெருப்பில் சுட்டு தின்னும் போது ஒவ்வொரு கிராதனும் 'ஹா-ஹிரா' என்று கூவி அதை நினைவூட்டிக் கொள்கிறான். அந்த வருடம் நடந்த மூன்று—நான்கு வேட்டைகளின் போதும் ஹாராதன் கிராதர்களுடன் இருந்தார். ஆண்டு முழுவதும் கிராதர்களுடன் இருந்தும்கூட பெண்மானுக்கு சிட்சையளிக்கும் இரகசியத்தை அவரால் அறியக்கூடவில்லை. முதல் நம்பர் மலையில் உள்ள அத்தனை கிராமங்களுக்கும் சேர்த்து, பயிற்சி பெற்ற ஒரே ஒரு பெண்மான்தான் இருந்தது. அதன் பயிற்சியாளருக்கும் ஏக கிராக்கி. அவருடைய மூலதனம் பெண்மான்!

—ஆனால் ஹாராதன் இந்த மூலதனத்தின் விலையைச் சரியச் செய்துவிட்டார் தன்னுடைய சாதகத்தின் துணையினால். பெண்மான் எதற்கு? ஹாராதன் காமநோய் பீடித்த பெண்மான் போலவே குரலெழுப்பும் திறமை பெற்றார். கிராதர் தலைவன் பரீட்சார்த்தமாக வேட்டைக்கான ஏற்பாடுகளைச் செய்தான். சித்திரை மாத நிலவு எதற்கு? எப்பொழுது வேண்டுமானாலும் வேட்டையாடலாம். பனிரெண்டு மாதமும்.

—பால்நிலவு காயும் இரவு. இரவின் கடைசி ஜாமம். ஹாராதன் முதன்முறையாகக் குரல் எழுப்பினார்—அதே மான் குரல். அசல் மான்தான்! கோஸி நதிக்கரையில் சத்ராகத்தீ அருகே பால்நிலவு காயும் பசுமையான புல்வெளியில் பத்துப் பனிரெண்டு புள்ளிமான்கள் ஓடிவந்தன தடதடவென்று.

—அந்த மலையில் ஹாராதனைப் பூசிக்கத் தொடங்கினார்கள். அந்தப் பிரதேசத்திலேயே மிக அழகிய மடந்தை அவருக்குக் குற்றேவல் புரிய நியமிக்கப்பட்டாள். கிராதர் தலைவன், ஹாராதனின் முதல் நம்பர் எதிரியாகிவிட்டான். அந்த வருஷம் பயங்கரமான பூகம்பம் ஏற்பட்டது—1934 ஜனவரி மாதம் பூகம்பம் ஏற்பட்ட மூன்றாவதுநாளே, கிராதர்கள் அனைவரும் இந்த தெய்வகோபம் ஹாராதன் காரணமாக ஏற்பட்டது என்று ஏகோபித்த முடிவுக்கு வந்தார்கள்.

—பகவதியின் கருணை! ஒரு பெண்ணின் கருணையினால் அவரது உயிர் தப்பியது. மான்தோலை கையில் இடுக்கிக்கொண்டு குருபாதத்தை அடைந்தார் ஹாராதன்.

ராஜாசாகபின் தோட்டத்தில் குருஜியின் முன்னிலையில் தன் திறமையை வெளிப்படுத்தினார் ஹாராதன். இதன்மூலம் புதுவிபத்தை வெற்றிலை பாக்கு வைத்து அழைத்தார். மதுமாரா காட்டில் நடந்த மான்வேட்டையைப் பார்த்ததிலிருந்து ராஜாசாகப் ஏதோ மன வியாதியால் பீடிக்கப்பட்டிருந்தார். வெகுநாள்வரை சிகிச்சை நடந்து ஒருவாறு குணமாகி வருகையில், ஹாராதனின் சிறப்பு நிகழ்ச்சி நடந்தது. மான் குரலைக்கேட்டதும் ராஜா சாகபின் மனநிலை மீண்டும் பாதிக்கப்பட்டது. பழைய வேட்டைக்காரர், மான்குரலைக் கேட்

டதுமே வேட்டைச் சூழல் கற்பனையில் உருவாகிவிட்டது. அவர் கூச்சலிடத் தொடங்கினார்— "ஆமாம், இது அதே வஞ்சகப் பெண் மான்தான், சதிகாரி! ஸ்பாடட் டியர்..!" எக்ஸ்பிரஸ்—500 ரைபிலைக் கையில் எடுத்து குரல் வரும் திசையை நோக்கி ஃபயர் செய்தார். ஹாராதன் அப்போதுதான் உச்சஸ்தாயியிலிருந்து இறங்கி சம ஸ்தாயிக்கு வந்து கொண்டிருந்தார். அவருடைய குரு பண்டித் சிவபாலக்ஜியின் நெஞ்சில் குண்டு பாய்ந்தது. சீடன் சமர்ப்பித்த மான் தோலில் அமர்ந்திருந்தார் குருஜி. புள்ளிமான் தோலில் இன்றளவும் ரத்தக்கறை படிந்திருப்பதைக் காணலாம். ஹாராதன் ஓடினார் அந்த இடத்தைவிட்டு. அவர் போகுமிடமெல்லாம் இதேபோன்ற பயங்கர நிகழ்ச்சிகள் நடக்கலாயின.

தன் காதுகளில் கையை வைத்துக்கொண்டு ஹாராதன் கண் களை மூடியவாறு சொன்னார், "அதுமுதல், அப்போது முதல், தொண்டையில் ஒருவிதமான கரகரப்பு ஏற்பட்டுவிட்டது. நான் என் குரலை களங்கப்படுத்திவிட்டேன் அல்லவா! ஸ்வரத்தைக் கட்டும் தொழிலில் இறங்கினேன். ஆனால்.. ஆனால்.."

குக்லூ ஒரு பழைய மான்தோலை எடுத்துவந்தான். இசைக் கருவிக்காரர் கூறினார். "இது அந்தத் துள்ளிக்கொண்டிருந்த புள்ளி மானின் தோல். ஆண்மானின் தோல்! நான்கு அம்புகள்பட்ட பிறகும் அது என்னை நோக்கிப் பாய்ந்து வந்தது. என் முன்னாலேயே தன் கால்களைத் தூக்கித் தூக்கி அடித்தவாறு உயிரை விட்டது. குருஜி இந்த மான்தோலில்தான் உட்கார்ந்தார், சற்று நேரத்துக்கு!"

ஹாராதன் மாஸ்டர் மான்தோலைக் கையில் எடுத்து சிரத்தை யுடன் வணங்கினார். பிறகு அதை கீதாலியின் முன்னே வைத்தவாறு கூறலானார்— "அந்தப் பொன்மானின் பெயர் என்ன? ஆங். மாரீசன் தானே..? சீதாபிராட்டியின் மனதில் அந்த மான்தோல் மேல் உட்காரும் ஆசை ஏன் உண்டாயிற்று? ராமாயணத்தில் இதைப்பற்றி எங்காவது குறிப்பிட்டிருக்கிறதா? தவம் செய்ய அல்லது சாதகம் செய்யத்தான் இருக்கும்..!"

ஹாராதன் மாஸ்டர் நேபாளப் பள்ளத்தாக்கின் பசுமை என்ற மாயக்கயிற்றினால் கதையை அழகாகக் கட்டிவைத்தார். கீதாலி எழுந்தாள். அப்போது ஹாராதன்—"குழந்தாய்! உன்னை இனிமேல் பேத்தி என்றே கூப்பிடுவேன். என்னை தாத்தா என்று ஒப்புக் கொள்கிறாய் அல்லவா? நல்லது. நாளைக்கும் வருவாயா? சரி, ரொம்ப நல்லது!" என்றார்.

மறுநாளும் கீதாலி அவரைக் காணச் சென்றாள். இசைக்கருவிக்காரர் அவளுடைய கையைப் பார்க்க விரும்பினார். கீதாலி தன்னுடைய

இரண்டு உள்ளங்கைகளையும் விரித்துக் காட்டினாள். "ஊம்..! உன் தமக்கை மீதாலியால் சாதிக்க முடியாததை நீ சாதித்துக் காண்பிப்பாய். நிச்சயமாக!" கீதாலி வியப்புடன் பார்த்துக்கொண்டே இருந்தாள். இசைக்கருவிக்காரருக்கு அவளுடைய தமக்கையின் சங்கீத வாழ்க் கையின் நிகழ்ச்சிகளும்கூட ஒன்றுவிடாமல் எப்படித் தெரிந்திருக்கிறது! அவர் சொன்னார்—"பேத்தி, தப்பா நினைக்காதே உன் அக்காள் அந்த தக்காளிப்பழத்தைக் கட்டிக்கொண்டு வாழ்க்கையையே நாசமாக்கிக் கொண்டாள்.. மூட்டைப்பூச்சி பார்த்திருக்கிறாயா? ரத்தத்தைக் குடித்துக் குடித்து சிவப்பு ரத்தத்துளிபோல குண்டாகிவிடும்.. அந்த ஆள் மூட்டைப்பூச்சி மாதிரிதான்! உன் தமக்கையை நன்றாக உறிஞ்சிவிட்டான். என்ன சொல்கிறாய்? இலக்கியக்காரனா? அவன் பீடை இல்லாமல் என்ன அம்மா..?"

பேச்சுக்கு நடுவே சில சமயங்களில் இசைக்கருவிக்காரர் இம்மாதிரி கோணங்கித்தனமாக பேச ஆரம்பித்துவிடுவார். ஆனால், ஜமாய் பாபுவை, தக்காளி, மூட்டைப்பூச்சி இவற்றுடன் ஒப்பிட்டுப் பேசியதில் கீதாலிக்குச் சற்றேனும் வருத்தமோ, கோபமோ உண்டாக வில்லை. அவள் தன் கழுத்தை அசைத்தவாறு ஆமோதித்தாள்—"சரி யாத்தான் சொல்றீங்க! பீடைதான். தீதி அவரிடம் மாட்டிக் கொண்டு அனுபவிக்கிறாள். அணுஅணுவாகச் செத்துக்கொண்டிருக்கிறாள்."

இசையுலகில் ருசியுடையவர்கள் மீதாலியின் திறமை அகாலத் திலேயே அஸ்தமனமாகிவிட்டதற்கு வெவ்வேறு நபர்கள் மீது பழியைப் போடுகிறார்கள். சிலர் அவளுடைய குருவின்மீது குற்றம் காண் கிறார்கள். வேறுசிலர் அவள் சீக்கிரமே தாய்மை அடைந்ததைக் காரணமாகக் கூறுகிறார்கள்! ஆனால் யாரும் மீதாலியின் கணவரை நோக்கி சுண்டுவிரலைக்கூடச் சுட்டுவதில்லை. ஆனால் உண்மையில் மீதாலியின் வாழ்க்கையைச் செல்போல அரித்து உளுத்துப்போகச் செய்தது அவர்தான்.. சுத்தம் கெட்டுவிடும் என்ற வீண்பயம்.. ஜமாய் பாபு பேசும்போதெல்லாம் 'சுத்தம்' என்ற சொல்லைப் பிரயோகிக்கத் தவறமாட்டார். பரிசுத்தம்.. என்ற பேரில் குறுகிய கண்ணோட்டம்—எண்ணப்போக்கு.. தீதி இப்போது பாத்ரூமில்தான் பாடுகிறாள். கை விரல்களும், உள்ளங்கைச் சருமமும் சதா தண்ணீரில் ஊறி இருப்ப தால் சுருங்கிக் கிடக்கின்றன.. நாள் முழுக்கத் துணி துவைக்கிறாள்..

குக்லூவுக்கும் தெரியும் மீதாலி தீதியை. மீதாலியின் டும்ரி கச்சேரியைப் பற்றிப் பேசும்போது குக்லூ குறிப்பிட்டான்—"மீதாலி தீதி கச்சேரியில், அடேங்கப்பா..! ஏகக்கூட்டம் சேரும், ஒரு சமயம் லாத்தி சார்ஜ்கூட நடந்தது.. ப்ச்.. இன்னிக்கு என்ன ஆகிவிட்டது..?"

என்ன ஆயிற்றா? மீதாலியின் கணவர் அவளுடைய பாட்டில் தான் மயங்கினார். அதிலும் டும்ரிதான் அவரை மிகவும் கவர்ந்தது. 'மீதாலி—டும்ரி' என்ற புது அலையே உருவாகும் அளவுக்கு அவள்

டும்ரியில் சில புதுமைகளைப் புகுத்தியிருந்தாள். ஆனால் சகலகலா வல்லவரான கணவர் அன்பும் பரிவும் ஒழுக எடுத்துக் கூறினார்— "மீதாலிராணி, டும்ரிதான் பிடிக்கிறது என்றால் 'சுத்த' டும்ரி பாடேன்." கணவரின் விருப்பம் அல்லவா? நிறைவேற்றத்தானே வேண்டும். பிறகு தீதி ஒரு ராகத்தை எடுத்துக்கொண்டு ஸ்வர சுத்தமாக டும்ரியில் அமைத்து சாதகம் செய்தாள். லக்னோவிலும், பனாரஸிலும் கலப் பில்லாத சுத்தமான டும்ரி பாடினாள். குருஜி தன்னுடைய எதிர்ப்பைத் தெரிவித்தார். பிறகு அவரை வழிக்குக் கொண்டுவர முயன்றார் "ஜமாய் பாபு! நாட்டுப்புற இசைதான் டும்ரியை இதுவரையிலும் வளர்த்திருக் கிறது. 'க்யாலை' அடியொற்றி வரும் டும்ரி நாட்டுப்புற இசையுடன் ஒருங்கிணைந்து வரும்போது. ஆகா. பெயர்பெற்ற உஸ்தாது."

"பெயர்போன உஸ்தாதுகளின் பெயர்போன விஷயங்கள் எனக்குத் தேவையில்லை, பண்டிதஜி! டும்ரியின் வரலாற்றை நான் நன்றாக ஆராய்ந்திருக்கிறேன். இதிலே சுத்தம்தான் முக்கியம், அதாவது கலப்பில்லாமல் இருக்கவேண்டும்! டும்ரி என்ற பெயரில் இனக்கலப்பு செய்கிறவர்களை கலைஞர்கள் என்று ஒப்புக்கொள்ளவே மாட்டேன்."

மீதாலி தீதி குருஜியின் உபதேசத்தைப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தாள். கேட்கவில்லை, பதில்பேச வாயும் இல்லை பாவம்!

இதுவரையிலும் மீதாலி காபி அல்லது கம்மாஸ் ராகத்தில் டும்ரி பாடுகையில் கீர்த்தனை அல்லது கிராமியப் பாடலை விரவிக் கொள்வாள். இந்தக் கலப்பு அவளுக்கு வெற்றியைத் தேடித் தந்தது. அவள் பிரபலமடைந்ததன் ரகசியம் இதுதான். மூலராகத்துடன் கண்ணாமூச்சி விளையாடும் நாட்டுப்புற மெட்டுகள் ரசிகர்களை வெகுவாகக் கவர்ந்தன. ஆனால் கணவர் பேச்சைக்கேட்டு மீதாலி தீதி இவற்றைக் கருணையின்றி உதாசீனம் செய்தாள். 'க்யா ஸுபஹ் ஸுபஹ் பாஜுபந்த் குலி-குலி ஜாய் குலி-குலி ஜாய்.' "மீதாலி ராணி! போதுமே நிறுத்தேன் இதை. டும்ரி. தனி டும்ரி வேண்டாம்.!" அவள் ஓஹோ என்று கொடிகட்டிப் பறந்த அதே பெசண்ட் ஹாலில் படு வீழ்ச்சியையும் கண்டாள்.

கீதாலிக்கு அந்த இரவை மறக்கத்தான் முடியுமா? அன்று கீதாலியின் வீட்டில் சோகம் படர்ந்திருந்தது. குருஜி விக்கி விக்கி அழுதார். சரத்—நவராத்திரி இசைவிழாவில் மீதாலி தீதியின் ஆலா பனை முடிவடையவில்லை, அதற்குள் சங்கீத சபாவில் நாயும் பூனையும் ஓலமிட்டன. எல்லாம் ரசிகர்கள்தாம்! இது போதாதென்று விதவிதமான கமென்டுகள்—"பிரசவ ஆஸ்பத்திரிக்கு அனுப்பு இந்தக் கேஸை.! ஐயோ, சகிக்கவில்லையே. படுபோர்.!"

அன்ன ஆகாரமின்றி படுத்துக்கிடந்த குருஜியின் முன்னிலையில் கீதாலி சபதம் எடுத்துக்கொண்டாள். எளிய—இனிய இயல்பான சங்கீதத்தின் தனித்தன்மை காப்பேன் என்று விரதம் பூண்டாள். மீதாலி

நீதி உதாசீனம் செய்த மெட்டுகளுக்கு அவள் அடைக்கலம் கொடுத்தாள்.

ரேடியோவில் செய்தி ஒலிபரப்பு ஆரம்பித்ததும்தான் கீதாலிக்கு நேரத்தைப் பற்றிய பிரக்ஞை வந்தது. இதுவரையிலும் மாஸ்டர் வேலை செய்வதை கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். ஹாராதன் கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந்துவிட்டார். ரேடியோவில் செய்தி கேட்கும்போதெல்லாம் இந்த ஆசனத்தில அமருவார்- "பிரும்மாண்டமான உலக இசைக்கருவியைத் தொடும் உணர்ச்சி ஏற்படுகிறது, ரேடியோவில் செய்தி கேட்கும்போது, தெரியுதா பேத்தி!"

செய்தி முடிவடைந்ததும் குக்லூ ரேடியோவை அணைத்தான். கீதாலியின் தம்பூராவை மடியில் எடுத்து வைத்துக்கொண்டு ஹாராதன் மாஸ்டர் கூறினார், "பார்த்தாயா, இதில் நாலே நாலு தந்திதான் இருக்குது. இந்த நான்கு தந்திகளிலிருந்து சப்த ஸ்வரங்கள் எழுகின்றன- உன்னுடைய தமக்கை சகநாதத்தை அலட்சியம் செய்தாள். நீ அப்படிச் செய்யக்கூடாது. அதிர்ஷ்டவசமாக உன்னுடைய தம்பூரா நல்லா அமைஞ்சிருக்கு-"

இதன் பின் இசைக்கருவிக்காரர் கீதாலியின் தம்பூராவை சரி பார்ப்பதில் முழுகிவிட்டார். "-'ப' ஸ்வரத்தில் கட்டியுள்ள தந்தியிலிருந்து 'துனிரி' தானே சக நாதங்களாகப் பிறக்க வேண்டும். இதில் 'ச ரி க ப' ஏன் வருது-? இந்தத் தம்பூராவை வைத்துக்கொண்டா நீ அகில இந்திய ஸ்வர—ஸங்கம—விழாவில் பாட ஆயத்தமானாய்? நல்ல கதை! ராதே—ராதே!!"

கீதாலிக்கு ராதேசியாமின் நினைவு வந்தது, ராதே கிடாரிஸ்டு! முழுதும் விரிவதற்கு முன்பே இதழ்கள் உதிர்ந்த பூப்போல ராதேசியாம் பிரகாசிப்பதற்கு முன்பே அஸ்தமித்துவிட்டான். அவனை நினைக்க சற்று வருத்தமும் ஏற்பட்டது. ஐந்து நிற ஜாக்கெட்டும், வாள் போன்று வெட்டிய மீசையும்! எத்தனையோ முறை வீட்டுக்கு வந்திருக்கிறான். பல கச்சேரிகளில் அவளுக்குப் பக்கவாத்தியம் வாசித்திருக்கிறான்-

அன்று இசைக்கருவிக்காரரிடமிருந்து விடைபெற்று வீடு திரும்பினால், ராதேசியாம் தனக்காக வீட்டில் காத்திருப்பதைக் கண்டாள். எவ்வளவு நேரமாக உட்கார்ந்திருக்கிறானோ? அம்மா இராமகிருஷ்ண ஆசிரமத்தில் பஜனைப்பாடல் கேட்கச் சென்றிருந்தாள். அவள் ராதேசியாமின் முகத்தை உன்னிப்பாகக் கவனித்தாள். ஒரு நல்ல இசைக்கலைஞன் என்றால் அவனுடைய முகத்தைச் சுற்றிலும் நாத அலையைக் காணலாம் என்று ஹாராதன் மாஸ்டர் சொல்லியிருந்தார் அல்லவா! சிம்ஃபோனி குழுவை இயக்கும் மிஸ்டர் ரேகினை முதன்முறை பார்த்ததுமே ஹாராதன் மாஸ்டருக்கு

அவருடைய முகத்தைச் சுற்றிலும் ஸ்வர அலைகள் எழும்புவது தெரிந்ததாம். 'சி' மைனரிலிருந்து 'ஈ' ஃப்ளாட்– பியானோ, ஹார்ன், ஓபோ– கிளாரினெட்–

ராதேசியாமின் முகத்தைச் சுற்றிலும் நாத அலைக்குப் பதிலாகப் போதை அலைதான் காணப்பட்டது. செமையாகக் குடித்திருந்தான். கீதாலியின் மௌனத்தைத் தவறாகப் புரிந்துகொண்டு அவன் நாக்குழறப் பேசினான், "டார்லி–! டிடிடியயய–! கீடாலி, மை கிதா–ஆ–!" இசைமேதை அக்ராமின் 'அர்ச்சனா கீதம்,' சங்கநாதம், மணி யோசை, தூபம்– அகிலின் நறுமணம்– ராதேசியாமின் குழறும் பேச்சு, சாராயநெடி–! கீதாலியின் கடைசித் தம்பியின் வயசுதான் இருக்கும் இந்த ராதேசியாமுக்கு!

ஒரு வழியாக ராதேசியாமைக் கழற்றிவிட்டதும் அங்கே வந்து உதித்தார் ஜமாய்பாபுவின் ஒரு நண்பர். பாடகர்; ஜமாய்பாபுவின் சீடர்– அவர் கீதாலியின் அனைத்துப் பாடல்களையும் குத்தகைக்கு எடுக்கச் சித்தமாயிருந்தார்– "நீ உன் சுண்டுவிரலை அசைத்தால் போதும், உன்னுடைய ஐந்து பாட்டுக்களுக்கு மெட்டமைத்துக் காட்டுகிறேன். பாடலின் வரிகளுக்கு இடையே, பதங்களுக்கு நடுவே வரும் மும்மூன்று மோகனப் புள்ளிகள்போல நீ அழகாக இருக்கிறாய் அன்பே! நீ–!" எப்படியோ அவனையும் கழற்றிவிட்டாள் கீதாலி.

ராதேசியாம் ஒன்றிரண்டு சினிமா மெட்டுகளை வைத்துக் கொண்டு உயிர்வாழ்கிறான். ஜமாய்பாபுவின் சீடனுக்கு இப்போது வேறு காதலி கிடைத்திருப்பாள்!–

கீதாலி, பாவம்! தானே பாட்டை இயற்றுகிறாள்; அதற்கு மெட்டு அமைக்கிறாள்; மேடையில் பாடுகிறாள்– பத்து வருஷமாகப் பாடி வருகிறாள். இசைக்கருவிக்காரர் இன்னொரு ரகசியத்தையும் கூறி இருந்தார். "வாசம்! கீதத்திலேயே வாசம் எழும்பும்படியாக அப்படி சாதகம் செய்–"

மூன்றாவது தினம் இசைக்கருவிக்காரரின் 'மூடு' மாறி இருந்தது. குக்லூ எங்கோ வெளியே போயிருந்தான். கீதாலி பேசாமல் ஒரு மூலையில் அமர்ந்திருந்தாள். அகில இந்திய ஸ்வர சங்கம விழாவின் தேதிகள் குறிப்பிடப்பட்டுவிட்டன. கீதாலி மாஸ்டரிடம் கூறினாள், "தாத்தா, ஆசி வழங்குங்கள். இசைவிழா அழைப்பு கிடைத்துவிட்டது."

குக்லூ தொன்னையில் குக்னி (ஓர் இனிப்பு), கச்சோரி (பஜ்ஜி, பக்கோடா) கொண்டுவந்தான். அதைப் பார்த்ததும் ஹாராதன் மாஸ்டரின் மூடு சரியாகிவிட்டது. உள்ளேயிருந்து கீதாலியின் தம்பூராவை எடுத்துவந்தான் குக்லூ. அழகான மேலுறையை அகற்றி இசைக்காரர் தம்பூராவை கீதாலியின் கையில் கொடுத்தார்—"வாங்கிக்கொள்! திருந்திவிட்டது இது, அனைவரையும் திருத்தும்! இதைப் பூஜிக்கச் சொல்லவில்லை, மதிக்கச் சொல்கிறேன்!"

கீதாலி தன் விரல்களால் தந்திகளை ஸ்பரிசித்தாள். ஹாராதன் மாஸ்டர் இங்குமங்கும் பார்த்துவிட்டு கீதாலியிடம் கேட்டார், "நான் ஒன்று கேட்கட்டுமா? உன் விரல்களைத் தொட அனுமதிப்பாயா- ஆமாம்- கிழவனுக்கு இதென்ன 'ஆசை என்று பேத்திக்கு வியப்பாக இருக்கிறது அல்லவா? ஒருநாள் கைபார்க்கிறேன் என்கிறார். ஒருநாள் விரலைத்தொட விரும்புகிறார். அ-ஹ-ஹா-" கீதாலியின் விரல்களால் தன் தலைமுடியை வருடச் செய்தவாறு கூறினார்—"நீ சரியாக நகம் வெட்டியிருக்க மாட்டாயோ என்று பயந்தேன்-" விரல்களைப் பிடித்த வாறே ஹாராதன் சிரித்தார். "ஏம்மா பேத்தி, என்ன நினைக்கிறே? மனசிலே என்ன ஓடுதுன்னு கேட்கறேன்? உன் மனசு இப்ப என்ன சொல்லுது? என்ன ஸ்வரத்தில்-"

அன்று கீதாலி சிரித்துக்கொண்டே ஏதோ பதில் சொன்னாள். "பழக்கமில்லாத மெட்டு கேட்கிறதா என்று கவனி?" என்று சொன்னார் மாஸ்டர்- இன்று கேட்கிற புதிய ராகத்தை அவளால் கட்டுப்படுத்தவே முடியவில்லை. அவளுடைய வாத்தியம் இன்றும் களைக்கவில்லை. அவள் களைத்துவிடுகிறாள்- இசைக்கருவிக்காரர் எங்கே போனார்? உயிருடன் இருக்கிறாரா அல்லது-?

அந்த வருடம் அகில இந்திய ஸ்வர சங்கம விழாவில் முதலிடம் பெற்றதும் முதல் வேலையாக ஹாராதன் மாஸ்டரைப் பார்க்கச் சென்றாள் வணக்கம் தெரிவிப்பதற்காக- அந்தச் செய்திகேட்டு வாயடைத்துப் போய்விட்டாள், குக்லூவை அழைத்துக்கொண்டு அவர் எங்கேயோ ஓடிப்போய்விட்டாராம்! ஸ்வரமந்திர்காரர்கள் போலீசில் புகார் செய்தார்களாம்; ஹாராதன் அந்தக் கம்பெனிக்காரர் களின் கருவிகளையும் பல பொருட்களையும் திருடிவிட்டார் என்று அவர்மீது குற்றம் சாட்டினார்களாம்- பத்து வருடங்கள் ஓடிவிட்டன. அன்றைக்குக் கேட்டாள்: "தாத்தா, நான் உங்களை 'நாதப்பிரம்மம்' என்றே கூப்பிடுவேன்- நாதப்பிரம்மம்! அந்த மான்தோலை எனக்குத் தருவீர்களா? எனக்கு அதில் உட்கார்ந்து சாதகம் செய்ய ஆசையாக இருக்கிறது." "செய்வாயா? நிஜமாகவா? பயமாக இல்லே? இந்த துரதிருஷ்டம் வாய்ந்த மான்தோலினால் உனக்கும் எவ்வித ஆபத்தும் வராதிருக்க வேண்டும்" மான்தோலைக் கண்களில் ஒற்றிக்கொண்டு கீதாலி அதனை ஒரு பக்கமாக வைத்துவிட்டாள்- பிறகு அதிலமர்ந்து சாதகமும் செய்திருக்கிறாள்- புள்ளிமான்- சித்திர, விசித்திர புள்ளிகள்- சந்தனப் பொட்டுப்போல- இடையே ரத்தத் துளிகள்- டாட்-டாட்- டாட்-" புள்ளிகள்—புள்ளிகள்.

பத்து வருடங்களுக்குப் பிறகு ஹாராதன் 'மாஸ்டரை நினைவு படுத்திப் பார்க்கும்போது மனம் தன்னையறியாமலே அவருக்கு

அஞ்சலி செலுத்துகிறது- கீதாலி இப்போது தன்னையே தம்பூராவாக நினைத்துக் கொள்கிறாள். ஏதோ தெரியாத விரல்கள் அந்தத் தம்பூராவை அடிக்கடி சீண்டுகின்றன- அந்தரங்க உலக நடப்புகளை மேலும் கவனிக்க இயலாதபடி ஏதோ இடைஞ்சல். தகதகவென்று எரிகின்ற மூன்று புள்ளிகளும் அணைந்துவிட்டன. வாசலில் தபால் காரர் குரல் கேட்கிறது. ஏதோ கடிதங்களை வீசிவிட்டுப் போயிருக் கிறார்- செல்வி கீதாலிதாஸ்- கீத்மகால்-!

அப்பனே! ஈசுவரா! தேவி! பகவதி- இது என்ன? கனவு காண் கிறேனா நான்? இல்லை, இது நிஜம்தானா? அகில இந்தியப்புகழ்பெற்ற சிதார்மேதை அக்ராமின் அன்புக் கடிதம், இதயத்தைத் திறந்து அன்பைக் கொட்டி இருக்கிறார்! சங்குநாதம் மணியோசை- தூபத்தின் நறுமணம்! அர்ச்சனா கீதம்! லலிதம்! பிறகு விளம்பித—துரிதம்-! இது எவ்வாறு நடந்துவிட்டது? பத்தாண்டுகளாக மனதில் மறைந் திருந்த சங்கதி இன்று பாய்ந்து பரவிவிட்டதே- அம்மா!

அக்ராமின் கடிதமே நாதமயமாக இருந்தது. அதன் ஒவ்வொரு வரியும் கலீரென ஒலிக்கிறது. சங்குநாதம், மணியோசைக்கிடையில் அக்ராமின் குரலோசையைக் கேட்கிறாள் கீதாலி! நெடுநாள் தோழ னான தம்பூராவைத் தாங்குதலாக வைத்துக்கொள்கிறாள். இரண்டு கைகளாலும் இறுகப்பிடித்துக்கொள்கிறாள்- நான்கு தந்திகளிலிருந்தும் அக்ராமின் குரல்நாதம் கேட்கிறது! "கீதாலி? கீதாலி- நான்தான் அக்ராம். எட்டு வருஷமாக நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன், ஏன், அனுபவித்துக் கொண்டிருக்கிறேன் உன்னுடைய கீதங்களின் வாசத்தை- ஆஹா என்னென்ன வாசம்! பாடிக்கொண்டே நெல்லுக் குத்துகிற, திருவைக்கல்லில் மாவு அரைக்கிற, ஆடுமாடுகளை மேய்க்கிற அழகிகளின் உடலிலிருந்து எழும் லாவண்யமான வாசம், உப்புநெடி, வயல்களிலும் ஆறு-குளம்-கிணற்றடிகளிலும் தண்ணீர் நிரப்பும் பெண்களுடைய முந்தானையின் வாசம்- நறுமணம்- காட்டுப்பூவின் போதைதரும் நறுமணம் மிகுந்த கீதங்களை இசைக்கும் பாடகியே, நீ என்னுடைய முகரும் சக்தியை அதிகப்படுத்திவிட்டாய்- நான் அண்மையில் இரண்டு பாட்டுகளுக்கு மெட்டமைத்திருக்கிறேன். என்ன பாட்டுத் தெரியுமா?- 'கீத கந்தா', அப்புறம் 'கீதாலி-கங்கா'- அன்றுபோல கஞ்சத்தனமாக இருக்கமாட்டாய் அல்லவா? நீ இதுவரை யிலும் பாடி இராத உன் கீதங்களை நான் வெளிக்கொணர்வேன். கீத கந்தா! பெரும்பேறாகக் கருதுகிறேன் உன் உறவை-"

இதோ இரண்டாவது கடிதமும் கலீர் குரலில் ஏதோ பேசுகிறதே- காணாமற்போன நாதபிரம்மம் ஹாராதனைப் பற்றிய செய்தி- "ஓ-கோ-கோ பேத்தி! பரமசிவன் ஆனந்தம் அடைந்துவிட்டார். கண்களைத் திறந்து பார்- போனவாரம் நான் உன் பாட்டைக் கேட்டு விட்டு வீடு திரும்பினேன். என் வீட்டுக்கு ஓடியே வந்தார் மாஸ்டர்.

"என்ன ஆயிற்று உங்கள் பேத்திக்கு? மனம் வாட்டமடைந்துவிட்டதா? ஆனால் நீ கற்றுக்கொடுத்த பாடத்தை அவள் சிக்கெனப் பிடித்துக் கொண்டிருக்கிறாள்– நீங்கள் சரிசெய்து கொடுத்த தம்பூரா நாதத்தின் சூடு அவளுடைய ஒவ்வொரு நரம்பிலும் பாய்ந்திருக்கிறது." இதைக் கேட்டதும் மாஸ்டர் மகிழ்ச்சியில் திளைத்து ஏதோ பிதற்றினார்– இன்று உன் பேத்தி மகிழ மரத்தினடியில் அமர்ந்திருந்தாள். அருகே குடம் நிறையத் தேன், பாடல் புத்தகம்– ஆனால்– ஆனால்– மனதில் எத்தனை எத்தனை ஆனால்கள் எழும்புகின்றன. ஏன், மனதில் என்ன ஒலிக்கிறது? வெளியே வசந்தம்! எல்லாம் சுயம்பு ராகத்தின் சாதனை! சாதியைப் பற்றி யோசனையா? கலைஞர்களின் சாதி ஒன்றுதானே! ராகத்தை ஆராயும்போது ராக ஜாதி வாதி-ஸமவாதி ஸ்வரங் களைத்தானே பார்க்கிறோம்.

மூன்றாவது கடிதம் பேசாத ஒன்று! கடந்த மூன்று ஆண்டுகளாக பண்டிகை விழாக்காலங்களில் வண்ணவண்ணக் கார்டுகளை அனுப்பு வார் ஒரு கலைஞர். இராமகிருஷ்ண ஆசிரமத்தின் ஆண்டுவிழாவின் போது மண்டபத்தையும், அரங்கையும் அழகுற அமைத்து மனோகர் ராய் எல்லாருடைய மனதையும் கவர்ந்துவிட்டார்– கீதாலி அரங்கின் அழகைப் பார்த்து மதி மறந்து அங்கேயே நின்றுவிட்டாள், மணிக் கணக்கில்– மன்னிக்க வேண்டும் மனோகர், கீதாலி என்றும் கடமைப் பட்டிருப்பாள்– நீ விரும்பியிருந்தால் கீதாலி தன்னுடைய சகல வண்ணங்களையும் உனக்கு அர்ப்பணிக்கச் சித்தமாயிருந்தாள்– நீ அந்தக் கணங்களைப் பயன்படுத்தத் தவறிவிட்டாய்– மூன்று நீண்ட வருஷங்கள். மூன்று சூனியப் புள்ளிகள்– நீ வாளாவிருந்துவிட்டாய். கலைஞனே! கீதாலி நாத ஜீவி. பத்துவருஷம் முன்பே அவள் ஒருவருடைய ஸ்வரத்துக்குக் கட்டுப்பட்டுவிட்டாள். இருந்தாலும், அன்றும் நீ ஒன்றும் பேசவில்லை. அக்ராம் சங்கநாதம் முழக்குகிறார்– அன்பு மனோகர்– அக்ராம்– அன்பு அக்ராம்! நீ குணக்குன்று! இதை யெல்லாம் நீ எங்கிருந்து கற்றாய்! வாசம்? ஆண்டவன் அருளால் இது கைகூடியிருக்கிறது. 'அர்ச்சனைகீதம்' கேட்கும் போதே தூபத்தின் நறுமணத்தை நான் உணர்ந்தேன். நீதான் இந்த நறுமணத்தைப் பரப்பியது முதன் முறையாக! உன்னுடைய பொருள் உனக்கே! இதோ நான் இசைக்கருவி! என்னை எடுத்து வாசி, வாசித்துப் பெருமையளி!–

கீதாலி பக்கத்தில் கிடந்த தம்பூராவின் தந்திகளை மீட்டினாள். மூலநாதத்தைவிட ஒன்பது மடங்கு அதிக எழுச்சியுடன் சக ஸ்வரங்கள் எழுந்தன.

–இதோபார் அக்ராம்– ஹாராதன்– குக்லூ பாண்டு வாத்திய கோஷ்டியில் நின்று ஹார்ன் வாசிக்கிறான்– நீங்கள் எல்லாரும் கேட்டிருப்பீர்கள்! கீதாலி அக்ராமின் கழுத்தில் கீதமாலை இட்டாள்–! 'ஏ' மைனரின் செறிவுமிக்க ஸ்வரம்– 'எஃப்' மேஜரின் உல்லாசம்!–

கீதாலி இராமகிருஷ்ண பரமஹம்ஸதேவரை வணங்கினாள். பரமஹம்ஸ தேவரின் கதையமுதத்திலிருந்து குரல் எழும்பியது— 'மானுஷேர் மன்ஜேன் சர்ஷேர் புட்லி'—மனித மனம் கடுகுப் பொட்டலம்போல!

கீதாலியின் கண்களிலிருந்து கண்ணீர் தாரைபோல வழிந்தது. குரல்வளையிலிருந்து இதுவரை பாடாத ஒரு கீதம் பீறிட்டுக் கிளம்பியது.

'அலக்-முகர்-ஜகத் மே
அக்ராம் கீ பகவத்வனி
ஸுன் ரஹீ ஹை கீதாலி'
(கேட்குது பார் கீதாலி
அக்ராமின் பாத ஒலி
உள்ளமெனும் உலகினிலே)

# ரஸப்ரியா

புழுதியில் கிடந்த விலைமதிப்பற்ற கல்லைப் பார்த்து வைர வியாபாரியின் கண்களில் புத்தொளி மின்னியது. அதிசயமான கல்!

மாடுமேய்க்கும் சிறுவன் மோகனாவைப் பார்த்ததுமே பஞ்ச் கௌடி மிருதங்கக்காரன் வாயிலிருந்து வெளிவந்த வார்த்தை— அதிசயமான அழகு!

-வயல்கள், புல்வெளிகள், தோட்டங்கள், மாடுகள், காளைகள் இவற்றுக்கு மத்தியில் இடையச்சிறுவன் மோகனா அழகுமிளிர நிற்கிறான்.

மிருதங்கக்காரனின் மங்கிய கண்களில் கண்ணீர் பனித்தது.

மோகனா மோகனப்புன்னகையுடன் கேட்டான்—"உன் விரல் ரஸப்ரியா வாசித்து வாசித்தே வளைந்துவிட்டது. அப்படித்தானே?"

"ஆங்-?" கிழவன் மிருதங்கக்காரனுக்கு தூக்கிவாரிப்போட்டது. வியப்புடன் கேட்டான்—"ரஸப்ரியாவா-? ஆமாம்- இல்லை- ஏலே, உனக்கு எப்படி- எங்கிருந்து தெரிஞ்சுது-?"

'மகனே' என்று அன்பொழுக அழைக்கவந்தவன் நிறுத்திக் கொண்டான். பர்மான்புர் என்ற கிராமத்தில் ஒரு பிராமணப் பிள்ளை யாண்டானை அன்புடன் 'மகனே' என்று கூப்பிட்டான். அவ்வளவு தான்! கிராமத்துச் சிறுவர்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து அவனை வளைத்துக் கொண்டு அடிக்கப் புறப்பட்டுவிட்டார்கள்— "பஹர் தாராக இருந்துகொண்டு பிராமணப் பையனை மகன் என்று கூப்பிட உனக்கு தைரியம் வந்துவிட்டதா? பிடிங்கடா இவனை, நையப் புடைங்க! மிருதங்கத்தை உடைங்க."

மிருதங்கக்காரன் சிரித்துக்கொண்டே கூறினான்—"நல்லது, இந்தத் தடவை மன்னிச்சுடுங்க ஐயாமார்களே! இனிமேல் உங்களையெல்லாம் 'அப்பா' என்றே கூப்பிடுவேன்-"

பையன்கள் குதூகலமடைந்தார்கள். இது இரண்டரை வருஷம் முன்னால் நடந்தது. துணி உடுக்காத ஒரு சிறுவனின் மோவாயைப் பிடித்து அவன் கேட்டான், 'சௌக்கியமா இருக்கீங்களா, அப்பா!"

குழந்தைகள் ஹோவென்று சிரித்தார்கள்.

ஆனால், இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு எந்தக் குழந்தையையும் 'மகனே' என்று அவன் கூப்பிடத் துணியவில்லை. மோகனாவை

மகனே என்று கூப்பிடும் ஆசை ஏனோ அவனை அடிக்கடி உந்தியது.

"ரஸப்ரியா சங்கதி யார் உனக்குச் சொன்னது? சொல்லு மகனே!"

பத்து வயதுச் சிறுவனுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது, பஞ்ச்கௌடி அரைப்பைத்தியம். யார் இவனிடம் பேசி மீளுவது! இவ்வாறு எண்ணியவாறு அவன் புல்வெளியில் மேய்ந்துகொண்டிருந்த தன் காளைகளைக் கவனிக்க ஆரம்பித்தான்.

மிருதங்கக்காரன் கமல்பூரில் பாபுமார்கள் குடும்பத்தைக் காணப் போய்க்கொண்டிருந்தான். கமல்பூர் நந்தபாபு வீட்டில் இப்பொழுதுகூட மிருதங்கக்காரனைப் பார்த்துப் பரிவாக நான்கு வார்த்தைகள் சொல்பவர்கள் இருக்கிறார்கள், ஒன்றிரண்டு நாள் தங்கலாம், சாப்பிடலாம்; ரசமான விஷயங்களைப் பேசிப் பொழுதுபோக்கலாம். இந்தப் பக்கம் வந்து இரண்டு வருஷத்துக்குமேலே இருக்கும். உலகம்தான் எவ்வளவு விரைவில் மாறிக் கொண்டிருக்கிறது! இன்றுகாலை சோபா மிஸ்ராவின் சின்னப்பையன் மிருதங்கக்காரனைப் பார்த்துக் கேட்டான்—"நீ இன்னும் உயிரோடுதான் இருக்கிறாயா அல்லது ததிங்கிணதோம் போடறியா?"

ஆம், சரிதானே! இப்படிப்பட்ட வாழ்வும் ஒரு வாழ்வா? வெட்கம் கெட்டதனம்; ததிங்கிணதோம் போடுவதற்கும் ஒரு எல்லை இல்லையா. பதினைந்து ஆண்டுகளாக அவன் தன்னுடைய கழுத்தில் மிருதங்கத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு கிராமம் கிராமமாக அலைகிறான். ததிங்கிணதோம் போட்டு யாசகம் செய்கிறான்—வலதுகையின் வளைந்தவிரல் இப்போதெல்லாம் மிருதங்கத்தின்மீது படிவதில்லை, பாவம்! மிருதங்கம் எப்படி வாசிப்பான்? இப்போது 'தா தின், தா தின்' கூட கஷ்டப்பட்டுத்தான் வாசிக்க முடிகிறது. எக்கச்சக்கமாக கஞ்சா அடிப்பதால் தொண்டைவேறு கெட்டுக் கிடக்கிறது. ஆனாலும் மிருதங்கம் வாசிக்கும்போது வித்யாபதி பதாவளியிலிருந்து கீறல் விழுந்த ரிகார்டிலிருந்து எழும்பும் ஓசைபோல கரகரக்கும் குரலில் ஏதாவது பாட முனைவான்.

பதினைந்து இருபது ஆண்டுகள் முன்பு வரை மக்களிடையே வித்யாபதி பாடலுக்கு கொஞ்சமேனும் மதிப்பு இருந்தது. கல்யாணம், கார்த்திகை, குடுமி—பூணூல், காதுகுத்தல் போன்ற விசேஷங்களின்போது 'வித்பதியா மண்டலி'யினரைப் பாட அழைப்பார்கள். பஞ்ச்கௌடி மிருதங்கக்காரனின் மண்டலி சகரஸா மற்றும் பூர்ணியா மாவட்டங்களில் பெயர்பெற்று விளங்கியது. பஞ்ச்கௌடி மிருதங்கக்காரனை யாருக்குத்தான் தெரியாது? அவன் அரைப்பைத்தியம் என்று எல்லாருக்கும் தெரியுமே! ஆனால் கிராமத்தில் வயசானவர்கள் மட்டும் கூறுவார்கள்—"அட, உங்களுக்குத் தெரியாது. பஞ்ச்கௌடி மிருதங்கக்காரனுக்கும் ஒரு காலம் இருந்தது."

இந்தக் காலத்தில் மோகனா போன்ற ஒரு பையனாவது

இருக்கிறானே—துருதுருவென்று அழகான பையன், குரல் தேனில் குழைத்தாற்போன்றது! ரஸப்பிரியா கேட்க ஆசைப்படுகிறான்—"ஒரு ரஸப்ரியா பாடேன் மிருதங்கக்காரரே!"

"ஆ, ரஸப்ரியாவா? கேட்பாயா? சரி பாடுகிறேன். முதல்லே சொல்லு- யார் உனக்கு-"

"ஏ-ஏ-ஏய் மோகனா, காளை ஓடுது பார்-" மேய்ச்சல்காரன் ஒருவன் கூவினான், "அடே மோகனா, முதுகுத்தோலை உரிச்சுடுவான் அந்தக் கருழு!"

"அப்பாடியோவ்-!" மோகனா ஓடிவிட்டான்.

நேற்றுத்தான் கருழு அவனை நையப்புடைத்திருந்தான். இரண்டு பக்கத்திலும் பசுமையான செடிகளின் வாசம் காளைகளை ஈர்க்கிறது- புளிப்பும், இனிப்பும் கலந்த பழமரங்களின் சோலை அல்லவா?

பஞ்ச்கௌடி குரல் கொடுத்தான்—"நான் இங்கேயே நிழல்லே குந்திக்கிட்டு இருக்கேன். நீ காளைங்களை விரட்டிட்டு ஓடியா. ரஸப்ரியா கேட்கவேண்டாமா?"

மோகனா ஓடினான். திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

ரஸப்ரியா-!

வித்யாபதி நடனகோஷ்டி ரஸப்ரியா பாடுவதைக் கேட்க வேண்டும். சகரஸாவைச் சேர்ந்த ஜோகேந்தர் ஜா ஒருமுறை வித்யா பதியின் பனிரெண்டு பாடல்களை ஒரு புத்தகமாக வெளியிட்டார். திருவிழாவில் அந்தப் புத்தகம் நிறைய விற்றது. வித்யாபதி நடன கோஷ்டியினர் பாடிப்பாடி ரஸப்ரியாவை ஜனரஞ்சகமாகச் செய்தனர்.

வயலோரத்தில் நாவல்மரநிழலில் அமர்ந்திருந்தான் மிருதங்கக் காரன், மோகனாவை எதிர்பார்த்து- நல்லகோடைகாலம், உச்சிவேளை! இயல்பாகப் பாடக்கூடிய உழவர்கள்கூட இப்போதெல்லாம் பாடு வதில்லை. சிலநாட்களில் குயில்கூட கூவுவதை மறந்துவிடுமோ என்னவோ! இந்த மதிய நேரத்தில் பாடாமல் பேசாமல் இவர்களால் எப்படி வேலைசெய்ய முடிகிறது! ஐந்து வருஷங்கள் முன்புவரை மக்களின் உள்ளத்தில் உல்லாசம் மீந்திருந்தது. புதுமழை பெய்யும்போது பூமியிலிருந்து மண்வாசனை கிளம்புமே அதன்நெடி அலாதியானது. நல்ல வெயிலில் மரக்கிளைகளில் பழுத்திருக்கும் கனிகளின் ரசம் மெழுகுபோல உருகும். அப்போதுதான் கனிகள் சுவைபெறுகின்றன. அப்போது உழவர்கள் விரஹா, சாஞ்சர், லக்னி போன்ற பாடல் வகைகளைப் பாடுவார்கள். மாறிவரும் பருவங்களை ஒட்டி உழவர் களின் பாடல்களும் அமையும். மழைச்சாரல் அடிக்கும்போது 'பாரஹ் மாஸா', அனல்கக்கும் வெயிலில் 'விரஹா, சாஞ்சர், லக்னீ!'

"ஹாங்-ரே ஹல்ஜோதே ஹல்வாயா பையாரே-
குர்பீ ரே சவாவே- மஜ்தூர்!
ஏஹி பந்தே, தனீ மோரா ஹே ரு ஸலி-"

வயல்களில் ஏரைப்பிடித்து உழவு வேலை செய்பவர்களிடம், விரகதாபத்தினால் வாடும் ஒருவன் பரிதாபமான குரலில் கேட்கிறான், 'ரோசமுள்ள ராசாத்தியவ இந்த வழி போனாளே—கிளி மொழி பாத்தியளா அண்ணே பாத்தியளா?'

இப்போதோ நண்பகல்பொழுது வறட்சியுடன் நீங்குகிறது—வாழ்விலே எவ்விதமான சுவையும் இல்லை. மனிதர்களிடம் இப்படியா ஒருசொல்கூட இல்லாமல் போய்விடும்?

வானத்தில் வட்டமிட்டுக்கொண்டிருந்த கழுகு கூச்சலிட்டது, "டியிடிஹிக்!"

மிருதங்கக்காரன் திட்டினான்—'சைத்தான்.'

மோகனா அவனைவிட்டு வெகுதூரம் ஓடிவிட்டான். மிருதங்கக் காரன் ஆவலுடன் காத்திருக்கிறான். பின்னாலேயே ஓடி அவனைப் பிடித்துவிட வேண்டும் என்ற ஆசை மனதில் எழுகிறது. வெகு தொலைவில் மேயும் ஆடுமாடுகளின் கூட்டத்தை வெற்றுப் பார்வையுடன் நோக்க முயலுகிறான்; எல்லாம் மங்கலாகத் தெரிந்தது!

அவன் தன்னுடைய ஜோல்னாப் பையில் கையைவிட்டுத் துழாவினான்—மாம்பழம் இருக்கிறது, அவல் இருக்கிறது. அவனுக்குப் பசி எடுத்தது. ஆனால் மோகனாவின் வறண்டவாய் நினைவிற்கு வந்ததும் பசி மந்தித்துவிட்டது.

மோகனா போன்ற சுந்தரவதனம் கொண்ட, நன்னடத்தையுள்ள சிறுவர்களைத் தேடியே அவனுடைய வாழ்க்கையின் பெரும்பகுதி கழிந்தது. வித்யாபதி நடனத்தில் ராதை வேடமணிந்து கண்ணனுக்காக உருகும் 'நடுவா'-நடிகனைத் தேடுதல் விளையாட்டல்ல. மேல்சாதியில் கிடைக்கலாம்—கீழ்ச்சாதி மக்களின் வீட்டில் மோகனா போன்ற சிறுவர்கள்—மோகினிபோன்று கவர்ச்சியான முகம் படைத்தவர்கள் எப்போதும் பிறப்பதில்லை. எப்போதாவது அவதாரம் போலத் தோன்றுவார்கள்.

மைதிலி அந்தணர், காயஸ்தர், ராஜபுத்திரர் வீடுகளில் வித்யாபதி நடனமண்டலிக்குத் தனி ஆதரவு உண்டு. பண்டிகை—விசேஷ நாட்களில் வித்யாபதி நடனமண்டலியின் நிகழ்ச்சி நடக்கும். ராதை வேடம் அணிந்த 'நடுவா' சிறுவன் இனிமையாகப் பாடுவான்— 'ஜனம அவதி ரூப நிஹாரல்' (வாழ்நாள் எல்லாம்—கண்ணா! காண்பேனே உன்னழகை). தாய்மொழி மைதிலியில் அமைந்த இந்தப் பாடலை எத்தனைமுறை கேட்டாலும் அலுக்காது. எனவே மண்டலியின் 'மூலகைன்' (முக்கியமான பாடகர்) 'நடுவா'வைத் தேர்ந்தெடுக்க கிராமம் கிராமமாக அலைவார். நடுவா எப்படி அமையவேண்டும் என்றால், அவனைச் சிங்காரித்து நடனத்துக்கு இறக்கியதுமே ரசிகர்களிடையே சலசலப்பு உண்டாக வேண்டும்.

"அப்படியே பிராமணப்பொண்ணுபோல இருக்கு, இல்லே?"

"மதுகாந்த் தாகூரின் மகளைப்போல-"

"இல்லை, சம்பாக்குட்டிபோல அழகா இருக்கு-"

பஞ்ச்கௌடி நல்ல குணம் வாய்ந்தவன். மண்டலிகளில் மூல கைனுக்கும், மிருதங்கக்காரனுக்கும் தனித்தனி இடம் உண்டு. ஆனால் தன்னுடைய மண்டலியில் பஞ்ச்கௌடியாதான் 'மூலகைன்', அவனே தான் மிருதங்கக்காரன். கழுத்தில் மிருதங்கம் தொங்கும். அதை வாசித்துக்கொண்டே அவன் பாடுவான், ஆடவும் செய்வான். அவனிடம் வந்தால் எந்தச் சிறுவனும் ஒரே வாரத்தில் நடனம் கற்று 'பிரவேச' நடனத்தில் இறங்கும் அளவுக்குத் திறமை பெற்றுவிடுவான்.

பாட்டும் நடனமும் கற்பிப்பது அவனுக்கு ஒருபொழுதும் சிரம மாக இருந்ததில்லை; மிருதங்கம் சரியாகப் பேசினால் சிறுவர்களின் கால்கள் தாமாகவே நடனமாடத் தொடங்கும். பெற்றோர்களின் பிடிவாதத்தைச் சமாளிப்பதுதான் பெரும்பாடாக இருக்கும். இனிமை யான மைதிலி மொழியில் மேலும் தேனைக்குழைத்து அவன் பசப்பு வார்த்தைகள் பேசுவான்.

"மாயக் கண்ணனும் ஆடினார். நடனம் என்பது பண்புமிகுந்த கலை—யாசகன், தஸ்துவாரி என்றெல்லாம் சொல்றவங்க அறியா தவங்க. தன்னுடைய திறமையைக் காட்டி ஜனங்களை சந்தோஷப் படுத்துவது, அதைக்கொண்டு பிழைப்பை நடத்துவது—திருட்டு-கொள்ளை, வீணாக ஊர்சுத்துவது இதையெல்லாம்விட எவ்வளவோ மேல்!"

ஒருதடவை அவன் ஒரு சிறுவனைத் திருட வேண்டிய நிலை ஏற்பட்டது. ரொம்பநாள் முன்னால்... செம்மையாக உதையும் கிடைத்தது. அதெல்லாம் பழைய கதை.

பழைய கதையானாலும் அது உண்மைதானே!

"ரஸப்ரியா பாடியே உன்னுடைய விரல் வளைஞ்சிடுச்சி, அப்படித்தானே?"—மோகனா எப்போது திரும்பினான் என்றே தெரிய வில்லை.

மிருதங்கக்காரனின் முகத்தில் ஒளி திரும்பிவந்தது. அவன் மோகனாவை வைத்தகண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்- இந்த திறமைசாலி இறந்துகொண்டிருக்கிறான் அணு அணுவாக, இம்மி இம்மியாக. சிவப்பான அதரங்களில் பீடியின் கருமை படர்ந்திருக்கிறது. வயிற்றில் கட்டி இருக்கிறது, நிச்சயமாக!

மிருதங்கக்காரன் வைத்தியனும்கூட, சிறுவர்களின் மண்டலிக்குத் தந்தையாக இருக்கக் கூடிய ஒருவருக்கு மருத்துவரின் குணமும் தேவை. பண்டிகை—விழா நாட்களில் பழசாகிப்போன எண்ணெய்ப் பண்டங் களைத் தின்ன நேரும். அதன் எதிர்விளைவைப் பல நேரங்களிலும் சந்திக்கவேண்டியிருக்கும். மிருதங்கக்காரன் எப்பொழுதும் தன்னிடம் இந்துப்பு, சூரணம், குனைன் மாத்திரை எல்லாம் வைத்திருப்பான்.

சிறுவர்களுக்கு வெந்நீருடன் மஞ்சள்பொடி கலந்து கொடுப்பான். காலை—மாலை இரண்டு வேளையும் அரசம்பட்டை, நல்லமிளகு, இஞ்சி இவற்றை நெய்யில் வறுத்து தேனில் குழைத்துத் தருவான்.

பொட்டலத்திலிருந்து அவலும், மாம்பழமும் வெளியே எடுத்தவாறு மிருதங்கக்காரன் கூறினான்—"ஆங்! வெந்நீர்தான். உன்னுடைய கட்டி வளர்ந்துவிட்டது. வெந்நீர்குடி—"

"இது உனக்கு எப்படித் தெரிந்தது? பார்விஸ்கஞ்ஜ் டாக்டரும் அப்படித்தான் சொன்னாங்க. கட்டி வளர்ந்திருக்காம். மருந்து–"

வார்த்தையை முடிக்கவேண்டிய அவசியம் இல்லை. மோகனா போன்ற ஏழைப் பையன்களுக்கு வயற்றில் கட்டிவந்தால் அது இடுகாட்டில் கொண்டுவைக்கும்போதுதான் கரையும் என்று மிருதங்கக்காரனுக்குத் தெரியும். சிகிச்சை ஏன் செய்துகொள்ளவில்லை என்று கேட்டு என்ன பயன்?

"தினமும் மஞ்சள் பொடியுடன் வெந்நீர் குடித்துவந்தால் கட்டி கரையும்" என்று அம்மாவும் சொல்கிறாள். மிருதங்கக்காரன் புன்னகையுடன் கூறினான்—"உன் அம்மா ரொம்ப அறிவாளி போலிருக்கே!"

வாழை இலைச்சருகில் அவலையும், மாம்பழத்தையும் எடுத்து வைத்து மிருதங்கக்காரன் அன்புடன் அழைத்தான், "வா, ஒரு பிடியாவது சாப்பிடு."

"இல்லை, வேண்டாம். எனக்குப் பசிக்கவில்லை."

ஆனால், அதோ மோகனாவின் கண்களிலிருந்து எட்டிப் பார்ப்பது யார், அவலையும், மாம்பழத்தையும் அப்படியே விழுங்கி விடுவதுபோல— பசித்தவனா, நோயாளியா, இல்லை கடவுளா?

"வா மகனே வா, சாப்பிடு— ரஸப்ரியா கேட்கவேண்டாமா?"

தாயைத் தவிர வேறுயாரும் இத்தனை அன்புடன் சாப்பிட அழைத்ததில்லை. ஆனால் மற்ற மேய்ச்சல் சிறுவர்கள் கண்டால் அம்மாவிடம் சொல்லிவிடுவார்களே— பிச்சை சாப்பாடு!

"இல்லை வேண்டாம். எனக்குப் பசியே இல்லை."

மிருதங்கக்காரன் அதிர்ச்சி அடைகிறான். அவனுடைய கண்கள் மீண்டும் நிறைந்து குளமாகின்றன.

மிருதங்கக்காரன் மோகனா போன்ற எத்தனையோ அழகிய சிறு பையன்களைப் பராமரித்திருக்கிறான். தன்னுடைய சொந்த மகனுக்குக்கூட இத்தனை அன்பை அவன் வாரி வழங்கியிருக்க மாட்டான் ஹூம்— தன் பிள்ளையானால் என்ன, பிறர் மகனானால் என்ன? இப்போது எல்லாரும் தன் மக்கள், எல்லாரும் பிறர் மக்கள்—

"மோகனா!"

"யாராவது பார்த்துவிட்டால்?"

"பார்த்தால் என்ன?"

"அம்மாகிட்ட சொல்லிடுவாங்க, நீ பிச்சை எடுக்கிறவன் இல்லே"

"யாரு பிச்சை வாங்கறது?" மிருதங்கக்காரனின் தன்மானத்துக்கு இந்த அறியாப்பிள்ளை ஊறு விளைவித்துவிட்டான். அவனுடைய மனமென்னும் புற்றில் முடங்கி உறங்கிக் கொண்டிருந்த பாம்பு படமெடுத்துச் சீறியது. "ஏ..ஸ்ஸாலா! ஒண்ணு வெச்சேன்னா எப்படியிருக்கும் தெரியுமா_"

"ஏய், ஏன் திட்டறே என்னை?" மோகனா பயந்துகொண்டே எதிர்த்துப் பேசினான்.

பிறகு எழுந்துவிட்டான், பைத்தியங்களை நம்பலாமா?

வானத்தில் வட்டமிட்டுக்கொண்டிருந்த கழுகு மீண்டும் கத்தியது—"டி ஹீங்–டி டிங்க்!"

"மோகனா!" மிருதங்கக்காரனின் குரல் கனத்தது.

மோகனா சற்றுத் தொலைவில் போய் நின்றுகொண்டான்.

"நான் பிச்சை வாங்குறேன்னு யார் சொன்னது? மிருதங்கம் வாசிக்கிறேன், பதாவளி பாடுகிறேன், ஜனங்கள் மகிழ்ச்சியோடு தருவதை வாங்கி வயிறு வளர்க்கிறேன்_ உம், நீ சொல்வது சரிதான், இது பிச்சை உணவுதான். பிச்சையின் பயன்தான். வேண்டாம் உனக்கு. சரி_ நீ வா, உட்காரு. ரஸப்ரியா கேட்க வேண்டாமா?"

மிருதங்கக்காரனின் முகம் சிறுகச் சிறுக விகாரமடைகிறது. வானத்தில் பறக்கும் கழுகு இப்போது ஒரு மரக்கிளையில் உட்கார்ந்து கொண்டது_ 'டி டிங் ஹிங் டின்டிக்!'

மோகனா பயந்துபோனான். ஓர் அடி, இரண்டடி, பிறகு எடுத்தான் ஓட்டம். ஓடியே விட்டான்.

வெகுதூரம் போனபிறகு அவன் கூவினான்—"கூனியக்காரி அம்பு எய்து உன் விரலை வளைத்துவிட்டாள், பின்னே எதுக்கு பொய் சொல்றே. ரஸப்ரியா பாடும்போது அப்படி ஆச்சுன்னு_?"

'அட! யார் இந்தப் பையன்? இந்த மோகனா யாரு? கூனியக்காரி அம்பு எய்தாள் என்று ரம்பதியா அல்லவா சொன்னது!'

"மோகனா!"

மோகனா ஓடிக்கொண்டே உரத்துக் கூவினான். 'பாவக்காய்_!'

'அப்படியா சேதி?' மிருதங்கக்காரனை 'பாவக்காய்' என்றால் கோபம் வரும் என்பதைக்கூட இவன் தெரிந்துவைத்திருக்கிறானே_ யார் இந்த மோகனா?'

மிருதங்கக்காரன் அச்சமடைந்தான். அவனுடைய மனதில் இனம்புரியாத பயம் குடிகொண்டது. உடல் வெடவெடவென்று நடுங்க ஆரம்பித்தது. கமல்பூர் பாபு வீட்டுக்குப்போக வேண்டும் என்ற உற்சாகம்கூட குன்றிவிட்டது. காலையில் அந்த மிஸ்ரா சிறுவன் சரியாகத்தான் சொன்னான்.

அவனுடைய கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்தது.

போகிற போக்கில் இந்த மோகனா தன்கொடுக்கினால் கொட்டி விட்டானே! எல்லாச் சீடர்களும் கடைசியில் இப்படித்தான் அவனிடம் நடந்துகொண்டிருக்கிறார்கள். சிறகு முளைத்த பறவை போல, நடனம் கற்றபிறகு எல்லாப் பையன்களும் அப்படித்தான் செய்தார்கள். ஒவ்வொரு கதையும் அவனுக்கு நினைவுக்கு வந்தது.

ஸோன்மா போகும்போது அவனைத் திட்டினான்—'வாத்தியார் தனமா காட்டுறே, சோட்டா!'

ரம்பதியா ஆகாயத்தை நோக்கி கையை உயர்த்தியவாறு கூறினாள், "ஓசூரிய தேவனே! நீயே சாட்சி, மிருதங்கக்காரன் பசப்பு வார்த்தைபேசி என்னைக் கெடுத்தான். என் மனசில் ஒரு போதும் கள்ளம் இருந்ததில்லை. சூரிய பகவானே இந்த தஸ்துவாரி (பத்து வீட்டில் இரந்துண்பவன்) நாயின் ஒவ்வொரு அங்கமும் சிதைந்து-"

மிருதங்கக்காரன் தன்னுடைய வளைந்த விரலை அசைத்தவாறு நீண்ட பெருமூச்சுவிட்டான்- ரம்பதியா! ஜோதன் குருஜியின் மகள் ரம்பதியா! ஜோதனின் மண்டலியில் அவன் முதன்முதலில் சேரும்போது— ரம்பதியா பனிரெண்டாவது வயதில் காலடி எடுத்து வைத்திருந்தாள். இளம் விதவையான ரம்பதியா வித்யாபதி பதாவளி பாட்டுக்களின் பொருளை அறியத் தொடங்கியிருந்தாள். வீட்டுவேலை செய்து கொண்டே அவளுடைய உதடுகள் முணுமுணுக்கும், 'நல அனுராகினி- ராதா கிசுநஹி மானய பாதா!' (கண்ணன்பால் காதல் கொண்ட ராதை எந்தத் தடையையும் ஒப்பவில்லை). மிருதங்கக்காரன் 'மூல் கைனி' ஆகத்தான் விரும்பினான். குருஜி அவன் கையில் மிருதங் கத்தைக் கொடுத்துவிட்டார். எட்டு வருஷங்கள் சிட்சை கொடுத்தபிறகு குருஜி சொந்த ஜாதிக்காரனான பஞ்ச்கௌடியாவுக்கு ரம்பதியாவைக் கட்டிக் கொடுக்கும் பேச்செடுத்தார். மிருதங்கக்காரனுக்கு தாளமும் மறந்தது, கால மாத்திரையும் மறந்தது. ஜோதன் குருவிடம் இது வரையிலும் அவன் சாதியை மறைத்திருந்தான். ரம்பதியாவைக் காதலித்ததும் பொய்யாகத்தான். அவன் இரவோடிரவாக குருஜியின் மண்டலியை விட்டு ஓடிவிட்டான். தன்னுடைய கிராமத்துக்குத் திரும்பி சொந்தமாக மண்டலி ஆரம்பித்தான். ஆனால் என்ன செய்தும் அவன் 'மூலகைன்' ஆக முடியவில்லை. எப்போதும் மிருதங்கக் காரனாகவே இருந்தான். ஜோதன் குருஜி இறந்தபிறகு ஒருமுறை 'குலாப் பாக்' திருவிழாவில் ரம்பதியாவைச் சந்திக்க நேர்ந்தது. ரம்பதியா அவனைக் காணத்தான் வந்திருந்தாள். பஞ்ச்கௌடி ஒரேயடியாக மறுத்துவிட்டான். "நீயும் உன் பொய்பித்தலாட்டமும்! யாரிடம் இந்த பாசாங்கு? போகலா மில்லே அந்த கமல்புர் நந்தபாபுவிடம்! என்னை

முட்டாளாக்க வந்துவிட்டாள். நந்தபாபுவின் குதிரை ராத்திரி பனிரெண்டு மணிக்கு...'' இதைக்கேட்டு ரம்பதியா கிரீச்சிட்டாள்—"வாயை மூடு!"

அன்று இரவே ரஸப்ரியா பாடும்போது அவனுடைய விரல் வளைந்துவிட்டது. மிருதங்கத்தில் ஜமனிகா கொடுத்து பிரவேச நடனத்துக்கான தாளம் கமகம் ஆரம்பித்தான். நடுவா ஒன்றரை மாத்திரையில் தாளம் தப்பி பிரவேசித்ததைக் கண்டதும் அவனுடைய புருவம் உயர்ந்தது. 'பிரவேசம்' முடிந்ததும் அவன் நடுவாவைக் கடிந்து கொண்டான், 'ஏ- ஸ்ஸாலா! அறை வெச்சேன்னா கன்னம் ரெண்டும் செவந்துபோகும் தெரிஞ்சுதா?' ரஸப்ரியாவின் முதற்கண்ணி அங்கேயே முறிந்தது. மிருதங்கக்காரன் தாளத்தை சீராக்க மிகுந்த பிரயாசைப் பட்டான். மிருதங்கத்தின் உலர்ந்த தோல் உயிர்பெற்றது. வலது பக்கத்தில் மாவைப் பதமாக நிரப்பிய இடம் கிழிந்து போனது. தாளம் தப்பி அவனுடைய விரல் வளைந்துவிட்டது.

பொய்சொன்னதால் வளைந்தது விரல்! பஞ்ச்கௌடியின் மண்டலியும் உடைந்தது, பிறகு ஒருக்காலும் சேரவில்லை. மெதுவாக அந்தப் பிரதேசத்திலிருந்தே வித்யாபதி நடனத்துக்கு முற்றுப் புள்ளி விழுந்துவிட்டது. இப்போது வித்யாபதியைப் பற்றிப் பேசுவார்கூட இல்லை- பஞ்ச்கௌடியின் உடல் இதுவரையிலும் வெயிலையும், மழை யையும் கண்டதே இல்லை, குளிர்ந்த மண்டபங்களிலேயே வளர்ந்த சொகுசு- அவனது வேலை இல்லாத வாழ்க்கைக்கு மிருதங்கம்தான் துணை நின்றது, வாழ்க்கையின் ஒரே ஆதாரம்—மிருதங்கம்!

அப்போதிருந்து நீண்டகாலமாக அவன் மிருதங்கத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு பிச்சை எடுக்கிறான்—தா-தின், தா-தின்!

அவன் ஒரு மாம்பழத்தை எடுத்து உறிஞ்சத் தொடங்கினான்—ஆனால்- ஆனாலும்- இந்த மோக்னாவுக்கு சூனியக்காரி விஷயம் எப்படித் தெரியவந்தது?

விரல் வளைந்துபோன சேதிகேட்டு ரம்பதியா ஓடியே வந்தாள்; மணிக்கணக்காக விரலைப்பிடித்துக்கொண்டு கோவென்று கதறினாள். "ஓ சூரியதேவனே! இந்த அளவுக்குப் பகை யாருக்கு வந்தது? அவன் நாசமாகப்போக- ஆண்டவனே, சாமி, நான் சொன்ன வார்த்தையைத் திருப்பிவிடு. தெரியாமல் கோபத்தில் சொல்லிவிட்டேன். அந்த வார்த்தைகள் பலிக்க வேண்டாம், இல்லை பாஞ்சு, நான் ஒண்ணும் செய்யவில்லை. இது ஏதோ சூனியக்காரிதான் அம்பு எய்து விட்டாள்."

மிருதங்கக்காரன் கண்களைத் துடைத்துக்கொண்டே சூரியனைப்

பார்த்தான்- இந்த மிருதங்கத்தைக் கட்டிக்கொண்டு ரம்பதியா எத்தனை இரவுகளைக் கழித்திருப்பாள்! மிருதங்கத்தை அவன் மார்புடன் அணைத்துக் கொண்டான்.

மரக்கிளையில் உட்கார்ந்திருந்த கழுகு பறந்துபோகும் இணையைப் பார்த்து ஏதோ சொல்லியது—'டி-டி-ஹிங்க்!'

'ஏஸ்ஸாலா!' அவன் கழுகைத் திட்டினான். புகையிலைத் தூளில் சுண்ணாம்புப்பொடி சேர்த்துக் கசக்கி பல்லில் இடுக்கிக் கொண்டான். மிருதங்கத்தின் நடுப்பாகத்தில் விரல்கள் நடனம் செய்தன—"திரிநாகி, திரிநாகி, திரிநாகி, தினதா-!"

முழுதும் வாசிக்க முடியவில்லை. நடுவிலேயே தாளம் தப்பியது.

'கி-ஹே-ஏ-ஏ-ஹா-ஆ-ஆ-ஹ-ஹா!'

காட்டுக்கு அப்பால் யாரோ இனிய குரலில் வெகு சம்பிரமமாக ரஸப்ரியா பதாவளியைப் பாடுகிறார்கள்.

"ந-வ-வ்ருந்-தா-வன், ந-வ-ந-வ-தரு-க-ன்
ந-வ-ந-வ விகசித பூல்-"

பூரிப்பினால் மிருதங்கக்காரனின் உடலெங்கும் அலைகள் எழும்பின. அவனுடைய விரல்கள் தாமாகவே மிருதங்கத்தின்மீது நடனமிட்டன. இறங்கு வெயிலின் நிழலில் பசுக்கள் காளைகள் கூட்டமாக வந்து கூட ஆரம்பித்தன.

வயலில் வேலை செய்துகொண்டிருந்தவர்கள் சொன்னார்கள்—

"பைத்தியக்காரன், எங்கே கண்டதோ குந்திக்கிட்டு வாசிக்க ஆரம்பிச்சுடும்"

வயலில் வேலை செய்பவர்கள் மிருதங்கக்காரனைப் பற்றித்தான் பேசினார்கள்.

"ரொம்ப நாளைக்குப் பிறகு வந்திருக்கிறான் இல்லே?"

"எங்கேயோ செத்துத் தொலைஞ்சிருப்பான்னு நினைச்சோமே."

இனிமையாக எடுக்கப்பட்ட ரஸப்ரியா தாளமின்றி நின்றுவிட்டது. மிருதங்கக்காரனுக்குப் பைத்தியம் பிடித்தது போலாயிற்று. அவன் எழுந்து ஒரே ஓட்டமாக ஓடினான். இலந்தைப் புதருக்கப்பால் யாரது இப்படி ஸ்வரசுத்தமாக ரஸப்ரியா பாடுவது? இந்தக் காலத்திலும் ரஸப்ரியா ரசிகர்கள் இருக்கிறார்களா? புதருக்குப் பின்னால் ஒளிந்துகொண்டு மிருதங்கக்காரன் கவனித்தான், மோகனா தன்னை மறந்து பாடிக்கொண்டிருந்தான். பதாவளியின் அடுத்த பாடலைப்பாட ஒத்திகை நடத்திக் கொண்டிருந்தான்—முனகிய குரலில் பாடியவாறு. பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டான். மோகனாவின் தொண்டையில் ராதைதான் வந்து அமர்ந்திருக்கிறாள்! என்ன எடுப்பு!

"நதீ பஹ நயனக் நீர்-!
ஆஹோ-பலலி பஹஏ தாஹிதீர்!"

மோகனா லயித்துப் பாடிக்கொண்டிருந்தான். மிருதங்கத்தின்

தாளத்துக்கு ஏற்றமாதிரி ஆடிக்கொண்டே பாடினான். மிருதங்கக் காரனின் கண்கள் இமை கொட்டாமல் அவனையே பார்த்துக் கொண் டிருந்தன. அவனுடைய விரல்கள் பம்பரம்போல சுழல விழைந்தன. நாற்பது வயது அரைப்பைத்தியம் எத்தனையோ காலத்துக்குப் பிறகு பரவசமாக ஆடியது- இடையிடையே அவன் தன்னுடைய உடைந்த குரலில் பதாவளியின் கண்ணிகளைச் சேர்க்க முயலுவான்.

*ஃபோய்ங்—ஃபோய்ங் ஸோய்ங்—ஸோய்ங்?*

*திரிநாகி தினதா!*

*"துஹு-ரஸ-மய தனு-குனே நஹீ ஓர்*

*லாகல் துஹு-க் ந பாய ஜோ—ர்"*

மோகனாவின் உதடுகளில் பாதி கறுத்தும் பாதி சிவந்தும் இருந்த உதடுகளில் புன்னகை தவழ்ந்தது. அப்பதத்தைப் பூர்த்திசெய்துவிட்டுக் கூறினான், "ஸ்ஸ்! வளைஞ்ச விரலிலும் இந்த வேகமா!"

மோகனாவுக்கு மூச்சிரைக்க ஆரம்பித்தது. ஆ, அவனுடைய மார்பு எலும்புகள்!

"ஓ-", மிருதங்கக்காரன் 'தொப்'பென்று தரையில் உட்கார்ந்து விட்டான், "பிரமாதம், பிரமாதம்! யார்கிட்ட கத்துக்கிட்டே? எங்கே படிச்சே இந்தப் பதாவளி? யார் உனக்கு குரு?"

மோகனா சிரித்துக்கொண்டே பதில் சொன்னான், "எங்கே படிக்க? அம்மாதான் பாடுவா தினமும்- 'ப்ராதகி' எனக்கு நல்லாத் தெரியும், அது காலையிலே பாடவேண்டியது, இப்ப பாடலாகாது."

"ஆமாம் மகனே! தாளம் சரியில்லேன்னா ஒருபோதும் பாடாதே, கையில் இருக்கும் வித்தைபோய்விடும்- அப்புறம் இந்த வேளையில் இந்தப் பாட்டுதான் பாடலாம் என்பதிலும் கவனமா இருக்கணும். இதோ மாம்பழம், சாப்பிடு!"

மோகனா கூச்சமின்றி மாம்பழத்தைக் கையில் எடுத்து உறிஞ்ச ஆரம்பித்தான்.

"இன்னும் ஒன்னு சாப்பிடேன்!"

மோகனா மூன்று மாம்பழங்கள் சாப்பிட்டான். மிருதங்கக்காரன் மிகவும் விரும்பியதன் பேரில் இரண்டுபிடி அவலும் தின்றான்.

"நல்லது, இப்ப சொல்லு மோகனா! உன் அப்பா-அம்மா என்ன செய்யறாங்க?"

"அப்பா இல்லே, அம்மா மட்டும்தான் இருக்கா. ஐயாமார் வீடுங்களிலே தானியங்கள் குத்தறது—அரைக்கிறது இந்த மாதிரி வேலை."

"நீயும் வேலை பார்க்கறே இல்லே! யார் வீட்டிலே-"

"கமல்புர் நந்தபாபு வீட்டிலே."

"நந்தபாபு வீட்டிலா?"

மோகனா சொன்னான்; சொந்த வீடு சகர்ஸாவில். போன

மூன்றாவது வருடம் கோஸி ஆற்று வெள்ளத்தில் கிராமம் முழுவதும் மூழ்கிவிட்டது. அம்மா அவனைக் கூட்டிக்கொண்டு தன் மாமா வீட்டுக்கு வந்துவிட்டாள்—கமல்பூரில்.

"கமல்பூரில் உங்க அம்மாவின் மாமா இருக்காங்களா?"

மிருதங்கக்காரன் சிறிது நேரம்வரை சூரியனையே பார்த்துக் கொண்டிருந்தான்—நந்தபாபு- மோகனா- மோகனாவின் அம்மா!

"சூனியக்காரியைப் பத்தி உன் அம்மாதானே சொன்னது?"

"ஆமாம்- ஒரு தடவை காமதேவ ஜா வீட்டில் உபநயனம் நடந்தபோது கிரிதர்பட்டி மண்டலிக்காரர்களின் மிருதங்கத்தை நீ பலவந்தமாகப் பறித்துவிட்டாய். அவன் தாளம் தப்பி வாசித்ததால் அப்படித்தானே?"

இதைக்கேட்டதும், பாதி கறுத்தும் பாதி வெளுத்தும் இருந்த தாடி திடீரென்று முழுதும் நரைத்துவிட்டதுபோன்ற உணர்வு ஏற்பட்டது அவனுக்கு. தன்னைச் சுதாரித்துக்கொண்டு கேட்டான், "உன் அப்பா பேரு என்ன?"

"அஜோதாதாஸ்"

"அஜோதா தாஸா?"

கிழட்டுப்பயல் அஜோதாதாஸ். பேசுவதற்கு வாயில் வார்த்தை கிடையாது, கண்களில் ஒளியும் கிடையாது. மண்டலியில் மூட்டை சுமந்து திரிந்தான். சம்பளமில்லாத வேலையாள் அஜோதாதாஸ்!

"உன் அம்மா ரொம்ப புத்திசாலி-" ஒரு நீண்ட பெருமூச்சுடன் மிருதங்கக்காரன் ஜோல்னாப் பையிலிருந்து ஒரு பர்ஸை எடுத்தான். சிவப்பு மற்றும் மஞ்சள் நிற அறைகளைத் திறந்து ஒரு கடுதாசிப் பொட்டலத்தை வெளியே எடுத்தான்.

மோகனா தெரிந்துகொண்டான், "ரூவாய் நோட்டுதானே?"

"ஆமாம், நோட்டுதான்."

"எத்தனை ரூவா நோட்டு! அஞ்சு ரூவா- அய்-பத்து ரூவாயா! இதைத் தொடலாமா? எங்கிருந்துகொண்டு வந்தே?" மோகனா ஒரே மூச்சில் எல்லாம் கேட்டான், "எல்லாமே பத்து ரூவாயா?"

"ஆமாம், எல்லாம் சேர்த்து நாற்பது ரூபா." மிருதங்கக்காரன் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு கிசுகிசுக்கும் குரலில் கூறினான்—"மகனே மோகனா! பார்பிஸ்கஞ்ச் டாக்டர் ஐயாவைப் பார்த்து நல்ல மருந்தா எழுதித் தரச்சொல்லு. மருந்து வாங்கிச் சாப்பிடு- புளிப்பும், இனிப்பும் சாப்பிடக்கூடாது- குடிப்பதற்கு வெந்நீர்தான்."

"எனக்கு பணம் ஏன் குடுக்கறே?"

"பத்திரமா வெச்சுக்க, யாராவது பார்த்துடப்போறாங்க."

மோகனாவும் ஒருமுறை நாலாபுறமும் பார்த்தான். அவனுடைய உதடுகளின் கருமை அதிகமாயிற்று.

மிருதங்கக்காரன் சொன்னான், "பீடியும் பிடிக்கிறாயா?

ஜாக்கிரதை!"

மோகனா பணத்தை வாங்கிக் கொண்டான்.

"நல்லா பத்திரமா வெச்சுக்க. அம்மாகிட்டெ ஒண்ணும் சொல்லாதே- இதையும் கேட்டுக்க. இது பிச்சை எடுத்த காசு இல்லை. நானே சொந்தமா சம்பாதிச்சது-"

மிருதங்கக்காரன் புறப்பட ஆயத்தமானான்.

"அதோ அம்மா புல்வெட்டிக்கிட்டிருக்கா, வாயேன்." மோகனா அவனை வற்புறுத்தினான்.

மிருதங்கக்காரன் நின்றான். பிறகு யோசித்துவிட்டுக் கூறினான், "இல்லை மோகனா! உன்னைப்போல ஒரு குணமுள்ள பிள்ளையைப் பெற்ற உன் அம்மா 'மகாராணி'போல இருக்கிறா, நான் மகாயாசகன், தஸ்துவாரி, பக்கிரி! மருந்து வாங்கின பிறகு மிஞ்சும் பணத்துக்குப் பால்வாங்கிக் குடி."

மோகனாவின் கண்கள் நந்தபாபுவின் கண்களைப்போலவே விசாலமாக இருக்கின்றன.

"எலே- மோ-க-னா-ரே-! காளைகள் எல்லாம் எங்கே?"

"உங்க அம்மா கூப்பிடறா போல."

"ஆமா, உனக்கு எப்படித் தெரிஞ்சுது?"

"லே-மோ-க-னா-ரே-ஹே"

அவளுடைய குரலுடன் இசைந்து ஒரு பசுமாடும் தன் கன்றை அழைத்துக்குரல் கொடுத்தது. பசுக்களும், காளைகளும் வீடு திரும்பும் நேரமாகிவிட்டது. அம்மா காளைகளை ஓட்டி வருவாள் என்று மோகனாவுக்குத் தெரியும். சும்மா பொய்க்காகத்தான் தன்னைக் கூப்பிடுகிறாள். அவன் பேசாமல் இருந்தான்.

மிருதங்கக்காரன் கூறினான், "போ மகனே, அம்மா கூப்பிடுறா- போ, இப்போதிருந்து நான் பதாவளி பாடமாட்டேன், ரஸப்ரியா பாடமாட்டேன், நிர்குன் தான் பாடுவேன். பார், என் விரல் சரியாகிற மாதிரி தெரிகிறது. சுத்த ரஸப்ரியா இப்ப யாருக்குப்பாட முடியும்-?

"அரே சலூமன், சலூமன்—ஸஸுரார் ஜயிபே ஹோராமா
கி ஆஹோ ராமா
நைஹிரா மே அகியா லகாயப் ரே—கி-"
(செல் மனமே, செல் மனமே
கணவன் வீடு செல் மனமே,
ஹோ ராமா
பிறந்த வீட்டில் அடுப்பு ஊதி என்ன பயன் சொல்வாய்)

வயல்காட்டு ஒற்றையடிப்பாதை- காடு நடுவே கூடப்போகிறது. நிர்குன் பாடியவாறு மிருதங்கக்காரன் இலந்தைப் புதரில் ஒளிந்து கொண்டான்.

"அட, மோகனா இங்கல்ல தனியா நின்னுக்கிட்டிருக்கான்! மிருதங்கம் வாசிச்சது யாருலே?" புல்லுக்கட்டைத் தலையில் சுமந்தபடி மோகனாவின் தாய் நின்று கொண்டிருந்தாள்.

"பஞ்க்கௌடி மிருதங்கக்காரன்."

"ஆங். வந்திருக்கிறானா? நிசமாகவா?" புல்கட்டைத் தடாலெனக் கீழே போட்டவாறு கேட்டாள் மோகனாவின் தாய்.

"நான் அவனுடைய மிருதங்கத்துக்குத் தகுந்தமாதிரி ரஸப்ரியா பாடினேன். இந்தமாதிரி சுத்தமா இப்ப எல்லாம் யாரு ரஸப்ரியா பாடறாங்க? என்றான்- அவனுடைய விரல்கூட இப்ப சரியாகிவிடும்"

அம்மா நோயாளியான மோகனாவைத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டாள், மகிழ்ச்சிபொங்க.

"ஆனா, நீ எப்பப் பார்த்தாலும் அவனைப்பத்தி வண்டி வண்டியா குத்தம் சொல்லுவியே—நம்பிக்கைத்துரோகி, குருத்துரோகி, பொய்க்காரன்! என்பாயே."

"ஆமா, சொல்லுவேன். இன்னமும் சொல்லுவேன். இதுமாதிரி ஆளுங்ககூட சங்காத்தம் வெச்சுக்கக் கூடாது. இனிமே எங்கேயாவது அவனோட சுத்தினே, ஜாக்கிரதை! தஸ்துவாரிகள்கூட சினேகம் வெச்சா அப்புறம் நமக்குத்தான் நஷ்டம்- வா, எடு கட்டை!"

மோகனா கட்டை எடுத்தபடியே சொன்னான், "நீ என்ன சொன்னாலும் சரி, குணமுள்ளவர்க்குத்தான் ரஸப்ரியா-"

"வாயை மூடு! இனிமேல் ரஸப்ரியா பேரை எடுக்காதே."

இந்த அம்மா ரொம்ப விசித்திரம்தான்! கோபம் வந்தா பெண் புலிபோல, சந்தோஷம் வந்தாலோ, பசு கன்றை அழைப்பது போல சுத்திக்கொண்டு வருவா. நெஞ்சோடு சேர்த்து அணைச்சுப்பா. திடீர் கோபம், திடீர் சந்தோஷம்-

தொலைவிலிருந்து மிருதங்கத்தின் ஒலி கேட்டது—"தா-தின், தா-தின்!" குண்டும், குழியுமான வரப்பின்மீது நடந்துகொண்டிருந்த மோகனாவின் அம்மா நிலைதடுமாறி விழ இருந்தாள். புல்கட்டு கீழே விழுந்தது. முகத்தைத் தொங்கப்போட்டவாறு பின்னாலேயே நடந்து கொண்டிருந்த மோகனா கேட்டான்—"என்ன ஆச்சு அம்மா?"

"ஒண்ணும் இல்லே."

தா- தின், தா- தின்!

அவள் வரப்பிலேயே உட்கார்ந்துவிட்டாள். ஆனி மாதம் மாலை நேரத்துக்கு முன்னால் கிழக்கிருந்து வீசும் காற்று மெல்ல மெல்ல பலத்தது- வாசமிகுந்த மண்ணின் மணம் காற்றில் கலந்து பரவியது.

—தா- தின், தா- தின்!

"மிருதங்கக்காரன் இன்னும் ஏதாவது சொன்னானா மகனே," மோகனாவின் தாய்க்கு மேலே ஏதும் பேச முடியவில்லை.

"ஆமா சொன்னான், உன்னை மாதிரி குணமுள்ள பிள்ளையைப்

பெற்ற உன் அம்மா 'மகாராணி' நான் தஸ்துவாரி என்றான்."

"பொய், ஏமாற்றுக்காரன்!" மோகனாவின் தாய் கண்ணீரைத் துடைத்தவாறு கூறினாள், "இம்மாதிரி ஆளுங்க சங்காத்தமே கூடாது."

மோகனா பேசாமல் நின்றுகொண்டிருந்தாள்.

(1955)

# மூன்றாவது சபதம் அல்லது மடிந்த குல்ஃபாம்

வண்டிக்கார ஹீராமனின் முதுகில் கிளுகிளுப்பு; தினவு எடுப்பது போன்ற உணர்ச்சி.

கடந்த இருபது வருடங்களாக ஹீராமன் வண்டி ஓட்டுகிறான். ஜல்ஜல் என ஓடும் காளை வண்டியில் நேபாளத்தின் எல்லைக்கு அப்பால் மோரங்கிலிருந்து எத்தனையோ முறை நெல்லை ஏற்றி வந்திருக்கிறான். இரண்டாவது உலகப்போரின்போது கன்ட்ரோல் காலத்தில் கள்ளச் சந்தைச் சரக்குகளை வெகுசாமர்த்தியமாக இரு பக்கங்களுக்கும் கடத்தியிருக்கிறான். ஆனால் அப்போதெல்லாம் இந்தக் கிளுகிளுப்பு தோன்றியதில்லையே முதுகில்!

ஆம், கண்ட்ரோல் காலம்! ஹீராமனால் அந்த நாட்களை மறக்கத்தான் முடியுமா? ஒருதடவை சிமெண்டும், பேல்பேலாக துணிகளும் வண்டியிலேற்றி ஜோக்பனியிலிருந்து விராட்நகருக்குக் கடத்தினான். இப்படியே நாலுமுறை கடத்தியபிறகு ஹீராமனின் நெஞ்சு வயிரம் பாய்ந்ததுபோல உரம் பெற்றது. பார்பிஸ்கஞ்ச்சின் கள்ளச் சந்தை முதலாளிகள் அனைவரும் ஏகோபித்த குரலில் ஹீராமனுக்குச் சான்றிதழ் வழங்கினர்—"பலே வண்டிக்காரன் இவன்!" மார்க்கெட்டிலேயே பெரும்புள்ளியான சேட்ஜி தனக்கே உரிய வசவு மொழியில் ஹீராமனின் காளைகளைத் திட்டி ஷொட்டுக்கொடுப்பார்.

ஐந்தாவது முறை கடத்தலின்போது வண்டி பிடிபட்டது, எல்லைக்கு இப்பால் பள்ளத்தாக்கில்தான். சேட்டு முதலாளியின் கணக்குப்பிள்ளை துணிபேல்களுக்கு நடுவே, கம்பளியால் தன்னை மறைத்துக்கொண்டு ஒளிந்திருந்தார். இன்ஸ்பெக்டர் அய்யாவின் கையில் ஒண்ணரை அடி நீள டார்ச்சு லைட் இருக்குமே, அதன் ஒளி கண்களை எப்படித்தாக்கும் என்பது ஹீராமனுக்கு நன்றாகத் தெரியும். அந்த டார்ச்சு வெளிச்சம் பட்டால், ஒருமணி நேரத்துக்கு ஆசாமி குருடாகி விடுவான். ஒன்றுமே தெரியாது இருட்டைத் தவிர. பிறகு கண்விழி இடம்பெயர்ந்து மாறுகண்ணாகி விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை! வெளிச்சத்துடன் வந்தது இடி முழங்கும் குரல்—"டேய்! நிறுத்துங்கடா வண்டியை! படவா, சுட்டுடுவேன் தெரியுமா?"

இருபது வண்டிகளும் ஒரே 'பிரேக்'கில் இயங்கியவைபோல சடக்கென நின்றன. ஹீராமன் முதலிலேயே சொன்னான், 'இருபதா அனுப்பாதீங்க சாமி; குழியிலே உளுந்திடும்,' கேட்டால்தானே! இன்ஸ்பெக்டர் அய்யா, அவனுடைய வண்டியில் பதுங்கியிருந்த கணக்குப்பிள்ளையை நோக்கி வெளிச்சம் பாய்ச்சினார். ஒரு ராட்சதச் சிரிப்பு சிரித்தார்—"ஹா! கணக்குப்பிள்ளே- பிள்ளே- ஏ! ஹீ ஹீ ஹீ-! டாய், வண்டிக்கார படவா, என்னடா முளிக்குறே! எடுடா கம்பளியை, இந்த மூட்டை மேலிருந்து!" இன்ஸ்பெக்டர் தன் குறுந்தடியால் கோணிப்பையின் விலாவில் குத்தியவாறு உரக்கக் கத்தினார்—"இந்த மூட்டையைத்தான் பார்க்கணும்- கள்ளப்பசங்க-!"

இன்ஸ்பெக்டர் அய்யாவுக்கும் இந்த கணக்குப்பிள்ளைக்கும் முன்னாலிருந்தே உறவு அவ்வளவு சரியில்லை. பழைய வன்மத்தை யெல்லாம் தீர்க்க முடிவுகட்டிவிட்டார் இன்ஸ்பெக்டர். பை நிறையப் பணத்தைப் பார்த்துக்கூட அவர் மனம் அசையவில்லை. வண்டிக்குள் ளிருந்தே நாலாயிரம் ரூபாய் நீட்டினார் கணக்குப்பிள்ளை. குறுந்தடி யால் அவருடைய விலாவில் குத்தினார் இன்ஸ்பெக்டர். ஐந்தாயிரம்! ஊஹூம், மீண்டும் குத்து விழுந்தது. "இறங்குடா முதல்லே-!"

கணக்குப்பிள்ளையை வண்டியிலிருந்து இறக்கியபிறகு அவர் கண்களில் வெளிச்சம் பாய்ச்சினார் இன்ஸ்பெக்டர். பிறகு அவரை இரண்டு ஜவான்களுடன் சாலையிலிருந்து இருபது, இருபத்தைந்து வடம் தூரத்தில் புதர்களுக்கருகே இட்டுச் சென்றார். வண்டிகளுக் கருகே துப்பாக்கிகளுடன் ஐந்து போலீஸார் காவல் நின்றனர்! இந்தத் தடவை தப்பிக்க முடியாது என்று ஹீராமனுக்குத் திட்டவட்டமாகப் புலப்பட்டது- சிறைக்கு அனுப்பினால்? ஹீராமனுக்குச் சிறைக்குச் செல்லப் பயமே இல்லை. ஆனால் அவனுடைய காளைகள்? தீவனமும், தண்ணியும் இல்லாமல் பாவம், மாடுகள் அரசாங்கப் பட்டியில் அடைந்துகிடக்கும். நாள்கணக்காக! பிறகு ஏலம் போடு வார்கள். அப்புறம் அண்ணன்—அண்ணி முகத்தில் எப்படி விழிப்பது? ஏலம் போடும் காட்சி அவன் மனக்கண்முன் விரிந்தது—ஒருதரம்- இரண்டுதரம்-மூணுதரம்! இன்ஸ்பெக்டரும், கணக்குப்பிள்ளையும் இன்னும் உடன்பாட்டுக்கு வரவில்லை என்று தெரிகிறது.

ஹீராமனின் வண்டிக்கருகே நின்ற சிப்பாய் மெல்லிய குரலில் மற்றொரு சிப்பாயிடம் கேட்டான்—"என்னண்ணே! நெலமையைப் பார்த்தா- ஒண்ணும் சரிவராப்பல தெரியலியே!" பிறகு புகையிலை கொடுப்பதற்கு என்று பாவலா பண்ணிக்கொண்டு அந்த சிப்பாயிடம் சென்றான்.

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு வண்டிகள். அவனது வண்டிகள் சிப்பாய்களின் கண்களிலிருந்து மறைத்து நின்றன. ஹீராமனுடைய மனம் வேகமாகக் கணக்குப்போட்டது. மெதுவாக அவன் மாடுகளை

வண்டியிலிருந்து கழற்றினான். வண்டியில் அமர்ந்தவாறே இரண்டு மாடுகளின் கயிற்றையும் ஒன்றாகச் சேர்த்து முடி போட்டான். இந்த நிலையில் என்ன செய்ய வேண்டும் என்று அந்தக் கெட்டிக்கார மாடுகளும் புரிந்துகொண்டன. ஹீராமன் இறங்கினான். மூங்கில் கொம்புகளைத் தாங்குதலாகக் கொடுத்து வண்டியை நிறுத்திவிட்டு மாடுகளை வண்டியிலிருந்து அகற்றினான். அவற்றின் காதுகளுக்கருகே கிசுகிசு மூட்டிவிட்டு மெதுவாகக் கூறினான்—"தம்பிங்களா, நடங்க, உயிர் தப்பினாப்போதும் சாமி. இந்த மாதிரி சக்கடா வண்டி இன்னும் நிறையக் கிடைக்கும்- ஒண்ணு, இரண்டு, மூணு! எட்டுமேலே எட்டு வச்சு கம்பியை நீட்டு-!"

வண்டிகளின் மறைவில் சாலையோரமாக நெடுந்தூரம் வரை புதர். மூச்சை அடக்கிக்கொண்டு மூன்று ஜீவன்களும் புதர்களைக் கடந்தன. பயமின்றி, ஓசையின்றி! பிறகு ஒண்ணு, ரெண்டு, மூணு, குதித்துக் குதித்து ஓட்டம். வழியை மோப்பம் பிடித்தவாறு, ஆறு வாய்க்கால்களை எல்லாம் தாண்டி மாடுகள் ஓடின, வாலைத் தூக்கியவாறு! பின்னாலேயே ஹீராமனும் ஓடினான். இரவு முழுதும் ஓடின மூன்று ஜீவன்களும்!-

வீடு வந்து சேர்ந்து இரண்டுநாள் வரையிலும் பேச்சு மூச்சில்லாமல் விழுந்துகிடந்தான் ஹீராமன். சுயநினைவு வந்ததும் தன் காதைப் பிடித்துக்கொண்டு தோப்புக்கரணம் போட்டவாறு சபதம் எடுத்தான் அவன்—"இனிமேல் இந்த மாதிரி சரக்கெல்லாம் வண்டியிலே ஏத்தமாட்டேன். கள்ளச் சந்தைச் சரக்கா? போதுமடா சாமி போதும்!" கணக்குப்பிள்ளை என்ன ஆனாரோ தெரியவில்லை. வண்டி என்ன ஆச்சுதோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். சாதாரண வண்டியா அது? இல்லை. அப்படியே அசல் உருக்கிலே அல்லவா அச்சாணி போட்டிருந்தான். இரண்டு சக்கரங்களிலே, ஒண்ணு அப்படியே புத்தம் புதுசு. வண்டியிலே வண்ணவண்ணமான கயிற்றினால் குஞ்சம் கட்டித் தொங்கவிட்டிருந்தான்.

இரண்டு சபதங்கள் எடுத்தான் ஹீராமன். ஒன்று—கள்ளச்சந்தைச் சரக்கை வண்டியிலே ஏற்றமாட்டேன். இரண்டாவது—மூங்கில்பாரம் ஏற்றமாட்டேன். வாடகைக்கு வண்டி பேசுபவர்களிடம் அவன் முதலிலேயே கேட்டுத் தெரிந்துகொள்வான்—"கள்ளச்சரக்கு எதுவும் இல்லையே? அட, மூங்கிலா? வாணாம்யா வம்பு! அம்பது ரூவா கூலி தந்தாலும் சரி, இந்த ஹீராமன் வண்டி கிடைக்காது மூங்கில் பாரத்துக்கு. பார்த்துக்கப்பா வேற வண்டி!"

மூங்கில் ஏற்றின வண்டி! வண்டிக்கு முன்னாலே நாலுமுழ நீளத்துக்கு மூங்கில்முனை துருத்திக்கொண்டு நிற்கும். பின்னாலே

நாலுமுழ தூரத்துக்கு அடிப்பாகம் நீட்டிக் கொண்டிருக்கும். வண்டி லகானுக்கு நிற்காது, திருப்ப கொள்ள முடியாது. மூங்கில் ஏற்றின வண்டி கைக்கு நிற்காது. கரஹியா ஊரிலே நிதானமும் கிடைக்காது. எப்பவும் கசகச என்று கூட்டம். இப்படித்தான் ஒருதடவை மூங்கில் முனையைப் பிடித்துக்கொண்டு நடந்துகொண்டிருந்தான் வாடகைக் காரரின் உதவாக்கரைச் சிற்றாள். பெண்கள் பள்ளிக்கூடம் வந்தது. அந்த இளிச்சவாயன் பார்க்க ஆரம்பித்தான். திருப்பத்திலே ஒரு குதிரை வண்டி வந்தது வேகமாக. இரண்டு வண்டிகளும் மோதிக் கொண்டன. ஹீராமன் கடிவாளத்தைப் பிடிப்பதற்குள் குதிரை வண்டியின் மேற்கூரை மூங்கில் முனையில் மாட்டிக் கொண்டது, குதிரை வண்டிக்காரன் சவுக்கை வீசிக்கொண்டே திட்டினான்!

மூங்கில் பாரம் ஏற்றுவது மட்டுமல்ல, ஹீராமன் கரஹியா நகரத்துக்கு வண்டி ஓட்டுவதையே நிறுத்திக்கொண்டான். பிறகு பார்பிஸ் கஞ்சிலிருந்து மோரங்குக்கு வாடகை வண்டி அடிக்க லானான். பல வருஷங்கள் ஹீராமன் தன் மாடுகளை பாதிவாடகைக்கு ஓட்டினான். அவனிடம்தான் வண்டி இல்லையே! பாதி வாடகை வண்டிச் சொந்தக்காரருக்குப் போய்விடும், பாதிதான் மாட்டுச் சொந்தக்காரனுக்கு- அப்பப்பா! பாதியிலே என்னத்தை உருப்பட? வண்டி ஓட்டினது இனாமாக. பாதி வாடகை மாடுகளுக்குத் தீனி போடவே போதாது. எப்படியோ போனவருஷம் அவன் தனக்கென்று சொந்த வண்டியை வாங்கிக் கொண்டான்.

மகமாயி முத்துமாரி காப்பாற்றட்டும் அந்த சர்க்கஸ் கம்பெனி புலியை. போன வருஷம் திருவிழாச் சமயத்தில் புலிவண்டியிலே பூட்டின இரண்டு குதிரைகள் நடுவழியிலே இறந்துபோயின. சம்பா நகரிலிருந்து பார்பிஸ்கஞ்சுக்கு புலி வண்டியை ஓட்டிவர வேண்டும். சர்க்கஸ் கம்பெனி மானேஜர் வண்டிப்பேட்டைக்கு வந்து கூவினார்— "நூறு ரூபா கூலி தாரேன்!" ஒன்றிரண்டு காளை வண்டிக்காரர்கள் நூறு ரூபாய் என்று கேட்டதும் தயாராகிவிட்டார்கள். ஆனால் அவர் களுடைய மாடுகள் புலி வண்டியைக் கண்டதும் தொலைவிலிருந்தே 'அம்பே!' என்று கதறின. பிறகு கயிற்றைத் துண்டித்துக்கொண்டு ஓடி விட்டன. ஹீராமன் தன்னுடைய மாடுகளின் முதுகைத் தடவிக் கொடுத்தவாறு அவற்றிடம் சொன்னான்—"தம்பிங்களா, கேளுங்க, இந்தமாதிரி வாய்ப்பு அடிக்கடி வராது. சொந்தவண்டி தயாரிக் கணும்னா இதுதான் நல்ல தருணம். இல்லேன்னா, பாதி வாடகை யிலே வாழ்க்கை ஓடிட்டிருக்கும். அட, கூண்டில அடைச்சுக்கிடக்கிற புலியைப் பார்த்து எதுக்கு பயம்? மோரங்க் பள்ளத்தாக்கிலே கர்ச்சிக்கிற புலியெல்லாம் பார்த்திருக்கீங்களே. நான்தான் இருக்கேனே முதுகு மேலே, பிறகென்ன?"

மற்ற வண்டிக்காரர்கள் கரகோஷம் செய்து ஹீராமனின்

துணிவை மெச்சினார்கள். ஹீராமனின் காளைகள் அனைவரின் நம்பிக்கையையும் காப்பாற்றின. வெற்றி நடைபோட்டு முன்னேறின புலிவண்டியில் பூட்டப்படுவதற்காக. வலது பக்கத்துக் காளைமட்டும் பூட்டினபிறகு நிறைய சிறுநீர் கழித்தது. நாற்றம் சகிக்கவில்லை. மூக்கிலே சுற்றிய துணியை இரண்டுநாள் வரையிலும் எடுக்கவே இல்லை ஹீராமன். பெரியகடை சேட்டு முதலாளி மாதிரி துண்டை மூக்கில் சுற்றியிருந்தான் அவன். இல்லையென்றால் புலிநாற்றத்தைத் தாங்க முடிந்திருக்குமா அவனால்?

புலி வண்டியை ஓட்டிச் சென்றபோதுகூட இந்தக் கிளுகிளுப்பு ஏற் பட்டதில்லை முதுகில். இன்றைக்கு அவனுடைய வண்டியில் செண் பகப்பூ வாசனை கமழுகிறது கமகமவென்று. முதுகில் தினவெடுக்கவே அவன் மேல்துண்டினால் முதுகைத் தட்டிக் கொண்டான்.

இரண்டு வருஷங்களாகவே சம்பாநகர் பகவதி அம்மன் தன் மீது கருணை பாலிக்கிறாள் என்று ஹீராமன் அடிக்கடி உணர்ந்தான். அந்தக் கோயில் திருவிழா நடக்கையில்தான் போன வருடம் புலி வண்டியை ஓட்டும் வாய்ப்புக் கிடைத்தது. ரொக்கமாக நூறு ரூபாய் வாடகை தவிர, திண்டி-தீனி, பிஸ்கோத்து. இவ்வளவும் போதாதென்று வழிநெடுக குரங்கு-கரடி ஆட்டம், சர்க்கஸ் கோமாளிகளின் வேடிக்கை, எல்லாம் பார்க்கக் கிடைத்தது, அதுவும் இனாமாக!

பிறகு இந்த வருஷம்... இதோ இந்த பெண்ணின் சவாரி கிடைத்திருக்கிறது. இது பெண்ணா? செண்பகப் பூவா? இந்த சவாரி ஏறியது முதல் வண்டி என்னமாய் கமகமக்கிறது!

கப்பி ரோட்டின் நடுவே ஒரு சிறு குழி. வண்டியின் வலப் பக்கத்துச் சக்கரம் இசைகேடாக அதில் அகப்பட்டு வண்டி சற்றே ஊஞ்சல் ஆடுவதுபோல தூக்கிப் போட்டது. ஹீராமனின் வண்டிக் குள்ளேயிருந்து இலேசாக 'இஸ்-ஸ்' ஒலி எழும்பியது. ஹீராமன் வலப்பக்கத்து மாட்டை தோல் விளாரினால் அடித்துக்கொண்டே கடிந்து கொண்டான்—"களுதை! வண்டியிலே சரக்குமூட்டை ஏத்தி யிருக்குன்னு நெனப்பா என்ன?"

"பாவம், அதை அடிக்காதேப்பா!" கண்ணால் காணாத பெண் மணியின் இனிய குரலோசை ஹீராமனை வியப்பில் ஆழ்த்தியது. பச்சைப்பிள்ளை பேசுவதுபோல கிள்ளைமொழி. இல்லை, சன்னமான கண்ணாடிக் குமிழ்கள் உராய்ந்துகொள்ளும் ஒலியோ இது!

மதுராமோகன் நௌடங்கி நாடகக் கம்பெனியில் லைலா வேஷம் போடும் ஹீராபாயியின் பெயர் யாருக்குத்தான் தெரியாது! ஆனால் ஹீராமன் கதையே வேறு! அவன் தொடர்ந்து ஏழு ஆண்டுகள் திருவிழாச் சந்தைகளுக்கே பாரவண்டி ஓட்டியிருக்கிறான்.

நௌடங்கி நாடகமோ, பயாஸ்கோப்பு சினிமாவோ எதுவுமே பார்த்ததில்லை. லைலா, ஹீராபாய் இந்த மாதிரி பெயர்களையும் கேள்விப்பட்டதில்லை அவன். பிறகல்லவா பார்ப்பதைப் பற்றிப்பேச வேண்டும்! திருவிழாச்சந்தை முடிவதற்கு இன்னும் பதினைந்து தினங்கள் இருக்கையில், இரவு நேரத்தில் கறுப்புப் படுதாவுக்குப் பின்னால் மறைந்திருந்த அந்தப் பெண்பிள்ளைச் சவாரியைக் கண்டு அவனுக்குள் ஏதோ சந்தேகம் தட்டியது. பெட்டி தூக்கிவந்த வேலையாள் வாடகை பற்றிப் பேரம் பேசத் தொடங்கியதும் படுதாக் காரி அவனைத் தடுத்தாள். வண்டியைப் பூட்டியவாறு ஹீராமன் அந்த ஆளிடம் கேட்டான்—“ஏன் தம்பி, கள்ளச்சரக்கு எதுவும் இல்லையே?” ஹீராமனுக்கு மீண்டும் வியப்பு. வேலையாள் பதில் பேசவில்லை. வண்டியை ஓட்டும்படி சைகை செய்தான். கறுப்புப் படுதாவைக் கண்டு ஹீராமனுக்கு திருவிழாச் சந்தையில் புகையிலை விற்கும் கிழவியின் கறுப்புச் சேலைதான் நினைவிற்கு வந்தது.

‘இப்படியானால், எப்படி வண்டியடிப்பது? ஒண்ணு, முதுகிலே தினவு எடுக்குது. இரண்டாவது, அடிக்கடி செண்பகப்பூ வாசனை மூக்கைத் துளைக்குது. மாடுகளை மிரட்டினா ‘இஸ்-உஸ்’ங்குது இந்தச் சவாரி! அவனுடைய சவாரி! தனியா ஒரு பொம்புளை. நிச்சயமா இவள் புகையிலை விக்கற கிழவி இல்லை.’ குரலைக்கேட்ட பிறகு அவன் அடிக்கடி கூண்டைத் திரும்பித் திரும்பிப் பார்க்கிறான்; மேல் துண்டினால் முதுகைத் தட்டிவிட்டுக் கொள்கிறான். இந்தத் தடவை அவனுடைய பாக்கியத்திலே எந்தச் சீட்டு விழப்போகிறதோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! வண்டி கிழக்குப் பக்கம் திரும்பிய போது நிலாக்கீற்றின் வெளிச்சம் வண்டியில் புகுந்தது. சவாரியின் மூக்கில் ஒரு மின்மினிப்பூச்சி ஒளிவீசியது. ஹீராமனுக்கு எல்லாமே அற்புதமாக, மாய மந்திரமாகத் தோன்றுகிறது. எதிரில் சம்பாநகர் முதல் சிந்தியா கிராமம் வரை நீண்டு பரந்த வெட்டவெளி! வண்டியில் இட்சிணி மோகினி எதுவும் இல்லையே?

ஹீராமனின் சவாரி தூக்கத்திலேயே திரும்பிப் படுத்தது. நில வொளி அவளுடைய வதனத்திலே படர்ந்தது. ஹீராமன் வியப்பினால் கூச்சலிட இருந்தான்—“டேங்கப்பா! தேவகன்னிகை இதுதாண்டா!”

தேவகன்னியின் கண்கள் திடீரென விழித்துக்கொண்டன. ஹீராமன் சாலையை நோக்கிப் பார்வையைச் செலுத்தினான். காளை களை டிடிடிடிட்ட்ரியோ. என விரட்டினான். நாக்கை மேலண் ணத்தில் ஒட்டி அவன் டிடிடிரியோ என்று ஒலி எழுப்பும் விதமே அலாதியானது. இந்த மாதிரி ஓசை எழுப்பி எழுப்பி அவனுடைய நாக்கு மரக்கட்டைபோல விறைத்துவிட்டதுபோலும்!

“அண்ணே, உன் பெயர் என்ன?”

‘அப்படியே கண்ணாடிக் குமிழ்கள்.’ ஹீராமனின் ஒவ்வொரு

மயிர்க்காலும் சிலிர்த்துக்கொண்டது. வாயிலிருந்து பேச்சு வரவில்லை. அவனுடைய மாடுகள்கூட செவியைக் கூர்மையாக்கிக் கொண்டு அந்தக் கிள்ளைமொழியைக் கவனிக்கின்றன.

“என் பேரா- எம் பேரு ஹீராமன்!”

அவனுடைய சவாரி புன்னகை பூக்கிறது- புன்னகையிலும் அப்படியொரு வாசனை; நறுமணம்.

“அப்படின்னா தோழான்னு கூப்பிடுவேன். அண்ணேன்னு சொல்லமாட்டேன். என் பெயரும் ஹீராதான்.”

“இஸ்-ஸ்- இந்த ஹீராமனுக்கு வெளங்கவே இல்லை, ஆம்புளை பேரும், பொம்புளைபேரும் எப்படி ஒண்ணா இருக்கும்?”

“ஆமாம் தோழா, என் பெயரும் ஹீராபாய்.”

“ஹீராமன் எங்கே, ஹீராபாய் எங்கே? நிறைய வேறுபாடு இருக்கே.”

ஹீராமன் தன்னுடைய மாடுகளைத் திட்டினான்—“காதைத் தீட்டிக்கிட்டு வம்பு கேட்டுக்கிட்டிருந்தா எப்படி தாண்டப் போறீங்க முப்பது காதவழியை? இந்த இடத்து பக்கத்து குள்ளனின் வயிற்றில் பொல்லாத்தனம்தான் ரொம்பியிருக்குது”—ஹீராமன் இடப்பக்க மாட்டை இலேசாக விளாரினால் அடித்தான்.

“அடிக்காதேப்பா, மெல்லப் போகட்டுமே! என்ன அவசரம்?”

ஹீராமனுக்கு ஒரே பிரச்சினை, அடுத்த பேச்சை எப்படி ஆரம்பிப்பது? எந்த மாதிரி விளிச்சொல்லைப் பயன்படுத்துவது? அவனுடைய கிராமத்து மொழியில் பெரியவர்களை ‘அஹாங்’ அதாவது ‘தாங்கள்’ என்று சொல்லவேண்டும். கச்ராஹீ மொழியில் நாலைந்து வார்த்தைகளுக்குமேல் அவனுக்குப் பேசவராது. கிராமத்து மொழியில்தான் உள்ளத்தைத் திறந்து பேசமுடியும்.

ஐப்பசி—கார்த்திகை மாதங்களில் காலை நேரத்தில் பரவும் மூடுபனியைக் கண்டால் ஹீராமனுக்கு எரிச்சல் வரும். எத்தனையோ தடவை வழிதவறிப் போயிருக்கிறது அவனுக்கு. ஆனால் இன்று காலையிலோ திரளாகப் படர்ந்த மூடுபனியிலும்கூட அவனுடைய மனம் துள்ளிக் குதித்துக் கொண்டிருக்கிறது. ஆற்றங்கரையோரம் அடர்ந்த வயல்களில் பூத்திருக்கும் நெற்பயிரைத் தழுவிக்கொண்டு காற்றினிலே இனிமை யான வாசம் வருகிறது. பருவகாலத்துப் பண்டிகை நாட்களில் கிராமத்தில் இந்த மணம் கமழ்ந்து கொண்டிருக்கும். இன்று அவனுடைய வண்டியில் செண்பகப்பூ விரிந்திருக்கிறது! அந்தப் பூவிலே ஒரு தேவகன்னி அமர்ந்திருக்கிறாள்- ஜெய் பகவதி!

ஹீராமன் ஓரக்கண்ணால் பார்த்தான். அவனுடைய சவாரி- தோழி- ஹீராபாயின் விழிகள் துருதுருவென்று அவனையே பார்க் கின்றன. ஹீராமனின் இதயத் தந்தி மீட்டப்பட்டு, அதில் ராகம்

ஒலித்தது. உடலெல்லாம் ஒருவிதமான சிலிர்ப்பு. அவன் சொன்னான்—"மாடுங்களை அடிச்சா உங்களுக்குப் பிடிக்க மாட்டேங்குதா?"

ஹீராமன் நிஜமாகவே 'வைரமணி'தான் என்று ஹீராபாய் அறிந்து கொண்டாள்.

நாற்பது வயது. கட்டுமஸ்தான உடல்; கரிய நிறம்கொண்ட அந்தக் கிராமத்து இளைஞன் தன் வண்டியும், காளைகள் உண்டு, தான் உண்டு என்று கிடப்பவன். மற்றபடி உலக நடப்புகள் எதிலுமே நாட்டமில்லாதவன். அண்ணன் இருக்கிறான், வயல்வெளியைப் பார்த்துக்கொள்கிறான். பிள்ளைகுட்டிக்காரன். அண்ணனை விட அண்ணிக்குத்தான் அதிக மரியாதை தருவான் ஹீராமன். அண்ணிக்குச் சற்று பயந்தே நடப்பான் எனலாம். ஹீராமனுக்கும் கல்யாணம் நடந்தது. சிறுமியாக இருக்கும்போதே, தன் பிறந்த வீட்டில் அவள் இறந்துவிட்டாள். ஹீராமனுக்கு அந்த மணப்பெண்ணின் முகம்கூட சரியாக நினைவில் இல்லை. இரண்டாவது கல்யாணமா? இரண்டாவது கல்யாணம் நடவாமல் இருப்பதற்குப் பல காரணங்கள். அண்ணியின் பிடிவாதம்: ஹீராமனுக்கு கன்னிப்பெண்ணைத்தான் கட்டுவேன் என்கிறாள். கன்னி என்றால் என்ன தெரியுமா? ஆறு-ஏழு வயதுப்பெண். சாரதா சட்டத்தை கிராமத்திலே யார் மதிக்கிறார்கள்? ரொம்பக் கட்டாயம் வந்தால்தான் யாரும் கன்னிப் பெண்ணை ரெண்டாம் கல்யாணக்காரனுக்குக் கொடுப்பார்கள். அண்ணியோ, கன்னிப்பெண்தான் வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்குது. அண்ணி பேச்சுக்கு முன்னால் அண்ணன் பேச்சு எடுபடாது! இப்போது ஹீராமனும் கல்யாணம் வேண்டாம் என்று முடிவுசெய்துவிட்டான். 'எதுக்கு இந்த வம்பு, கல்யாணம் கட்டிக்கிட்டா, எவனாவது வண்டியடிக்க வருவானா?' எதைவிட்டாலும் விடுவான், வண்டியடிப்பதை மட்டும் அவனால் விடவே முடியாது.

ஹீராமனைப்போல் கள்ளம் கபடில்லாதவனை ஹீராபாய் இதுவரை பார்த்ததே இல்லை. "உங்க ஊரு எந்த மாவட்டத்திலே வருது?" என்று கேட்டாள். 'கான்புர்' என்ற பெயரை அவன் தன் அறியாமையால் நாக்புர் என்று திரித்துக் கூறியபோது ஹீராபாய் சிரித்த சிரிப்பில் மாடுகள்கூட மிரண்டுவிட்டன. ஹீராமன் சிரிக்கும் போது தலையைக் கவிழ்ந்துகொள்வான். சிரிப்பு அடங்கியதும் "அட, கான்புரா அது? அப்ப, நாக்புர் என்று நிசமாகவே ஓரிடம் இருக்குதா?" என்று அவன் கேட்டான். நாக்புர் என்ற ஊரும் உண்டு என்று ஹீரா பாய் சொன்னதும் அவன் சிரித்துச் சிரித்துக் கீழே விழத்தெரிந்தான்.

"இந்த உலகம் ஆச்சரியமா இருக்குது இல்லே! என்னவெல்லாம் பெயர்கள்! கான்புர், நாக்புர்!" ஹீராமன், ஹீராபாயின் காதணிகளை

ஊன்றிக் கவனித்தான். அதில் ஒளிவீசும் சிவப்புக்கல்லைப் பார்த்ததும் அவன் சிலிர்த்தான். இரத்தத்துளியோ இது!

ஹீராமன் இதுவரையிலும் ஹீராபாயின் பெயரைக் கேள்விப் பட்டதே கிடையாது. நாடகக் கம்பெனியில் நடிக்கும் பெண்களைப் பார்த்ததே இல்லை- சர்க்கஸ் கம்பெனி பெண்களைப் பார்த்திருக் கிறான். சர்க்கஸ் கம்பெனியின் எசமானி தன்னுடைய இரண்டு இளம் பெண்களுடன் புலிவண்டியருகே பலமுறைவந்து, புலிக்கு இரை போடுவதையும், அன்புடன் அதைக் கொஞ்சுவதையும் பார்த்திருக் கிறான். ஹீராமனின் மாடுகளுக்கு ஒருமுறை பெரிய பெண் ரொட்டி- பிஸ்கோத்து கொடுத்தாள்.

ஹீராமன் புத்திசாலி. மூடுபனி மறைந்ததும் வண்டியின் கூண்டைச் சுற்றி தன் போர்வையைத் திரைபோல சுற்றி மறைத்தான்— "இதோ, இன்னும் ரெண்டு மணிநேரம். அதுக்குமேல் எதிர்வெயில்லே பயணம் செய்யறது ரொம்பக் கஷ்டம். கார்த்திகை மாசத்து வெயிலை உங்களாலே தாங்கிக் கொள்ளவே முடியாது. கஜரீ ஆற்றங்கரையிலே மும்மரச்சோலை இருக்குது. அங்கே வண்டியைப் போட்டுடுவோம். மதியப் பொழுதைக் கழிச்சிட்டு- அதுக்கப்புறம்-"

எதிரே வரும் வண்டியைத் தொலைவிலேயே பார்த்து அவன் உஷாராகிவிட்டான். தடத்தையும், மாடுகளையும் கவனிப்பவன்போல மவுனமானான். எதிர்ப்பக்கத்து வண்டிக்காரன் அருகே வந்ததும் "என்ன அண்ணே, திருவிழா எல்லாம் முடியப்போவுதா?" என்று வினவினான்.

"திருவிழாவைப் பற்றி ஒண்ணுமே தெரியாது" என்றான் ஹீராமன். அவனுடைய வண்டியில் இருப்பது 'புதுப்பெண்.' (திருமணத் திற்குப் பிறகு பிறந்த வீடு அல்லது புகுந்தவீடு செல்லும் புதுமணப் பெண்) என்று தெரிவித்தான். எந்தக் கிராமம் என்று கேட்டதற்கு ஏதோ ஒரு கிராமத்தைக் கூறிவைத்தான்.

"சத்தாபுர் பசீரா எங்கே இருக்குது தோழா?" அவள் கேட்டாள்.

"எங்கேயோ இருக்குது. அது தெரிஞ்சு நீங்க என்ன செய்யப் போறீங்க?" ஹீராமன் தன்னுடைய புத்திசாலித்தனத்தை நினைத்துச் சிரித்தான். படுதா போட்டிருந்தாலும், முதுகிலே கிளுகிளுப்பு தொடர்ந்து இருந்தது.

ஹீராமன் திரையின் இடுக்கு வழியாகப் பார்க்கிறான். ஹீராபாய் நெருப்புப்பெட்டி அளவு அகலக் கண்ணாடியில் தன் பல்வழகைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்- மதன்புர் திருவிழாவில் ஒருமுறை மாடுகளுக்காக புள்ளிபோட்ட சின்னச்சோழிமாலை வாங்கினான் ஹீராமன். சின்னச் சின்ன சோழிகளின் வரிசை.

சோலையின் மூன்று மரங்களும் தொலைவிலிருந்தே தெரி கின்றன. ஹீராமன் திரையைச் சற்றே விலக்கியவாறு "பாருங்க,

இதுதான் மும்மரச்சோலை- மூணு மரங்கள்- அந்தப் பூவுக்கு என்ன பேரு சொல்லுவாங்க? உங்க சட்டையிலே போட்டிருக்குதே, அதே மாதிரி பூ. வாசனை அப்படியே தூக்கிட்டுப்போவும். ரெண்டு காததூரம் வரைக்கும் மணக்கும். அந்தப் பூவை, புகையிலையோடு சேர்த்து புகை பிடிப்பாங்க."

"அதோ, அந்த மாந்தோப்புக்குப் பின்னாலே கட்டிடங்கள் தெரியுதே, அது ஏதாவது கிராமமா இல்லே கோயிலா?"

ஹீராமன் பீடி பிடிப்பதற்கு முன் கேட்டான்—"பீடி பத்த வைக்க லாமா? உங்களுக்கு நெடி அடிக்குமோ? ஆமா, அதுதான் ராம்லகர் (ராம்நகர்) வாசல். நாம் வந்திட்டிருக்கோமே ஒரு திருவிழாவிலே இருந்து, அந்த ராஜாவின் மாப்பிள்ளை இங்கே வாழ்ந்தார்... அந்தக்காலம் மலையேறிப்போச்சு!"

'அந்தக் காலம் மலையேறிப்போச்சு!' என்ற சொல்லடுக்கும், அவன் பேசிய விதமும் அந்த இடத்தில் தேனைக் குழைத்தாற்போல இனிமையாக அமைந்தன. ஹீராபாய் கூண்டின் திரையை மடக்கி மேலே செருகினாள். ஹீராபாயின் பல்வரிசை அழகாகத் தெரிந்தது.

"எந்தக் காலம்?" தாடையில் கையை வைத்துக்கொண்டு ஆவல் பொங்கக் கேட்டாள்.

"அதான், ராம்லகர் ராஜாவின் காலம். உம்- ஓகோன்னு எப்படி இருந்தது, எப்படி ஆகிவிட்டது!"

ஹீராமன் கதைக்குச் சுவை கூட்டுவதில் மன்னன். ஹீராபாய் "அந்தக் காலத்தைக் கண்ணாலே பார்த்திருக்கியா?" என்று கேட்டாள்.

"பார்த்ததில்லை, ஆனா கேட்டிருக்கிறேன். இந்த ராசாங்கம் விழுந்த கதை இருக்கே, சோகமான கதை. அரண்மனையிலே தேவேந்திரனே மகனாக வந்து பிறந்தானாம். தேவேந்திரன்னா சாமானி யமா? நீங்களே சொல்லுங்க! இந்திர பதவியைவிட்டு மண்ணுலகிலே வந்துபிறந்த குழந்தைக்கு எவ்வளவு தேஜசு இருந்திருக்கும்! சூரிய காந்திப்பூப்போல வாடாத முகமாம் அந்த ராச குமாரனுக்கு. ஆனா, விதியின் விளையாட்டைப்பாருங்க, யாருக்குமே அந்தக் குழந்தையின் தெய்வத்தன்மை தெரியாமல் போச்சு. உபநயனம்- அதான் பூணூல் சடங்கு நடந்தபோது துரையும், துரைசானியும் சாரட்டு வண்டியிலே வந்தாங்களாம். துரைக்கும் தெரியலே, துரைசானிதான் கண்டுபிடிச்சுது, தேஜஸ் சொட்டுகிற சூரியகாந்தி முகத்தைக் கண்டதும் ராஜாவைப் பார்த்து துரைசானியம்மா சொல்லிச்சாம்—"ஏ மேன்! ராஜா சாகப்! கேளுங்க, இது மனுசக் குழந்தை இல்லே, தேவன்தான் இது.""

ஹீராமன் ஆங்கில துரைசானியின் வார்த்தையை உச்சரிக்கும் போது அவளே சொல்லுவதுபோல குரலை ஒடித்து மடக்கினான். ஹீராபாய் உள்ளம் திறந்து 'ஹோ ஹோ' என்று சிரித்தாள். சிரிக்கும்போது அவளுடைய உடல் முழுதும் ஒயிலாகக் குலுங்கியது.

ஹீராபாய் தலைமீது முந்தானையை சரிசெய்துகொண்டாள். அப்போது ஹீராமனுக்குத் தோன்றியது–

“அப்புறம்? அதுக்குப் பிறகு என்ன ஆச்சு தோழா?”

“இஸ்–ஸ! கதைகேக்கறதுன்னா ரொம்ப ஆசையா உங்களுக்கு–? ஆனா, வந்து– கறுப்பு மனுசன் ராசாவானாலும் கறுப்பு மனுசன்தானே. வெள்ளைக்காரதுரை மாதிரி புத்தி எங்கிருந்து வரும்? துரைசானி சொன்னதை யாரும் சட்டை பண்ணவே இல்லை. அப்படியே காத் தோட உட்டுட்டாங்க. பிறகு ராணியின் கனவிலே அடிக்கடி வந்தா ராம் அந்தத் தேவன். இத்தனைநாள் தெரியலே, இப்ப, தெரிஞ்சும்கூட என்ன மதிக்கலேன்னா எனக்கு இங்கே என்னவேலை அப்படீன் னாராம். அப்புறம் தேவனுடைய லீலை தொடங்கிச்சு. முதல்லே பட்டத்து யானை நின்ன நினைப்பிலே சரிஞ்சு விழுந்ததாம். பிறகு குதிரை. அப்புறம் மற்ற படாடோபங்கள்–”

“படாடோபம் அப்படீன்னா?”

ஹீராமனின் மனம் கணத்துக்குக் கணம் புதிது புதிதாக மாறிக் கொண்டிருந்தது. அவனுடைய உள்ளத்தில் ஏழுவண்ணக்குடை மெல்ல மெல்ல விரிந்துகொண்டிருந்ததாக அவனுக்குத் தோன்றுகிறது. அவனுடைய வண்டியில் தேவலோகத்து மாது சவாரி செய்வதாக ஒரு நினைப்பு, தேவதைன்னா தேவதைதானே!

“படாடோபம். அதான், பணம்–பதவிசு–யானை–குதிரை–அம்பாரி, எல்லாம்– எல்லாமே போச்சு. தேவேந்திரன் இந்திர லோகத்துக்குப் போயிட்டாராம்.”

அந்த இடிந்த கோபுரத்தின் உச்சிமறைந்துகொண்டிருந்தது. ஹீராபாய் அதைப்பார்த்து நீண்ட பெருமூச்சுவிட்டாள்.

“ஆனா தேவலோகத்துக்குப் போறதுக்கு முன்னாலே அவர் சொன்னாராம், ‘இந்த ஊரிலே எந்த வீட்டிலேயும் ஒரு மகனுக்கு மேலே இரண்டாவது மகன் பிறக்கமாட்டான். ஐசுவரியத்தை நான் கொண்டுபோறேன், கல்விச் செல்வத்தை விட்டுட்டுப்போறேன்.’ தேவன் போனப்ப, அவரோடுகூட மத்த தேவர்கள், தேவிகள் எல்லாம் நாட்டை விட்டுப் போயிட்டாங்களாம், சரசுவதி தேவி மட்டும் இங்கே தங்கிவிட்டாளாம். இந்தக் கோயில் சரசுவதி தேவியுடையது.”

மட்டக்குதிரைகள்மீது சணலை ஏற்றிக்கொண்டு வியாபாரிகள் வருவதைக்கண்ட ஹீராமன் கூண்டுத்திரையைப் போட்டான். மாடு களை ஒருமுறை உசுப்பிவிட்டு ஆங்கில மெட்டில் தேவியின் துதியைப் பாடலானான். “ஜேய் மையா சரோஸ்தி, அர்ஜி கரத் பானீ; ஹம்ரா பர் ஹோகூ ஸஹாய்!” (போற்றி தாயே சரசுவதி! அடிபணிந்தோம் நின்னை; வேண்டிக்கொண்டோம் தாயே! துணைபுரியும் அம்மே! தாயே வாணி சரசுவதி! துணைபுரியும் அம்மே!).

குதிரைக்கார வியாபாரிகளைப் பார்த்து ஹீராமன் மதிப்புக்

கலந்த குரலில் "செட்டி ஐயாமார்களே! சணல் என்ன விலைக்கு வாங்கினீங்க?" என்று கேட்டான்.

நொண்டிக் குதிரையை ஓட்டிவந்த வியாபாரி, "கீழே உள்ளது இருபத்தேழு-இருபத்தெட்டு, மேலே உள்ளது முப்பது, சரக்குக்கு ஏத்த விலை" என்று மறுமொழியளித்தான்.

இளவட்ட வியாபாரி கேட்டான்—"திருவிழாச் சந்தையிலே என்ன சேதி அண்ணே? எந்த நௌடங்கி கம்பெனியின் ஆட்டம் நடக்குது? ரௌத்தா கம்பெனியா, மதுரா மோகன் கம்பெனியா?"

"திருவிழா சங்கதி எல்லாம் திருவிழாக்காரங்களுக்குத் தெரியும்." ஹீராமன் மீண்டும் சத்தாப்புர் பசீராவின் பெயரைச் சொன்னான்.

சூரியன் இரண்டு மூங்கில் அளவுக்கு உயர்ந்துவிட்டது. ஹீராமன் மாடுகளிடம் பேசத் தொடங்கினான்—"ஒரே ஒரு காதம்தான்! மூச்சைப் பிடிச்சுட்டு ஓடுப்பா! நல்லா தாகம் எடுக்கிற நேரமாச்சுல்லே! ஞாபகம் இருக்காத் தம்பி, அந்தத் தடவை மும்மரச் சோலைப் பக்கத்திலே சர்க்கஸ் கம்பெனி கோமாளிக்கும் குரங்கை ஆட்டுற அய்யாவுக்கும் சண்டை வந்திடிச்சு, கோமாளி குரங்கை மாதிரியே பல்லைக் கடிச்சுக்கிட்டு கீ கீன்னு குதிச்சாரு- சர்க்கஸ் கம்பெனிலே நானா தேசத்துக்காரங்க இருக்காங்க!"

ஹீராமன் மீண்டும் திரை இடுக்கு வழியாகக் கவனித்தான். ஹீராபாயின் ஒரு கண்ணும், மனமும் ஒரு காகிதத் துண்டில் பதிந் திருக்கின்றன. ஹீராமனுடைய இதய வீணையில் இன்று ராகமும், தாளமும் ஒன்றாக லயித்திருக்கிறது. பல்வேறு பாடல்கள் அவனுடைய நினைவில் தவழ்ந்து வருகின்றன. 'இருபது, இருபத்தைந்து வருசம் முன்னாலே விதேசியா, பல்வாஹீ, பாலகானசபைன்னு எத்தனையோ கம்பெனிங்க வந்திச்சு. ஒண்ணைப் பார்க்க ஒண்ணு ஷோக்கான பாட்டெல்லாம் பாடுவாங்க. இப்ப என்னடான்னா கிராமபோன் குழாயிலே கீச்சுக்குரல்லே கத்தறாங்க, அந்தக்காலம் மலையேறிப் பேச்சு!' பாலகான சபைப்பாடல் நினைவுக்கு வந்தது அவனுக்கு.

'ஸஜனவா பைரீ ஹோ கயா ஹமார்! ஸஜனவா-
அரே, சிட்டியா ஹீ தோ ஸப் கோயீ பாஞ்சே;
ஹாய் கரமவா, ஹா கரமவா-
கோயீ ந பாஞ்சே ஹமாரா, ஸஜனவா- ஹோ கரமவா-'
(ஆசை மச்சான் எதிரியானான் எனக்கே! ஆசை மச்சான்-
அட, ரெண்டு வரி எழுதலியே என் மச்சான்-
விதியே என் விதியே-
சேதி இல்லே ஒண்ணுமில்லே மச்சான்- விதியே மச்சான்)

வண்டியின் பிரம்புச் சட்டத்தில் விரலினால் தாளம் போட்டபடி ஹீராமன் தன்னை மறந்து பாடினான். பாலகானசபையில் பெண் வேடம் போடுவானே ஒரு பையன், அவனுடைய முகம் வட்டமாக,

அப்படியே இந்த ஹீராபாய் முகம் போலவே இருக்கும்- எங்கேதான் போச்சோ அந்தக்காலம்? அப்பல்லாம் மாசாமாசம் ஏதாவது கம்பெனி வரும் கிராமத்தில். பாலகான சபை நாடகம் நடக்கையில் ஹீராமன் பார்க்கப்போனான். வீடு திரும்பியதும் அண்ணி அவனைப் பரிகாசம் செய்தாள். அண்ணா கோபித்துக்கொண்டு 'வீட்டை விட்டு இறங்குடா' என்று கூச்சல்போட்டார்.

இன்று ஹீராமன் மீது சரசுவதி தேவியின் அருள் பூரணமாக இருந்தது. ஹீராபாய் பாராட்டினாள். 'பலே. ரொம்ப நல்லாப்பாடறே!'

ஹீராமனின் முகம் வெட்கத்தில் சிவந்து விட்டது. அவன் தலையைக் கவிழ்ந்தவாறு சிரித்துக்கொண்டான்.

இன்று மும்மரச்சோலை ஆஞ்சநேயரும் ஹீராமனுக்குத் துணை புரிகிறார். சோலையிலே ஒரு வண்டிகூட இல்லை. எப்போதும் வண்டியும், வண்டிக்காரர்களுமாக கலகலப்பாக இருக்கும் இந்த இடம் ஒரே ஒரு சைக்கிள்கார இளைஞன் மட்டும் ஓய்வாக உட்கார்ந் திருந்தான். ஆஞ்சநேயரை நினைத்துக்கொண்டு ஹீராமன் வண்டியை நிறுத்தினான். ஹீராபாய் திரையை விலக்கினாள். ஹீராமன் முதன் முறையாக ஹீராபாயை நேருக்குநேர் பார்த்துப் பேசினான்—"அந்த சைக்கிள்காரன் இங்கேயே முழிச்சுப் பார்த்துக்கிட்டுக் கிடக்கான்."

மாடுகளை அவிழ்க்கு முன் மூங்கில் கம்பின்மீது ஆயம்கொடுத்து வண்டியை நிறுத்தினான். பிறகு சைக்கிள்காரனை முறைத்துவிட்டு கேள்விகளைத் தொடுத்தான்—"எங்கே போகணும்? விழாச்சந்தைக்கா? எங்கிருந்து வராப்பலே? பிஸன்புரிலிருந்தா? பூ, இத்தினிதூரம் சைக்கிள் மிதிச்சதுக்கே இப்படிக் களைச்சிட்டியே.? இளவட்டம் இப்படியா இருக்கும்?"

நோஞ்சான் போலிருந்த அந்த சைக்கிள்கார இளைஞன் ஏதோ பதில் சொன்னான். பிறகு பீடியைப் பற்றவைத்துக்கொண்டு எழுந்தான்.

ஹீராமன் உலகத்தில் எவருடைய கண்ணும் படாதபடி பத்திர மாகப் பாதுகாக்க விரும்புகிறான் ஹீராபாயை. நாலாபக்கமும் பார்வை யைச் செலுத்தி வேறு எந்தக் குதிரைக்காரனோ, சைக்கிள்காரனோ இல்லை என்பதை உறுதிசெய்துகொண்டான்.

கஜரி நதியின் மெல்லிய நீரோட்டம் மும்மரச் சோலைவரை வந்தபிறகு கிழக்குப் பக்கமாகத் திரும்புகிறது. ஹீராபாய் தண்ணீரில் நிற்கும் எருமைகளையும் அவற்றின்மீது சவாரி செய்யும் கொக்கு களையும் ரசித்துக் கொண்டிருந்தாள்.

"ஆற்றுத் துறைக்குப்போய் கை-கால் கழுவிட்டு வாங்க" என்றான் ஹீராமன்.

ஹீராபாய் வண்டியிலிருந்து இறங்கினாள். ஹீராமனின் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது- இல்லை, இல்லை. காலில் வளைவு, கிளைவு ஒண்ணுமில்லை, எதுவுமில்லை, நேராத்தான்

இருக்குது. ஆனா, பாதம் எப்படி இவ்வளவு செகப்பா இருக்கு? ஹீராபாய் துறையை நோக்கி நடந்துசென்றாள். கிராமத்துப் பெண்களைப் போலத் தலையைக் குனிந்துகொண்டு, மெல்ல அடிமேல் அடிவைத்து. கம்பெனியிலே நடிக்கிற பொம்பளைன்னு சொல்லவே முடியாது- பொம்பளையா? தப்பு, சின்னப் பொண்ணுன்னு சொல்லணும்.

ஹீராமன் ஆயக்காலில் நிற்கும் வண்டியில் அமர்ந்தான். கூண்டுக்குள்ளே எட்டிப்பார்த்தான். இந்தப்பக்கம், அந்தப் பக்கம் பார்த்துவிட்டு ஹீராபாயின் தலையணைமீது கையை வைத்தான். பிறகு தலையணைமீது முழங்கையை ஊன்றியவாறு குனிந்தான், மேலும் குனிந்துகொண்டே போனான். சென்டுவாசனை அவனுடைய உடலிலும், உள்ளத்திலும் குடியேறியது. தலையணை உறைமீது செய்திருந்த பூவேலைகளை விரல்களினால் வருடிவிட்டு முகர்ந்து பார்த்தான், அடேங்கப்பா! என்னா வாசனை! ஒரேயடியாக ஐந்து ஹுக்கா குடித்தது போன்ற உணர்வு தட்டியது. ஹீராபாயின் கண்ணாடியில் அவன் தன் முகத்தைப் பார்த்தான். இரண்டு கண்களும் ஏன் இப்படிச் சிவந்து கிடக்கின்றன?

ஹீராபாய் திரும்பிவந்ததும் அவளைப் பார்த்து ஹீராமன், "இப்ப நீங்க வண்டிக்குக் காவல். நான் போய்விட்டு இதோ வந்திடறேன்" என்றான்.

ஹீராமன் தன்னுடைய பையிலிருந்து லுங்கியை எடுத்தான். மேல்துண்டை உதறித்தோளில் போட்டுக் கொண்டான். பக்கெட்டைக் கையில் எடுத்து நடந்தான். அவனுடைய மாடுகள் ஹுங்காரம் செய்து ஏதோ பேசின. ஹீராமன் நடந்துகொண்டே திரும்பிப் பார்த்து, "ஆமாம் தம்பி, தாகம் எல்லாருக்கும்தான் எடுக்குது. இதோ திரும்பி வந்து புல்லுப்போடறேன். பொல்லாத்தனம் செய்யாம இருங்க!"

மாடுகள் செவியசைத்தன.

ஹீராமன் குளித்துவிட்டு எப்போது திரும்பினானோ, ஹீராபாய்க்குத் தெரியாது. கஜரி ஆற்றின் நீரோட்டத்தைப் பார்த்துக் கொண்டே அவள் கண்ணயர்ந்து விட்டாள். இரவில் இடையிடையே தூக்கம் கலைந்ததால் கண்கள் சொக்கின. ஹீராமன் பக்கத்து கிராமத்திலிருந்து காலைச் சிற்றுண்டிக்காக தயிரும், அவலும், சீனியும் கொண்டுவந்தான்.

"இதப்பாருங்க, எழுந்திரிச்சு நாஸ்தா பண்ணுங்க!"

கண்களைத் திறந்து பார்த்த ஹீராபாய் வியப்பில் ஆழ்ந்து விட்டாள். ஒருகையில் புதுப்பானையில் உறைத்த தயிர், வாழையிலை, இன்னொரு கையில் சின்ன பக்கெட் நிறையத் தண்ணீர், கண்களில் அன்பு நிறைந்த வேண்டுகோள்.

"இவ்வளவும் எங்கிருந்து கொண்டுவந்தே?"

"இந்தக் கிராமம் தயிருக்குப் பேர்போனது- இப்ப வேண்டிய

"தில்லைன்னா பார்பிஸ் கஞ்சிலே போய் சாப்பிடலாம்."

ஹீராமன் முதுகுத் தினவு போன இடம் தெரியவில்லை. ஹீரா பாய் சொன்னாள்—"நீயும் இலையைப் போட்டுக்க. சரியா? நீ இப்ப சாப்பிடலேன்னா, பையிலே போட்டுக்க. நானும் சாப்பிடலே."

"ஊ-கும்" ஹீராமன் சற்றே வெட்கத்துடன் கூறினான்—"நல்லது, நீங்க மொதல்லே சாப்பிடுங்க."

"முதல்லே, அப்புறம் இதெல்லாம் என்னது? நீயும் உட்காரு."

ஹீராமனின் உள்ளம் அப்படியே குளிர்ந்துபோனது. ஹீராபாய் தன் கையினாலேயே அவனுடைய இலையை விரித்துப்போட்டாள். தன் கையினாலேயே நீர் தெளித்து அவலை எடுத்துப் பரிமாறினாள். அப்பப்பா, என்ன பாக்கியம், என்ன பாக்கியம்! ஹீராமன் வைத்தவிழி வாங்காமல் பார்த்தான். பகவதி அம்மனே படையலை உண்பதையல்லவா காண்கிறான்! சிவந்த உதடுகளில் துயிரின் ஸ்பரிசம்! மலையிலிருக்கும் கிளி பாலும் சோறும் உண்பதைக் கண்டிருக்கிறீர்களா?

பகல்பொழுது சாய்ந்தது.

கூண்டில் கண்துஞ்சிய ஹீராபாய்க்கும் கீழே தரையில் சமுக்காளம் விரித்து உறங்கும் ஹீராமனுக்கும் ஒரேசமயத்தில் விழிப்புக் கொடுத்தது. விழாச் சந்தைக்குப் போகும் வண்டிகள் மும்மரச் சோலை அருகே நின்றிருந்தன. குழந்தைகள் கலகலவென்று சிரித்து ஓடியாடிக் கொண்டிருந்தன.

ஹீராமன் தூக்கிவாரிப்போட்டுக்கொண்டு எழுந்தான். பிறகு கூண்டினுள் எட்டிப்பார்த்து 'பொழுது சாயுது' என்றான். வண்டியில் மாடுகளைப் பூட்டுகையில் மற்ற வண்டிக்காரர்களின் கேள்விகளுக்கு அவன் சரியாகப் பதில்கூறவில்லை. மாடுகளை முடுக்கியவாறு சொன்னான்—"சிர்புர் பஜார் ஆசுபத்திரியிலே டாக்டரம்மா நோயாளியைப் பார்க்கப் போறாங்க பக்கத்திலே குட்மா கிராமத்துக்கு."

ஹீராபாய்க்கு 'சத்தாபுர் பசீரா' கிராமத்தின் பெயர் சரியாக நினைவுக்கு வரவில்லை. வண்டி சற்றுதூரம் போனதும் சிரித்துக் கொண்டே கேட்டாள்—"பத்தாபுர் சபீராவா?"

சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகிவிட்டது ஹீராமனுக்கு— "பத்தாபுர் சபீரா! வேறு கிராமத்தின் பெயர் ஏன் சொன்னேன்னா, அந்த வண்டிக்காரங்க சத்தாபுர் பசீராக்காரங்களேதான். அவங்க கிட்டயே சத்தாபுர் பசீரானு சொல்லலாமா? ஹீ-ஹீ!"

ஹீராபாய் புன்னகை பூத்தவாறு கிராமத்தை நோக்கினாள்.

சாலை அந்த கிராமத்தின் ஊடே செல்கிறது. கிராமத்துச் சிறுவர்கள் திரைச்சீலை போட்ட வண்டியைப் பார்த்ததும் ஏற்கெனவே பாடம் பண்ணின வரிகளைப் பாடலானார்கள்.

“செகப்புச் செகப்புக் கூண்டுக்குள்ளே
செக்கச் செவந்த மணப்பெண்ணாம்—அவ
செக்கச் செவந்த உதட்டுமேலே
வெத்திலை பாக்குத் தம்பூலமாம்_!”

ஹீராமன் சிரித்தான்_ மணப்பெண்_ செகப்புச் செகப்புப் பல்லக்கு! புது மணப்பெண் தாம்பூலம் தரிக்கிறாள். தன் உதட்டில் நிறைந்த வெற்றிலைத் தாம்பூலத்தை மச்சானின் தலைப்பாகையினால் துடைத்துக் கொள்கிறாள். “புதுமணப்பெண்ணே! புதுமணப் பெண்ணே! மறக்காதே மும்மரச் சோலைப் பிள்ளைகளை! கொண்டு வா லட்டு முறுக்கு திரும்பி வாரையிலே! பல்லாயிரம் வருஷம் வாழணும் உங்க புருஷன்!” ஹீராமன் காலம் காலமாகக் கண்டு வந்த கனவு இன்று பலித்துவிட்டது. இப்படி எத்தனை கனவுகள் கண்டிருப்பான் அவன்! அவன் தாலி கட்டிய பெண்டாட்டியை அழைத்து வருகிறான். ஒவ்வொரு கிராமத்திலும் பிள்ளைகள் கை கொட்டிக்கொண்டு பாடுகிறார்கள். ஒவ்வொரு வீட்டு முற்றத்தி லிருந்தும் பெண்கள் எட்டிப் பார்க்கிறார்கள். ஆண்கள் கேட்கிறார்கள், “எந்த ஊரிலிருந்து வருது வண்டி, எந்த ஊருக்குப் போவுது?” அவனுடைய மனைவி பல்லக்கின் திரைச்சீலையை நீக்கிவிட்டுப் பார்க்கிறாள். இவ்வாறு எத்தனை எத்தனை சொப்பனங்கள்_

கிராமத்தைத் தாண்டியபின் அவன் ஓரக்கண்ணால் கூண்டினுள் பார்த்தான். ஹீராபாய் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருக்கிறாள். ஹீராமனும் யோசிக்கலானான். சிறிது நேரத்துக்குப் பிறகு அவன் ஏதோ பாட்டை மெல்லப்பாடத் தொடங்கினான்:

“ஸஜன் ரே ஜூட் மத்போலா, குதாகே பாஸ் ஜானாஹை
நஹீ ஹாத்தி நஹீகோடா நஹீ காடி—
யஹாங் பைதல் ஹீ ஜானாஹை. ஸஜன்ரே_”

(அன்பரே, பேசவேண்டாம் பொய்தனை, போகவேண்டும் ஆண்டவன் சந்நிதிக்கு, ஆனை குதிரையோ, அம்பாரி வண்டியோ எதுவுமின்றி கால்நடையா நடக்கணும்)

ஹீராபாய் கேட்டாள்— “ஏன் தோழனே, உங்க மொழியிலே பாட்டு எதுவும் கிடையாதா?”

ஹீராமன் கூச்சமில்லாமல் ஹீராபாயின் முகத்தைப் பார்த்துப் பேசும் அளவுக்குத் தேறிவிட்டான். கம்பெனி நடிகைகள் எல்லாருமே இவங்களைப்போல சகஜமாகப் பழகுவாங்களா? சர்க்கஸ் கம்பெனி எசமானியும் இருந்தாளே! இந்த ஹீராபாய்க்கு இணை யாருமில்லை. எத்தனை எளிமை! நாட்டுப்பாடல் கேட்க ஆசையாம். அவன் மனம் திறந்து சிரித்தான். “நாட்டுப்புறத்திலே பேசுகிற பேச்செல்லாம்கூட வருமா என்ன?”

“ஊஹூம்!” ஹீராபாய் தலையை அசைத்தாள்.

ஹீராமன் உடனே பாடவில்லை. வண்டி ஓட்டுவதில் முனைப்பாக இருந்தான். பிறகு தொண்டையைக் கனைத்துக்கொண்டு கேட்டான். "பாட்டு கேட்கத்தான் போறீங்களா? கேட்காமல் விடமாட்டீங்களா? உம்..! நாட்டுப்பாடல் கேட்க இவ்ளோ ஆசையா உங்களுக்கு? அப்படீன்னா இந்தப் பாதையைவிட்டு விலக வேண்டும். பொதுச் சாலையிலே யார்தான் பாடமுடியும்?" ஹீராமன் இடது மாட்டின் கயிற்றை இழுத்து வலப்பக்கத்து மாட்டை தடத்திலிருந்து இறக்கி, "ஹரிப்புர் வழியாப் போகமாட்டோம் அப்ப" என்றான்.

வழக்கமான தடத்தைவிட்டு வண்டி இறங்குவதைக்கண்டு பின்னாலே வந்துகொண்டிருந்த வண்டிக்காரன் உரக்கக் குரல் கொடுத்தான்— "ஏன் அண்ணே, தடத்தைவிட்டு எங்கே அந்தப்பக்கம்?"

ஹீராமன் தோல் விளாரைச் சுழற்றியவாறு பதிலளித்தான்— "தடத்துமேலே போனா, இந்தச் சாலை நனன்புர் போகுமா என்ன?" பிறகு மெல்லிய குரலில் அலுத்துக்கொண்டான்—"இந்தப் பக்கத்து ஆசாமிங்களுக்கு ரொம்பக்கெட்ட பழக்கம். வழியிலே போறவன் கிட்டே ஆயிரம் குறுக்குக் கேள்விகள். உனக்கு எங்கே போகணுமோ உன் வழியைப் பார்த்துப்போவியா..? நாட்டுப்புறத்து முட்டாளுக!"

நனன்புர் பாதையில் வண்டியைத் திருப்பியபிறகு ஹீராமன் மாடுகளின் கயிற்றைத் தொய்வாக விட்டான். மாடுகளும் குதித்துக் குதித்துச் செல்லும் ஓட்டத்தைவிட்டு மெதுவாக நடைபழகலாயின.

நனன்புர் பாதை உண்மையிலே ஆள் நடமாட்டமே இல்லாமல் அமைதியாக இருந்தது. ஆகவே சற்று பயம் கூடத்தோன்றியது. ஹீராமன் அவளுடைய கண்களின் மொழியைக் கண்டுகொண்டான்—"பயமே வேண்டாம், இந்தப் பாதையிலும் பார்பிஸ் கஞ்சபோகும் வழியெங்கிலும் ஜனங்க நல்லமாதிரி. இரவு ஒரு சாமத்துக்குள்ளே போய்ச்சேர்ந்துடுவோம்."

ஹீராபாய்க்கு பார்பிஸ் கஞ்ச் போய்ச்சேர ஒரு அவசரமும் இல்லை. ஹீராமன் மேல் அசைக்க முடியாத நம்பிக்கை அவளுக்கு. அஞ்சுவதற்கு ஒரு முகாந்தரமும் இல்லை. ஹீராமனின் முகத்தைப் பார்த்தாள். அப்படியே குதூகலம் ததும்புகிறது. என்ன பாட்டுப் பாடலாம் என்று யோசிக்கிறான்போலும் என அவள் எண்ணமிடலானாள். ஹீராபாய்க்கு பாட்டும் பிடிக்கும், கதைகேட்கவும் இஷ்டம். 'உம்.. படகுத்துறை மஹுவாவின் கதை சொல்லலாமா?' அவன் கேட்டான்—"நல்லதுங்க, பாட்டுக்கேட்க ரொம்பப் பிரியம் இல்லே? மஹுவா பாட்டைக் கேளுங்க. படகுத்துறை மஹுவா. இதிலே பாட்டும் இருக்குது, கதையும் இருக்குது.."

இத்தனை காலத்துக்குப் பிறகு பகவதி அம்மன் அவனுடைய கோரிக்கையை நிறைவேற்றுகிறாள். அம்மே பகவதி! எத்தனை கருணை அம்மா!

இன்று ஹீராமனின் மனச்சுமை எல்லாம் இறங்கப்போகிறது. சுமை குறைந்தால் மனம் வானவெளியிலே சிறகடித்துப் பறக்காதா? ஹீராபாய் தன் முகத்தில் அரும்பிய புன்னகையை மறைக்கமுயன்று கொண்டிருந்தாள். ஹீராமன் அந்த அழகையே பார்த்துக் கொண் டிருந்தான்.

"கேளுங்க, பரமான் நதியின் படகுத்துறையிலே மஹுவாவின் பழைய வீட்டை இன்னிக்குக் கூடப் பார்க்கலாம் நீங்க. இங்கேதான் அவ பிறந்து வளர்ந்தாள். படகுத் துறைப்பெண் அப்படீன்னு சாமா னியமா நினைக்கக் கூடாது. ஒழுக்கத்திலே அவளுக்கு நிகர் கிடையாது. அப்பன்காரன் ராப்பகலா கள்ளுச் சாராயத்திலே மிதந்துகிடப்பான், சுயநினைவே இல்லாமல். அவ சின்னம்மா, அதான் மாற்றாந்தாய், அப்படியே ராட்சசிதான். பொல்லாத தந்திரக்காரி. இரவிலே அபின்—கஞ்சா திருடி விக்கறவங்க, இந்த மாதிரி பலதரப்பட்ட ஆண்களுடன் பழக்கம் அவளுக்கு. எல்லா ஆம்புளைகளுடனும் நெருங்கி இழைவாள். மஹுவா, பாவம் கன்னிப்பெண். இடுப்பெலும்பு ஒடியும்படி அவளிடம் வேலை வாங்குவாள் இந்த ராட்சசி. வயசுக்கு வந்துட்டா மஹுவா. அவளுக்கு ஒரு கண்ணாலம் கட்டி வைக்கணும்ங்கற நெனப்பே கிடையாது. ஒருநாள் ராத்திரி என்ன நடந்தது கேளுங்க."

ஹீராமன் தொண்டையைக் கனைத்து சரிசெய்துகொண்டான்.

'அஹ-அ--அ-அ ஸாவனா பாதவா கே-ர
உமடல நதியா கே-மை-யோ-ஓ-ஓ
மையா கே ரைனி பயாவனி ஹே-ஏ-ஏ-ஏ
தடகா தடகே தடகே கரேஜ-ஆ-ஆமோரா கி
ஹமஹுங் ஜே பாரீ நான்ஹீரே-ஏ-ஏ-!'

(அம்மா! ஆடிப்பெருக்கில் கரைபுரண்டோடும் ஆறு, இடியும், மின்னலுமாக அச்சமூட்டும் இரவு, ஏதுமறியாத கன்னி நான், நெஞ்சம் படபடக்கிறது. தன்னந்தனியாக படகுத்துறைக்கு எப்படிச் செல்வேன்?)

"அதுவும் முன் பின் தெரியாத வழிப்போக்கனின் கால்களில் எண்ணெய் தடவிவிடப் போகணுமாம்! மாற்றாந்தாய் அவளை வெளியே அனுப்பிவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டாள். மஹுவா தன்னுடைய இறந்துபோன சொந்தத் தாயை நினைத்து அழுதாள். இன்றைக்கு அவளுடைய அம்மா மட்டும் இருந்தால், அவளைக் கண்ணுக்குள் வைத்து இமையால் அல்லவா மூடிக் கொண் டிருப்பாள்! அய்யோ அம்மா, இந்த மாதிரி கேடுகாலத்தைக் காணவா நீ என்னை வயிற்றில் சுமந்தாய்? மஹுவா தன் தாய்மீது கோபம் கொண்டாள்—அவள் ஏன் தனியாகச் செத்துப் போனாள்? ஆத்திரம் தீர அம்மாவைத் திட்டிக்கொண்டு சொன்னாள்."

கதையை இந்த இடத்தில் நிறுத்தி ஹீராமன், ஹீராபாயைக் கவனித்தான். அவள் தலையணையில் முழங்கையை ஊன்றியவாறு

பாட்டிலேயே லயித்து அவனையே உற்றுப் பார்க்கிறாள். தன்னை மறந்த நிலையில் அவள் எவ்வளவு அழகாக இருக்கிறாள்!

ஹீராமன் தன் குரலை இன்னும் தழுதழுக்கச் செய்தான்:

'ஹூ- ஊ-ஊ-ம்ரே டாயனியா மையா மோரீ-ஈ-ஈ-

நோன்வா சடாயீ காஹே நாஹீ மாரலி ஸாரீ கர-அ-அ-

ஏஹி தின்வாங் காதிர் சின்ரோ கியா

தேஹூ போஸலி கிநேனு தூத—உக்டன்-"

ஹீராமன் சற்று மூச்சு வாங்கிவிட்டுகேட்டான்— "நாட்டுப்புறத்து மொழி புரியுதா? இல்லே, பொருள் புரியாமெ வெறுமே பாட்டைக் கேக்குறீங்களா?

ஹீராபாய் பதிலளித்தாள்—"புரியுது, அர்த்தம் புரியுது, 'உக்டன்' அப்பமன்னா 'உபடன்' உடம்பிலே தேய்ப்பாங்களே, அது."

ஹீராமன் வியந்து போனான். கதையைத் தொடர்ந்தான்— 'உம், அழுது என்ன பயன்? ஒரு வியாபாரிதான் மஹூவாவை விலை கொடுத்து வாங்கிவிட்டான் இல்லே? அவளுடைய தலைமுடியைப் பிடித்து இழுத்து ஓடத்தில் ஏற்றினான். பிறகு படகோட்டிகளைப் பார்த்து, 'அவிழுங்க படகை, பாய்மரத்தைக் கட்டுங்க,' என்று கட்டளையிட்டான். சிறகடித்துப் பறக்கிற பறவைபோலப் பாய்மரக் கப்பல் பறந்தது. இரவெல்லாம் மஹூவா அழுதாள். வியாபாரியின் ஆட்கள் அவளை பயமுறுத்தினாங்க. 'பேசாம கிடப்பியா, இல்லே, ஆத்திலே தூக்கிப்போட்டுடவா?' அப்ப அவளுக்கு ஒரு யோசனை தோணிச்சு. வானத்திலே தெரிஞ்ச விடிவெள்ளி மேகத்திலே மறைஞ்சுது. மஹூவாவும் 'டபக்'னு தண்ணிலே குதிச்சிட்டா. வியா பாரியினுடைய ஒரு வேலைக்காரன் மஹூவாவைப் பார்த்ததுமே அவள் அழகில் சொக்கிப் போயிருந்தான். மஹூவா பின்னாலேயே அவனும் குதிச்சான். அவனால் அந்த ஆடிப்பெருக்கு வெள்ளத்திலே எதிர் நீச்சுப்போட முடியலே. மஹூவாவோ, படகுத் துறைப்பெண். மீன் எங்கேயாவது தண்ணீரிலே களைச்சுப்போகுமா? வாளை மீன்போல துள்ளிக்குதிச்சு தண்ணியைக் கிழிச்சிக்கிட்டுப் பாஞ்சுட்டா. அவள் பின்னாலே நீந்தின வேலையாள் உரத்த குரலில் கூவினான்— "மஹூவா, கொஞ்சம் நில்லு. நான் உன்னைப்பிடிக்க வரலே, உன் தோழன் நான். நாம ரெண்டுபேரும் சந்தோசமா வாழலாம்னு கெஞ்சினான். ஆனால்-"

ஹீராமனுக்குப் பிரியமான பாட்டு இது. படகுத்துறை மஹூவா பாட்டுப்பாடுகையில் ஆவணி—புரட்டாசி மாதத்து வெள்ளம் ஓடும் அந்தப் பாட்டிலே. "அமாவாசை இரவு. கரிய மேகங்களில் இடை யிடையே மின்னலின் ஒளியில் அலைகளுடன் மல்லுக்கு நிற்கும் மஹூவாவின் உருவம் அவனுக்குத் தென்படுகிறது. வாள்மீனின் வேகம் கூடிட்டே போச்சு. அவனும் விடாமல் நீந்தினான். மஹூவாவுக்கு

அவன் பேச்சிலே நம்பிக்கை வரலே. திரும்பிப் பார்க்காமல் நீந்திட்டே போனா. வேலையாள் களைச்சுப் போயிட்டான்.

இந்தத் தடவை மஹூவா அவனுடைய பிடியில் சிக்கினாள். இல்லை, தானே அவன் பிடியிலே சிக்கிட்டா. அவன் மஹூவாவைத் தொட்டான். இல்லை, பிடிச்சுட்டான்; களைப்பு போன இடம் தெரியலே. பதினஞ்சு இருபது வருசமா ஆத்து நீரில் எதிர்நீச்சல்போட்ட மனசிலே இன்னிக்கு கரைசேர்ந்துட்டோம்னு நிம்மதி. ஆனந்தக் கண்ணீர் வழியுது கன்னங்களிலே-"

அவன் தன் கண்ணீரை ஹீராபாயிடமிருந்து மறைக்க முயன் றான். ஆனால் ஹீராபாய் அவன் மனதுக்குள்ளேயே அமர்ந்து எல்லாக் காட்சிகளையும் பார்த்துக் கொண்டிருக்கிறாளே! ஹீராமன் தன் தழு தழுத்த குரலைச் சுதாரித்துக்கொண்டு மாடுகளைத் திட்டலானான்— "இந்தப்பாட்டிலே அப்படி என்னதான் வெச்சிருக்குதோ தெரியலே, இந்தப் பாட்டைக் கேட்டா இதுகள் ரெண்டுக்கும் செமை களைப்பு— நூறுமணங்கு பாரத்தை ஏத்தினமாதிரி."

ஹீராபாய் நீண்ட பெருமூச்சு விடுகிறாள். ஹீராமனின் ஒவ்வாரு அங்கமும் புளகாங்கிதமடைகிறது:

"நீ பாட்டிலே கில்லாடிதான் தோழா!"

"ரொம்பத்தான் புகழறீங்க!"

ஐப்பசி கார்த்திகை மாதத்து சூரியன் மேல் வானத்தில் இரண்டு மூங்கில் உயரத்திலேயே ஒளி இழக்கலாயிற்று. சூரியன் மறையும் முன்னம் நனன்புர் சேரவேண்டும். ஹீராமன் மாடுகளை உசுப்பு கிறான்—"தம்பிங்களா, காலைவீசி வையுங்க. மனசிலே ஊக்கத்தோட நடங்க. ஏய்- சீச்சி! இப்படியா? நடடா, தம்பி நடடா- டிரியோ-ஓ-!

நனன்புர் சேரும் வரையிலும் தொடர்ந்து மாடுகளுக்கு ஊக்க மூட்டிக் கொண்டிருந்தான். ஒவ்வொரு முறையும் மாடுகளுக்கு ஏதாவது பழைய நிகழ்ச்சியை நினைவூட்டுவான்—"ஞாபகம் இருக்குதா? சௌத்ரியின் பெண் கல்யாணத்துலே எத்தினி வண்டிங்க இருந்திச்சு; அல்லாத்தையும் கெலிச்சுட்டோம் இல்லே? இன்னிக்கு அதேமாதிரி நடைபோடுங்க தம்பிங்களா- இதோ ஆச்சு, வந்தாச்சு. நனன்புரிலிருந்து பார்பிஸ்கஞ்ச் மூணே காதம்தான்- ரெண்டு மணிநேரம் இன்னும் அவ்வளவுதான்."

நனன்புர் கடைத்தெருவில் இப்பொழுது டீ கூட கிடைக்கிறது. ஹீராமன் தன்னுடைய செம்பு நிறைய டீ வாங்கி வந்தான்- கம்பெனிப் பெண்கள் என்றால் அவனுக்குத் தெரியாதா? பகலானாலும், இரவா னாலும் எப்பவும் டீ குடிச்சிட்டு கிடக்கும். டீதான் அவங்க உசிரு!

ஹீராபாய்க்கு சிரித்துச் சிரித்து வயிறு வெடிக்கும்போல ஆனது- "அட, எவன் சொன்னது உனக்கு? பிரம்மசாரிக்கட்டை டீ குடிக்கக் கூடாதுன்னு யார் சொன்னது?"

ஹீராமன் முகத்தில் வெட்கம். அவன் என்ன பதில் சொல்லு வான்..? சொன்னால் வெட்கக்கேடு அல்லவா? ஒரு தடவை அனுபவித்து விட்டான். சர்க்கஸ் கம்பெனி எசமானி கொடுத்த டீயைக் குடித்துப் பார்த்திருக்கிறானே! உதட்டிலே வைத்ததும் நாக்கும், உதடும் பொத்துப் போய்விட்டது.

"குடிங்க குருஜி!" ஹீராபாய் சிரித்தாள்.

"ஊ- ஹு- ம்"

நனன்புர் கடைத்தெருவில் விளக்குப் போட்டாயிற்று. ஹீராமன் தன்னுடைய ராந்தல் விளக்கை ஏற்றி வண்டியின் பின்பக்கம் தொங்க விட்டான்- இப்பொழுதெல்லாம் பட்டணத்திலிருந்து ஐந்து மைல் தொலைவில் இருக்கிறவர்கள் கூட தங்களை பட்டணத்துக்காரர்கள் என்று நினைக்கிறார்கள். விளக்கு இல்லாமல் செல்லும் வண்டிக்குக் கூட அபராதம் போடுவார்கள். இப்படிப் பலவிதமான தொல்லைகள்!

"நீங்க என்ன குருஜின்னு கூப்பிடாதீங்க."

"நீ என் குருதான். சாஸ்திரத்திலே என்ன எழுதியிருக்குது தெரியுமா? ஒரு எழுத்து அல்லது ஒரு ராகம் மட்டுமே கற்பித்தாலும் அவர் குருதான்."

"ஓ- கோ! சாத்திரம் புராணம் இதெல்லாம் கூடத் தெரியுமா? நான் என்ன கத்துக் குடுத்தேன்- என்ன கத்து..?"

ஹீராபாய் சிரித்துவிட்டு பாட்டை இசைக்கலானாள்— "ஹே-அ-அ-அ ஸாவனா-பாதவா கே-ர..!"

ஹீராமன் வியப்பினால் வாயடைத்துப் போனான்- அடேயப்பா! இவ்வளவு கூர்மையான புத்தி! அப்படியே படகுத் துறைக்காரி மஹுவாதான்.

வண்டி ஒரு ஓடையைத் தாண்டுகையில் கடகடவென்று இறக்கத்தில் இறங்கியது. ஹீராபாய் தன்னுடைய ஒரு கையினால் ஹீராமனின் தோளை இறுகப் பிடித்தாள், விழாமல் இருப்பதற்காக. வெகுநேரம் வரையில் தோள்மீது அவளுடைய விரல்கள் படிந் திருந்தன. ஹீராமன் தன் கண்களைத் திருப்பி தோளைப் பார்க்க முயன்றான் பலமுறை. வண்டி ஏற்றத்தில் ஏறுகையில் ஹீராபாயின் தொய்ந்த விரல்கள் விறைத்தன.

அதோ, எதிரில் பார்பிஸ் கஞ்ச் நகரத்தின் விளக்குகள் மின்னு கின்றன. நகரிலிருந்து சற்று விலகிக் காண்பது திருவிழாச் சந்தையின் விளக்குகள்- வண்டியில் தொங்கவிட்டுள்ள ராந்தலின் வெளிச்சத்தில் நிழல் நடனமாடுவது தெரிகிறது... நீர் ததும்பும் கண்களுடன் பார்க்கையில் ஒவ்வொரு ஒளியும் சூரிய காந்திப்பூ போல மிளிர்ந்து காண்கிறது.

பார்பிஸ் கஞ்ச் நகர் ஹீராமனுக்குச் சொந்த வீடுவாசல் போல.

எத்தனைமுறை அவன் இந்த நகருக்கு வந்திருக்கிறான். விழாச் சந்தைக்கு எவ்வளவு சரக்கு கொணர்ந்திருக்கிறான். ஏதேனும் பெண் ணுடன் வந்த அனுபவம் உண்டா? ஆமாம், ஒரு தடவை அவனுடைய அண்ணி திருமணமாகி முதல் முதலாக வந்தபோது, இதேபோல வண்டியை டார்பாலினால் சுற்றி வீடுபோல செய்திருந்தான்-

வண்டிப் பேட்டையை அடைந்ததும் ஹீராமன் தன்னுடைய வண்டியை டார்பாலினால் சுற்றினான். விடிந்ததுமே ரௌத்தா நாடகக் கம்பெனி மானேஜரைக் கண்டு கம்பெனியில் சேர்ந்து விடுவாள் ஹீராபாய். நாளை மறுநாள் திருவிழாச்சந்தை ஆரம்பிக்கிறது. இந்தத் தடவை விழாவில் நிறைய டார்பாலின் வீடுகள். ஓரிரவு மட்டும்தான். ஆம், இன்றிரவு மட்டுமே ஹீராபாய் தங்குவாள்-ஹீராமனின் வண்டியிலா, இல்லை, இல்லை, அவனுடைய வீட்டில்.

"எங்கிருந்து வர்ற வண்டி-? யார், ஹீராமனா? எந்தத் திரு விழாவிலிருந்து? என்ன சரக்கு ஏத்திட்டு வந்தே?"

ஒரே கிராம சமூகத்தைச் சேர்ந்த வண்டிக்காரர்கள் ஒருவரை யொருவர் தேடிப்பிடித்து ஒரே பக்கமாக வண்டிகளைப் போட்டு தாவளம் போடுவார்கள். ஆனால், இன்று தன்னுடைய கிராமத்தைச் சேர்ந்த லால் மோஹர், துன்னிராம், பல்டன் தாஸ் ஆகியவர்களைக் கண்டு ஹீராமன் சற்றுக் கலவரமடைந்தான். பல்டன் தாஸோ கூண்டுக்குள்ளே எட்டிப் பார்த்து மிரண்டான்-புலியைக் கண்டது போல. ஹீராமன் அனைவரையும் சத்தம் போடாமல் இருக்கும்படி சைகை செய்தான். பிறகு வண்டியை நோக்கிக் கண் சாடை காட்டி கிசுகிசுத்தான். "உஸ், சத்தம் போடாதீங்க! உள்ளே பெண் இருக்குது, நாடகக் கம்பெனிப் பெண்."

"கம்பெனிப் பெண்ணா-ா-ா-?"

ஒன்றில்லை, இப்போது நான்கு ஹீராமன்கள் நின்றிருந்தனர். நான்கு பேரும் ஆச்சரியத்துடன் ஒருவரையொருவர் பார்த்தனர்-'கம்பெனி' என்றால் அப்படியொரு பரபரப்பு முகத்தில்! ஹீராமன் அவர்கள் செய்கைகளையே கவனித்தான். மூவரும் தோளில் கை போட்டு நெருங்கி நின்றனர். ஏதோ ரகசியம் பேசப்போவதுபோல. பிறகு லால்மோஹர் சற்று விலகி நின்று ஹீராமனைக் கைச்சாடை செய்து பக்கத்தில் அழைத்தான், ஏதோ கேட்கவேண்டுமென்று சைகை காட்டினான். ஹீராமன் கூண்டை நோக்கியவாறு கேட்டான்- "இந் நேரம் ஓட்டல் எதுவும் திறந்திருக்காது. மிட்டாய்க் கடைக்காரனிடம் பூரி வாங்கி வரவா?"

"ஹீராமன், நான் சொல்வதைக் கொஞ்சம் கேளு. எனக்கு இப்போது எதுவுமே வேண்டியதில்லை. இதோ, இதை வாங்கிக்க. நீ போய் சாப்பிட்டு வா."

"என்னது? பைசாவா? ஊஹூ்ம்!" ஹீராமன் பார்பிஸ் கஞ்சில் ரொட்டியோ, பூரியோ சாப்பிட்டதே கிடையாது. அவனுடைய கிராமத்து வண்டிக்காரர்கள் எதற்கு இருக்கிறார்கள்? அதனால் அவன் பணத்தைத் தொடவில்லை. ஹீராபாயிடம் சொன்னான்-"அய்ய, இதெல்லாம் வாணாம். பைசாவை வெச்சுக்குங்க." சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருந்த லால்மோஹர் கூண்டின் அருகே வந்தான். அவன் கூறினான்-"நாலுபேருக்குச் சோறாக்கி வெச்சா இன்னும் ரெண்டு பேர் தாராளமாகச் சாப்பிடலாம். அடுப்பிலே சோறு வெந்தாச்சு. ஹீ- ஹீ- ஹீ! எங்களுக்கெல்லாம் ஒரே கிராமம். கிராமத்து சொந்தக் காரங்க இருக்கும்போது ஹீராமன் ஓட்டலுக்கும், மிட்டாய்க் கடைக்கும் என்னத்துக்கு போவணும்?"

ஹீராமன் லால்மோஹரின் கையை அழுத்தி அவனைப் பேசா மலிருக்கும்படி கூறினான்- "அனாவசியமாகப் பேசி எதையாவது உளறி வைக்காதே!"

வண்டியிலிருந்து பத்து எட்டு போவதற்குள் துன்னிராம் அவன் மனதை அரித்துக்கொண்டிருந்த விஷயத்தைக் கொட்டிவிட்டான்-"நீ பலே ஆசாமிதான் ஹீராமன்! போனவருஷம் கம்பெனிப்புலி, இந்த வருஷம் கம்பெனிப் பெண்ணு!"

ஹீராமன் பதுங்கிய குரலில் சொன்னான்-"அண்ணே! நம்ம பக்கத்துப் பொம்புளை இல்லே இது. விதரணையோடு பேசணும், தெரிஞ்சுக்குங்க. கண்டபடி பேசினா வாயை மூடிக்கிட்டிருக்காது. மேற்கத்திச் சீமையிலுள்ள பெண்ணு, அதுவும் கம்பெனிப் பெண்ணு!"

துன்னிராமுக்கு ஒரு சந்தேகம்-"ஆனா ஒரு விஷயம் அண்ணே! கம்பெனிப் பெண்ணுங்க எல்லாம் வேசிங்களாமே!"

"அட சட்!" எல்லாருமே அவனை அடக்கினார்கள்-"என்ன மனுசன்டா நீ! வேசின்னா கம்பெனியிலா இருக்கும்? இவன் புத்தி போற போக்கைப் பாரு! ஏதோ பார்த்த மாதிரியல்ல சொல்றான்!"

துன்னிராம் தன் தவறை ஒப்புக் கொண்டான். திடீரென்று ஏதோ ஞாபகம் வந்ததுபோல பல்டன்தாஸ் கேட்டான்-"ஹீராமன் அண்ணே! ஒரு பொம்பளையைத் தனியாக வண்டியிலே விட்டுட்டு வர்றது சரியா? என்னதான் ஆனாலும் பொம்புளை, பொம்புளைதானே, ஏதாவது தேவைப்படலாமில்லே!"

அனைவருக்கும் இது சரியான யோசனையாகப்பட்டது. ஹீராமன் கூறினான்- "நீ சொல்றது சரிதான். பல்டன், நீ திரும்பிப் போ. வண்டிக்குப் பக்கத்திலேயே நின்னுக்கிட்டு இரு. இதப் பாரு, எதையும் கவனமாகப் பேசு. ஆமாம்."

ஹீராமனின் உடம்பிலிருந்து அத்தர் வாசம் வீசுகிறது. ஹீராமன் கருமமே கண்ணானவன், போனதடவை மாசக்கணக்காக அவன் உடம்பைவிட்டு புலிநாற்றம் போகவில்லை. லால்மோஹர் ஹீராமனின்

மேல்துண்டை முகர்ந்து பார்த்தான்- "ஆ- ஹா"

நடந்து கொண்டே இருந்த ஹீராமன் நின்றான்- "என்ன செய்யலாம் சொல்லு லால்மோஹர் அண்ணே! ரொம்ப அடம் பிடிக்குது. நௌடங்கி பார்த்தால்தான் ஆச்சு அப்படீங்குது"

"இனாமாகவா-? கிராமத்துக்கு விஷயம் எட்டினா என்ன ஆவும்?" ஹீராமன் சொன்னான்—"எதுக்கு அண்ணே இந்த வம்பு? ஒரு ராத்திரி நௌடங்கி பார்த்துட்டு, வாழ்நாள் முழுசும் வீட்டிலே யாரு பரிகாசப் பேச்சைக் கேட்கறது-? நாட்டுக் கோழிக்கு எதுக்குப் பட்டுக் குஞ்சலம்?"

"டிக்கெட்டு இல்லாமெ இனாமா பார்த்தாக்கூட உங்க அண்ணி சத்தம் போடுமா?" துன்னிராம் கேட்டான்.

லால்மோஹர் தங்குமிடத்துக்கு அருகில்தான் மரத்தாலான பெட்டிக் கடைகளைச் சுமந்து வந்த வண்டிக்காரர்களின் தாவளம். அங்கேயுள்ள தலைமை வண்டிக்காரர் மியான் ஜான் கிழவர் ஹுக்காவை இழுத்துவிட்டுக் கொண்டே கேட்டார்"ஏம்பா, மீனா பஜார் வண்டி கொண்டு வந்தது யாரு?"

மீனா பஜாரா? வேசிகளின் பேட்டையைத்தான் மீனா பஜார் என்று சொல்லுவார்கள்- என்ன சொல்கிறான் இந்தக் கிழவன்-? லால் மோஹர் ஹீராமனின் காதில் கிசுகிசுத்தான் "உன்னோட உடம்பு கமகமனு மணக்குது, மெய்யாத்தான்!"

லஹஸன்வா லால்மோஹரின் வேலைக்காரன். வயதில் இளை யவன். முதல்தடவை வருகிறான் என்பது வாஸ்தவம்தான். ஆனால் சின்ன வயசிலிருந்தே ஐயாமாரு வீடுகளில் வேலை செய்த அனுபவம் உண்டு. அவன் அடிக்கடி மூக்கை வளைத்துக்கொண்டு சுற்றுச் சூழலிலிருந்து எதையோ மோப்பம் பிடிக்கிறான். அவனுடைய முகம் செக்கச் செவேலென்று சிவக்கிறது. ஹீராமன் இதைக் கவனிக்கிறான்- யார் வர்றது அங்கே முணுமுணுத்துக்கொண்டு? பல்டன்தாஸா? என்ன ஆச்சு?

பல்டன்தாஸ் வந்தவன் பேசாமல் நின்றான். அவனுடைய முகமும் சிவந்து கிடந்தது. "என்ன ஆச்சு? ஏன் பேசமாட்டேங்கறே?" ஹீராமன் கேட்டான்.

என்ன பதில் சொல்லுவான் பல்டன்தாஸ்? பேசுவதானால் கவனமாகப் பேசு என்று ஹீராமன் முதலிலேயே அவனை எச்சரித் திருந்தான். அவன் பேசாமல் வண்டியில் போய் இருக்கையில் அமர்ந் தான். ஹீராமன் உட்காரும் இடத்தில் 'நீயும் ஹீராமனின் தோழனா?' என்று கேட்டாள் ஹீராபாய். பல்டன்தாஸ் கழுத்தை அசைத்து ஆமென்றான். பிறகு ஹீராபாய் படுத்துவிட்டாள். அவளுடைய முகலாவண்யத்தையும், பேச்சழகையும் கண்டு பல்டன் தாஸ் ஏனோ வெலவெலத்துப் போனான். ஆம்! ராம்லீலா நாடகத்தில் மெல்லிய

லாள் சீதாபிராட்டி இதே போலத்தான் களைப்புடன் படுத்திருந்தாள். ஜெய், சீதாபதி ராமச்சந்தர் கீ ஜெய்-! பல்டன்தாஸின் மனது 'ஜெய் ஜெய்! வாழி வாழி! போற்றி போற்றி' என்று உருப்போடலாயிற்று. பல்டன்தாஸ் விஷ்ணு பக்தன் பஜனைப் பாட்டு பாடுபவன். களைத்திருக்கும் சீதாப்பிராட்டியின் கால்களைப்பிடித்து விடும் விருப்பத்தை வெகு அடக்கத்துடன் வெளியிட்டான் பல்டன். அதுவும், கையினால் சைகை செய்துதான் கேட்டான். கைவிரல்கள் ஹார் மோனியத்தின் கட்டைகளை அழுத்தும் பாவனையில் இருந்தன. ஹீராபாய் சடக்கென்று எழுந்து உட்கார்ந்தாள்-"அட, பைத்தியம் பிடித்து விட்டதா உனக்கு? இறங்கு இங்கிருந்து? எடு ஓட்டம்-"

கோபமடைந்த கம்பெனிப் பெண்ணின் கண்களிலிருந்து தீப் பொறி பறப்பதை பல்டன் தாஸ் உணர்ந்தான். எடுத்தான் ஓட்டம்-!

பல்டன் தாஸ் என்ன பதில் சொல்வான்? அவன் மனதில் திரு விழாவிலிருந்தே ஓடிப்போய் விடலாம் என்ற எண்ணம் வந்தது. மழுப் பினான்-"ஒண்ணுமில்லே ஹீராமன்! ஒரு கிராக்கி கிடைச்சிருக்கு. இப்பவே டேசனுக்குப் போய் சரக்கு ஏத்தணும். சோறு இன்னும் ஆகலியே, அதுக்குள்ளாற வந்திடறேன்."

சாப்பிடும்போது துன்னிராமும் லஹஸன்வாவும் பல்டன் தாஸைப் பற்றிக் கூடைகூடையாக குற்றம் சொன்னார்கள். "எவ்வளவு சின்னப் புத்திபாரு இவனுக்கு! ராத்திரி வேளையிலும் பணம் சம்பாரிக்கக் கிளம்பிட்டான்." சாப்பிட்ட பிறகு லால்மோஹர் குழு தங்களுடைய இருப்பிடத்தைக் காலிசெய்துவிட்டு வண்டிகளுடன் ஹீராமன் தாவளத்துக்கு வந்து சேர்ந்தது. நடந்து வருகையில் ஹீராமன் லால்மோஹரிடம் தன் தோளைக்காட்டி, "என்னுடைய தோளை முகர்ந்து பாரேன்" என்றான்.

லால்மோஹர் தோளை முகர்ந்துவிட்டு கண்ணை மூடிக் கொண்டான். வாய் மெல்ல முணுமுணுத்தது- "ஆகா-! ஆகா-!"

ஹீராமன் சொன்னான்-"கொஞ்சம் கையை வைக்கறதுக்குள்ளே இத்தனை வாசனை! தெரிஞ்சுதா?"

லால்மோஹர் ஹீராமனின் கையைப் பற்றிக் கொண்டான்- "தோளிலே கையை வெச்சாங்களா? மெய்யாகவா-? இதப்பாரு ஹீராமன், நௌடங்கி பார்க்கிற வாய்ப்பை நழுவவிடாதே! கிடைக்காது, சந்தர்ப்பம்."

"நீயும் பார்க்கிறியா?"

விளக்கு வெளிச்சத்தில் லால்மோஹரின் முப்பத்திரண்டு பற்களும் பளிச்சிட்டன.

தாவளத்தை அடைந்ததும், அங்கே கூண்டுக்கருகில் யாரோ நின்றுகொண்டு ஹீராபாயிடம் பேசிக் கொண்டிருப்பதை ஹீராமன் பார்த்தான். துன்னியும், லஹஸன்வாவும் ஒரே குரலில் கேட்டனர்-

"எங்கே நின்னுட்டே! ரொம்ப நேரமாக தேடுது கம்பெனி-"

ஹீராமன் கூண்டுக்கருகே சென்றான்—அட, இது அந்தப் பெட்டி தூக்குகிற வேலையாள்தான்—சம்பாநகர் திருவிழாவில் ஹீராபாயை வண்டியில் அமர்த்திவிட்டு இருட்டில் மறைந்து போனவன்.

"வந்திட்டியா ஹீராமன்! நல்லது, இங்கே வா- இது உன்னுடைய வாடகைப் பணம், இது உனக்கு இனாம்.. இருபத்தஞ்சும் இருபத்தஞ்சும்- அம்பது!"

யாரோ தன்னை ஆகாயத்திலிருந்து பூமிக்குத் தள்ளிவிட்டது போலத் தோன்றியது ஹீராமனுக்கு. யாரோ தள்ளவில்லை, இந்தப் பெட்டி தூக்குகிற ஆள்தான் தள்ளினான்! எங்கிருந்து முளைத்தான் இவன்? 'ஹூஹும், இனாம் ஒண்ணும் வேண்டாம்' என்று சொல்ல வந்த வார்த்தை உதட்டிலேயே தங்கிவிட்டது. ஹீராபாய் சொன்னாள்—"வாங்கிக்க ஹீராமன்! இதக்கேளு, நாளைக்குக் காலையிலே ரெளத்தா கம்பெனிக்கு வந்து என்னைப்பாரு. பாஸ் வாங்கிக் கொடுக்கிறேன்- ஏன் பேசமாட்டேங்குறே?"

"இனாம், வெகுமதி எல்லாம் கொடுக்கிறாங்க பாரு சின்னம்மா, வாங்கிக்க ஹீராமன்!" என்றான் லால்மோஹர்.

ஹீராமன் லால்மோஹரை அப்படியே வெட்டுகிற மாதிரிப் பார்த்தான்... பேசுகிற விதரணை கொஞ்சமாவது தெரிகிறதா இவனுக்கு?

துன்னிராம் தனக்குதானே பேசியதை எல்லாருமே கவனித்தனர். ஹீராபாய் காதிலும் விழுந்திருக்க வேண்டும்—"வண்டியையும், மாட்டையும் உட்டுட்டு நெளடங்கி பார்க்கப்போக எந்த வண்டிக்காரனுக்குத்தான் நேரம் கிடைக்கப்போவுது?"

ஹீராமன் பணத்தைப் பெற்றுக்கொண்டே, "என்னத்தைப்பேச?" என்றான் ஹீராபாயிடம் அவன் சிரிக்க முயன்றான். கம்பெனிப்பெண், கம்பெனிக்குப் போகிறாள். ஹீராமனுக்கு என்ன வந்தது!

பெட்டி தூக்கி வழிகாட்டிக்கொண்டே முன்னே நடந்தான்— "இதோ, இப்படி வாங்க-" ஹீராபாய் நடக்கத் தொடங்கியவள், சட்டென்று நின்றாள். ஹீராமனின் மாடுகளைப் பார்த்து "நல்லது, தம்பிங்களா, வர்றேன்!" என்றாள்.

'தம்பிங்களா' என்ற சொல்கேட்டு மாடுகளும் தலையசைத்தன.

'சகோதரர்களே, இன்றிரவு! தி ரெளத்தா சங்கீத நெளடங்கி கம்பெனி மேடையில்! குல்பதன் பாருங்க குல்பதன்! மகிழ்ச்சிகரமான செய்தி! மதுராமோகன் கம்பெனியின் பிரபல நடிகை மிஸ் ஹீராதேவி- தன் அற்புதமான நடிப்பினால் ஆயிரமாயிரம் ரசிகர்களின் மனதைக் கொள்ளைகொண்ட ஹீராதேவி- ரெளத்தா கம்பெனிக்கு வந்திருக்

கிறார்! காணத்தவறாதீர்கள், இன்றிரவு! மிஸ் ஹீராதேவி- குல்பதன்-"

நௌடங்கி கம்பெனிக்காரர்களின் இந்தக் கோஷம் விழாச் சந்தையின் ஒவ்வொரு பேட்டையிலும் முழங்குகிறது—"ஹீராபாய்! மிஸ் ஹீராதேவி! லைலா, குல்பதன்! சினிமா நடிகை எல்லாம் பிச்சை வாங்கணும்- உன்னுடைய அழகு என்ன சொக்க வைக்குது. உன் மேலே எத்தனை ஆசை சொல்லிமுடியாது! நீ என்னைப் பார்த்துக் கிட்டிரு, நான் உன்னைப் பார்த்துக்கிட்டிருக்கணும் இந்த ஒரே ஒரு ஆசைதான்! கிர்-ர்-ர்-கர்-ர்-ர்-துட்-துட்-துடால்!"

எல்லாருடைய மனமும் முரசுபோல அடித்துக் கொள்கிறது.

லால்மோஹர் வண்டித் தாவளத்துக்கு இரைக்க, இரைக்க ஓடி வந்தான்—"ஏ-ஏய் ஹீராமன்! இங்கே என்ன குந்திக்கிட்டிருக்கே? போய்ப்பாரு, ஜே ஜேன்னு இருக்குது. மேளதாளம் என்ன, பாண்டு வாத்தியம் என்ன, ஹீராபாய்க்கு ஜே, ஜேன்னு முழங்குது."

ஹீராமன் வாரிச்சுருட்டிக்கொண்டு எழுந்தான். "துன்னி சித்தப்பா, நீ தாவளத்திலே இரு. நான் போய்ப் பார்த்துட்டு இதோ, ஓடியாறேன்!" என்றான் லஹஸன்வா.

துன்னியை காவலுக்கு உட்காரவைத்துவிட்டு மூன்றுபேரும் விளம்பர வண்டியின் பின்னாலேயே நடக்கலானார்கள். ஒவ்வொரு சந்திலும் நின்று பாண்டு வாத்தியத்தை நிறுத்திவிட்டு அறிவிப்பு நடந்தது. ஒவ்வொரு வாசகத்தையும், இல்லை, வார்த்தையைக் கேட்கும் போதும் ஹீராமனுக்கு உச்சி குளிர்ந்தது, மயிர்க்கூச்செறிந்தது. ஹீரா பாயின் பெயர், பெயருடன்கூட புகழ்ச்சியின் அடுக்கு மொழிகள் இதையெல்லாம் கேட்டு அவன் லால்மோஹரின் முதுகைத் தட்டிக் கொடுத்தான்—"எத்தனை பாக்கியம் நமக்கு! சொல்லு! உண்டா, இல்லையா?"

"இப்பச் சொல்லு, நாடகம் பார்க்கப்போறியா, இல்லியா?" லால் மோஹர் கேட்டான். காலையிலிருந்தே துன்னிராமும் லால்மோஹரும் அவனிடம் திரும்பத் திரும்ப முட்டிக்கொண்டார்கள்- "கம்பெனிக்குப் போய் ஒருமுறை பார்த்துவா, போகும்போது ரொம்பவும் விரும்பிச் சொன்னாங்க இல்லே?" என்று சொல்லிச் சொல்லி அலுத்துப் போய் விட்டனர். ஆனால் ஹீராமன் ஒரே பல்லவியைத்தான் திரும்பித் திரும்பிப் பாடிக்கொண்டிருந்தான்—"சட், எவன் போய்ப் பார்க்கறது? கம்பெனிப் பெண், கம்பெனிக்குப் போச்சு. இப்ப, அவளிடம் என்ன வேலை? கண்டுக்கவே மாட்டா!"

அவன் மனதுக்குள்ளேயே குமைந்து கொண்டிருந்தான். அறிவிப்பைக் கேட்டபிறகு லால்மோஹரிடம் கூறினான்—"நிச்சயம் பார்க்கணும், இல்லே? அப்படித்தானே லால்மோஹர்!"

இருவரும் யோசனை செய்து ரௌத்தா கம்பெனியை நோக்கி நடந்தனர். கூடாரத்துக்கு அருகே சென்றதும் ஹீராமன், லால்

மோஹருக்குச் சைகை செய்தான். விசாரிக்கும் பொறுப்பு லால் மோஹருக்கு அளிக்கப்பட்டது. லால்மோஹருக்கு கச்ராஹீ மொழி பேச வரும். அவன், கறுப்புக்கோட்டு அணிந்த ஒரு நபரிடம்போய், "பாபு சாஹப், கொஞ்சம் கேளுங்க" என்றான்.

கறுப்புக்கோட்டுக்காரன் முகத்தைச் சுருக்கிக்கொண்டு "என்னது? இங்கே எங்கே வந்தே?" என்று கடுகடுத்தான்.

லால்மோஹரின் கச்ராஹீ மொழி தடுமாறியது. கறுப்புக் கோட்டின் கோபக்குறியைக் கண்டு குழறினான்—"குல்—குல்- இல்லே- புல்-புல்- இல்லே-"

ஹீராமன் சட்டென்று சமாளித்தான்—"ஹீராதேவி எங்கே இருக் காங்க, சொல்ல முடியுமா?"

கறுப்புக்கோட்டின் கண்கள் உடனே சிவந்தன. எதிரிலே நின்ற கூர்க்காவை அழைத்து "இவங்களை ஏன் உள்ளே விட்டாய்?" என்று அதட்டினான்.

'ஹீராமன்!' கண்ணாடிக் குமிழ்கள் குலுங்கும் அதே குரலொலி எங்கிருந்து வருகிறது? கூடாரத்தின் படுதாவை விலக்கியவாறு ஹீராபாய் அழைத்தாள்—"இங்கே வா, உள்ளே- இதப்பாரு பகதூர்! இந்த ஆளை நல்லா அடையாளம் புரிஞ்சுக்க. இது என்னுடைய ஹீராமன், தெரிஞ்சுதா?"

கூர்க்கா காவலாளி ஹீராமனைப் பார்த்து சற்றே புன்னகை புரிந்தான். பிறகு அந்தண்டைபோய் கறுப்புக்கோட்டிடம் தெரிவித் தான்—"ஹீராபாயின் ஆளாம், தடுக்கக் கூடாது அப்படீன்னாங்க."

லால்மோஹர் ஓடிப்போய் பீடா வாங்கிவந்தான். கூர்க்காவிடம் பீடாவை நீட்டி, "உங்களுக்குத்தான், பீடா போடுங்க" என்றான்.

"ஆங்! ஒண்ணு இல்லே, அஞ்சுபாஸ். எல்லாமே எட்டணா டிக்கட் டோட பாஸ்! திருவிழாவில் இருக்கிறவரையிலும் தினமும் ராத்திரி வந்து ஆட்டம் பார்த்துட்டுப்போகச் சொல்லிச்சு. எல்லாரையும் ஞாபகம் வெச்சிருக்குது. உன்னோட கூட்டாளிங்க எல்லாருக்கும் பாஸ் வாங்கிட்டுப்போ அப்படீன்னுது. கம்பெனிப் பெண்களின் குணமே தனிதான்! உண்டா இல்லையா?"

லால்மோஹர் சிவப்புக் காகிதத் துண்டுகளைத் தொட்டுப் பார்த்தான்—"பாஸ்! நீ கில்லாடிதான் ஹீராமன் அண்ணே! ஆனா அஞ்சு பாஸ் வெச்சுட்டு என்ன செய்ய? பல்டன்தாஸ் போனவன் திரும்பியே வரலியே!"

ஹீராமன் பதிலளித்தான்—"போகட்டும், அதிர்ஷ்டம் கெட் டவன்! அவனுக்குக் கொடுத்து வைக்கலே- ஆமா, முதல்லே எல்லாரும் ஆண்டவன்மேலே சத்தியம் செஞ்சு சொல்லணும், கிராமத்திலே,

வீட்டிலே ஒரு குஞ்சுக்குக்கூட இந்த விஷயம் தெரியக்கூடாது."

லால்மோஹர் ஆத்திரம் பொங்கக் கூவினான்—"எந்தப் பயலும் மூச்சுவிடமாட்டான் கிராமத்துக்குப்போய். அந்தப் பல்டா பல்டி யடிச்சா அடுத்த தடவை அவனைக் கூட்டிவரமாட்டேன்."

ஹீராமன் தன்னுடைய கைப்பையை ஹீராபாயிடம் ஒப்படைத் திருக்கிறான். திருவிழாச் சந்தையிலே பொருள் பத்திரமாக இருக்கும் என்று என்ன உறுதி? ஜேப்பு மாறிகளும், முடிச்சு மாறிகளும் உலவுகிற இடம். கூட்டாளிகள் மேலேயும் எப்படி நம்பிக்கை வைப்பது? ஹீராபாயும் ஒப்புக்கொண்டுவிட்டாள். ஹீராமனின் கறுப்புத் துணிப் பையை அவள் தன்னுடைய தோல்பெட்டியில் பத்திரப்படுத்தினாள். பெட்டிமேலே துணியினால் உறை உள்ளுக்குள்ளே பட்டுத் துணியில்-! ஹீராமனுக்கு ஏகப்பெருமை!

லால்மோஹரும், துன்னிராமும் ஹீராமனின் புத்தியை வானளாவப் புகழ்ந்தனர்; அவனுடைய பாக்கியத்தை வாய்க்கு வாய் மெச்சினர். அவனுடைய அண்ணனையும், அண்ணியையும் பதுங்கிய குரலில் குறை கூறினர். ஹீராமனைப்போல தங்கமான தம்பி கிடைத்தும்கூட அவர்களுக்கு இவனுடைய அருமை தெரியவில்லை. வேறொரு அண்ணனாக இருந்தால்-

லஹஸன்வாவின் முகம் தொங்கியிருக்கிறது. விளம்பர அறிவிப் பைக் கேட்டுக்கொண்டே அவன் எங்கே போனானோ அவனுக்கே தெரியாது. விளக்கு வைத்து ஒரு நாழிகைக்குமேல் வந்து நிற்கிறான். லால்மோஹர், எசமானுக்கே உரிய தோரணையுடன் அவனைத் திட்டினான், கிராமத்து வசவுமொழி ஒன்றைச் சேர்த்து 'சோதாப்பயல்' என்றான்.

பொங்கலை அடுப்பில் ஏற்றிவைத்துக்கொண்டே துன்னிராம் கேட்டான் "வண்டிகளை யாரு பார்த்துக்கறதுன்னு முதல்லேயே முடிவு செய்யணும்."

"யாரா? இந்த லஹஸன்வா பின்னே எதுக்கு இருக்கிறான்?"

இதைக்கேட்டு லஹஸன்வா அழமாட்டாத குறையாகக் கெஞ்சி னான்—"ஏ- எசமான், கையெடுத்துக் கும்பிடறேன். ஒரே ஒருமுறை பார்க்க விடுங்க, ஒருதடவை மட்டும்."

ஹீராமன் பெருந்தன்மையுடன் கூறினான்—"நல்லது, ஒரு பார்வை ஏன், ஒருமணிநேரம் நிதானமாகப் பாரு, அதுவரை நான் இங்கே பார்த்துக்கறேன்."

நாடகம் ஆரம்பிப்பதற்கு ஒருமணி நேரம் முன்னாலிருந்தே கொட்டும், மேளமும் ஆரம்பித்துவிடுகிறது. மேளச்சத்தத்தைக் கேட்டதுமே ஜனங்கள் விட்டில் பூச்சிபோல போய் விழுகிறார்கள். டிக்கட் கொடுக்கும் ஜன்னலருகே கூட்டத்தைக் கண்டு ஹீராமனுக்குச் சிரிப்பு வந்தது—"லால் மோஹர், அங்கேபாரு, எப்படி இடிச்சுத்

தள்ளறாங்க பாரு, சனங்க."

"ஹீராமன் அண்ணே!"

"யாரு? பல்டன்தாஸா? எங்கிருந்து சரக்கு எடுத்து வந்தே?" லால்மோஹர் ஏதோ அன்னிய வண்டிக்காரனிடம் கேட்பதுபோல வினவினான்.

பல்டன்தாஸ் கையைப் பிசைந்துகொண்டு மன்னிப்புக் கேட்டான்—"தப்புச் செஞ்சுட்டேன்; என்ன தண்டனை வேணுமானாலும் கொடுங்க, ஏத்துக்கறேன். அன்னிக்கு என்ன நடந்திச்சுன்னா_"

ஹீராமனின் மனம் என்னும் பறவை மேளதாளத்துக்கு ஒப்ப நடனமாடிக்கொண்டிருந்தது. "பல்டா! கிராமத்துப் பொண்ணுன்னு நினைக்காதே. இதப்பாரு, உனக்கும் சேர்த்து பாஸ் கொடுத்திருக்குது. பாஸை வாங்கிக்க, நௌடங்கி பாரு மஜாவா!"

லால்மோஹர் குறுக்கிட்டான்—"ஆனா ஒரு நிபந்தனை! நடு நடுவிலே லஹஸன்வாக்கும்_"

பல்டன்தாஸிடம் சொல்லவே வேண்டியதில்லை. அவன் லஹஸன்வாவிடம் பேசிவிட்டுத்தான் வந்திருக்கிறான்.

லால்மோஹர் இரண்டாவது நிபந்தனை விதித்தான்— "கிராமத்தில் இந்த விஷயம் தெரிஞ்சுதோ, பார்த்துக்க_"

"சிவ சிவ" என்று நாக்கைக் கடித்துக்கொண்டான் பல்டன். பிறகு "எட்டணா கேட்டு அந்தப் பக்கமா இருக்குது" என்றான். நுழை வாயிலில் நின்றிருந்த சிப்பந்தி பாஸை வாங்கிக்கொண்டு ஒவ்வொரு வரையும் ஏற இறங்கப் பார்த்தான். பிறகு கேட்டான்—"இது பாஸ் அல்லவா! எங்கேயிருந்து கெடச்சுது உங்களுக்கு?"

இப்பொழுது லால்மோஹர் தன்னுடைய கச்ராஹீ மொழிப் புலமையை அவிழ்த்துவிட்டான். அவனுடைய கோபத்தைக் கண்டு கம்பெனிச் சிப்பந்தி பயந்தே போனான். லால்மோஹர் சொன்னான்— "எங்கிருந்து கிடைச்சதுன்னா கேட்கிறே? நாலு என்ன, இதோ இன்னும் ஒண்ணு இருக்கு" ஜேபியிலிருந்து ஐந்தாவது பாஸையும் எடுத்துக் காட்டினான்.

ஒரு ரூபாய் கேட்டில் கூர்க்கா நின்றிருந்தான். ஹீராமன் அவனை அழைத்து, "ஏய் காவலரே, காலையிலே எங்களை அடையாளம் காட்டினாங்க. இப்ப மறந்துட்டீங்களா?" என்று கேட்டான்.

"இவங்க எல்லாம் ஹீராபாயின் ஆளுங்க, போகவிடு. பாஸ் வெச்சிருந்தா பின்னே எதுக்கு தடுக்கறே?" என்று சொன்னான் கூர்க்கா.

எட்டணா வகுப்பு!

மூன்றுபேரும் இப்போதுதான் முதல் முறையாக கொட்டகையை உள்ளேயிருந்து பார்க்கிறார்கள். எதிரில் நாற்காலி, பெஞ்சு வகுப்புகள். படுதாமீது ராமர் காட்டுக்குச் செல்லும் காட்சி ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. பல்டன்தாஸ் புரிந்துகொண்டு, இரண்டு கரங்

களையும் தலையில் வைத்து வணங்கினான்—"படுதாவிலே இருக்கிற ராமர், சீதை, லட்சுமணருக்கு ஜெய், ஜெய்!" என்றான். பக்திப் பரவசத்தினால் பல்டனின் கண்கள் நிறைந்தன.

ஹீராமன் லால்மோஹரிடம் கேட்டான்—"நோட்டூசு வண்டிப் படங்கள் எல்லாம் எங்கே நிக்குது? எப்ப ஆரம்பிக்கும்?"

லால்மோஹர் இதற்குள் பக்கத்திலுள்ள பார்வையாளர்களிடம் கேட்டு தகவல் சேகரித்துவிட்டான். ஹீராமனுக்கு அவன் எடுத்துரைத்தான்—"ஆட்டம் இப்ப படுதாவுக்குள்ளே இருக்கு. திரையைப் போட்டுட்டு எதுக்கு வாத்தியம் வாசிக்கறாங்கன்னா, அப்பத்தான் கூட்டம் சேரும்."

பல்டன் தாசுக்கு மத்தளம் வாசிக்கவரும். ஆகவே மேளம் ஒலிக்கும்போது அவன் தலையை ஆட்டுகிறான். நெருப்புப் பெட்டியில் விரலால் தட்டி தாளம் போடுகிறான். பீடி குடிக்கக் கொடுத்து ஹீராமனும் அக்கம்பக்கத்தில் இரண்டொருவருடன் சிநேகிதம் செய்து கொண்டான். லால்மோஹருக்கு அறிமுகமான ஒருவன் போர்வையினால் உடலை மூடியவாறு கூறினான்—"ஆட்டம் தொடங்க இன்னும் நேரம் ஆகும். அது வரையிலும் ஒரு தூக்கம் போடலாம். எல்லா வகுப்புகளிலும் எட்டணா வகுப்புதான் நல்லது. எல்லாருக்கும் பின்னால் உயரமான இடத்தில் அமைந்திருக்கிறது. தரையில் வெது வெதுப்பான வைக்கோல் விரிப்பு. நாற்காலியிலும், பெஞ்சியிலும் உட்கார்ந்துகொண்டு இந்தக் குளிரிலே ஆட்டம் பார்க்கிறவங்க குளிரிலே விறைத்துப்போய் அடிக்கடி டீ குடிக்க எழுந்திருப்பாங்க."

அந்த மனிதன் தன்னுடைய கூட்டாளியிடம் சொன்னான்—"ஆட்டம் ஆரம்பிச்சதும் உசுப்பிவிடு அண்ணே! இல்லே, ஆட்டம் தொடங்கறப்ப வேண்டாம், ஹிரியா மேடைக்கு வந்ததும் எழுப்பிவிடு."

ஹீராமனின் நெஞ்சத்தில் ஏதோ உறுத்தியது—'ஹிரியாவாமே! விவஸ்தை கெட்ட ஆளு போலிருக்குது.' அவன் லால்மோஹருக்கு கண்சாடை செய்து "இந்த ஆளுகிட்டப் பேசத்தேவையில்லை" என்று தெரிவித்தான்.

ததின்-தோம்- தத்தின் தோம்! திரை உயர்ந்தது. ஹை-யா! ஹீராபாய் முதலிலேயே மேடையில் தோன்றிவிட்டாள்! கொட்டகை நிரம்பி வழிகிறது. ஹீராமனின் வாய் வியப்பினால் திறந்திருக்கிறது. லால்மோஹருக்கு ஏனோ சிரிப்பு வருகிறது. அவன் ஹீராபாயின் ஒவ்வொரு அசைவையும் கண்டு காரணமின்றிச் சிரிக்கிறான்.

நாடகத்தில் குல்பதன் தர்பார் மண்டபத்தில் வீற்றிருக்கிறாள். அமர்க்களமாக ஆணையிடுகிறாள்—"அழகான தக்த் ஹஜாரா சிம்மாசனம் செய்துகொண்டுவரும் கலைஞருக்கு ஏராளமான வெகுமதி அளிக்கப்படும்—கலைநுணுக்கம் தெரிந்தவர் யாராவது இருக்கி

றார்களா. இருந்தால் உடனே தொடங்குக பணியினை- தகத் ஹஜாரா சிம்மாசனம் கொண்டு வாருங்கள்! தரிகிட தரிகிட தித்தூம் தரிகிட—"

எவனோ ஒருவன் நடனமாடத் தொடங்கிவிட்டான். புகழ ஆரம்பித்தான்—"ஆஹா! என்ன குரல்! ஹீராபாய் வெத்திலை பாக்கு புகையிலை எதுவும் போடமாட்டாங்கன்னு சொல்றது சரிதான். ஒழுக்கமுள்ள வேசி-" "எவண்டா சொன்னது, ஹீராவை வேசின்னு? பல்லிலே கருப்புச் சாந்து எங்கே?-" "அதைப் பவுடர் போட்டு அழிச்சிருப்பா." "அப்படியெல்லாம் இல்லை- இந்த வேண்டாத பேச்சை எடுத்தவன் எவண்டா? வேசின்னு சொல்றான். உனக்கு எப்படிடா தெரியும்? படவா? உடாதே அவனை, அடிச்சு லொத்திக் காப்பு கழத்திடு- விட்டேனா பார்-"

ரகளைக்கிடையில் ஹீராமன் கர்ச்சிக்கும் குரல் கேட்கிறது— "வாடா இந்தப் பக்கம், கழுத்தை வெட்டிச்சாய்ச்சுடுவோம் தெரியுமா?"

லால்மோஹர் சாட்டை விளாரைச் சொடக்கி எதிரே இருப்பவர்களை மிரட்டுகிறான். பலடன்தாஸ் வேறொரு ஆசாமியின் மார்பின் மீது ஏறி உட்கார்ந்திருக்கிறான்— "படவா, ஹீரா ராணியைத் திட்டவா செய்யறே? வாய் கூசாமல்?"

இத்தனைபேரிலும் கூச்சலிட்டு ரகளை செய்யாமலிருந்தது துன்னிராம்தான். அடிதடி ஆரம்பித்ததும் அவன் கொட்டகையிலிருந்து பிடித்தான் ஓட்டம்!

கறுப்புக்கோட்டு அணிந்த மானேஜர் கூர்க்காவுடனும், இன்ஸ் பெக்டருடனும் ஓடி வந்தார். இன்ஸ்பெக்டர் சவுக்கினால் அடிக்க ஆரம்பித்தார். சாட்டையடிபட்டு லால்மோஹர் துடித்துப் போனான். கச்ராஹீ மொழியில் பதில் கூறினான்—"இன்ஸ்பெக்டர்சார், அடிக்கவா செய்யறீங்க? அடிங்க, நல்லா அடிங்க. ஆனால் என்கிட்ட பாஸ் இருக்குது. இதப்பாருங்க பாஸ் இன்னொரு பாஸ் ஜேபியிலே வெச்சிருக்குது. டிக்கட்டு இல்லே, பாஸ்-! எங்க முன்னாலே கம்பெனிப் பெண்ணைக் கெட்டவார்த்தை சொல்லி திட்டினாங்க. எங்களாலே அதை எப்படிப் பொறுக்க முடியும்? அதான் அடிச்சோம்."

கம்பெனி மானேஜருக்கு இப்பொழுது எல்லாம் புரிந்துவிட்டது. அவர் இன்ஸ்பெக்டரிடம் எடுத்துரைத்தார்.

"சார், எனக்கு விளங்கிடிச்சுங்க மதுராமோகன் கம்பெனியின் திருட்டுத்தனம்! ஆட்டம் நடக்கறப்போ கலாட்டா பண்ணி நம்ம கம்பெனிக்குக் கெட்டபெயர் உண்டு பண்ணுவதற்கான சூழ்ச்சி இது. வேண்டாம் சார், இந்த ஆளுங்களை விட்டுடுங்க, ஹீராபாயின் ஆட்கள் இவங்க. இவங்களோட உசிரே ஆபத்தில் இருக்குது. விட்டுடலாம் இவங்களை."

ஹீராபாயின் பெயரைக் கேட்டதுமே இன்ஸ்பெக்டர் மூன்று பேரையும் விட்டுவிட்டார். மூவரையும் மானேஜர் ஒரு ரூபாய்

இருக்கைக்கு அழைத்துச் சென்று உட்காரச் செய்தார். "நீங்க இங்கே உட்கார்ந்து வசதியாகப் பாருங்க, பீடா அனுப்பறேன் உங்களுக்கு" என்று அன்பொழுகக் கூறினார்.

கொட்டகை அமைதியானது. ஹீராபாய் மீண்டும் மேடைக்கு வந்தாள்.

சற்று நேரத்துக்குப்பிறகு மூன்று பேருக்கும் திடீரென்று துன்னிராமின் நினைவு வந்தது—"அட, எங்கே போனான் இந்த துன்னிராம்?"

"அய்யா, முதலாளி!" லஹஸன்வா தியேட்டருக்கு வெளியிலிருந்து குரல் கொடுத்தான் "லால்மோஹர் அய்யா எங்கே இருக்கீங்க?"

லால்மோஹர் வெண்கலக் குரலில் பதிலளித்தான்—"இப்படி வா, இந்தப் பக்கமா வா! ஒரு ரூபாய் கேட்டு வழியாலே!" பார்வையாளர்கள் அனைவரும் லால்மோஹர் பக்கம் திரும்பிப் பார்த்தனர். கூர்க்கா லஹஸன்வாவை லால்மோஹரிடம் அழைத்து வந்தான். லால்மோஹர் ஜேபியிலிருந்து பாஸை எடுத்துக் காட்டினான். வந்ததுமே லஹஸன்வா கேட்டான்—"முதலாளி, அந்த மாதிரி பேசினது யாரு? சொல்லுங்க- அவனுடைய மூஞ்சியைக் கொஞ்சம் காட்டுங்க."

லால்மோஹர் லஹஸன்வாவை அமைதிப்படுத்தினான்.

இவர்கள் நாலுபேரிடமும் 'நௌடங்கியில் என்ன பார்த்தீங்க?' என்று மட்டும் கேட்காதீர்கள். கதையெல்லாம் யாருக்குத் தெரியும்? தொடக்கத்திலிருந்தே ஹீராமன் நினைத்துக் கொண்டிருந்தான், 'ஹீராபாய் என்னைப் பார்த்துக்கொண்டுதான் ஆடிப்பாடுகிறாள், பேசுகிறாள்' என்று. ஆனால் லால்மோஹரின் நினைப்போ, 'ஹீராபாய் என்னைத்தான் பார்க்கிறாள். ஹீராமனைவிட லால்மோஹர்தான் செல்வாக்குள்ள ஆளுன்னு அவள் புரிந்துகொண்டுவிட்டாள்' என்ற இறுமாப்பு அவனுக்கு. பல்டன் தாசுக்கு கதை புரிந்தமாதிரி தெரிந்தது. வேறு என்ன கதை? எல்லாம் ராமாயணம்போலத்தானே. எல்லாக் கதையிலும் அதே ராமன், அதே சீதை, அதே லெட்சுமணன், அதே ராவணன். மெல்லியலாள் சீதையை ராமனிடமிருந்து பறித்துச்செல்ல ராவணன் வெவ்வேறு உருவத்தில் வருகிறான். ராமன்சீதைகூட ஒவ்வொரு கதையிலும் வேறுவேறு வேடத்தில் வருகிறார்கள். இங்கே தக்த் ஹஜாரா சிம்மாசனம் செய்கிற தோட்டக்காரன் மகன்தான் ராமன். குல்பதன் தான் சீதை. தோட்டக்காரன் மகனுக்குத் தோழனாக வருகிறானே அவன் லெட்சுமணன். சுல்தான்தான் ராவணன்- துன்னிராமுக்கு நல்ல காய்ச்சல். லஹஸன்வாவுக்குக் கோமாளி வேஷம்தான் மிகவும் பிடித்திருக்கிறது. "சிரையா தோஹ்கே லேகே நா, ஜயீ பே நர்ஹட் கே பஜரியா!" அவனுக்கு கோமாளியின் தோழனாவதற்கு மிகுந்த ஆசை—கோமாளி சார், என்னை உங்க தோழனாக எடுத்துப்பீங்களா?

ஹீராமன் நாவில் ஒரு பாட்டின் அடி நடனமிடுகிறது—"மாரே கயே குல்ஃபாம்!" (மடிந்தானே குல்ஃபாம்). யார் அந்த குல்ஃபாம்? ஹீராபாய் ஏனோ உருக்கமாக அழுதுகொண்டே பாடினாள்—'மாரே கயே குல்ஃபாம்!' த்ஸொ, த்ஸொ பாவம் குல்ஃபாம்!

ஆட்டம் முடிந்து போகும்போது போலீஸ் அய்யா சாட்டை விளாரைத் திருப்பிக் கொடுத்தார், "லாத்தியும், சாட்டையும் எடுத்திட்டா வந்தீங்க ஆட்டம் பார்க்க?" என்று கேட்டார்.

மறுநாள் திருவிழாச்சந்தையில் செய்தி பரவியது—'மதுராமோகன் கம்பெனியிலிருந்து ஓடிவந்துட்டாங்க ஹீராபாய். அதனாலேதான் இந்தத் தடவை மதுராமோகன் கம்பெனி வரவில்லை. அந்தக் கம்பெனி குண்டர்கள் ரகளை பண்ண வந்திருக்காங்க. ஹீராபாயும் ஒண்ணும் குறைச்சல் இல்லே. பலே கைகாரி நடிகை. பதிமூணு சிலம்பக்காரங்களை கூடவே கொண்டு வந்திருக்காங்க. 'என் அன்பே!' அப்படீன்னு சொல்ல எவனுக்காவது துணிவு உண்டா? சொல்லிப் பார்க்கட்டும் அப்பத்தெரியும் சேதி!"

பத்து தினங்கள். பகலும் இரவும்!.

பகலெல்லாம் ஹீராமன் வாடகைக்கு வண்டியடிப்பான். பொழுது சாய்ந்ததுமே நாடக வாத்திய கோஷம் தொடங்கிவிடும். மேளச்சத்தம் காதில் விழ ஆரம்பித்ததும் ஹீராபாய் தன்னை அழைப்பதாக அவன் உணர்வான்—"அண்ணே. தோழா. ஹீராமன். குருஜீ!" பகல் பூராவும் ஒன்றுமாற்றி ஒன்று ஏதாவது வாத்தியம் அவனுடைய செவிகளில் ஒலித்துக்கொண்டே இருக்கும்—ஹார் மோனியம், மத்தளம், டோலக், ஹீராபாயின் சலங்கை இப்படி ஏதாவதொன்று ஒலித்துக்கொண்டே இருக்கும். ஹீராமன் எழுந்திருப் பதும், உட்காருவதும், நடப்பதும் இந்த வாத்தியங்களின் லயத்திற்கு ஏற்றபடிதான். மானேஜர் முதல் படுதா இழுக்கும் பொடியன் வரையிலும் எல்லாருமே அவனை ஹீராபாயின் ஆள் என்று தெரிந்து கொண்டுவிட்டனர்.

பல்டன்தாஸ் தினமும் மாலையில் ஆட்டம் தொடங்குமுன் பயபக்தியுடன் மேடையை கையெடுத்துக் கும்பிடுவான். லால்மோஹர் ஒருநாள் கச்ராஹீ மொழியில் தன்னுடைய திறமையை ஹீராபாயிடம் காட்டப்போனான். ஹீராபாய் அவனைக் கண்டுகொள்ளவே இல்லை. அவன் முகம் சிறுத்துப்போய்விட்டது. அவனுடைய பணியாள் லஹஸன்வா கையைவிட்டுப்போய்விட்டான். ஆம், லஹஸன்வா நௌடங்கி கம்பெனியிலேயே சேர்ந்துவிட்டான். முதலில் கோமாளி யிடம் நட்புக் கொண்டான். மெல்ல மெல்ல கம்பெனி ஆளாகி விட்டான். நாள் பூராவும் வேலை செய்கிறான். தண்ணீர் மொண்டு

வருவது, துணிகளைத் துவைப்பது இந்த மாதிரி எடுபிடிவேலை. 'கிராமத்திலே என்ன வெச்சிருக்குது, அங்கே எதுக்குப் போகணும்?' என்று கேட்கிறான். லஹஸன்வா போனதில் லால்மோஹருக்கு ஏகப்பட்ட வருத்தம். துன்னிராமுக்கு காய்ச்சல் வந்து கிராமத்துக்குத் திரும்பிவிட்டான்.

ஹீராமன் இன்று காலையிலிருந்து சாமான் ஏற்றிக்கொண்டு மூன்றுமுறை ஸ்டேஷன்போய் வந்துவிட்டான். ஏனோ, இன்று அவனுக்கு அண்ணன்மகளின் நினைவு வந்துகொண்டே இருக்கிறது- துன்னிராம் கிராமத்துக்குப்போய் சுரவேகத்தில் எதுவும் உளறிவிடக் கூடாதே என்ற கவலை வேறு. இங்கே இருக்கும்போதே உளறினானே— "குல்பதன், தக்த் ஹஜாரா!" லஹஸன்வாதான் கொடுத்துவைத்தவன். நாள்பூராவும் ஹீராபாயைப் பார்த்துக்கொண்டே இருப்பான். நேற்று அவனிடம் சொன்னான்—"ஹீராமன் அய்யா, உங்க தயவிலே சந்தோசமா இருக்கேன். ஹீராபாயின் சேலையைத் துவச்சா பக்கெட் தண்ணி பூராவும் அத்தர்வாசனை கமகமக்குது. அந்தத் தண்ணியிலே என் மேல் துண்டைப்போட்டுப் பிழிந்தேன். மோந்து பார்க்கிறியா!" என்று வேறு கேட்டான். தினமும் ராத்திரி வேளையிலே எவனாவது ஒருவன் ஹீராபாயை வேசி என்பான். எத்தனை பேரிடம் சண்டை போடுவான்? ஊர்வாயை யார்தான் மூடமுடியும்? வாய் புளித்ததோ, மாங்காய் புளித்ததோ என்று பேசிவிடுகிறார்கள். என்ன ஜனங்கள்? ராசாவையே குற்றம் சொல்கிறார்கள். அவன் முடிவு செய்துவிட்டான், இன்றைக்கே ஹீராபாயைப் பார்த்து "நாடகக் கம்பெனியில் இருந்தால் இப்படித்தான் அவதூறாகப் பேசுவாங்க. நீங்க ஏன் சர்க்கஸ் கம்பெனி யிலே சேரக்கூடாது?" அப்படீன்னு கேட்க வேண்டியதுதான். எல்லார் முன்னாலேயும் ஆட வேண்டியிருக்கிறது. அப்போதெல்லாம் ஹீரா மனின் இதயம் படபடக்கும். சர்க்கஸ் கம்பெனிக்குப்போனால் சிங்கம், புலியை ஆட்டுவைப்பாள்! சிங்கம்—புலிகிட்டெ நெருங்க எவனுக்காவது தைரியம் இருக்குமா? அங்கேதான் ஹீராபாய் பாதுகாப்பாக இருக்க முடியும். இந்த வண்டி எங்கிருந்து வருது?

"ஹீராமன் அண்ணே!" லால்மோஹரின் குரலைக்கேட்டு ஹீராமன் திரும்பிப் பார்த்தான். "என்ன ஏற்றிவர்றே லால்மோஹர்?"

"உன்னைத் தேடிக்கிட்டிருக்காங்க ஹீராபாய், டேசன்லே. கிளம்பிப் போய்க்கிட்டிருக்காங்க," ஒரே மூச்சில் தெரிவித்தான். லால் மோஹரின் வண்டியில்தான் டேசனுக்குப் போனாளாம்.

"என்ன சொன்னே லால்மோஹர்! ரெயில் வண்டியிலே போறாங்களா?" ஹீராமன் வண்டியைக் கட்டிக்கொண்டு ஸ்டே ஷனுக்கு விரைந்தான்.

"குருஜீ!" ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் பெண்கள் தங்கும் அறை வாயிலிலிருந்து படுதாவில் மறைந்திருந்த ஹீராபாய் குரல்

கொடுத்தாள். ஹீராமனின் பையை நீட்டியவாறு கூறினாள்—"இந்தா, வாங்கிக்க இதை. ஆண்டவனே! உன்னேப் பார்க்காமலேயே போய் விடுவேனோ என்று பயந்துக்கிட்டிருந்தேன். நான் இங்கிருந்து புறப்பட்டுப்போறேன் குருஜி!"

பெட்டி தூக்கும் அந்த ஆசாமி இன்று கோட்டும், சூட்டும் அணிந்து துரைமாதிரி நிற்கிறான். "லேடீஸ் கம்பார்ட்டிலே ஏத்தணும், தெரிஞ்சுதா?" என்று போர்ட்டர்களுக்கு உத்தரவிடுகிறான்.

ஹீராமன் பையை வாங்கிக்கொண்டு வாய்பேசாமல் நின்றான். தன் உடைக்குள்ளேயிருந்து பையை எடுத்துத் தந்திருக்கிறாள் ஹீரா பாய். பறவையின் உடம்பைத்தொட்ட மாதிரி சூடாக இருந்தது பை!

"வண்டி வந்திடிச்சி" பெட்டி தூக்கும் அந்த ஆள் முகத்தைக் கோணிக்கொண்டு ஹீராபாயிடம் சொன்னான். "இவனிடம் ஏன் இந்த அக்கறை?" என்று கேட்பது போலிருந்தது முகக்குறிப்பு.

ஹீராபாய் பரபரப்படைந்தாள். "ஹீராமன் இங்கே வா, உள்ளே! நான் திரும்பவும் மதுராமோகன் கம்பெனிக்கே போறேன். நம்ம ஊர்க்கம்பெனி– பனைலி விழாவுக்கு வருவே இல்லே?"

ஹீராபாய், ஹீராமனின் தோளில் தன் கையை வைத்தாள்– இம்முறை வலதுதோளில், பிறகு தன்னுடைய பையிலிருந்து கொஞ்சம் பணத்தை எடுத்துக்கொண்டே "நல்லதாக ஒரு சால்வை வாங்கிக்க, கம்பளிச் சால்வை–" என்றாள்.

இத்தனை நேரத்துக்குப் பிறகு ஹீராமனின் வாயிலிருந்து வார்த்தைகள் வெடித்தன— "த்ஸொ– எப்பப்பாரு ரூபாய், பணம்; வெச்சுக்குங்க நீங்களே: என்ன செய்ய சால்வையை வெச்சுக்கிட்டு?"

ஹீராபாயின் கை அப்படியே நின்றது. அவள் ஹீராமனின் முகத்தை ஆழ்ந்து கவனித்தாள். "தோழா, உன் மனசு ரொம்பவே கஷ்டப்படுது இல்லே? படகுத்துறை மஹுவாவை வியாபாரி விலைக்கு வாங்கிட்டான் குருஜி! என்ன செய்ய?" என்றாள்.

ஹீராபாயும் உணர்ச்சிவசப்பட்டாள். பெட்டிதூக்கி வெளியி லிருந்தவாறே குரல் கொடுத்தான்—"வண்டி வந்தாச்சு." ஹீராமன் வெயிட்டிங் ரூமிலிருந்து வெளியே வந்தான். மூட்டைத்தூக்கி கோமாளிபோல முகத்தை வைத்துக்கொண்டு அவனிடம், "பிளாட் பாரத்துக்கு வெளியே ஓடு தம்பி! டிக்கெட்டில்லாமல் பிடிபட்டா மூணுமாசம் கம்பி–" என்றான் கேலியாக.

ஹீராமன் பேசாமல் கேட்டுக்கு வெளியே போய் நின்றான். 'டேசன் சமாச்சாரம், ரெயில்வே அரசாங்கம்!' இல்லேன்னா, இந்த மூட்டைத்தூக்கியின் முதுகைப்பதம் பார்த்திருப்பான் ஹீராமன்.

ஹீராபாய் நேர் எதிரிலுள்ள பெட்டியில் ஏறினாள். அடடா, எத்தனை பாசம்! வண்டியில் உட்கார்ந்துகூட ஹீராமனையே வைத்த விழி வாங்காமல் பார்க்கிறாளே! பக்கத்தில் நின்றிருந்த லால்

மோஹருக்குப் பொறாமையாக இருந்தது. ஹீராமன் நினைத்தான், 'இங்கேயும் பழிபோல வந்து நிற்கிறான். இன்னத்திலேதான் பங்குக்கு வரணும்னு விவஸ்தை கிடையாதா_'

வண்டி ஊதிவிட்டது. தன் உள்ளேயிருந்துதான் கூஊஊ என்று கூக்குரல் கிளம்பி வந்ததுபோல ஹீராமன் உணர்ந்தான்.

_சிச்சுக்ச்சுக்_! வண்டி அசைந்தது. ஹீராமன் தன்னுடைய வலதுகால் கட்டைவிரலை இடது குதிகாலினால் நன்றாக அழுத்தி னான். நெஞ்சுப் படபடப்பு சரியாகிவிட்டது. ஹீராபாய் கத்தூரிப்பூ நிறக் கைக்குட்டையினால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். கைக்குட்டையை ஆட்டி போய்வருகிறேன் என்று சைகை செய்கிறாள். கடைசிப் பெட்டியும் மறைந்து ப்ளாட்பாரம் சூனியமாகிவிட்டது. எல்லாமே சூனியமாகிவிட்டதுபோல தோன்றியது. ஹீராமன் தன் வண்டிக்கருகே திரும்பிவந்தான்.

ஹீராமன் லால்மோஹரிடம் கேட்டான்—"கிராமத்துக்கு எப்பத் திரும்பப்போறே?"

"இப்பவே கிராமத்துக்குப்போய் என்ன செய்ய? நாலு காசு சம்பாரிக்க இதுதான் நேரம்! ஹீராபாய் போயாச்சு இல்லே? இனிமேல் திருவிழாக்காரங்களும் கடையைக் கட்டுவானுக."

"நல்லது. வீட்டிலே ஏதாவது சேதி சொல்லணுமா?"

லால்மோஹர் ஹீராமனையும் தடுக்க முயன்றான். ஆனால் ஹீராமன் தன்னுடைய வண்டியை கிராமத்துக்குப்போகும் சாலை யைப் பார்த்துத் திருப்பினான். திருவிழாவிலே என்ன வெச்சிருக்கு இப்ப? உதவாக்கரை விழாச்சந்தை!

ரெயில்வே லைன் பக்கமாகவே நெடுந்தூரம் செல்கிறது பாதை. ஹீராமன் இதுவரையிலும் ரெயிலில் ஏறினதே இல்லை. அவனுடைய மனதில் மறைந்திருந்த பழைய ஆசை தலைதூக்கியது, ரெயிலில் ஏறி பாட்டுப்பாடிக்கொண்டே பூரி ஜகந்நாத் யாத்திரைக்குப்போகும் ஆசை. கழுத்தைத் திருப்பி வண்டியின் கூண்டைப் பார்க்கும் துணிவே வரவில்லை. முதுகில் இப்போதும் தினவெடுக்கிறது. இப்போதும் அவனுடைய வண்டியில் செண்பகப்பூ வாசம் வீசுகிறது. பாட்டின் ஓர் அடி நினைவிற்கு வருகிறது திரும்பத் திரும்ப! மத்தளம் முத்தாய்ப்பு வைக்கிறது, ஒவ்வொரு முறையும்!

அவன் திரும்பிப் பார்த்தான் கூண்டினை. மூடையும் இல்லை, மூங்கிலும் இல்லை, புலியும் இல்லை. தேவகன்னிகை. தேவி. தோழி. ஹீராதேவி. படகுத்துறை மஹுவா யாரும் இல்லை, எதுவும் இல்லை. இறந்துபோன நேரங்களின் ஊமைக் குரல்கள் ஒலிபெற முயலுகின்றன. ஹீராமனின் உதடுகள் அசைகின்றன. ஒருவேளை அவன் இன்று மூன்றாவது சபதம் எடுக்கிறானோ—"இனிமேல் எந்தக் கம்பெனிப் பெண்ணையும் ஏற்ற_!"

ஹீராமன் மாடுகளை அதட்டினான்; சாட்டை விளாரினால் அடித்துக்கொண்டே மாடுகளிடம் கேட்டான்—"ரெயில்வே லைன் பக்கமா என்ன திரும்பித் திரும்பிப் பாக்குறீங்க?" மாடுகள் காலை வீசி வைத்தன. ஹீராமன் முணுமுணுக்கலானான் அந்த அடியை—"அஜீ ஹாங், மாரே கயே குல்ஃபாம்_!"

(1956)

# ஹாட்டின் ராணி

"ஏன், பிர்ஜூவின் அம்மா! நாட்டியம் பார்க்கப்போக வேண்டாமா?"

வீட்டு முற்றத்தில் பிர்ஜூவின் அம்மா சீனிக்கிழங்கை வேக வைத்துக்கொண்டிருந்தாள். அவள் மனமும் புகைந்து கொண்டிருந்தது. ஏழு வயதுப் பையன் சீனிக்கிழங்குக்காக அடம்பிடித்து, அம்மாவிடம் அடிவாங்கி, முற்றத்தில் அழுதுபுரண்டு உடம்பெல்லாம் புழுதியாக்கிக் கொண்டிருந்தான். "சம்பியா தலையிலும் சனியன்தான் புடிச்சிருக்கு-முற்றத்திலே பாதிக்கு வெயில் இருக்கறப்பவே வெல்லம் வாங்கியார செட்டியார் கடைக்குப்போச்சு; இதோ விளக்கு வெக்கற நேரமாயிருச்சு. இன்னும் காணலே. வரட்டும் அந்தச் சிறுக்கி, சொல்றேன்." ஆட்டுக் கிடாயின் உடம்புபூரா ஈ மொய்த்துக்கொண்டு உபத்திரவம் செய்தது. அதனால் பாவம் ஆட்டுக்கிடாய் அடிக்கொருமுறை எம்பிக் குதித்துக் கொண்டிருந்தது. பிர்ஜூவின் அம்மா ஆட்டுக்கிடா மேல் தன் கோபத்தைக்காட்ட ஒரு காரணம் கண்டுபிடித்தாள். "கொல்லையிலே பூத்திருந்ததே மிளகாய்ச்செடி! இந்தச் சனியன்தான் அதை நாஸ்தா பண்ணியிருக்கும்!" ஆட்டின்மேல் எறிவதற்காக அவள் களிமண் உருண்டையைக் கையில் எடுத்தாள். அப்போதுதான் பக்கத்து வீட்டுக் கிழவி மக்னி அத்தை குரல்கொடுத்தாள்—"ஏன் பிர்ஜூவின் அம்மா! நாட்டியம் பார்க்கப் போகவேண்டாமா?"

"பிர்ஜூவின் அம்மாவுக்கு முன்னாலே மூக்குக்கயிறும், பின்னாலே கட்டற கயிறும் இல்லாட்டிப்போனாதானே, அத்தே!"

கோபத்தில் தோய்ந்த கூரான சொல்லம்பு அத்தையின் உடம்பில் குத்தி உறைத்தது. பிர்ஜூவின் அம்மா ஆட்டை அடிப்பதற்காக எடுத்த மண்ணாங்கட்டியை பக்கத்திலேயே எறிந்துவிட்டாள்—"பாவம், ஆட்டுக்கிடாவை ஈ மொய்ச்சுக் கொல்லுது- அய்யோ பாவம்!"

படுத்துக்கிடந்த பிர்ஜூ ஆட்டுக்கிடாயைப் பிரம்பால் அடித்தான். பிர்ஜூவின் அம்மாவின் கோபம் அவன் பக்கம் திரும்பியது. எழுந்துபோய் அதே பிரம்பினால் அவனை நையப்புடைத்து அவன் தலையில் ஏறி இருக்கும் பேயை விரட்டலாமா என்று எண்ணினாள். ஆனால், இதற்குள்ளாக வேப்பமரத்தடியிலே தண்ணீர் எடுக்கவந்த பெண்களின் பேச்சரவம் கேட்டு பிர்ஜூவை அடிக்கும் எண்ணத்தைக் கைவிட்டாள். அவனைப் பார்த்துச் சொன்னாள்—"இரு, இரு!

உங்கப்பன் உன்னைக் கைமிஞ்ச வச்சுட்டாரு. யாரைப் பாத்தாலும் கைமிஞ்சறே! இரு பார்த்துக்குறேன்!"

வேப்ப மரத்தடியிலுள்ள கிணற்றில் இடுப்பை வளைத்து குடத்தைப்போட்டு தண்ணீர் எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு மிடுக்காகச் செல்லும் இளம் பெண்களிடம் மக்னி அத்தைக்கிழவி, பிர்ஜூவின் அம்மா எகத்தாளமாகச் சொன்ன வார்த்தையைச் சொல்லிக்காட்டி நியாயம் கேட்கலானாள்—"பாருங்கடம்மா இந்த பிர்ஜூவின் அம்மாவை! நாலு மணங்கு சணல் வித்துப் பணம் வந்திடிச்சில்லே, தரையிலே கால்பாவமாட்டேங்குது. நீங்களே சொல்லுங்க, எட்டுநாள் முன்னாலே இருந்து தெருத்தெருவா அவதானே பீத்திக்கிட்டு திரிஞ்சா, ஆமா, இந்தத் தபா வில்வண்டியிலே ஏத்தி பலராம்பூர் திருவிழாவுக்கு அழைச்சுட்டுப்போறேன்னு பிர்ஜூவின் அப்பா சொல்லுறாங்க. காளை நம்பகிட்ட இருக்குதே யார்கிட்ட கேட்டாலும் வண்டி இரவல் கிடைக்கும் அப்படீன்னு சொல்லிக்கிட்டு திரிஞ்சுதுல்லே. அதனால தான் நான் ஞாபகப்படுத்தப் போனேன். திருவிழா பார்க்கப்போறவங்க சீவிச் சிங்காரிச்சு புறப்படறாங்க, திண்டி—தீனி எல்லாம் தயார் பண்றாங்க. நீ கிளம்பலியான்னு கேக்கப்போனேன். என் நாக்கிலே தீயை வெக்க, நான் ஏன் கேக்கப்போனேன்? கேட்டீங்களா, பிர்ஜூவின் அம்மா என்ன பதில் சொன்னான்னு!"

மக்னி அத்தை தன் பொக்கை வாயைத் திறந்து உதடுகளை ஒரு பக்கமாக வலித்துக்கொண்டு நீட்டி முழக்கிக் கூறினாள்—"ஏ-மா-ம்! பி—ர்ர்—ஜூ அம்மா முன்னால மூக்குக் கயிறும் பின்னாலே கட்டற கயிறும் இல்லாட்டித்தானே வேணும்!"

ஜங்கியின் மருமகள் பிர்ஜூவின் அம்மாவுக்கு பயப்பட மாட்டாள். அவள் தொண்டையைச் சற்று அதிகமாகவே திறந்து உரக்கப் பதில் சொன்னாள்—"அத்தே! நல்ல கரைவெச்சு பூப்போட்ட சேலையைக் கட்டிக்கிட்டு சர்வே செடில்மென்ட் ஆபீசர் அய்யா வூட்டுக்குப் போயி வழுதலங்காயைக் காணிக்கை வச்சிருந்தேன்னா நீகூட ரெண்டு பீகாநிலம் பட்டா எழுதி வாங்கியிருப்பே! பொறவு உன் வூட்லேயும் பத்து மணங்கு சணல் கிடக்கும். ஒரு ஜதை காளைமாடு வாங்கியிருப்பே. அப்ப முன்னால மூக்கணாங்கயிறும், பின்னாலே கட்டற கயிறும் தொங்கிக்கிட்டு ஆடுமில்லே!"

ஜங்கியின் மருமகள் வாயாடி ரெயில்வே ஸ்டேஷன் பக்கத்தில் குடிசை. 'கண்ணாலம்' முடிஞ்சு மூணுமாசம்தான் ஆச்சு, புது மருமகளாக வந்திருக்கிறாள். இதற்குள் ஊரிலே உள்ள பொல்லாத மாமியார்கள் அத்தனை பேருடைய மூக்கிலும் ஒருமுறையாவது விரலைவிட்டு ஆட்டிவிட்டிருந்தாள். அவளுடைய மாமனார் ஜங்கி பலமுறை சிறைக்குப்போய் வந்த கேடி, சி வகுப்பு ஜெயில் புள்ளி. அவள் புருசன் ரங்கியோ, ஊரிலேயே பெயர்பெற்ற சிலம்பக்காரன்.

அதனால் தினவெடுத்தமாடு எங்கே பார்த்தாலும் கொம்பைக் கொண்டு மோதுமே, அதுபோல எப்போதும் சண்டைக்கு அலைவாள் ஜங்கியின் மருமகள்.

பிர்ஜூவின் அம்மாவின் முற்றத்தில் ஜங்கி மருமகள் வாய்கிழியப் பேசிய பேச்சு கவணையிலிருந்து விடுபட்ட கல்போல வந்துவிழுந்தது. பிர்ஜூவின் அம்மா அதிரடியாக ஒரு சொல்லம்பைத் தீட்டித் தயார் செய்தாள், ஆனால் பிரயோகம் செய்யவில்லை. "சாணத்தின் மேல் கல்லெறிந்தால் நம்ம மேலேதானே தெறிக்கும்!"

நாவில் வந்த எரிச்சலைத் தொண்டைக்குள் விழுங்கியவாறு பிர்ஜூவின் அம்மா தன்னுடைய பெண்ணைத் திட்டுவதுபோல உரக்கக் குரல் கொடுத்தாள்—"அடி சம்பியா-ஆ-ஆ திரும்பி வா நீ, இன்னிக்கு வச்சிருக்கேன். உன் தலையைத் திருகி அடுப்பிலே வெக்கப்போறேன். நாளுக்குநாள் நடத்தை கெட்டுப்போறே.. கிராமத்திலே இப்ப சினிமாப்பாட்டு பாடற மருமக வந்திட்டா. அவகூட குந்திக்கிட்டு சினிமாப்பாட்டுக் கத்துக்கிட்டு இருப்பே— "பா்ஜே ந முரளியா' அவளை மாதிரி ஓடுகாலியாகப் போறே. அடீ சண்டாளி சம்பியா-ஆ-ஆ!"

ஜங்கியின் மருமகள் பிர்ஜூவின் அம்மாவின் பேச்சை சுவாரசிய மாக ரசித்தவாறு குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு மற்ற பெண்களிடம் இரைந்து பேசினாள்—"வா அக்கா! நம்ம போக லாம்! இந்தப் பேட்டை ஆட்டின் ராணி (ஹாட்டின்-சீட்டுக்கட்டில் உள்ள நால்வகைச் சீட்டுகளில் ஒன்று) வாழறா! தெரியாதா, இவ வூட்லே பட்டப்பகல்லேயும் நடுராவுக்கும் எலக்டிரிக் பல்பு தகதகணு ஜொலிக்குது."

'எலெக்டிரிக் பல்பு' ஜொலிக்கும் சமாசாரத்தைக்கேட்டு ஏனோ தெரியவில்லை, எல்லாச் சிறுசுகளும் கலகலவென்ற நகைத்தன. அத்தைக் கிழவியின் உடைந்த பல்வரிசையின் நடுவிலிருந்து செல்ல மாக ஒருதிட்டு உதிர்ந்தது—'காட்டேரிக்குப் பாட்டி!"

பிர்ஜூவின் அம்மா அயர்ந்துவிட்டாள். யாரோ அவள் கண்களுக்கு எதிரே பிரகாசமான டார்ச் ஒளியைப் பாய்ச்சியதுபோல உணர்வு ஏற்பட்டது. 'தகதகணு ஜொலிக்கும் எலெக்டிரிக் பல்பு!' மூன்று வருஷம் முன்னால், சர்வே கேம்ப் நடந்துமுடிந்ததும் ஊரிலுள்ள அசூயைக்காரி பெண்பிள்ளைகள், 'சம்பியாவின் அம்மா முற்றத்திலே இராப்பூராவும் மின்சார விளக்கு ஜொலிக்கப்போட்டாள்!' என்று ஒரு கதையைக் கட்டிவிட்டார்கள். அப்புறம் சம்பியா அம்மா முற்றத்திலே பூட்சுக்கால் அடையாளம் தெரிந்ததாம். குதிரைக் குளம்புபோல! 'வயத்தெரிச்சல் படுங்க! நல்லா படுங்க! இன்னும் படுங்க! சம்பியா அம்மாவின் வாசலில் வெள்ளி கொட்டிக்கிடக்கிற மாதிரி சணல் காய்வதைப் பார்த்து வயிறு எரிஞ்ச பெண்டுக இப்ப

களத்துமேட்டிலே தங்கம்போல நெல்லுக் காயறதைப் பார்த்து வயிறு எரியப் போறதுக. வயிறு எரிஞ்சு கத்தரிக்கா கொத்சு கணக்கா ஆவப்போவுதுக!'

மண் சட்டியிலிருந்து சொட்டும் வெல்லத்தை விரல்களால் சப்பிக்கொண்டே சம்பியா வந்தாள். வந்ததும் செம்மையாகச் செவிட்டில் அடிவாங்கி அலறினாள்—"என்னெ ஏன் அடிக்கிறே. ஏஏ? செட்டிம்மா சீக்கிரமா தரலே-ஏங்-ங்-ங்!"

"ஏங்கிட்டயா அளக்கிறே சிறுக்கி! ஊரிலே ஒரு செட்டி கடைதான் இருக்குதா, அங்கே முத்து உதிந்துச்சாம், இவ பந்தல் கட்டிக்கிட்டு உக்காந்து கிடந்தாளாம்! கழுத்துமேலே உதைச்சு குரவளையை ஒடிச்சுப்புடுவேன் தெரிஞ்சுதா! இனிமே அந்த சினிமாப் பாட்டுச் சிறுக்கிகிட்ட குந்திக்கிட்டு பாட்டுப்படிச்சேன்னா- பாரு! அந்த டேசன்காரி பின்னால சுத்தினே, அவ ராங்கிதான் வரும்!"

பிர்ஜூவின் அம்மா தன் வசவை நிறுத்திவிட்டு காதைத் தீட்டிக் கொண்டு, நிதானித்தாள். எதிரொலியைக் கொண்டு, தன் குரல் ரெயில்வே ஸ்டேஷன் குப்பம்வரை எட்டியிருக்கும் என்று அனுமானம் செய்துகொண்டாள்.

பிர்ஜூ நடந்த கதையை எல்லாம் மறந்துவிட்டு எழுந்தான். புழுதியைத் தட்டிக்கொண்டு சட்டியிலிருந்து சொட்டும் வெல்லப் பாகை ஆசை ததும்பும் கண்களால் பார்க்கலானான்- அக்காவுடன் அவனும் கடைக்குப் போயிருந்தால், அக்கா அவனுக்கு நிச்சயம் வெல்லம் தந்திருப்பாள். அவன் சீனிக்கிழங்குக்கு ஆசைப்பட்டு வீட்டிலே இருந்துவிட்டான். ஒரு கிழங்கு கேட்டதுக்கு அம்மா-

"ஏ- அம்மா, இம்புட்டு வெல்லம் தாயேன்!" பிர்ஜூ உள்ளங் கையை நீட்டியவாறு கெஞ்சினான்—"தரமாட்டியா அம்மா, இம்மாத் தூண்டு வெல்லம்!"

"இம்மாத்தூண்டு என்னாத்துக்கு, சட்டியோட எடுத்துக் கொல் லையில கொட்டறேன், விளுந்து நக்கிட்டு கிட! இனிப்பு ரொட்டியும் கிடையாது, ஒண்ணும் கிடையாது- இனிப்பு ரொட்டி திங்கிற மூஞ்சியைப் பாரு!" பிர்ஜூவின் அம்மா வேகவைத்த சீனிக்கிழங்கை அழுதுகொண்டிருந்த சம்பியாவின் முன்னால் எடுத்து வைத்தாள் "இங்கன குந்திக்கிணு இத்த உரி, இல்லே இப்பவே-!"

சம்பியாவுக்கு பத்துவயதுதான் ஆயிருந்தது. சிறுமி என்றாலும் நல்ல அனுபவசாலி. சீனிக்கிழங்கை உரிப்பதற்குள் அம்மாக்காரி பனிரெண்டு தடவையாவது அவளுடைய தலைமயிரை இழுத்து உலுக்குவாள் என்று அவளுக்கு நன்றாகத் தெரியும். சின்னச் சின்னக் குற்றம் கண்டுபிடித்து கண்டபடி திட்டுவாள்—"எதுக்கு இப்பிடி கவட்டையைப் பிளந்து குந்திக்கிட்டிருக்கே, வெக்கம் கெட்டவளே!" சம்பியா தாயின் கோபத்தை நன்றாக அறிவாள்.

பிர்ஜூ இந்த நேரத்தில் கொஞ்சம் குழையடித்துப் பார்த்தான்— "அம்மா, நானும் உக்காந்துகிட்டு சீனிக்கிழங்கு உரிக்கட்டுமா?"

"ஒண்ணும் வாணாம்" அம்மா அதட்டினாள்—"ஒண்ணு உரிக்கற துக்குள்ளாற மூணு வயதுக்குள்ளே போவும். இந்தா, ஓடிப்போயி சித்துமருமகள் கிட்டப்போ- ஒருமணி நேரத்திலே தர்றேன்னு வாங் கிட்டுப்போனியே சருவம், திருப்பித்தர மறந்திட்டியான்னு கேளு, ஓடு!"

முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு முற்றத்தின் வழியாகப் போகையில் பிர்ஜூ சீனிக்கிழங்கையும், வெல்லத்தையும் ஏக்கத்துடன் பார்த்தான். சம்பியா பறந்துகொண்டிருந்த கேசத்தின் மறைவிலிருந்து தாயின் பக்கமாக ஒருமுறை நோட்டம் விட்டாள், பிறகு தாய்க்குத் தெரியாமல் ஒரு சீனிக்கிழங்கை பிர்ஜூவின் பக்கமாக எறிந்தாள்- பிர்ஜூ அதை எடுத்துக்கொண்டு ஓடினான்.

"சூரியனும் மறைஞ்சாச்சு. விளக்கு வெக்கற நேரமும் ஆயிடிச்சு. இன்னும் வண்டியை-"

சம்பியா இடையிலேயே பதிலளித்தாள்—"காய்கறிச் சந்தையிலே யாரும் வண்டி குடுக்கலியாமா! அம்மாகிட்ட வேலையெல்லாம் முடிச்சு தயாரா இருக்கச்சொல்லு- மல்தஹியா தெரு மியான்கிட்ட இருந்து வண்டி வாங்கிட்டு வாறேன்னு அப்பா சொன்னாங்க."

இதைக்கேட்டதுமே பிர்ஜூ அம்மாவின் முகம் தொங்கிவிட்டது. குதிரை மேலிருந்து சேணம் திடீரென நழுவி விழுந்தமாதிரி. "காய்கறிச் சந்தையிலே யாரும் வண்டி இரவல் கொடுக்கலே. இன்னிக்கு வண்டி கெடச்சாப்பலதான்! நம்ம கிராமத்து சனங்க கண்ணிலேயே தண்ணி இல்லேன்னா- ஊரைத்தாண்டி மல்தஹியா தெரு மியான் வண்டி கெடைக்கும்னு என்ன உறுதி? திருவிழா பார்க்கப்போறது ஒண்ணும் நிச்சயமில்லே! இந்த லெச்சணத்துக்கு சீனிக்கிழங்கு உரிச்சு என்ன ஆவணும் இப்ப? எடுத்து வையி-! இந்த ஆம்புளை நாட்டியம் காட்டுவாராம்! வில்வண்டியிலே ஏத்திக்கிட்டு திருவிழா பார்க்கக் கூட்டிப்போவராம்! எல்லாம் ஏறியாச்சு! வண்டியிலே பார்த்தாச்சு ஆசைதீர நாட்டியமும், நாடகமும்— நடந்துபோற பொம்புளைங்க போய்ச்சேர்ந்து ஒருசாமம் ஆயிருக்கும்."

பிர்ஜூ சிறிய சருவத்தை தலையில் கவிழ்த்துக்கொண்டு திரும்பி வந்தான்—"பாரு அக்கா, மிலிட்டரி தொப்பி! இதுமேல லத்தியாலே பத்து சாத்தினாலும் ஒண்ணும் ஆவாது."

சம்பியா விறைப்பாக உட்கார்ந்திருந்தாள், பேசவில்லை. லேசாக சிரிக்கக்கூட இல்லை. அம்மாவின் கோபம் இன்னும் தணியவில்லை என்று பிர்ஜூ புரிந்துகொண்டான்.

குடிசையிலிருந்து ஆட்டுக்கிடாயை வெளியே விரட்டியவாறு பிர்ஜூவின் அம்மா படபடத்தாள்—"ராட்சசனே! நாளைக்கே உன்னை கசாப்புக்காரன் பஞ்சகௌடிக்கு குடுத்துட வேண்டியதுதான்- எங்கே

கண்டாலும் வாயை வெக்குது! சம்பியா, இதெப்பிடிச்சு கட்டுமட கழுத்திலிருந்து சலங்கையை கழட்டி விட்டுரு. எப்பப் பார்த்தாலும் கிணிங்- கிணிங்- எனக்கு கொஞ்சம்கூடப் பிடிக்கலே!"

'கிணிங்- கிணிங்' என்று கேட்டதுமே பிர்ஜூவுக்கு சாலையில் செல்லும் வண்டிகளின் ஞாபகம் வந்தது—"கொஞ்ச நேரம் முன்னாலே ஐயாமார் தெருவிலிருந்து வண்டிங்க திருவிழாவுக்குப் போயிட்டிருந் தது—கிணிங்- கிணிங்னு காளைங்க சலங்கை சத்தம்- நீ கேட்—"

"அநாவசியமா உளறிக்கிட்டிருக்காதே!" ஆட்டின் கழுத்துச் சலங்கையைக் கழட்டியவாறு சம்பியா அவனை அடக்கினாள்.

"சம்பியா, அடுப்பிலே தண்ணியெ ஊத்து! அப்பா வந்தாக்க, விமானத்துல போய் நாட்டியம் பார்த்துட்டு வாங்க அப்படீன்னு சொல்லிடு! எனக்கு நாட்டியமும் பார்க்கவேண்டாம், நாடகமும் பார்க்க வேண்டாம்- என்னெ யாரும் எழுப்ப வேண்டியதில்லே! தலைவலி மண்டையைப் பொளக்குது!"

குடிசையின் வாயிலில் நின்றுகொண்டு பிர்ஜூ கிசுகிசுத்த குரலில் கேட்டான்—"ஏன்க்கா, திருவிழாவிலே ஆகாயவிமானமும் பறக்குமா?"

பாயின்மேல் உட்கார்ந்து கந்தைத் துணிகளைச் சேர்த்து மெத்தைபோல தைத்த போர்வையைப் போர்த்திக்கொண்டவாறு சம்பியா பிர்ஜூவை பேசாமல் இருக்கும்படி சைகை செய்தாள், அம்மாவிடம் அனாவசியமாக உதை வாங்குவான் பாவம்!

பிர்ஜூ, அக்காளுடன் போர்வையைப் பங்குபோட்டுக்கொண்டு மோவாயைக் கால்முட்டுடன் சேர்த்து டகடகவென்று அடித்துக் கொண்டு குளிரைப் போக்கிக்கொண்டான். குளிருக்கு இவ்வாறு செய்வது வழக்கம். சம்பியாவின் காதருகே வந்து மெல்லிய குரலில் கேட்டான்—'ஏன்க்கா, நாம நாட்டியம் பாக்கப் போறோமா, இல்லியா? கிராமத்திலே ஒரு ஈ காக்கா கூட கிடையாது, எல்லாரும் போயாச்சு."

சம்பியாவுக்கு தினையளவும் நம்பிக்கை இல்லை. அந்தி நேரத்து நட்சத்திரம் மங்கிக் கொண்டிருக்கிறது. அப்பா இன்னும் வண்டியே கொண்டுவரவில்லை. ஒருமாசம் முன்னாலிருந்தே அம்மா சொல்லிட் டிருந்திச்சு, பலராம்பூர் திருவிழாவன்னிக்கு இனிப்பு ரொட்டி பண்ணுவோம்; சம்பியா சுங்கடிச்சேலை கட்டிக்கொள்வாள்; பிர்ஜூ பேன்ட் போட்டுக்கொள்வான், வில்வண்டியிலே ஏறி—

சம்பியாவின் நனைந்த கண்களிலிருந்து ஒருசொட்டுக்கண்ணீர் கீழே உதிர்ந்தது.

குடிசைக்குள்ளே பிர்ஜூவின் அம்மா பாயில் படுத்தவாறு புரண்டு கொண்டிருந்தாள். "ஊ-ங், முதல்லேயே எதைப்பத்தியும் ஆகாசக்கோட்டை கட்டக்கூடாது! ஆண்டவன் அந்தக் கோட்டை யைத் தகர்த்திட்டாரு. முதல்லே ஆண்டவனிடம் கேட்கணும், பரமசிவனே, எதுக்காக இந்தத் தண்டனை, அப்படி நான் என்ன

தப்புச் செஞ்சேன்? தேவதைகள், பித்ருக்களுக்கு வேண்டிக் கொண்டதை அப்பப்போ நிறைவேத்தியாச்சு. சர்வே நடக்கையிலே நிலம் கிடைக்கணும்னு எத்தனை வேண்டுதல்கள்– ஆமா, சரிதான்! அனுமாருக்குப் படையல் வைக்கிறேன்னு சொல்லியிருந்தேன். அதுதான் இன்னும் செய்யலே– தெய்வமே, ஆண்டவனே! தப்பை மன்னிச்சுடுப்பா! வேண்டுதல் இரட்டிப்பா நிறைவேத்திடுவேன்–"

பிர்ஜூவின் அம்மா மனசில் ஜங்கி மருமகள் சொன்ன வார்த்தை அடிக்கடி குத்திக்கொண்டிருந்தது, 'தகதகணு எலெக்டிரிக் பல்பு! களவாணிப் பய மருமக ஏன் எரிச்சல்படமாட்டா? பிர்ஜூவின் அப்பாவுக்கு ஐந்து பீகா நிலம் கிடைச்சிருக்குன்னு கிராமத்து சனங்க— ஆம்புளை பொம்புளை ஒருத்தர் பாக்கி இல்லாமெ எல்லாருக்கும் வயத்தெரிச்சல். வயலிலே சணல் வெள்ளை வெளேர்னு நிக்கறதைப் பார்த்து நெஞ்சு வெடிச்சுப் போயிடிச்சி. பூமியைப் பிளந்துட்டல்லவா சணல் விளைஞ்சிருக்கு; ஐப்பசி மாசத்து மேகங்கள்போல பொங்கி வருது சணல் செடிங்க! தோலான் துருத்தி முதல் எல்லார் கண்ணும் பட்டுருச்சி! இத்தனை கண்களுடைய தீட்சண்யத்தை விளைச்சல் எவ்வளவுதான் பொறுத்துக்கொள்ளும்? பதினஞ்சு மணங்கு உண்டாக வேண்டிய இடத்திலே பத்து மணங்குதான் விளைஞ்சுது, ரபி பகத் வீட்டுத் துலாசிலே நிறுத்தப்போ பத்து மணங்குதான் தேறிச்சு.

இதிலே வயத்தெரிச்சல்பட என்ன இருக்குது! பிர்ஜூவின் அப்பா ஒருத்தர் விடாமல் எல்லாருக்கும் எடுத்துச் சொன்னார்—'வாழ்நாள் முழுக்க கூலிவேலை செஞ்சிட்டே இருப்பீங்களா? சர்வே நடக்கப் போவுது. அவனவன் தடியை எடுத்திட்டு உஷாரா நில்லுங்க. அப்பத் தான் மூணு நாலு பீகா நிலமாவது கிடைக்கும்.' கிராமத்திலே ஒரு பயலும் கேக்கலே, ஜமீந்தார் அய்யாவுக்கு எதிராக தும்மக்கூட பயம்– பிர்ஜூவின் அப்பாவுக்கு கொஞ்சமாவா சோதனை வந்தது? ஜமீந்தார் அய்யா கோபத்திலே சர்க்கஸ் புலிமாதிரி உறுமினாரு. அவருடைய மூத்தமகன் வீட்டுக்குத் தீவைப்பேன்னு பயமுறுத்திட்டுப் போனான்– கடைசியிலே ஜமீந்தார் அய்யா தன்னுடைய கடைக் குட்டியை அனுப்பினாரு. பிர்ஜூ அம்மாவை அவன் 'சித்தீ'ன்னு அன்பொழுக அழைச்சிக்கிட்டு வந்தான்—'இந்த நிலம் அப்பா என் பெயருக்கு வாங்கினது. என் படிப்புச் செலவு எல்லாம் இதன் வருமானத்தைக் கொண்டுதான் நடக்குது' அப்படீன்னான். இன்னும் என்னவெல்லாமோ பேசிப் பார்த்தான். நல்லா மயக்கத் தெரிஞ்சிருக்குது இம்மாத்தூண்டு பையனுக்கு. ஜமீந்தார் பிள்ளையா கொக்கா–?

"சம்பியா, பிர்ஜூ தூங்கிடிச்சா? பிர்ஜூ! வா உள்ளே, நீயும் வா. அந்த மனுசன் வரட்டும் சொல்றேன் இன்னைக்கு!"

பிர்ஜூவுடன் சம்பியா உள்ளே நுழைந்தாள்.

"குப்பி விளக்கை அணைச்சிடு– அப்பா கூப்பிட்டாங்கன்னா

பதிலே பேசாதீங்க. தட்டியைப் போட்டுடு."

'நல்ல ஆளுய்யா, சரியான ஆசாமிதான்- மூஞ்சியைப் பாருடான் னானாம்- பிர்ஜுவின் அம்மா ராப்பகலா விரட்டலேன்னா நிலம் கெடச்சாப்பலதான் இவருக்கு! நெதம் வந்து தலையை பிடிச்சுக்கிட்டு குந்திப்பாரு—'எனக்கு நெலமும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம்; பிர்ஜு அம்மா! இதைவிட கூலிவேலைதான் தேவலாம்.' பிர்ஜுவின் அம்மா நல்லா யோசிச்சு பதில் சொல்லுவா—'விட்டுத்தள்ளுங்க, அப்ப நெலம் வேணும்ங்கிற ஆசையை தாரைவார்த்துட வேண்டியதுதான். உங்களுக்கே மனசு கெட்டியில்லேன்னா என்னா நடக்கும்? பெண்டாட்டியும், நெலமும் கையிலே பலம் உள்ளவனுக்குத்தான் சொந்தம்; இல்லேன்னா அடுத்தவன் அடிச்சிட்டுப்போயிடுவான்! அப்படீன்னு வசனம் கேட்டதில்லையோ?"

பிர்ஜுவின் அப்பா மீது கோபமான கோபம் வந்தது, கணத்துக்குக் கணம் ஏறிக்கொண்டே போயிற்று. 'பிர்ஜுவின் அம்மா தலையிலே இதுதான் விதிச்சிருக்குது- இல்லேன்னா இப்படி ஒரு வக்கத்த புருசன் கிடைப்பானா? மண்ணும் இல்லே, சாணமும் இல்லேன்னு- இந்த ஆளைக்கட்டிக்கிட்டு என்ன சொகத்தைக் கண்டேன்! செக்குமாடுபோல உழைச்சு உடம்பு ஓடாப் போயிடுச்சு. ஒரு நாளாவது ரெண்டு ஜிலேபி வாங்கியாந்து 'இந்தா புள்ளே தின்னு' அப்படீன்னு சொன்னதுண்டா? பகத் வீட்டிலேயிருந்து சணல் வித்த பணம் வாங்கிட்டு வந்து வாசல்லேயிருந்து அப்படியே காளை வாங்கப் போயிட்டாரு காளைச்சந்தைக்கு. பிர்ஜுவின் அம்மாவை நம்பர் அடிச்சநோட்டைக் கண்ணாலேயாவது பார்க்கவிட்டாரா? காளை மாடு வாங்கிட்டு வந்தாரு- அன்னிக்குப் பிடிச்சு தெருவிலே தண்டோரா போட ஆரம்பிச்சாரு—'பிர்ஜுவின் அம்மாவை இந்தத் தடவை வில்வண்டியிலே ஏத்திக்கிட்டுப் போய் திருவிழா காட்டுவேன்!' காட்டுவாரு, பெரிசா! மத்தவங்க வண்டியை நம்பிட்டு- இவரா காட்டப்போறாரு-

கடைசியில் அவளுக்குத் தன் பேரிலேயே கோபம் வந்தது. 'நீயும் குறைச்சல் இல்லை. உன் நாக்கிலே தீயை வெக்க வேண்டாமா? வில் வண்டியிலே ஏறி திருவிழா பார்க்கப்போகிற ஆசையை எந்த நேரத்திலே முதமுதல்லே வாயை விட்டுச் சொன்னியோ தெரியலே- இன்னிக்கு விடிஞ்சதிலிருந்து மதியம் வரைக்கும் பேச்சுக்குப்பேச்சு பதினெட்டு தடவையாவது வில்வண்டியிலே ஏறிக்கிட்டு நாட்டியம் பார்க்கப்போறதைப் பத்திச்சொல்லிட்டே- பாரு, நல்லாப்பாரு நாட்டியம்! உனக்கு நாட்டியம் ஒரு கேடா? கந்தை மெத்தையிலே படுத்துக்கிட்டு பட்டுத் துப்பட்டா வேணும்னு கனவா? நாளைக்கு விடியல்லே தண்ணி ரொப்பப் போறப்ப எல்லா வீட்டுப் பெண்டு களும் சிரிக்கப்போவுது. எல்லாருக்கும் பிர்ஜு அம்மாவைக் கண்டா

எரிச்சல்; ஆமா, ஏன் வயிறு எரியாது- ரெண்டு பிள்ளைங்களைப் பெத்தபிறகுகூட அவள் உடம்பு அப்படியே கட்டுக்குலையாமல் இருக்கு- புருசனோ அவ கிழிச்சக் கோட்டைத் தாண்டுறதில்லை. அவ தலைக்கு தேங்காயெண்ணெய் தடவிக்கிறா- அவளுக்கு நிலம் இருக்கு சொந்தமா.. இந்தத் தெருவிலே ஒரு பயகிட்டெ ஒரு குப்பைக்குழி அளவாச்சும் நிலம் இருக்குதா? ஏன் எரியாது வயிறு, மூணு பீகா நிலத்திலே நெல்லுக்கதிரு நிக்குது, மார்கழி, தை மாசத்து விளைச்சல்: ஆண்டவனே, கண்ணுபடாமெ இருக்கணுமே!'

வெளியே காளைகளின் மணியொலி கேட்டது. மூன்றுபேரும் உஷாரானார்கள். காதைத் தீட்டிக்கொண்டு படுத்துக்கிடந்தனர்.

"நம்ப காளைங்க மணிதான், இல்லே சம்பியா?"

சம்பியாவும், பிர்ஜூவும் ஒரே நேரத்தில் பதிலளித்தனர்— "ஊ-ம்ம்-!"

"உஷ், சத்தம் காட்டாதீங்க" பிர்ஜூவின் அம்மா மெல்லிய குரலில் கிசுகிசுத்தாள்—"வண்டியும் வந்திருக்குபோல தெரியுது. கடகடன்னு சத்தம் கேட்டுது இல்லே?"

"ஊ-ம்ம்-" இரண்டுபேரும் மீண்டும் ஊம்- கொட்டினார்கள்.

"பேசாதே! வண்டி ஒண்ணும் இல்லை. நீ போயி, சத்தம் காட்டாமெ தட்டி இடுக்கு வழியா பாத்திட்டு வா சம்பி! ஓடிப்போ, சத்தம் காட்டாதே."

சம்பியா பூனைபோல மெதுவாகக் காலடி வைத்து தட்டி இடுக்கு வழியாகப் பார்த்துவந்தாள்—"ஆமாம்மா, வண்டியும் வந்திருக்குது!"

பிர்ஜூ வாரிப்புடைத்துக்கொண்டு எழுந்தான். அவனுடைய தாய் அவன் கையைப் பிடித்துக் கிடத்தினாள்—"பேசாதே! மூச்-"

சம்பியாவும் கந்தை மெத்தையினுள் பதுங்கினாள்.

வெளியே வண்டியிலிருந்து காளையை அவிழ்க்கும் அரவம் கேட்டது. பிர்ஜூவின் அப்பா காளைகளை உரத்த குரலில் திட்டும் குரல் கேட்டது—"ஆமா! வந்திட்டோம்! வீட்டுக்கு வாறதுக்கு இவ்வளவு சண்டித்தனமா?"

பிர்ஜூவின் அம்மாவுக்கு தெரிந்துவிட்டது. 'மல்தஹியா தெருவில் ஹுக்கா குடிச்சிட்டு வந்திருப்பாரு, கஞ்சா அடிச்சிருப்பாரு; அதனால தான் குரல்லே இந்தக் கனகனப்பு!'

"சம்பியா-ஹ்-!" தகப்பன்காரன் வெளியிலிருந்தே கத்தினான்— "காளைங்களுக்கு வைக்கோல் எடுத்துப்போடு, சம்பியா-ஹ்!"

உள்ளேயிருந்து பதிலே வரவில்லை. முற்றத்தில் வந்து பார்த்தான், 'விளக்கு இல்லே, வெளிச்சமும் இல்லே- என்ன ஆச்சு? நாட்டியம் பாக்குற ஆசையிலே நடந்தே போயிட்டாங்களோ-?'

பிர்ஜூவின் தொண்டை குறுகுறுத்தது இருமல் வருவதுபோல. இருமல் வராமல் தடுப்பதற்கு அவன் எவ்வளவோ முயன்றான்,

ஆனால் இரும ஆரம்பித்ததும் ஐந்து நிமிடத்துக்கு அவன் தொடர்ந்து இருமினான்.

"பிர்ஜூ! மகனே பிரஜ் மோகன்!" பிர்ஜூவின் அப்பா செல்லமாக அவனை அழைத்தார், "அம்மா கோவத்துலே தூங்கிட்டாளா- அட, இப்பத்தானே எல்லாரும் போறாங்க!"

பிர்ஜூ அம்மா வெட்டு ஒன்று துண்டு இரண்டாக 'நாட்டியமும் வேண்டாம், திருவிழாவும் பார்க்க வேண்டாம். வண்டியைத் திருப்பிக் கொடுத்திடுங்க' என்று பதில் கூற விரும்பினாள். வார்த்தை வாய் நுனிவரை வந்து நின்றுவிட்டது.

"சம்பியாஹ! எந்திரிக்கப் போறியா இல்லியா? இதப்பாரு, புது தானியக் கதிரு. இதை எடுத்துவை." தானியக் கற்றையை குடிசையின் வாசலில் வைத்தவாறு கூறினான்—"எந்திரிம்மா, விளக்கை ஏத்து!"

பிர்ஜூவின் அம்மா எழுந்து லாசலுக்கு வந்தாள். "ராத்திரி ஒண்ணரை சாமத்துக்கு வண்டி எதுக்குக் கொண்டாந்தீங்க? நாட்டியமும் திருவிழாவும் முடிஞ்சு போயிருக்குமே!"

குப்பி விளக்கின் வெளிச்சத்தில் புதுக்கதிரின் நிறத்தைக் கண்டதுமே பிர்ஜூ அம்மாவின் கோபம் எல்லாம் தணிந்துவிட்டது. தங்க ரேக்குபோல நெற்கதிரின் நிறம் அவள் கண்கள் வழியாக இறங்கி ஒவ்வொரு மயிர்க்காலும் புளகாங்கிதமடைந்தது.

"நாட்டியம் இன்னும் தொடங்கியே இருக்காது. இப்பத்தான் பலராம்புர் பெரிய அய்யாவின் கம்பெனி வண்டி மோகன் ஓட்டல் பங்களாப் பக்கம் போயிருக்குது, அதிகாரியை அழைச்சிட்டுப்போக. இந்த வருசம்தானே கடைசிமுறையா நாடகம் தானியக்கதிரைத் தட்டியிலே செருகு, நம்ம வயல்லே விளைஞ்சது."

"நம்ம வயல் கதிரா?" பிர்ஜூவின் அம்மா கேட்டாள், மகிழ்ச்சி பொங்க—"நல்லா விளைஞ்சாச்சா?"

"இல்லே, இன்னும் பத்து நாளிலே பாரு. மார்கழி மத்தியிலே கதிரெல்லாம் சிவந்து அப்படியே தலையை குனிச்சுநிக்கும். மல்தஹிதா தெருவுக்குப் போகையிலே நம்ம வயல்கதிரைப் பார்த்தேன். நிசம்மாச் சொல்றேன், கதிரை ஒடிக்கையில் கைவிரல் அப்படியே நடுங்கிச்சு!"

பிர்ஜூ தானியக் கதிரிலிருந்து ஒரு நெல்லை எடுத்து வாயில் வைத்து மென்றான். அவனுடைய அம்மா இலேசாகக் கடிந்து கொண்டாள்—"அறிவு இருக்காடா உனக்கு? இந்தக் குட்டிச்சாத்தானை வெச்சிட்டு நமக்கு பூஜையும் கிடையாது, விரதமும் கிடையாது!"

"என்ன ஆயிடுச்சி, எதுக்காகத் திட்டுறே?"

"பொங்கலுக்கு முன்னாலே புது நெல்லை வாயிலே வெச்சு எச்சில் படுத்திட்டானே!"

"அட, குழந்தைகதானே, இதுங்க எச்சில் பண்ணினா பாவம் இல்லே. பறவைக் குஞ்சுங்க, பாவம்! பொங்கலுக்கு முன்னாலே இதுங்க

புது நெல்லைத் தின்னப்படாதுன்னு சொல்லலாமா?"

இதைக்கேட்டதும் சம்பியாவும் கதிரிலிருந்து இரண்டு தானியத்தை பல்லுக்கடியில் வைத்து மென்றாள்—"அடி அம்மாடீ, எம்புட்டு இனிப்பா இருக்கு!"

"கமகமன்னு வாசனையும் அடிக்குதில்லே அக்கா?" பிர்ஜூ இன்னும் இரண்டை மென்றான்.

"ரொட்டி—கிட்டி தயாராயிடுச்சா?" பிர்ஜூவின் தகப்பன் சிரித்துக் கொண்டே கேட்டான்.

"இல்லே"—செல்லமாகச் சிணுங்கியவாறு பிர்ஜூவின் அம்மா பதிலளித்தாள்—"போகப்போறமோ இல்லையோ- ரொட்டியாம்!"

"நல்லாத்தான் இருந்தே இப்படி! காளை இருந்தா வண்டி இரவல் கிடைக்காதா என்ன? வண்டி வெச்சிருக்கறவங்களுக்கும் நாளைக்கு காளைங்க தேவைப்படும்- அப்ப பேசிக்கிடறேன், காய்கறிச் சந்தைக் காரங்க கிட்டே-! எந்திரி, சீக்கிரமா ரொட்டி சுடு."

"நேரமாயிடாது இல்லே?"

"அட, கூடைக்கணக்கிலெ ரொட்டி நிமிசத்திலே சுட்டுடுவே நீ, அஞ்சு ரொட்டி சுடறதுக்கு எத்தினி நேரம் ஆவப்போவுது!"

இப்போது பிர்ஜூ அம்மாவின் உதடுகளில் புன்னகையும் நன்றாகவே தவழ்ந்தது. அவள் ஓரக்கண்ணால் கவனித்தாள், பிர்ஜூ அப்பா தன்னையே கண்கொட்டாமல் பார்ப்பதை- சம்பியாவும், பிர்ஜூவும் மட்டும் அங்கே இல்லாமல் இருந்தால் இருவரும் மனதில் பொங்கிவரும் மகிழ்ச்சியை வெளிப்படையாகவே காட்டியிருப்பார்கள். சம்பியாவும், பிர்ஜூவும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். குழந்தைகளின் முகத்தில் உல்லாசம் பிரகாசித்தது—"பாத்தியா, அம்மா வீணாக் கோவிச்சுட்டு இருந்திச்சு, இல்லே!"

"சம்பி கொஞ்சம் வெளியே நின்னு மக்னி அத்தையைக் கூப்பிடு!"

"ஏ அத்-தே- காது கேக்குதா? அம்மா கூப்பிடுது."

அத்தை நேரடியாகப் பதில் சொல்லவில்லை, ஆனால் அவள் தனக்குள் பேசிக்கொள்வது நன்றாகக் காதில் விழுந்தது—"ஆமா! இப்ப அத்தையைக் கூப்பிடுறா! தெருவிலே ஒரு அத்தைதான் இருக்கேன், முன்னாலே மூக்குக் கயிறும் பின்னாலே கட்டற கயிறும் இல்லாமே!"

"அத்தே!" பிர்ஜூவின் அம்மா சிரித்துக்கொண்டே பதிலளித் தாள்—"நான் அப்பச் சொன்னது தப்பாப் பட்டுருச்சா? மூக்குக் கயிறும் கட்டறகயிறும் உள்ளவங்களை வந்து பாருங்க, ராத்திரி ரெண்டு சாமம் ஆனபிறகு வண்டியைக் கட்டிட்டு வந்திருக்காரு! வாங்க அத்தே, எனக்கு இனிப்பு ரொட்டி பண்ணவே தெரியாது."

அத்தை இருமிக்கொண்டே வந்தாள்—"அதனாலேதான் பகல் லேயே கேட்டேன், நாட்டியம் பார்க்கப் போகலியா அப்படீன்னு! கூப்பிட்டிருந்தா, அப்பவே வந்து அடுப்பைப் பத்தவெச்சிருப்பேனே!"

பிர்ஜூ அம்மா அத்தைக்கு அடுப்பைக் காட்டினாள். பிறகு சொன்னாள்—"வீட்டிலெ கட்டிக் காக்க பெரிசா தானியம் இல்லே. ஒரு ஆட்டுக்கடா நிக்குது. நாலஞ்சு ஏனம் கிடக்கு. ராத்திரி முழுக்க தின்ன புகையிலே வெச்சுட்டுப்போறேன். ஹூக்கா எடுத்தாந்திருக்கே இல்லே அத்தே!"

அத்தைக்குப் புகையிலை மட்டும் கிடைத்தால்போதும், ராத்திரி முழுக்க என்ன, ஐந்து ராத்திரி உட்கார்ந்து கண்விழிக்கத் தயார். அத்தை இருட்டிலேயே தடவி புகையிலை எவ்வளவு இருக்கிறது என்று பார்த்துக்கொண்டாள். 'ஓ-கோ-கோ! பிர்ஜூவின் அம்மா கை நிறையத் தான் வெச்சிருக்கா புகையிலெ. அந்த ஸாஹூ வீட்டிலெ, அன்னிக்கு ராத்திரி கஞ்சா உருண்டை மாதிரி இம்மாத்தூண்டு புகையிலை வெச்சுட்டு குலாப்-பாக் மேளா பார்க்கப்போயிட்டாங்க. அந்த அம்மா போகையிலெ, டப்பா நிறைய புகையிலை வெச்சிருக்கேன்னு சொல்லிட்டு வேறெ போனா மகராசி!'

பிர்ஜூ அம்மா அடுப்பை ஊதிப்பற்ற வைத்தாள். சம்பியா வெந்த சீனிக்கிழங்கைப் பிசைந்து சின்னஞ்சிறு பந்துபோல உருட்டினாள். பிர்ஜூ தன் தலையில் சருவத்தைக் கவிழ்த்துக்கொண்டு அப்பாவுக்குக் காட்டினான்—"மிலிட்டரி தொப்பி! இதுமேலே பத்து லாத்தி சாத்தினாலும் ஒண்ணும் ஆவாது."

எல்லாரும் உரக்கச் சிரித்தனர். பிர்ஜூவின் அம்மா சிரித்துக் கொண்டே சொன்னாள்—"தட்டுமேலே பெரிசு பெரிசா மூணு சீனிக்கிழங்கு கிடக்கு, பிர்ஜூவுக்கு எடுத்துக்கொடேன் சம்பியா! பாவம், சாயங்காலத்திலிருந்தே-"

"பாவம் என்ன பாவம், எல்லாம் பொல்லாதுதான்!" இப்போது சம்பியாவும் வக்கணையாகப் பேசலானாள். "உனக்கு என்ன தெரியும் அம்மா, மெத்தைக்கு அடியிலே படுத்துக்கிட்டு சின்னதுரை வாய் வேலை செஞ்சிட்டே இருந்தது, ஆமாம்!"

"ஹீ—ஹீ—ஹீ-!"

பிர்ஜூவுக்கு பற்கள் விழுந்து முளைக்கும் பருவம். முன்பற்கள் இரண்டும் விழுந்து விட்டிருந்தன. பல்லை இளித்தவாறே அவன் பேசினான்—"பிளாக் மார்ட்டிலே நாலு சீனிக்கிழங்கு தின்னுட்டேன்! ஹா-ஹா-ஹா!"

எல்லாரும் மீண்டும் கொல்லென்று சிரித்தனர். பிர்ஜூவின் அம்மா அத்தையைக் குளிப்பாட்டும் எண்ணத்தில் கிழவியிடம் சென்று பிரமாதமாக ஆலோசனை கேட்டாள்—"ஒரு கட்டி வெல்லம் இருக்குது, பாதி போடவா அத்தே!"

அத்தை மகிழ்ந்துபோனாள்—'சீனிக்கிழங்கிலேயே இனிப்பு இருக்குது, அத்தனை என்னாத்துக்குப்போடறே?"

இரண்டு காளைகளும் புல்லும், தீனியும் தின்று ஒன்றையொன்று நக்கிக் கொள்வதற்குள் பிர்ஜூ அம்மா தயாராகிவிட்டாள். சம்பியா சுங்குடிச் சேலை கட்டிக்கொண்டாள். பிர்ஜூ பொத்தான் இல்லாத பேண்டில் சணற்கயிற்றினால் பெல்ட்டு கட்டிக்கொண்டான்.

பிர்ஜூ அம்மா முற்றத்தைத் தாண்டி கிராமத்துப் பக்கமாக காதுகொடுத்துக் கவனிக்க முயன்றாள்—"ஊஹூம், நடந்து போறவங்க இம்மா நேரத்துக்குள்ளாற புறப்பட்டுப் போயிருப்பாங்க, இன்னமா காத்துக்கிட்டு இருப்பாங்க?"

பௌர்ணமி நிலவு தலைக்கு மேலே வந்துவிட்டது. பிர்ஜூவின் அம்மா உடல் எல்லாம் புது மாதிரியான கிளுகிளுப்பு. அவள் வண்டியின் வில்லைப் பிடித்தவாறு கூறினாள்—"வண்டியிலே நிறைய இடம் இருக்குது- வண்டியை வலது கைப்பக்கமா ஓட்டுங்க கொஞ்சம்"

காளைகள் ஓடத் தொடங்கின. சக்கரங்கள் கடகடவென்று உருண்டன. பிர்ஜூவுக்கு உற்சாகம் பிறந்துவிட்டது—"ஏரோபிளேன் மாதிரி ஓட்டுங்க, அப்பா!"

வண்டி ஜங்கி வீட்டின் பின்புறத்தை அடைந்தது. பிர்ஜூவின் அம்மா கேட்டாள்—"ஜங்கி கிட்டெ கொஞ்சம் கேளுங்க, மருமகள் நாட்டியம் பார்க்க போயிடிச்சா?

வண்டி நின்றதும் ஜங்கியின் குடிசையிலிருந்து அழுகைக்குரல் தெளிவாகக் கேட்டது. பிர்ஜூவின் தகப்பன் கேட்டான்—"ஜங்கி அண்ணே, என்னா அது அழுகை- முற்றத்திலே?"

குளிர் காய்ந்துகொண்டிருந்த ஜங்கி பதிலளித்தான்—"என்னத்தைச் சொல்ல! ரங்கி பலராம்புர்லேயிருந்து இன்னும் திரும்பலே. மருமக எப்படி நாட்டியம் பார்க்கப்போகும்? ரங்கியை எதிர்பார்த்து இம்மா நேரம் கிடந்தா, ஊர் பூரா போயிடிச்சி."

"அடீ டேசன்காரி, எதுக்கு அளுவறே?" பிர்ஜூவின் அம்மா அன்புடன் குரல் கொடுத்தாள்—"வா சல்தியா, புதுச்சேலையைக் கட்டிக்கிட்டு- வண்டிபூரா கெடக்குது. வாடி கண்ணு! பாவம்!"

பக்கத்துக் குடிசையிலிருந்து ராதேயின் மகள் சுன்ரீ கேட்டாள்—"சித்தி வண்டியிலே இடம் இருக்குதா? நானும் வரலாமில்லே?"

மூங்கில் புதருக்கு அந்தண்டை லரேனா வீடு, அவனுடைய பெண்சாதியும் போகவில்லை. கில்ட்டு ஜிமிக்கியும் வளையும் அணிந்து ஒய்யாரமாக வருகிறாள்.

"வா, வா- மீதி இருக்கிற எல்லாரும் வந்து ஏறிக்கிடுங்க ஜல்தியா!"

ஜங்கியின் மருமகள், லரேனா பெண்சாதி, ராதேயின் மகள் சுன்ரீ மூன்றுபேரும் வண்டிக்கருகே வந்தார்கள்.

காளை பின்னங்காலைத் தூக்கி உதைத்தது. பிர்ஜூவின் தகப்பன் காளையைச் செல்லமாக வைதான்—"ஸாலா! என்ன எத்தறே? மருமகளை நொண்டியாக்கணும்னு நெனப்பா?"

இதைக்கேட்டு எல்லாரும் சிரித்தனர். சேலைத்தலைப்பால் தலையை மூடியிருந்த புதுமணப்பெண்களின் முகங்கள் நாணத்தால் குனிந்தன. பிர்ஜூவின் அப்பாவுக்கு தன்னுடைய வயலில் குனிந்து நிற்கும் கதிர்களின் நினைவு வந்தது.

மூணுமாதம் முன்புதான் ஜங்கி மருமகளின் கௌனா (பெண் வயதுக்கு வந்ததும் கணவன் வீட்டுக்கு அனுப்புமுன் நடத்தும் முதலிரவுச் சடங்கு) முடிந்திருந்தது. கௌனாவுக்காக வாங்கிய வண்ணச்சேலையும், தலையில் தேய்த்திருந்த கடுகெண்ணையும், கஸ்தூரி மஞ்சள் குங்குமத்தின் வாசனையும் சேர்ந்து அலாதியான சூழலை உருவாக்கியது. பிர்ஜூவின் அம்மாவுக்குத் தன்னுடைய கௌனா ஞாபகம் வந்தது. அவள் துணி மூட்டையைத் திறந்து மூன்று இனிப்பு ரொட்டிகளை எடுத்தாள்—"சாப்பிடுங்க மூணுபேரும். சத்திரத்துக்குப் போனதும் பைப்புத் தண்ணி குடிக்கலாம்."

வண்டி கிராமத்தைக் கடந்து வயல்காட்டுக்குப் பக்கத்திலுள்ள பாதைக்குத் திரும்பியது. பால்பொழியும் நிலவு! தானிய வயல்களில் பொழிந்து கிடக்கும் பூக்களிலிருந்து வரும் வாசனை மூக்கைத் துளைத்தது. மூங்கில்புதர் நடுவே இராப்பாலை பூத்திருந்தது. அதன் வாசனையும் சேர்ந்துகொண்டது. ஜங்கியின் மருமகள் ஒரு பீடியைப் பற்றவைத்து பிர்ஜூ அம்மா பக்கமாக நீட்டினாள். சம்பியா, சுன்ரி, லரேனா பெண்சாதி, ஜங்கியின் மருமகள் எல்லாருமே நல்லா சினிமாப் பாட்டுப் பாடுவாங்களே என்ற விஷயம் பிர்ஜூவின் அம்மாவுக்குத் திடீரென்று நினைவு வந்தது. 'நல்லவேளை! இப்பவாச்சும் நினைவுக்கு வந்ததே' என்று எண்ணினாள்.

இப்போது நெல் வயல்களுக்கு நடுவே அமைந்த பாதையில் வண்டி ஓடுகிறது. ஜல் ஜல், ஜல். நாலாபக்கமும் 'கௌனா' சேலையின் சலசலப்பு போன்ற ஒலி. பிர்ஜூவின் அம்மா தலையில் சூட்டியிருந்த நெற்றிச்சுட்டியின்மேல் நிலவொளி மின்னுகிறது.

"ஒரு சினிமாப்பாட்டு பாடேன் சம்பியா! எதுக்குப் பயப்படறே? நடுவிலே மறந்துபோனா, பக்கத்திலேயே வாத்தியாரம்மா இருக்கா இல்லே, எடுத்துத் தருவா!"

சம்பியாவும், சுன்ரியும் தொண்டையைக் கனைத்துக்கொண்டு பாட ஆயத்தமானார்கள். மற்ற இரண்டு இளம்பெண்களும் புதுமணப் பெண்களுக்குரிய நாணத்துடன் அமர்ந்திருந்தனர்.

பிர்ஜூவின் தகப்பன் காளைகளை உற்சாகப்படுத்தினான்—"ஓடு தம்பி ஓடு! வேகமா ஒரு பிடி பிடி! பாடு சம்பியா! இல்லேன்னா, நான் காளைங்களை மெதுவாப் போகச்சொல்லுவேன்."

ஜங்கியின் மருமகள் சம்பியாவின் செவியருகே வந்து பாட்டின் அடியை முணுமுணுத்துதாள். சம்பியா மெல்ல பாட ஆரம்பித்தாள்—"சந்தா கீ சாந்த்னீ_"

*பிர்ஜூவை மடியில் வைத்துக்கொண்டு அமர்ந்திருந்த அவனுடைய அம்மாவின் மனதில் சம்பியாவுடன் கூடச்சேர்ந்து பாட வேண்டும்போல ஆசை எழுந்தது.*

*பிர்ஜூவின் அம்மா ஜங்கியின் மருமகளைப் பார்த்தாள். அவள் உதடுகளும் பாட்டை மெல்ல முணுமுணுக்கின்றன. எத்தனை அழகான மருமகள்! 'கௌனா' சேலையிலிருந்து புதுவிதமான மணம் வீசுகிறது.*

*'இவ காலையிலே என்னை ஹாட்டின் ராணின்னு சொன்னா. தப்பா எதுவும் சொல்லலியே. சீட்டுக்கட்டிலே இருக்கிற செகப்புராணி போலத்தானே இருக்கேன் செகப்புச்சேலை கட்டிக்கிட்டு- தப்பா எதுவும் சொல்லலே.'*

*பிர்ஜூவின் அம்மா தன்னுடைய பார்வையை மூக்கு நுனியில் குவிக்க முயன்று தன்னுடைய அழகை ரசித்தாள்.*

*சிவப்புச்சேலை, அதன் சரிகைக்கரை. நெற்றிச் சுட்டியில் நிலவொளி- பிர்ஜூவின் அம்மா மனசில் இப்போது எந்தவிதமான ஆசையும் இல்லை. எல்லாம் நிறைந்துவிட்டது. அவளுக்கு உறக்கம் வருகிறது.*

(1957)

# திரைக்குப்பின் நடிகன்

நான் அவனை இதற்குமுன் எத்தனையோ தடவை பார்த்திருக்கிறேன். ஆனால் அன்று அவனைக்கண்டு திடுக்கிட்டுப் போனேன். ஏதோ பருவம் தப்பிப் பூத்த பூவை—காய்த்த காயைப் பார்த்தாற் போன்ற உணர்வு ஏற்பட்டது. நல்ல கார்காலத்தில் அடாது பெய்யும் மழைக்கு நடுவில் இவன் எங்கிருந்து வந்தான்? ஏன் இங்கே வந்தான்?

நான் மட்டுமல்ல, தெரிந்தவர், தெரியாதவர் எவருமே அவனைப் பார்த்து அதிசயத்துடன் நின்றுவிடுகிறார்கள். சிலர் மேசைக்கருகே சென்று அவனிடம் ஏதோ கேட்கிறார்கள். இந்தக் கேள்விகளுக்கு அவன் பட்டும் படாமலும் பதிலளிப்பதையும் நான் கவனித்தேன். பார்பிஸ்கஞ்சில் ஒரு சிறிய டீஸ்டாலில் ஒற்றைக்கை நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் அந்த நபரைப் பார்த்து எல்லாரும் ஏன் இப்படி திகைத்துப்போய் நிற்கிறார்கள்? இதன் காரணத்தை நானும் தப்பாமல் கண்டுபிடித்துவிட்டேன்.

என் மனம் கடந்த காலத்தை நோக்கிப் பாய்ந்தது—ஆம்; சரிதான். இந்த நபரை முதன்முதலாக 30–31 வருடங்களுக்கு முன்பு அதாவது 1929ல் பார்த்தது நினைவுக்கு வந்தது. அந்த வருடம்தான் குலாப் பாக் மேளாவில் முதல் தடவையாக ஆகாயவிமானத்தை வெகு அருகி லிருந்து பார்த்தேன் ஆம், தொட்டுக்கூடப் பார்த்தேன். அதனால்தான் வருடம் தேதி மாதம் எல்லாம் அப்படியே பசுமையாக ஞாபகத்திற்கு வருகிறது. அப்போது எனக்கு ஏழு-எட்டு வயது இருக்கும். அதே வருடம்தான் குலாப் பாக் மேளாவில் கல்கத்தாவிலிருந்து பிரபலமான நாடகக் கம்பெனி வந்திருந்தது. நாடகம் பார்க்க நல்ல கூட்டம்—எள்ளுப்போட்டால் கீழே விழாது. அந்த நாடகக் கம்பெனி, மேடைமீது பல அற்புதங்களை—ஜாலங்களைச் செய்து காட்டியது. அப்படியே ரயில் வண்டி வந்து நிற்கும் இஞ்சினுடன். காதைப் பிளக்கும் குரலில் கூவிக்கொண்டு, ஜிகுஜிகுவென்று வரும். கபகப என்று புகைத்திரள் எழுப்பும். அது மட்டுமா, வண்ணவண்ண விளக்கொளியில் தேவ கன்னிகைகள் நாட்டியமாடுவார்கள். அடேயப்பா!

வாழ்க்கையில் முதல்முறை நாடகம் பார்த்து மனதில் சொல்ல முடியாத குதூகலம். இன்று நினைத்தாலும் அந்த உணர்வின் கிளர்ச்சி பசுமையாக இருக்கிறது. என்னென்ன வித்தைகள், மாயாஜாலம்தான்!

ஆனால் விடுமுறை முடிந்து பள்ளிக்கூடம் திறந்ததுமே சொப்பன உலகத்தின் சாயம் வெளுத்துவிட்டது. என்னுடைய சகமாணவன் பகுல்பானர்ஜி அசல் நாடகக் கம்பெனியை வருணிக்கக் கேட்டபோது நான் பார்த்தது ஒன்றுமே இல்லை என்ற உணர்வு ஏற்பட்டது. எனக்குச் 'சப்'பென்று ஆகிவிட்டது. அவனுக்கும் என்னைப்போலவே ஒன்பது பத்து வயதுதான் இருக்கும். ஆனால் என்னை விட அவன் அனுபவ சாலி; நல்ல புத்திக்கூர்மை உடையவன், பிறவியிலேயே 'கலை விமர் சகன்.' அவன் ஒரேயடியாக இந்தக் கம்பெனியை இறக்கிப் பேசினான். நாகேசர்பாக் மேளாவில் வந்ததே அதுதான் அசல் கம்பெனியாம். அதிலிருந்து நீக்கப்பட்டவர்கள் சேர்ந்து கொண்டு ஆரம்பித்ததுதான் இந்தக் கம்பெனியாம். அதனால் இது போலிக்கம்பெனி. இதைக் கேட்டதும் என்முகம் வாடியது. அதைக்கவனித்து என்னை உற்சாகப் படுத்தும் வகையில் நண்பன் இந்தக் கம்பெனியின் ஒரு சிறப்பு அம்சத்தை எடுத்துக் கூறினான்—“இருந்தாலும் இந்தக் கம்பெனியில் ஒரு விஷயத்தை மெச்சணும். இதிலே ரெயில்வே போர்ட்டராக வர்றார் இல்லே அதே ஆளுதான் நாகேசர்பாக் மேளா கம்பெனியில் அதே பார்ட்டில் நடிச்சாரு. அதாவது வெயிட்டிங் ரூம்லே தூங்கிட் டிருக்கிற பையனைக் கொல்றாரே, கத்தியைக்கொண்டு- அவரைப் போலின்னு சொல்லமுடியாது.”

இன்றைக்கும் என் மனதில் அந்தக்காலத்து சம்பவங்கள் எல்லாம் நினைவில் இருக்கின்றன. குலாப் பாக் மேளா- பஞ்சாப் மெயிலில் ரெயில்வே போர்ட்டர்- சிறுவனின் படுகொலை- பகுலின் பேச்சு-

பிறகு நாலைந்து ஆண்டுகள் கழிந்து சிம்மேஸ்வர் மேளாவில் வந்திருந்த உமாகாந்த் ஜா கம்பெனியில் இந்த நபரை மீண்டும் பார்த்தேன். 'வில்வ மங்கள்' என்ற நாடகம். அதில் சிந்தாபாயின் சபையில் சந்நியாசி வேஷத்தில் வந்தது இதே ஆள்தான். 'காயா கா பிஞ்ஜரா டோலேரே, ஸான்ஸ் கா பஞ்சீ போலே' (உடல் என்னும் கூண்டு ஆடுதடா, மூச்சென்னும் பட்சி பாடுதடா) என்ற பாட்டைப் பாடிக்கொண்டு வருவார் கணீரென்ற குரலில். குலாப் பாக் கம்பெனி நாடகத்தில் சிறுவனைக்கொல்லும் கொலைகாரப் போர்ட்டர், சந்நியா சியின் காவி உடையில்! தன் குரலை அவனால் அதிக நேரம் மறைக்க முடியவில்லை. நான் சட்டெனக் கண்டுபிடித்துவிட்டேன். பிறகு பார்சி கம்பெனி நாடகத்தின் ஒரு காட்சியில் அவன் கவிதை படித்தான்.

'மிருதங்க் கஹே திக் ஹை திக் ஹை
மஞ்சீர் கஹே கின்கோ கின்கோ!
தப் ஹாத் நசாய்கே கணிகா கஹ்தீ
இன்கோ இன்கோ இன்கோ இன்கோ!'

அப்போதும் எனக்குத் துளிக்கூட சந்தேகமே தோன்றவில்லை. நன்றாகப் பரீட்சை செய்து சந்நியாசியைக் கண்டுகொண்டேன்—அதே ஆள்தான் குலாபி பாக் மேளா கம்பெனியில் வெயிட்டிங் ரூமில் சிறுவனின் உடலில் கத்தியை செருகுவதற்குமுன் நடுங்கும் கரத்தையும், வெடவெடக்கும் கட்டாரியையும் பார்த்து பித்தன்போல வசனம் பேசினான்—"ஓ என் கரமே! நீ ஏன் நடுங்குகிறாய்? நீ உன் எஜமானரின் கட்டளையை நிறைவேற்றுகிறாய், அவ்வளவுதானே! நடுங்காதே என் கட்டாரியே பொன்னான நேரத்தை வீணாக்காதே! உறங்கிக்கிடக்கிறது உன்னுடைய இரை. நீயும் உன் பணியை நிறைவேற்று!" உடனே மத்தளத்தை ஓங்கி அடிக்கும் பயங்கர ஓசை, நாடகம் பார்ப்பவர்கள் மனதில் அச்சம் படர்கிறது—இதெல்லாம் என் மனதில் அப்படியே பதிந்திருக்கிறது.

அதன்பிறகு மூன்றாவது முறை—ஆத்யா பிரசாதின் நாடகக் கம்பெனியில் 'ஸ்ரீமதி மஞ்சரி' என்ற நாடகம். அதில் வெள்ளைக்கார நீதிபதி வேடத்தில் வந்தான். கையில் ஒரு சிறு சுத்தியலை எடுத்துக் கொண்டு மேசையில் பலமாகத் தட்டி அமைதியை நிலைநாட்டிய வாறு பேசினான்—"வெல் மொஞ்சரி பாய்! நாம்பல் உனக்கு சிறீமிடி மொஞ்சரி என்ற பட்டம் டரோம். இன்று மொதல் ஒன்னெ சிறீமிடி மொஞ்சரி ஷொல்லுவோம். நாம்பல் ஷொன்னா அல்லாரும் ஷொல்வா, புரிஞ்சுடா?" இந்தக் காட்சிக்குப் பிறகு அடுத்த சில கணங்களில் சந்நியாசி வேடத்தில் பாடிக்கொண்டே வந்தான்—"காயா கா பிஞ்ஜரா டோலேரே"—அதே பழைய மெட்டில்.

இவனைக் கண்டுபிடிப்பதில் துளிக்கூடத் தவறு ஏற்படவில்லை. ஒவ்வோர் இடத்திலும் சரியாகக் கண்டுபிடித்துவிட்டேன்.

அவன் டீ ஸ்டால் நாற்காலியில் உட்கார்ந்திருந்தது நிஜம்தான். ஆனால், சோர்ந்துபோய், வாட்டத்துடன், ஏதோ நினைவில் தன்னையே மறந்தவனாக உட்கார்ந்திருந்தான். சோவெனப் பொழியும் மழையை கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான். அவன்-அவன்தான் கொலைகார போர்ட்டர், சந்நியாசி, வெள்ளைக்கார நீதிபதி- பாதிரி- சிப்பாய்- கொள்ளைக்காரன்- குருடன்- பக்கிரி- இம்மாதிரி வேடங்களில் வந்தது ஒரேஆள்தான்- ஒரே நபர்தான்-

இத்தனை நேரத்துக்குப் பிறகு என் பார்வை அவன் அணிந் திருந்த புஷ் ஷர்ட் மீது பதிந்தது. ஏதோ கார்ட்டூன் படம் போட்ட சட்டை. படமெல்லாம் மங்கி, அதன்மேல் அழுக்குப் படிந்துவிட்டது. புது டிசைன் செருப்பு, ஆனால் அறுந்து கிடந்தது. அவன் நாற்காலி யிலிருந்து சற்றே எழும்பி டீக்கடைக்காரரைப் பார்த்தபடி உரத்த குரலில் கூவினான்—"இந்தாப்பா, ஒரு டீ இங்கே" அவனுடைய இந்தக்

குரலைக் கேட்டதும், கொலைகாரப் போர்ட்டராக—அச்சமுறுத்தும் பயங்கரக் கொள்ளைக்காரனாக—கம்பீரமான ஆங்கில நீதிபதியாக, சாந்தமே உருவான பாதிரியாக நடித்த அந்த மனிதனுக்கு வயதாகி விட்டது சந்தேகத்துக்கு இடமில்லாமல் தெரிந்தது.

ஆ நன்றாக நினைவிருக்கிறது—பார்பிஸ்கஞ்ச் மேளாவில் நாடகக் கம்பெனியின் சில நடிகர்கள் கடைத்தெருவில் சுற்றிக் கொண் டிருந்தனர். அவர்கள் பின்னால் நானும் வெகுநேரமாகச் சுற்றிக் கொண்டிருந்தேன். ஒரு வெற்றிலைபாக்குக்கடை வாசலில் எல்லாரும் நின்றார்கள், நானும் பின்னாலேயே நின்றேன். அந்தக் குழுவில் நிறையப்பேர் இருந்தனர்—லைலா, மஜ்னு, பர்ஹாத், ராஜா, கொள் ளைக்காரனின் பிடியிலிருந்து ராஜகுமாரியை விடுவிக்கும் ராஜ குமாரன், அவ்வப்போது கொலைக்களத்தில் அரச கட்டளையை நிறைவேற்ற முறுக்கு மீசையுடனும், பெரிய கத்தியுடனும் நிற்பவன் எல்லாரும் வெற்றிலை பாக்குக் கடையில் நின்றிருந்தார்கள். அவர் களுடன் 'காயமே இது பொய்யடா காற்றடைத்த பையடா' என்ற பாட்டைப் பாடும் சந்நியாசி. பின்னால் நிற்கும் என்னைப் பார்த்து அவன் சீறினான்—"எதுக்கு எங்க பின்னாலே சுத்தறே? அசந்தா பாக்கெட் அடிக்கலாம் என்ற எண்ணமா?"

அந்த இளம் பிராயத்திலும், தன்மானத்துக்கு இழுக்கு வந்ததை என் மனம் உணர்ந்தது. என்னுடைய தன்மானம் சீறி எழுந்தது. "உங்க பாக்கெட்டுல என்ன இருக்கு அடிக்க?" என்று சுடச்சுடக் கேட்டு விட்டேன்.

சின்னப்பையன் இத்தனை துடுக்காக பதில் சொல்வான் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. ஒருகணம் திகைத்து நின்றான். பிறகு தன்னைச் சுதாரித்துக்கொண்டு கேட்டான்— "எதை வச்சுச் சொல்றே என் பாக்கெட்டு காலின்னு?"

நான் அப்போது பத்தாவது படித்துக் கொண்டிருந்தேன்—அதாவது எங்கள் பள்ளியிலேயே மிகப்பெரிய வகுப்பு. ஆசிரியரின் போதனைப்படி அறிமுகமில்லாத யாரைக்கண்டாலும் ஆங்கிலத்தில் பேசத்தான் தோன்றியது. அந்த அளவுக்குப் பயிற்சியும் இருந்தது. இருந்தாலும் போனால் போகிறது என்று தாய்மொழியிலேயே பதிலளித்தேன்—"ஏன்? நேத்து ராத்திரிதானே பிச்சை எடுத்துக் கிட்டிருந்தீங்க—'தர்மதுரை நீங்க நல்லா இருக்கணும்' அப்படீன்னு!" எல்லாரும் கடகடவென்று சிரித்தார்கள், 'சோக்ரா படா தேஜ்' (பயல் படுசுட்டி) என்றனர்.

என்னை 'சோக்ரா' என்று குறிப்பிட்டது எனக்குப் பிடிக்க வில்லை. உடனே ஆரம்பித்துவிட்டேன் ஆங்கிலத்தில்—"ரெயில்வே

போர்ட்டர்—ஆக்டர், டோன்ட் ஸே மீ சோக்ரா, ஐ ஆம் மெட்ரிக் ஸ்டூடெண்ட், யூ நோ?"

பழைய சம்பவங்கள் ஞாபகத்துக்கு வந்ததும் என் உதடுகளில் புன்னகை மலர்ந்தது. என் மனதில் அடுக்கடுக்காக வினாக்கள் எழுந்தன. இப்போது எந்தக் கம்பெனியில் வேலை செய்கிறான்? அதேமாதிரி கன கம்பீரமான குரலில் 'டயலாக்' பேச முடியுமா? வெயிட்டிங் ரூமில் கட்டாரியை ஆட்டிக்கொண்டு பேசினானே, அதே மாதிரி செய்ய முடியுமா? அதேமாதிரி–

யோசனை தடைப்பட்டது. அவனும் டீ குடித்து டம்ளரைக் கீழே வைத்தான். பிறகு என் மேசை அருகே வந்துநின்றுகெண்டு, "உங்களுக்கு என்னைத் தெரியுமா சேட்?" என்று கேட்டான்.

கையைப் பிடித்து அவனை உட்கார்த்தியவாறு நான் பதிலளித்தேன்—"நான் சேட் இல்லை. சுத்தமான 'மனிதன்'. உங்களைப் பத்திச் சொல்லுங்க. எந்தக் கம்பெனியிலே இருக்கீங்க இப்ப? சீசன் இல்லாத இந்த நேரத்தில் உங்களை இந்த வட்டாரத்திலே பார்க்க ஒரே வியப்பாக இருக்குது!"

"ஐயா, இப்ப கம்பெனி எங்கே? நாடகம் எங்கே? எல்லாத்தையும் சினிமா வந்து விழுங்கிடுச்சே!" என்றான் வெறுமை கலந்த சிரிப்புடன்.

"நீங்க எத்தனை கம்பெனியிலே நடிச்சிருக்கீங்க?"

"வள்ளிசா பதினஞ்சு கம்பெனி ஐயா!" ஒவ்வொரு கம்பெனியின் நினைவுகளையும் மனதில் பசுமையாக அப்படியே நிறுத்திவைக்க முனைவது போலத் தோன்றியது. ஒருநிமிடம் பொறுத்து வெற்றுப் பார்வையுடன் என்னை உற்றுப் பார்த்துக்கொண்டு கூறினான்—"ஒன்பது வயசில் முதல் தடவையாக ஸ்டேஜில் இறங்கினேன்—கிருஷ்ணர் வேஷத்தில்."

என் முன்னால் கடந்த காலத்தின் கடைசிக் காட்சி மானிட உருவத்தில் அமர்ந்திருக்கக் கண்டேன். நாடகக் கம்பெனியின் ஆடி ஓய்ந்த அந்த நடிகன் தேய்ந்துபோன காசுபோல காணப்பட்டான். ஒரு சிகரெட்டை அவன் பக்கமாக நீட்டியபடி "நீங்க என்ன செய்ய றீங்க இப்ப?" என்று கேட்டேன்.

அவன் மறுமொழி கூறாமல் ஒருகணம் என்னையே உற்றுப் பார்த்துவிட்டு சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டே சொன்னான், "என்னத்தை செய்ய ஐயா! ஒரு கவிஞன் பாடியிருக்கிறானே, நினைவிருக்கிறதா? 'காதல் என்னை உதவாக்கரையாக்கிவிட்டது. இல்லாவிட்டால் நானும் மனிதனாகயிருப்பேன்' என்று" அவன் சிரிக்க முயன்றான். நடிப்பாகக் கூடச் சிரிக்க முடியவில்லை. பதிலைத் தொடர்ந்தான்—"பத்து வருஷத்துக்குப் பிறகு இந்தப் பக்கம்

வந்திருக்கேங்க. இந்தச் சீமைக்கு என்ன பேரு சொல்லுவாங்க? ஆங்-மிநிலாதேசம், ஐயா, இந்த ஊர்க்காரங்களுக்கு நாடகத்திலே விருப்பம் ஜாஸ்தி. நான் சினிமாவிலேயும் நடிக்கப்போனேன். ஆனா, மனசுக்குப் பிடிக்கலீங்க." இத்தனையும் பேசிமுடித்துவிட்டு அவன் ஓரக்கண்ணால் சுற்றுமுற்றும் பார்த்தான். பிறகு மெல்லிய குரலில் பரிதாபமாக என்னிடம் கூறினான்— "ஸாஹப், எக்ஸ்க்யூஸ் மீ, ஃபார் லாஸ்ட் டூ டேஸ் ஐ ஆம் ஹங்க்ரி, வெரி ஹங்க்ரி. பிச்சை கேட்கலாம்னா, அதுக்கும் துணிவு இல்லே."

அவனுடைய இந்த டயலாக் எந்த நாடகத்துக்கும் ஒவ்வாததாக இருந்தது. நான் ஏதோ சொல்ல வாயெடுத்தேன். அதற்குள் முகத்தில் பணிவை வரவழைத்துக்கொண்டு வெகு பவ்யமாகக் கேட்டான்—"நீங்க உத்தரவு கொடுங்க, ஏதாவது நடிக்கிறேன். இப்ப இது மட்டும்தான் எனக்கு ஆதாரம். பழைய நாடக ரசிகர்கள் யாராவது கிடைச்சா வசனம் பேசுவேன். மனசுக்கு ஆறுதலா இருக்கும். அத்தோடு ஏதாவது." அவன் தன்னுடைய வாக்கியத்தை முடிக்காமலேயே குதித்துப் பாய்ந்தான்; மூலையில் வைத்திருந்த தன்னுடைய பெட்டியை எடுத்து வந்தான். கறுப்பு நிறத்தில் ஒரு லுங்கியை எடுத்து முகத்தை மறைத்துக் கொண்டான். பிறகு லுங்கித்திரையை உயர்த்தினபோது, வாள்போல் முறுக்கு மீசையுடன் ஒரு வேடிக்கையான முகம் தென்பட்டது. மீடியமான குரலில் அறிவிப்பு—"இது ஒரு நிராசையடைந்த, சோகமே உருவான இளம் காதலனின் டயலாக்." ஒருமுறை தொண்டையைக் கனைத்துக்கொண்டு பேச ஆரம்பித்தான்—'சபலா! சதிகாரி, நீ என்ன செய்துவிட்டாய்! என் இதயத்தை சுக்கு நூறாக உடைத்துவிட்டாயே! ஆயிரமாயிரம் தூளாகப் பறக்கவிட்டாய்! நய வஞ்சகி, இது உனக்குத் தகுமா? அடுக்குமா? சபலா. சபலா. போய்விட்டாய். சபலா நீ போய் விட்டாய். என்னைத் தவிக்கவிட்டுப் போய்விட்டாய்." இதன் பிறகு விக்கல்—விம்மல்களுக்கிடையே அவன் பேசிய டயலாக்கை எழுத்தால் வடிக்க இயலாது.

கடையில் ஜனங்கள் பொலபொலவென்று கூடிவிட்டார்கள். நாலா பக்கத்திலிருந்தும் குனிந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். அனைவர் கண்களிலும் வியப்பு! ஏதோ புதுவிதமான குதூகலம்! ஆனால், ஒருவராவது பேசவேண்டுமே! வெளியே வானம் மப்புப் போட்டிருந்தது. இடையிடையே இடிஇடிக்கும் சப்தம். அவன் மீண்டும் தன் முகத்தைக் கறுப்புத் திரையால் மூடிக்கொண்டான். திரைக்குப் பின்னால் ஒப்பனை அறைக்குச் சென்றுவிட்ட நினைப்பு! இம்முறை பெரிய நீளமான தாடி மீசையுடன் கொள்ளையர் தலைவனாக வெளியே வந்தான். திரை உயர்ந்தது. அவன் கர்ஜனை புரிந்தான்.

"ஏண்டா சோதாப்பயலே! சொல்லு, ராஜகுமாரன் எங்கே? எங்கே அந்தக் கயவாளி மகன்."

இந்த வசனத்தைக் கோபத்துடன் பேசுகையில் அவனுடைய பொய்ப் பல்செட்டு வாயிலிருந்து கழன்று வெளியே வந்துவிட்டது.

இப்படியாக அவன் மாற்றி மாற்றி வேறு முகங்களுடனும், பலப்பல பாவங்களுடனும் விதவிதமான வசனங்களைப் பேசினான். கடைசியில் தொப்பியை பிச்சை ஓடு போல நிமிர்த்திக்கொண்டு பார்வையாளர்களை நோக்கி இறைஞ்சினான்—"கொடைவள்ளல்களே, நீங்க நல்லா இருக்கணும், ஓரணா, இரண்டணா... இரண்டு பைசாவாவது போடுங்க."

என் கால்கள் திடீரெனத் தரையைத் தொட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது. உள்ளே எங்கேயோ காயம்பட்டதுபோல உலுக்கல் ஏற்பட்ட மாதிரியான உணர்வு. இந்த மனிதன் தன்னுடைய கலை என்னும் மாயாஜாலத்தினால் என்னை எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்னால் அழைத்துச் சென்றிருந்தான். நான் மீண்டும் யதார்த்த உலகுக்கு வந்துவிட்டேன். பகுல் பானர்ஜி என்னைக் கண்கொட்டாது பார்ப்பதை உணர்ந்தேன். உதட்டின் ஓரத்தில் புன்னகையுடன் அவன் நின்றான்.

பகுல் குரலை உயர்த்தி அவனிடம் கேட்டான்—"ஏன்ய்யா, நடிகப் பெருமகனாரே, நேத்து எத்தனை சிரமப்பட்டு நன்கொடை சேகரித்துத் தந்தேன். எல்லாத்தையும் ஒரே ராத்திரியிலே ஊதிட்டயா? நல்ல ஆளுய்யா நீ!"

பிறவியிலேயே கலை விமர்சகனான என் தோழன் பகுல் பானர்ஜி இன்னும் கலையையும் கலைஞர்களையும் அதேநோக்கில் தான் எடைபோடுகிறான். அவன் அன்றும் என்றும் ஒரேபோல இருக்கிறான். பிறகு என்னை இடித்துக் கூறினான்—"நீயும் இவன் வலையில் சிக்கிவிட்டாய். நேத்து என்னிடமும் இப்படியேதான் சொன்னான்—'ஃபார் டூ டேஸ் ஐ ஆம் ஹங்க்ரி.'"

ஏனோ தெரியவில்லை, அந்த நேரத்தில் எனக்கு பகுலின் பேச்சு அவ்வளவாக ரசிக்கவில்லை. அவனைப் பேசாமலிருக்கும்படி சைகை செய்தேன். பிறகு மெல்லிய குரலில் சொன்னேன்—"பகுல், இவனுடைய உடல் என்னும் கூண்டு ஆடிவிட்டது. இந்தக் கூட்டினுள் ஒரு பறவை பேசுகிறதே அதன் குரலைக் கேட்டுக்கூட உன் மனத்தில் ஒன்றும் தோன்றவில்லையா? நிசம்மாச் சொல்லு!"

பகுல் ஏதும் பேசவில்லை. சற்றுநேரம் என்னையே உற்றுப் பார்த்தான். பிறகு மெதுவான குரலில் கூறினான்—"தோணிச்சு. அதனால்தானே நேத்துப்பூரா இவனுக்கு உதவ இவனுடனேயே எத்தனை பேரைச் சந்தித்து நன்கொடை யாசகம் பண்ணினேன். நன்கொடை கேட்பதும் யாசகம்தானே!" அவன் பெருமூச்சுவிட்டான்.

பிறகு தொடர்ந்தான்—"என்ன கேட்டே? என் மனசில் ஒண்ணும் தோணலையா என்று கேட்டாய். என்ன தோணிச்சுன்னா- உன்னுடனாவது அல்லது மற்ற பழைய நண்பர்கள் யாருடனாவது எங்காவது போய் இராப்பூரா நாடகம் பார்க்க மாட்டோமா அப்படீன்னு தோணிச்சு." அவன் கூறியதை நானும் ஆமோதித்தேன்—"ஆமாம், பகுல், எனக்கும் அப்படித்தான் தோணுது."

இதற்கிடையில் அந்தக் கிழ நடிகன் அந்தக் காலத்தில் பிரபலமான தன்னுடைய பாட்டின் முதல் அடியை இவ்வாறு எடுத்தான்.

"ஸுபஹ் ஹோ கயீ நிகல் கயே தாரே—
முஜே சோடோ சலோ மேரே ப்யாரே!"

(பொழுது புலர்ந்தது, தாரகைகள் மறைந்தன; என்னையும் போகவிடு அன்பனே!)

மீண்டும் எங்கள் மனதில் அந்தப் பழமையான நாடக உலகம் மின்னிக் கொண்டிருந்தது.

(1960)

# டேபிள்

*மிஸ் துர்பா தாஸ்!*

*இன்று அவள் வெறும் செல்வி துர்பா தாஸ் அல்ல. மிஸ். துர்பா தாஸ், கிளையின் உதவி மேனேஜர், கான்டினென்டல் காஸ்மடிக்ஸ் அண்டு டிரக்ஸ் லிமிடெட் கல்கத்தா—பம்பாய்—டில்லி—பட்னா. கிளை அலுவலகம் பட்னா.*

*கிளை அலுவலகத்தின் ஒவ்வொரு பிரிவிலும் சிப்பந்திகளி னிடையே ஒருவாரமாக பேசப்படும் விஷயம்—மிஸ் துர்பா தாஸ். டெஸ்பாட்ச் கிளார்க்காக கம்பெனிக்கு வந்தவள், ஹெட்கிளார்க் ஆகி எட்டே வருடத்தில் கிளையின் உதவி மானேஜர் பதவியை எட்டிப் பிடித்து விட்டாளே!*

*கான்டீன் படியின் அருகே உட்கார்ந்து துப்புரவுத் தொழிலாளி அபிலாக்ராம், கான்டீனில் புதிதாக வந்த பையன் சியாராமதாசிடம் மிஸ் துர்பாதாஸைப் பற்றி இவ்வாறு வருணித்தான்—"இந்த மிஸ் அம்மாவை சின்னவயசிலேயிருந்தே எனக்குத் தெரியும். ஆமாம். இவங்க அப்பா வங்காளி பாபு எவ்வளவு பெரிய அக்கவுன்டன்டு தெரியுமா? அதனாலேதான் இவங்களும் கணக்கிலே கருக்கா இருக் காங்க. ஒருநாள் பெருக்கி சுத்தம் செய்ய வராட்டிப்போனா அந்த ஒருநாள் சம்பளத்தைப் பிடிச்சுடுவாரு. கேட்டா, 'வேலை செய்யாமெ கூலி வாங்கினா செரிக்காதுப்பா' அப்படீன்னு சொல்லுவாரு."*

*தோட்டக்காரன் தொடர்ந்தான்—"அப்படீன்னா மிஸ் அம்மா வுடைய கஞ்சத்தனம் பரம்பரையா வந்ததுன்னு சொல்லு. நேற்றுப்பாரு, மேஜர்பாகிலிருந்து ரோஜாப்பூ வாங்கிவந்து அழகா 'பொக்கே' தயா ரிச்சேன் என் கையாலே. அதை எடுத்திட்டு இவங்க வீடு வரையிலும் கொண்டுபோய்க் கொடுத்தேன் சந்தோசமா. பொக்கேயைக் கையிலே வாங்கிட்டாங்க, அப்புறம் இம்மாத்தூண்டு சிரிச்சுட்டு, 'போயிட்டுவா' அப்படீன்னுட்டாங்க. என்ன மாதிரி ரோஜாப்பூ தெரியுமா? அத்தனையும் பிளாக் பிரின்ஸ் ரோஜாவாக்கும்!"*

*ஜெனரல் செக்ஷன் பியூன் சிங்கேசர் ராம் தூரத்திலிருந்து வரும் போதே சிரித்துக்கொண்டு வருகிறானே! தன் தோழர்கள் மிஸ் அம்மா வைப் பற்றித்தான் அளக்கிறார்கள் என்பதை அவன் புரிந்துகொண்டு விட்டான்போலும்! வரும்போதே மிஸ் அம்மாவின் தலையை*

உருட்டினான்—"இன்னிலேருந்து அல்லிராணி ஆட்சி- புது நேம் பிளேட்டு தொங்கப்போவுது."

"அப்ப, இன்னிலேருந்து உன் டிப்பாட்டிலே உக்காரமாட்டாங்க, இல்லே?"

"அங்கே உட்காரற அய்யா வந்தாச்சு- பம்பாய்லேருந்து, புது ஹெட்கிளார்க்கு!"

சிங்கேசர் கான்டீனுக்குள்ளே பிரவேசித்தான். "ஏம்ப்பா, நேம் பிளேட்டு! மிஸ் அம்மா உதவி மேனேஜர் ஆயிடுச்சே, எல்லாருக்கும் காப்பி கீப்பி தருவாங்களா இல்லே, பஜனை பாடிடுவாங்களா?"—இது கடைநிலை ஊழியர் சங்கச் செயலர் ஜகவதி பிரசாதின் கேள்வி.

சிங்கேசர் சிரித்தான், "அட நீங்க ஒண்ணு! இது ஒண்ணும் ஈ மொய்க்கிற வெல்லம் இல்லே. தானும் திங்காது, பிறத்தியாரையும் தின்னவிடாது."

உண்மை. மிஸ் துர்பாதாஸ் சாப்பிடுவதையோ, இன்னொருவருக்குக் கொடுப்பதையோ யாரும் இன்றுவரை கண்டதில்லை.

துர்பாதாஸ் அமர்ந்திருந்த ஜெனரல் செக்ஷன் இன்று வெறிச் சோடிக் கிடக்கிறது. பெரிய மேஜையின் ஓர் ஓரமாக உட்கார்ந்திருப்பாள் மிஸ் துர்பா ஹெட் கிளார்க். பார்த்தால் அலங்காரமாக ஒரு 'டேபிள் லாம்ப்' எரிந்து கொண்டிருப்பதுபோலத் தோன்றும். எட்டு வருடங்களாக அந்த டேபிள் லாம்ப்—துர்பா தாஸ் என்னும் அழகு விளக்கு—ஒரே மாதிரியான ஒளியுடன் அந்தப் பெரிய ஹாலின் மூலையில் எரிந்துகொண்டிருந்தது—பத்து மணிமுதல் ஐந்து மணிவரை. சில நாட்களில் பொழுது சாய்ந்து ஏழுமணி வரையிலும்கூட.

பகல் முழுதும் பார்த்தால் இரண்டு மூன்று முறைதான் அவளுடைய காலிங்பெல் ஒலிக்கும். இரண்டு தடவை தண்ணீர் குடிப்பாள். 'லஞ்ச்' வேளையில் பவுடர் டப்பா போன்ற டிபன் பாக்ஸிலிருந்து பிஸ்கட் எடுத்துக் கொரிப்பாள். அளந்துதான் பேசுவாள். ஆனால் எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருப்பாள். இந்த மோகனப் புன்னகைதான் அவளுடைய வெற்றியின் திறவுகோல் என்று கூறுபவர்களும் உண்டு. இந்த செக்ஷனில் பல்வேறு மொழி-இனத்தைச் சேர்ந்த எழுத்தர்கள் வேலை செய்திருக்கிறார்கள், பழம் தின்று கொட்டையும் போட்டவர்கள். இவர்களில் சிலர் துர்பாவின் புன்னகையைத் தவறாகப் புரிந்துகொண்டு இக்கட்டில் மாட்டிக்கொண்டதும் உண்டு. திரிபாடி, சின்ஹா, நொண்டி முகர்ஜி—இவர்கள் இந்த ஒரே தவறைச் செய்தவர்கள், வரிசைக் கிரமத்தில்.

நகீனா பிரசாதுக்கு ஒரு கெட்ட பழக்கம். பேசிக்கொண்டே 'லெட்ஜர்' புத்தகத்தை விரலால் புரட்டிக்கொண்டிருப்பான். அதுவும் விரலை நாக்கில் வைத்து எச்சில் பண்ணாமல் அவனால் இரண்டு பக்கத்துக்குமேல் புரட்ட முடியாது. மிஸ் துர்பா இந்தக் கெட்ட

பழக்கத்தை விட்டுவிடவேண்டும் என்று எழுத்து மூலம் தாக்கீது பிறப்பித்தும் பயனில்லை.

இன்று நகீனா பிரசாத் படு உற்சாகத்துடன் வம்புப் பேச்சில் இறங்கியிருக்கிறான். அவனுடைய விரல்கள் இயந்திரம்போல இரண்டு பக்கத்துக்கு ஒருமுறை நாக்கில்போய் ஒட்டிக்கொள்ளும்—'சபாக்! சட் சட்! சபாக்.' "ஏன் அண்ணே, புது ஹெட் கிளார்க்கு பெரிய அய்யா அறையில் இருக்கிறாரு இல்லே!"

டிரான்ஸ்போர்ட் கிளார்க் சேன் (தாய்மொழி: வங்கம்) கூறினான், "எனக்கு இந்தி இலக்கணம், பால்–அதுதான் ஜெண்டர், எல்லாம் தெரியாது. இந்த மிஸ் தாஸை: ஐ மீன். சின்ன அய்யாவை என்ன சொல்லணும்? சின்ன அய்யா என்றுதானே. சின்ன அம்மா என்று சொல்லக்கூடாது இல்லே?"

இதைக்கேட்டு எல்லாரும் கொல்லென்று சிரித்தார்கள்.

ஹெட் கிளார்க்காக இருந்தபோது ஒருநாள் மிஸ் துர்பா தாஸ், டிரான்ஸ்போர்ட் கிளார்க் சேன் எழுதிய கணக்கைச் 'செக்' செய்து 'கணக்கு தப்பு' என்றாள். சேன் நாள்பூராவும் உட்கார்ந்து கணக்குப் போட்டான். திரும்பவும் சரிபார்த்துக் கொண்டான். பெட்ரோல் கூப்பன், ஆட்டோமொபைல் கேரேஜ் பில் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக எடுத்துப்பார்த்து தொகைகளை சரிபார்த்தான். நாலரை மணிக்கு திரும்பவும் கணக்கை ஹெட்கிளார்க் அம்மா மேசையில் வைத்தான். அதை மேலெழுந்தவாரியாக ஒரு நோட்டம் விட்டு மிஸ் துர்பாதாஸ் சேனைப் பார்த்து பங்கிம் சந்திரரின் தூய வங்கமொழியில் மணியான கருத்து ஒன்றைத் தெரிவித்தாள்—"நீங்க தயவு செஞ்சு உங்க தலை மண்டையிலே ஆட்டு நெய்யைத் தடவிப் பாருங்க—தினமும்."

பர்ச்சேஸ் செக்ஷனைச் சேர்ந்த ஜா பாதி பிடித்துவிட்டு அணைத்து வைத்திருந்த சிகரெட்டை மீண்டும் பற்றவைத்தவாறு கூறினான்—"இது ரொம்ப அநியாயங்க."

"என்ன அநியாயம்?"

"அதான். பொம்புளைங்க அதிகாரம் செய்யறதும் ஆம்புளைங்க. எங்க பக்கத்திலே ஒரு வசனம் சொல்லுவாங்க—எந்த வீட்டிலே பொம்புளை கை ஓங்கியிருக்குமோ அந்த வீடு உருப்படாதுன்னு."

சேன் கண்டுபிடித்துவிட்டான்—"தம்பி ஜா! பானுசிங் பதாவலியிலேதானே இப்படி எழுதியிருக்கு."

மீண்டும் சிரிப்பொலி. இன்று புது ஹெட்கிளார்க் அய்யா 'ஜாயின்' செய்யப்போகிறார். எல்லாரும் அவரை வரவேற்கும் உற்சாகத்தில் இருந்தனர்.

"ஹெட் கிளார்க் இன்னமும் பெரிய அய்யா சேம்பரிலே இருக்கிறாரா இல்லே சின்ன..?"

காக்காய் பிடிக்கும் குல்ஷன் மேத்தாவின் சொறிபிடித்த கரிய

முகத்திலும் சற்று செம்மை படர்ந்தது. சரியான இடத்தில் பிரயோகம் செய்ய ஆங்கில வார்த்தையைத் தேடிக்கொண்டிருந்தான் போலும். ஆனால் ஒன்றும் பேசவரவில்லை. அதற்குள் ஹெட்கிளார்க் அய்யா அனுரஞ்ஜன் குப்தா பெரிய அய்யா சேம்பரிலிருந்து ஹாலுக்கு வந்துவிட்டார்.

மேத்தா எழுந்து முதலில் அவருக்கு வணக்கம் தெரிவித்தான். பிறகு சீனியாரிடி பிரகாரம் ஒவ்வொருவரையும் அய்யாவுக்கு அறிமுகப்படுத்தினான்.

தினமும் நேரம் கழிந்து அலுவலகம் வருகிற பிந்தா மகா ராஜ்—எல்லாருக்கும் இவரால் காரியம் ஆகவேண்டும்—இன்றும் தாமதமாகவே வந்தார். மிஸ் தாஸ் ஒருநாளும் பிந்தாமகாராஜிடம் 'ஏன் லேட்?' என்று காரணம் கேட்டதில்லை. வயதானவர், பிராமணர்- ஏதுவாக இன்று பிந்தாமகாராஜ் வீட்டில் ஏதோ பூசை—தில்குட் (எள்ளுடன் வெல்லப்பாகு சேர்த்துச் செய்வது) பிரசாதம் கொண்டு வந்திருக்கிறார். புது ஹெட்கிளார்க் சிரத்தையுடன் பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டார். பிந்தா மகாராஜுக்குப் பரம திருப்தி.

பிறகு பிந்தா மகாராஜ் பழைய மஞ்ஜலி தீதி, அதாவது புதிய கிளை மானேஜர்—மிஸ் துர்பா தாஸின் புதிய அறையை நோக்கி நடந்தார்.

துர்பாவுக்கு தில்குட் ரொம்பப் பிடிக்கும். கயா மண்டல பிரதிநிதி மானஸ்குமார் வருடம் மூன்று தடவை கூடை கூடையாக தில்குட் கொண்டு வருவார்.

பிறகு குல்ஷன் மேத்தா மிஸ் துர்பாதாஸின் அறைக்குச் சென்றான். இந்தியில் வடிவாக நேம்பிளேட் அமைந்ததற்கு முதற்கண் மகிழ்ச்சி தெரிவித்தான். நிறுவனத்திலேயே தாய்மொழிப்பற்று தனக்குத் தான் அதிகம் என்று காட்டிக்கொண்டான். துர்பா தன் குனிந்த பார்வையை மேத்தாவின் பக்கம் செலுத்தினாள்.

மேத்தா மீண்டும் பெயர்ப்பலகையை தோத்திரம் செய்தான்—"நல்லா அமைஞ்சிருக்கு."

"எங்கே நல்லா அமைஞ்சிருக்கு? முதல்லே பெயரே தவறாக எழுதியிருக்கு."

"ஆங்! அப்படியா?" மேத்தா நேம்பிளேட்டை எடுத்துப் படித் தான்—"எங்கே? இதிலே என்ன தவறு? எனக்குத் தெரியவில்லையே!"

"துர்வா இல்லே என் பேரு—துர்பா."

மேத்தா இந்தத் தவறைப் புரிந்துகொண்டு தன் வாயை பொத்தான் துவாரம் அளவுக்குச் சிறிதாக வைத்துக் கொண்டான்—"ஓஓ-! பரவாயில்லை! ஒரு குறுக்குக்கோடு போட்டால் சரியாகிவிடும்."

மேத்தா இப்போது நேம்பிளேட்டை விட்டுவிட்டு துர்பாவின் புதிய, பெரிய மேஜையைப் புகழ்ந்தான்—"கிராண்டா இருக்கு."

துர்பாவுக்கு திடீரென்று ஏதோ நினைவு வந்ததுபோல- மேஜை? "புது ஹெட்கிளார்க் ஆபீசுக்கு வந்தாச்சா? எங்கே உட்கார்ந்திருக்காரு?"

"வேறே எங்கே? நீங்க உட்கார்ந்திருந்த இடத்திலேதான்." மேத்தா பதிலளித்தான்.

துர்பா சட்டென்று சீரியஸ் ஆகிவிட்டாள். மேத்தா தன் காதைச் சொறிய ஆரம்பித்தான். பிறகு மெதுவாக சேம்பரிலிருந்து வெளியே கிளம்பினான்- மிஸ் அம்மாவுக்கு என்ன ஆயிற்றோ? ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்.

"டிரிங்- டிரிங்- டிரிங்-" இது டெலிபோன்.

"ஊம்.. யெஸ் சார்.. இதோ வர்றேன்..." காலிங்பெல்லை அழுத்தினாள். "அட பிஸ்னுரசிங்கா? உன்னையா போட்டிருக்காங்க இங்கே- பாரு- பர்ச்சேஸ் செக்ஷன் ஜாகிட்டெ போயி மானேஜர் அய்யா கூப்பிடறதாகச் சொல்லு-"

துர்பாதாஸ் பெரிய அய்யா சேம்பரில் நுழைந்தாள். பிறகு உடனே வெளியே வந்தாள். கால்கள் வழக்கப்படி ஜெனரல் செக்ஷனை நோக்கித் திரும்பின. பிஸ்னுரசிங்கின் அகல விரிந்த பல்வரிசையைப் பார்த்து சுதாரித்துக்கொண்டாள்—தன் சேம்பர் பக்கம் நடந்தாள்.

துர்பாதாஸின் இந்த எதிர்பாராத திடீர் பதவி உயர்வில் பிஸ்னுர சிங்குக்கு அப்படியொரு ஆனந்தம். அழகுன்னா இதுவல்லவா அழகு! நாளெல்லாம் பார்த்துக்கொண்டே இருந்தாலும் அழகு குறையாது, கண்ணும் அகலாது. அழகுத் தெய்வம் என்பது இதைத்தானோ? ஆண்டவன் பிஸ்னுரசிங்கின் பிரார்த்தனைக்குச் செவிசாய்த்து விட்டார்! அழகுக்குத் தொண்டு செய்ய வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

துர்பா தன் சேம்பருக்கு வந்தாள்.

-ஊஹூம் ஒன்றும் பிடிக்கவில்லை. புதிய ஃபர்னிச்சர்களின் வாசனை, வார்னிஷ் வாசனை துர்பாவுக்குப் பிடிக்கும். ஆனால், இன்று இது ஏன் வயிற்றைக் குமட்டுகிறது? அவளுடைய கைகள் இரண்டு பக்கமும் விரிந்து எதையோ காணாமல் ஏமாறுகின்றன. ஆம், இந்த மேஜையின் டிராயர் புதுமாதிரியாக இருக்கிறது. புது டேபிள்! சரிதான்- இருந்தாலும் இந்த டேபிள் துர்பாவுக்குப் பிடிக்கவில்லை.

தன்னுடைய இரண்டு கைகளையும் இரு பக்கமும் மேஜைமீது அகலவிரிக்கிறாள்—மேஜையை ஆலிங்கனம் செய்துகொள்வது போல. அவள் மெல்ல மேஜையின் டாப்பில் வைத்துள்ள கண்ணாடிமீது தன் வலது கன்னத்தை வைத்தாள். உடனே துடித்துக் கொண்டு நிமிர்ந்தாள், மின்சார ஷாக் அடித்தாற்போல்—இல்லை, வேண்டாம்! இந்த மேஜை ஒத்துவராது. ஆனால்-?

எட்டு வருஷங்களாக அமர்ந்து வேலைபார்த்த அந்த மேஜையை

விட்டால் வேறு எந்த மேஜையிலும் உட்கார துர்பாவுக்கு விருப்பம் இல்லை. ஏதோ புதிய நபர் எதிரே உட்காருவதுபோன்ற உணர்வு!

*"டிரிங்!"*

*"மேடம்?"*

*"பிஸ்னூசிங், மேத்தா பாபுவை."* மேத்தா காதைச் சொறிந்தவாறு படுவேகமாக வந்தான், *"சொல்லுங்க."*

*"மிஸ்டர் மேத்தா! படா பாபு- அதான் புது அய்யா- ஹெட் கிளார்க் ஆபீசுக்கு வந்தாச்சா? மேஜையில் வேலை பார்க்கிறாரா?"*

*"மேஜையிலே- வேலையா? யெஸ் மேடம்- இல்லை- நோ மேடம் இப்பத்தானே சிங்கேசரைக் கூப்பிட்டு மேசை மேலே சுத்தியாலே ஆணி அடிக்கச் சொன்னாரு-?"*

*"என்ன? என்ன? ஆணியா?"*

மேத்தாவின் சொறிபிடித்த முகமெங்கும் முள் துருத்திக்கொண்டு நிற்பதுபோன்ற தோற்றம். "ஆமாம். ஆணிதான்- ஆணி." என்றான் வியப்புடன்.

துர்பா தன் மேல் பல் வரிசையை கீழ்ப்பல்வரிசையுடன் இறுகச் சேர்த்துக்கொண்டு "இஸ்-ஸ்-ஸ்" ஒலி எழுப்பினாள். உடனேயே தன்னைச் சுதாரித்துக்கொண்டாள், "சரி, நீங்க போகலாம்!"

'-போகலாமா?' மேத்தா இன்றுதான் துர்பாதாஸின் புதிய உருவத்தைக் காண்கிறான். மிஸ் துர்பா இந்த அளவுக்குப் பரபரப்பு அடைந்து அவன் பார்த்ததே இல்லை. ஆணி! குல்ஷன் மேத்தாவின் மனதிலும் ஏதோ ஆணி உறுத்தியது—ஏன் இப்படி?

மேத்தா தன் இருக்கைக்குப்போய் விட்டான்.

'-என்ன செய்வது? அதே டேபிள்தான் துர்பாவுக்கு வேண்டும், இன்றே வேண்டும், இப்பொழுதே வேண்டும். அது இல்லாமல் ஒரு கணமும்- முடியாது என்றால் முடியாது! அவளால் ஒன்றும் முடியாது. டைப் செய்துவைத்த மெமோவில் கையெழுத்துக்கூடப் போட முடியாது, அதுசரி, அந்த குப்தா, புதுஹெட்கிளார்க், வந்ததும் வராதது மாக அந்த டேபிள் மேலே ஏன் ஆணி அடிக்கணும்? ஸ்-ஸ்-ஸ்! நான் ஒரு ஆணியை பாதி தூரத்துக்கு அடித்து வைத்திருந்தேனே— துண்டுக்காகிதங்களைக் கோர்த்து வைக்க—அதை எடுத்துவிட்டாரோ என்னமோ? ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! ஆனால் இது அநியாயம்- அக்கிரமம். குற்றம்- கிரைம்- அவர் ஏன் அப்படிச் செய்தார்?

*"டிரிங்!"*

*"மேடம்-?"*

பிஸ்னூசிங் புதுஹெட்கிளார்க்கிடம் சென்று மிஸ் தாஸ் அழைப்பதாகத் தெரிவித்தான்.

ஹாலில் யாவரும் இந்தக் கணத்தைத்தான் எதிர்பார்த்திருந் தார்கள் போலும்! ஹெட்கிளார்க் அனுரஞ்சன் குப்தாவும் கூடத்தான். எல்லாரும் உஷாராகி ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

மேத்தா மெதுவாக எழுந்து ஹெட்கிளார்க் அய்யாவிடம் சென்றான். மெல்லிய குரலில் கிசுகிசுத்தான்—"இந்த டேபிள் ரொம்ப ராசியானது சார்!"

மேத்தா தன்மையுடன் ஏதாவது பேசுவது என்றால் முதல் வரி தாய்மொழி மகஹியில் இருக்கும். கேட்டான், "சார்! வீடு கிடைச்சுடுத்து இல்லே! அல்லது—? ஹி-ஹி-, வேறு என்ன பிரச்சினை இருந்தாலும் இந்த மேத்தாகிட்டே சொல்லுங்க. அது என் கடமை சார்! நான் பிறந்தது இதே ஊரிலே சிடி ஏரியாவிலேதான். ஆமா- ஹி- ஹி- ஹி-!"

ஹெட்கிளார்க் அனுரஞ்சன் குப்தா ஹாலுக்கு வெளியே சென்றதும் சேன் ஆரம்பித்தான், "நல்லது மிஸ்டர் மேட்டா! நீ சரியான ஆஷாமி. ஒரு சமயம் சொல்றே, இங்கேதான் இதே ஊரிலே பொறந்தேன்னு. அன்னிக்கு பெரிய அய்யாகிட்டே பேசும்போது—பஞ்சாபிலே சாந்தினிசௌக்—இல்லே சானீ சௌக்கிலே பொறந்தேன் அப்படீன்னே. நீங்க எத்தனை ஊரிலே பொறந்தீங்க மேட்டா அண்ணாச்சீ!"

ஹாலில் கூட்டுச் சிரிப்பொலி முழங்கியது. ஆனால் மேத்தா எந்த விதமான மாறுதலும் இன்றி வெகு சகஜமாக சேனின் வார்த்தைக்கு புதிய திருப்பம் தந்தான்—"என் பிறப்பா? ஸம்வேர் மை டியர் ஃபிரென்ட்ஸ்—எல்லாருக்கும் தெரியுமே, போன வருசம் கல்கத் தாவிலே—ஒண்ணா டிரெயினிங் எடுத்திட்டாங்க இல்லே ரெண்டு பேரும்! அதான்- மிஸ்டர் அனுரஞ்சன் குப்தாவும் மிஸ் துர்பாதாஸும். அதில் ஒருவர் வெற்றியடைந்து 'ஏபிஎம்' ஆகி விட்டாள்—இன்னொருவர் ஹெட் அய்யா, ஹெட் அய்யாவாகவே இருக்கிறார்—புவர் ஹைலேன்டர் யூத், அவர்தான் நியூ ஹெட் கிளார்க்!"

மேத்தாவின் இந்த லெக்சருக்குப் பிறகு அலுவலக சிப்பந்திகள் வேலையில் மும்முரமாக ஈடுபட்டார்கள். இல்லை, அப்படிக் காட்டிக் கொண்டார்கள். புது ஹெட்கிளார்க் முதல்நாளே எதுவும் சொல்ல லாகாது அல்லவா—எனவே, செயற்கையான மும்முரத்தை வரவழைத் துக்கொண்டு வேலை செய்தனர்.

டைப் மெஷின்கள் கடகடவென்று ஒலித்தன. இடையிடையே காலிங்பெல். டிராயர்களை இழுத்து மூடும் ஒலிகள்—அந்தச் சூழலில் ஒருவிதமான செயற்கைத்தனம், கலப்படம், கபடம்!

"சிங்கேசர்! எங்கேப்பா? கொஞ்சம் தண்ணிகொடு!"

சிங்கேசருக்கு எல்லாம் புரிகிறது. பெரிய பெரிய பாபுக்களுக் கெல்லாம் தண்ணி காட்டியவனல்லவா! நிஜமான தாகம், பொய்த் தாகம், பார்வைத்தாகம்—எல்லாத் தாகத்தையும் அவன் அளந்து

வைத்திருக்கிறான். ஒரு பாபு தண்ணீர் கேட்டால்போதும், எல்லா பாபுக்களின் ஆன்மாவும் தாகத்தினால் துடிக்கும்.

"சிங்கேசர்-! எங்கே போய்த்தொலைகிறான் இவன்? யாராவது அனுப்பிச்சாங்களா?"

சிங்கேசர் ஏதோ முணுமுணுத்துக்கொண்டே வந்தான்; "சார் தண்ணியைத் தொட்டுட்டு பைலைத் தொடமாட்டேங்க. ஈரக் கையாலே எந்தக் காயிதத்தையும் தொடமாட்டேன்- ஆமா சொல் விட்டேன்! மிஸ் அம்மா ரொம்ப கோவிச்சுக்கும்." என்றான் போஜ்புரி மொழியில்.

மாதக் கடைசியில் அனேகமாக எல்லா பாபுக்களுக்கும் சிங்கேசரிடம் ஐந்து, பத்து கடன் வாங்கவேண்டிய தேவை ஏற்படும். அதனால் சிங்கேசர் பிகு செய்துகொண்டால் யாரும் பெரிதாக எடுப்பதில்லை. ஆனால், அவனைப்பற்றி ஆங்கிலத்திலோ, வேறெந்த மொழியிலோ ஏதும் குறைகூறினால், சட்டென்று அவனுக்குப் புரிந்து விடும். அதே சமயம் தன் தாய்மொழி போஜ்புரி தவிர வேறெந்த மொழி பயிலவோ, பேசவோ அவன் விரும்பவில்லை. வங்காளத்தைச் சேர்ந்த பானர்ஜி பாபு பேசினாலும் சரி, மராட்டிக்காரர் போன்ஸ்லே பேசினாலும் சரி, சிங்கேசர் 'ஜாதானி—காதானி' என்று தன் மொழியில் தான் பேசுவான்.

மேத்தாவின் மனதில் ஆணி சுள்சுள் என்று குத்தியது—ஏன் இப்படி? அவனால் நிம்மதியாக உட்கார முடியவில்லை.. ஒரு ரெயில்வே ரசீதை எடுத்து அதைப்பற்றி கேட்கவேண்டிய கேள்வியை மனதில் உருப்போடுகிறான் அவன்- அப்பாடி! வினா உதித்துவிட்டது. அவன் பைலை எடுத்துக்கொண்டு 'ஏபிஎம்'மின் சேம்பருக்குள் நுழைந்தான், 'மே ஐ கம் இன் மே.'

ஆனால் மிஸ் துர்பாதாஸ் "பிறகு வாருங்கள்" என்றாள்—தன்னுடைய பதவிக்குரிய கம்பீரத்துடன்.

-மேத்தா உள்ளே கண்ட காட்சி—புது ஹெட்கிளார்க்கின் உதடுகளில் அற்புதமான புன்னகை. துர்பாதாஸின் முகத்தில் இதற்கு முன் கண்டிராத உத்வேகம்,. மேத்தாவின் மனதில் இரண்டு மூன்று முறை ஆணி அடித்துக்கொண்டது! அவன் அங்கிருந்து விலக மனமில்லாமலேயே திரும்பினான்.

மிஸ் தாஸ் உரையாடலை மீண்டும் தொடங்கினாள்.

"உங்களுக்கு வீடு கிடைச்சுடுத்து இல்லே? நல்லது. குட் லக், படனாவிலே இது ஒரு பெரிய பிரச்சினை-"

"எல்லா இடத்திலும் இதே கதைதான். எனக்குத் தெரிந்த ஒரு நண்பர் இங்கே ரெயில்வேயில் வேலை பார்க்கிறார். அவர் தயவிலே தான் ஒரு நல்ல வீடு அமைந்தது, சிரையாடான்டு பாலத்துக்கு அப்பாலே" என அனுரஞ்சன் கூறினான்.

மிஸ் தாஸின் உள்ளத்தில் வெகுநேரமாகவே போராட்டம் நடந்து கொண்டிருந்தது. எதிரில் அமர்ந்திருக்கும் இளைஞனுடன் இது அவளுடைய முதல் சந்திப்பு அல்ல. போனவருடம் அவனுடன் பயிற்சி முகாமில் இருந்தாள். அனுரஞ்சனின் நோட்ஸ் இப்போதுகூட அவளிடம்தான் இருக்கிறது. அப்புறம், இருபத்தைந்து பக்கத்தில் அனுரஞ்சன் எழுதிய கட்டுரை—'பயிற்சியில் நான்பெற்ற பயன்கள்'. சுவையான இலக்கிய பாணியில் அதை எழுதக்கோரியதும் அவளே தான். டீ சென்டரில் எதிரெதிரே அமர்ந்து டீ குடித்தார்கள். அரு கருகே உட்கார்ந்து சம்புமித்ராவின் படம் 'ரக்த கர்பீ' பார்த்தார்கள். இன்னும் தட்சிணேசுவரம், பேலூர். வேண்டாம் அந்த நினைவுகளை எல்லாம் துடைத்து எறிந்துவிட வேண்டியதுதான். சாக்பீஸால் சித்திரிக்கப்பட்ட அந்தக் கணங்களை இறந்தகாலமாக்க வேண்டியது தான். மனம் ஒரு கரும்பலகை!

அனுரஞ்சன் குப்தா தன் மனதை முதலிலேயே சுக்கான்போட்டு நிறுத்திவைத்துவிட்டான். இந்த ஊருக்கு வருவதற்கு முன்பு அவன் மனதிற்குள் புயலை அனுபவித்து முடித்துவிட்டான். சூழ்நிலையுடன் சமரசம் செய்துகொண்டுவிட்டான். தேர்வு போர்டார் அவனை உதவிக் கிளை மானேஜர் பதவிக்குத் தகுதியுள்ளவனாகக் கருதவில்லை. இது அவன் தலைவிதி. இதற்கு அவன் என்ன செய்யமுடியும்.

மாற்றலாகும் ஆர்டர் கைக்குக் கிடைத்ததும் மனதிற்குள் கொந் தளிப்பு ஏற்பட்டது. ஈடுபாட்டுடன் வேலைசெய்ததற்கு தண்டனை கிடைத்துவிட்டது. அதை அவன் ஏற்றுக்கொண்டான். மனதைத் திடப்படுத்திக்கொண்டு கடமையைச் செய்ய வேண்டியதுதான்.

ஆனால், இப்போது சற்று நேரத்திற்கு முன்பு அவனுடைய மனம் மீண்டும் ஆட்டம் கண்டது. வணக்கம் தெரிவித்தபோது தயக்கத்துடன் பதில் வணக்கம்; கையை உயர்த்திய பாணி; கண்களில் அசாதா ரணமான பணிவு—மிஸ் தாஸின் மனதில் ஏதோ தவிப்பு இருப்பதைத் தானே இவையெல்லாம் காட்டுகின்றன.! அவன் நாற்காலியிலிருந்து எழுந்திருக்க முயன்றான்.

"பாருங்க! நான் உங்களை எதுக்குக் கூப்பிட்டேன்னு சொல் லலியே." தூர்பா

அனுரஞ்சன் மீண்டும் நாற்காலியில் திடமாக உட்கார்ந்தான். சில கணங்கள் மௌனமாக இருந்தபிறகு அவன் கேட்டான், "யெஸ்! சொல்லுங்க."

"அந்த டேபிள். ஐ மீன். நீங்க உட்கார்ந்திருக்கீங்களே அந்த மேசை. அதிலே நான் நேத்துவரை உட்கார்ந்திருந்தேன்.. அது- அது."

"யெஸ். அது? அந்த மேசையில் அப்படி என்ன?"

"அது என் டேபிள்."

"உங்க சொந்த டேபிளா?"

"இல்லே அது நான் எட்டு வருடமா உட்கார்ந்து வேலை பார்த்தது."

"தெரியும், எனக்குப் புது நாற்காலி கொடுத்திருக்காங்க" —அனுரஞ்சன் கூறினான்.

துர்பா சற்று சீரியஸ் ஆனாள். அனுரஞ்சன் சொன்னது அவளுக்கு அவ்வளவாக ரசிக்கவில்லை. நாற்காலி மாறியதைப் பற்றி ஏன் பேசினான்? அவள் தன் மனதிலிருந்த தயக்கத்தை விடுத்தாள். தெளிவாகவே சொன்னாள்—"அந்த டேபிளை என்னிடம் இங்கே என் சேம்பருக்கு அனுப்பிவிடுங்க."

"அதை அனுப்ப வேண்டுமா? அப்ப, இந்த டேபிள் அந்த இடத்துக்குப் போகுமா? ஆனால், அங்கே இடம் பத்தாது போலிருக்குதே!"

"இல்லை, இந்த டேபிளும் இங்கேதான் இருக்கும். அந்த டேபிளும்தான்."

"அப்ப, நான் எந்த மேசையிலே?" துர்பாதாஸ் பொறுமை இழந்து கூறினாள், "நான் ஸ்டோர் கிளார்க்கை அழைத்துச் சொல்லி விடுகிறேன். உங்களுக்கு புதுடேபிள் கிடைக்கும்."

அனுரஞ்சன் எதையும் யோசிக்காமல் பதிலளித்தான், "அதற்கென்ன, சரி, அப்படியே செய்யலாம். புது டேபிள் வரட்டும் முதலிலே."

"முதலிலே, அப்புறம் இதெல்லாம் என்ன பேச்சு? இப்பொழுதே அனுப்பிவிடுங்க."

துர்பாதாஸ் மீண்டும் யோசனையில் ஆழ்ந்தாள். அவளுடைய முகபாவங்கள் இத்தனை விரைவாக அலைமோதுவதை அனுரஞ்சன் இதற்கு முன் பார்த்ததே இல்லை. ஸ்டார் தியேட்டர், டிராம் வண்டி, பேலூர்—எங்கேயும் கண்டதில்லை.

அனுரஞ்சன் எழுந்தான். துர்பாதாஸின் கவனம் கலைந்தது. தனக்குள்ளாகவே பேசிக்கொள்வதைப்போல சரச்சைக்கு முத்தாய்ப்பு வைத்தாள்—"அது இல்லாமல் எனக்கு எதுவுமே ஓடாது. ஐ ஜஸ்ட் கான்ட் டு எனிதிங்."

அனுரஞ்சன் உதவிக்கிளை மானேஜரின் சேம்பரிலிருந்து வெளியே வந்தான்.

ஜெனரல் செக்ஷனில் நுழைந்ததும் எல்லாருடைய கண்களும் தன்னையே மையமாக்கிக் குவிவதை அவன் உணர்ந்தான்—ஒவ்வொரு மேசையிலும் மனித உடலில் பொருந்திய கண்விழிகளில் வியப்பும், ஆவலும், உந்துதலும் கலந்து ஒளிர்கின்றன. சின்னச்சின்ன பல்புகளைப்போல பத்துஜோடி எரியும் பல்புகள்!

டிரான்ஸ்போர்ட் பிரிவின் துலால்சேன், தான் வழக்கமாகப் பிடிக்கும் 'முராத்' சிகரெட்டை ஹெட்கிளார்க்கிடம் பவ்யமாக நீட்டிய வாறு கேட்டான்—"ஏன் சார், 'டிவிஷன் ஆஃப் ஒர்க்' முடிவாயிடிச்சா?"

அனுரஞ்சன் 'முராத்' சிகரெட்டின் சுவையை அனுபவித்துக் கொண்டிருந்தான். சேனின் வினாவுக்கு விடை கிடைக்கவில்லை.

எரிந்துகொண்டிருந்த அந்த பல்புகள் ஹெட்கிளார்க் அய்யாவின் முகத்தில் தோன்றி மறையும் எண்ண அலைகளைப் புரிந்துகொள்ள முயன்றன—அவரவர் கோணத்திலிருந்து.

பிந்தா மகாராஜ் வெற்றிலைச் செல்லத்தை நீட்டினார். ஆனால் ஹெட்கிளார்க் சிகரெட் பிடிக்கும்போது வெற்றிலை போடுவதில்லை.

குல்ஷன் மேத்தா அவரது கருத்தைப் புகழ்ந்தான். "அதுதான் நல்லது சார்! வெற்றிலை பாக்கை குதப்பிக்கொண்டே சிகரெட் பிடித்தால் அதன் அடிப்பகுதி விசித்திரமாக சிவந்து வேடிக்கையாக."

"டிரிங்."

"சார்!"

"உன் பெயர் என்னப்பா?"

சிங்கேசருடன் சேர்ந்து எல்லா எழுத்தர்களும் ஒரே நேரத்தில் கூறினர்—"சிங்கேசர் ராம்."

"இதப்பாரு சிங்கேசர் ராம்! இந்த டேபிள் இங்கிருந்து போகும்—ஏபிளம்—அதாவது மிஸ் தாஸின் சேம்பருக்கு."

எழுத்தர் குழாம் ஏக காலத்தில் கேட்டது—"மிஸ் தாஸ் அம்மா சேம்பருக்கா? ஏன். ஏன்?"

"அவங்க சொல்லிட்டாங்க."

"என்ன சொல்லிட்டாங்க சார்"—மேத்தாவால் பேசாமல் இருக்க முடியுமா? "ஏன்சார், நீங்க அங்கேதான் உட்காரப் போறீங்களா?"

அனுரஞ்சனின் புருவம் மேலே ஏறி இறங்கியது. மேத்தா புரிந்து கொண்டான். சமாளித்துக்கொண்டு சொன்னான்—"ஓ! புரிஞ்சுது சார்."

அனுரஞ்சன் விளக்கினார்—"இதிலே புரிஞ்சுக்கறதுக்கு ஒண்ணும் இல்லே. அவங்களாலே இதைத்தவிர வேறு எந்த டேபிளிலும் வேலை செய்ய முடியாது. அவ்வளவுதான் விஷயம்."

"அப்ப, அவங்களோட புது டேபிளைத் தரலாம் இல்லே?"

"அதையும் தரமாட்டாங்க, இரண்டையும் வெச்சுப்பாங்க."

"ஸ்டோரிலே புதுடேபிள் உடனே கிடைக்குமா என்ன?"

"ஜா. ஸ்டோருக்கு டயல் பண்ணிக்கேளு."

மேத்தா தானே போன் செய்தான்—'ஆமா, பானர்ஜி அண்ணாச்சி, நான்தான் பேசறேன். ஸ்டோரிலே செக்ரடரி டேபிள் பெரிசு இருக்கா.? இப்ப குதர்க்கம் வேண்டாம் அண்ணே! புது ஹெட் கிளார்க் அய்யாவுக்கு டேபிள் வேணும். என்ன? இல்லையா?"

மேத்தாவின் முகத்தில் அரிப்பு ஏற்பட்டது.

சேன் சிரித்துக்கொண்டே கேட்டான்—"என்ன சொல்றாரு பானர்ஜி அண்ணாச்சி?"

இந்த பானர்ஜி சரியான பைத்தியம்தான். "ஈட்டி மரத்தை வெட்டி அதன் தடியை மெஷின்லே கொடுத்து, அதை அறுத்து, நீவி இழைச்சு ஆசாரியைக் கூப்பிட்டு—இத்தனையும் செஞ்சாத்தான் டேபிள் வருமாம். இது மரத்திலே காய்க்கிற சமாச்சாரம் இல்லே, அப்படீன்னு சொல்றாரு உம்."

டிரிங்-டிரிங்- ஹெட்கிளார்க் ரிசீவரை எடுத்தார்.

"நான்தான் குப்தா பேசறேன். சரி, அப்படீன்னா நான் எந்த டேபிளில் வேலைசெய்ய-? ஸ்டோரில் இல்லையாம். கேட்டாச்சு- வேடிக்கையாக இருக்குதே! நானும் வேலைசெய்யணும்- என்ன சொல்றீங்க? அதுக்கு- நான் ஏன் மானேஜர் கிட்டே சொல்லணும்? நீங்களே சொல்லுங்க. ஐ டோன்ட் திங்-"

இந்த டெலிபோன் உரையாடல் நடக்கையில் எல்லாருடைய முகங்களிலும் பரபரப்பும், மகிழ்ச்சியும் மாறிமாறி தொனித்தன. பிறகு அவரவர் மனநிலைக்கு ஏற்ற முகபாவம் நிலைத்தது.

"அந்த டேபிளிலே என்னதான் வெச்சிருக்கு- அப்படி?" இது பிந்தா மகாராஜ்.

மிஸ் துர்பாதாஸ் பளீரென்று தன்னை பிரம்பினால் அடித்து விட்ட மாதிரி முகத்தைக் கோணிக்கொண்டார் மேத்தா.

"மரச்சாமான் மேலே இத்தனை உருக்கம், பரிவு. மனுசங்க கிட்டே ஈவிரக்கமே கிடையாது அவங்க நெஞ்சிலே"—இது சேனின் கணிப்பு.

அனுரஞ்சன் மௌனமாக இருந்தான். நகீனா பிரசாத்தின் எச்சிலைத் தொடும்பழக்கம் அவனுக்கு வினோதமாகத் தெரிந்தது. அதையே கவனித்துக் கொண்டிருந்தான். பக்கத்தைத் திருப்பும் போதெல்லாம் நாக்கில் விரலை வைப்பான், அதோடு பேசவும் செய்தான், "பெரிய பெரிய தற்குறிகளை எல்லாம் பார்த்தாச்சு. ஆனால் இவங்க மாதிரி யாருமே இல்லே." சபாக்- சட்சட்—

ஸ்டோர் கிளார்க் பானர்ஜி வந்தார். புது ஹெட்கிளார்க்கிடம் அறிமுகப் படுத்திக்கொண்டார். பிறகு, "இதப் பாருங்க சார்! பதவியிலே நீங்க மேலதிகாரி. ஆனா, வயதிலே நான் உங்களைவிட மூத்தவன். இந்த டேபிளைக் கொடுக்காதீங்க சார்!"

"மனசு ரொம்பச் சின்னது."

"நெஞ்சிலே ஈவிரக்கமே கிடையாது."

"சீட்டைக் கிழிச்சு எவனையாவது வீட்டுக்கு அனுப்பும்போது கூட அவங்க முகத்திலே இதே சிரிப்புத்தான் இருக்கும்."

"கொஞ்சமாவது மனுசத்தன்மை வேண்டாம்?"

"ஆண்டவன் இவளையும் பொண்ணுன்னு படைச்சு அனுப்பினானே!"

"அநியாயம்பா! இத்தனை அழகும் வீணாப்போறது பாரு."

அனுரஞ்சன் மிஸ் தாஸைப்பற்றி சிப்பந்திகளின் கருத்துக்களை—கணிப்புக்களை—மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். இத்தனை பேர் பலவிதமாக அபிப்பிராயம் கூறினாலும், யாரும் அவளுடைய ஒழுக்கத்தைப் பற்றிக் குறைகூறவில்லை. நிஷ்டூரம், இதயமில்லாதவள், தன்னலக்காரி என்றெல்லாம் சொன்னார்களே தவிர, அவள் பதவி உயர்வுக்காக உடலழகைப் பண்டமாற்று செய்தாள் என்று யாரும் கூறவில்லை. ஊஹூம்—அப்படி எவனும் சொல்லமுடியாது!

மேத்தா தொடர்ந்தான், "ஆனாலும் இத்தனை பிடிவாதம் ஆகாது. நல்லது. லெட் மீ ஸீ."

மேத்தா ஹாலைவிட்டு வெளியேறியதும் ஜா, சேனின் காதைக் கடித்தான், "ஸாலா கிளம்பிட்டான் பாத்தியா, 'கோ—பிட்வீன்' பண்ணறதுக்கு!"

சேன் கண்ணைச் சிமிட்டிக்கொண்டு, "மகனே! பாரு விளையாட்டை. இப்பத்தான் ஆரம்பிச்சிருக்குது விளையாட்டு" என்றான் குஷியாக.

மேத்தா திரும்பி வந்தான். துர்பா தாஸை இந்த அளவு காட்டமாக அவன் பார்த்ததே இல்லை. யாரும் இவ்வாறு கண்டதில்லை. அழகை உபாசிக்கும் பிஸ்னூசிங்கூட அவளை இவ்வளவு கோபத்துடன் பார்த்ததில்லை.

பிஸ்னூசிங் மிஸ் துர்பாதாஸுக்கு கூலி வாங்காமல் தொண்டு செய்யும் வாய்ப்பு தனக்குக் கிடைக்காதா என்று கடந்த ஏழு ஆண்டுகளாக ஏங்கிக்கொண்டிருந்தான். ஆண்டவன் இப்போதுதான் உளம் கனிந்தார். வீட்டிலேயும் வந்து வேலை செய்கிறேன் என்று அவளிடம் சொல்ல நினைத்திருந்தான். அவளுக்குத் ஊழியம் செய்வான் இந்த பிஸ்னூசிங். அவள் காலில் செருப்பைக்கூட மாட்டி விடுவான். ஆனால் இன்றைக்கு ஏன் இந்தப் பரபரப்பு, ஒரு நிமிஷம் கூட அடங்கி சீட்டில் உட்காரவில்லையே இந்த அம்மா.

வருகிற பௌர்ணமி பூஜைக்கு யாரேனும் புரோகிதர் வேண்டுமா என்று மானேஜரிடம் கேட்கச் சென்றார் பிந்தா மகாராஜ். அப்போது மானேஜர் மிஸ் தாஸிடம் சொல்லிக்கொண்டிருந்தார். "என்ன இது! இப்படி சிறுபிள்ளைத்தனமா நீங்க பேசறீங்களே? ரெண்டு டேபிளையும் நீங்களே வச்சிட்டா அவர் எங்கே உட்கார்ந்து வேலை பார்க்கிறது? அப்படி என்னதான் வச்சிருக்கு அந்த டேபிளிலே?"

மிஸ் துர்பா பணிவுடன் கூறினாள், "ஸார், அந்த டேபிள் எனக்கு வேணும். எப்படியும் வேணும். நான் வேணும்னா, புதுடேபிளை அவருக்குக் கொடுத்திடறேன்."

இதைக்கேட்டு மானேஜர் விஷயத்தை மாற்றினார், "ஊஹூம் அந்த டேபிள் கிளைமேனேஜருக்கானது. ஹெட்கிளார்க்குக்கு கொடுக்க முடியாது. அப்புறம் நீங்க யாரு புதுடேபிளை கொடுக்கறதுக்கு,"

மானேஜர் வேண்டுமென்றே கண்டிப்பை வரவழைத்துக் கொண்டார்.

"சார், அப்ப என்னாலே வேலை செய்யவே இயலாது."

பெரிய அய்யா முகத்தில் கடுப்பும், எரிச்சலும் தெளிவாகத் தெரிந்தது.

இதற்கு முன்னால் ஒரு பொழுதும் மிஸ் துர்பா மேலதிகாரியின் திட்டைக் கேட்டதில்லை—எந்த அதிகாரியும் அவளிடம் கடுமையாகப் பேசியதே இல்லை. இந்த மாதிரி எரிச்சலை அவள் பார்த்ததே இல்லை. கனிவான குரலிலேயே தொடர்ந்தாள்—"சார், இதை நீங்க சென்டிமென்டல் என்று சொல்லுங்க இல்லே, பைத்தியக்காரத்தனம்னு சொல்லுங்க. நான் யாரையும் அந்த டேபிளிலே உட்கார விடமாட்டேன்."

மானேஜர் 'வீட்டிலிருந்தே மனோதத்துவம் பயிலுங்கள்' புத்தக வரிசைக்குப் பணம்கட்டி மனோதத்துவம் படிப்பவர். மிஸ் தாஸின் இந்தக் கூற்றில் ஏதோ மனோதத்துவம் மறைந்திருக்கிறது—நிச்சயமாக, "மிஸ் தாஸ், எனக்கு எதுவுமே புரியமாட்டேங்குது. உனக்கு கல்கத்தாவுக்கு மாற்றலாகி விடுகிறதுன்னு வச்சுக்க. அப்ப, இந்த டேபிளைக் கல்கத்தாவுக்குக் கொண்டுபோவாயா சுமந்துகிட்டு-?"

"யெஸ் சார்! நிச்சயமா."

"இன்னும் நினைச்சுக்க."

"வேலை .போயிடுச்சுன்னு- அப்படித்தானே? அப்ப, இந்த டேபிளை தயவுசெஞ்சு எனக்கே வித்துடுங்க அப்படீன்னு கம்பெனிக்கு விண்ணப்பம் செய்வேன்."

"டெரிபிள்! சரி, நீங்க போகலாம். நான் ஹெட்கிளார்க்கிடம் பேசறேன்."

அனுரஞ்சன் மானேஜரிடம் கேட்டான்—"நீங்களே சொல்லுங்க, நான் என்ன செய்யட்டும்?"

மானேஜர் மிஸ் தாஸிடம் போனில் பேசினார், "நீங்க இந்த மாதிரி சின்ன விஷயத்தை எல்லாம் பெரிசாக்கி பிரச்சினையை உண்டு பண்ணறீங்க. இன்னிக்கு உங்க புதுவேலையைத் தகராறுடன் ஏன் தொடங்குறீங்க?"

அனுரஞ்சன் குப்தாவிடம் பிஸ்னூ சிங், துர்பாதாஸ் அழைப்பதாகத் தெரிவித்தான்.

இம்முறை அனுரஞ்சன் துர்பாதாஸின் அழகிய முகத்தில் பெண்மைக்குரிய அபலைத்தன்மையைக் கண்டான். தளர்ந்து வெதும்பிய முகம், கலைந்த உடை, சற்றே முன்பக்கமாக நழுவிய சாரி அனுரஞ்சனுக்கு நினைவு வந்தது—தட்சிணேசுவரம், பேலூர்

சுற்றிவிட்டு வந்தபோதும் அவள் இதேமாதிரி சோர்ந்திருந்தாள்.

"மிஸ்டர் குப்தா!"

"உத்தரவு மேடம்!"

"இது உத்தரவு அல்ல. அந்த டேபிளை எனக்குக் கொடுத்திடுங்க."

ஜெனரல் செக்ஷனில் ஒரு எழுத்தர் தன் உள்ளங்கையில் விரலை நட்டு "மர ஆப்புப்போட ஆரம்பிச்சாச்சு" என்றான்.

மேத்தா ஸ்டோர் பாபுவுக்கு போன் செய்து "பானர்ஜி அண்ணாச்சி, அப்பச் சொன்னீங்களே, ஈட்டி மரத்தை வெட்டி அதைக் கொஞ்சம் திருப்பிச் சொல்லுங்களேன்!"

எல்லா எழுத்தர்களுக்கும் மகிழ்ச்சி. க்ரைசிஸ், பிராப்ளம் தன் இடத்திலேயே ஜம் என்று மாறாமல் அப்படியே இருக்கிறது. கடிகார முள் நகர்ந்துகொண்டே போயிற்று—ஒன்று, இரண்டு, மூன்று நான்கு..!

மறுநாள் அலுவலகத்தில் யாவரும் ஒரே சேதியைக் கேட்டனர். மிஸ் தாஸ் திடீரென்று 'சிக்' ஆகிவிட்டாளாம். ஒருவாரம் சிக் லீவ் கேட்டு மனுச்செய்திருக்கிறாளாம்.

ஐந்தே நாட்களில் அனுரஞ்சன் தன்னுடைய அலுவலகத்தில் ஒவ்வொருவரையும் ஓரளவுக்குப் புரிந்துகொண்டுவிட்டான். எல்லாரும் இங்கே வேலைசெய்யாமல் தந்தனம் பாடித்திரிபவர்கள். முதல்தரமான காக்காய் குல்ஷன் மேத்தா, அவனுக்கு அலுவலகத்தில் செல்லப்பேர் 'பொல்யூஷன் மேத்தா'!

"நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள், மிஸ் தாஸுக்கு வேலை செய்யத் தெரியும், திறமையும் உண்டு. எந்த பைலில் அவள் கை வைத்தாலும் அது கண்ணாடிபோல தெளிவாக இருக்கும். எந்தவிதமான சிக்கலோ, பிசிறோ இராது. ஆனால் டேபிளுக்கு வேண்டி இத்தனை பிடிவாதமா? இதை என்ன சொல்ல? ஏதாவது விஷயம் இருக்கத்தான் செய்யும்!"

மேத்தா திடீரென்று சொன்னான்—"சார், எனக்குத் தெரியும் அதன் காரணம்."

"என்ன காரணம், சொல்லு" அனுரஞ்சன் கேட்டான்.

மேத்தா அனுரஞ்சன் பக்கத்தில் சென்றான். பிறகு மெல்லிய குரலில் "மிஸ் தாஸின் மார்பில்—காலர் எலும்புக்கு நேரே கீழாக—ஒரு ரூபாய் அகலத்துக்கு—படைபோல வட்டமாக இருக்குது. டேபிளின் இந்த விளிம்பில் அதைப் பொருத்தி அவள் அப்பப்ப சொறிஞ்சுப்பா."

"மேத்தா! நீங்க உங்களுடைய 'ஏபிஎம்' மைப்பத்தி இந்த மாதிரி அனாவசியமாக விமர்சனம் செய்யாமல் இருப்பது நல்லது."

சர்வாங்க சுந்தரியான துர்பாவின் உடலில் படையா? சீ. அவன் மேத்தாவை நன்றாகப் புரிந்துகொண்டான். பிரகஸ்பதிதான் இவன்!

உலகத்திலே இருக்கிற எல்லா விஷயத்துக்கும் இவனிடம்தான் காரணம் கேட்கணும். சேன் நேற்றுச் சொன்னானே, ஒருநாள் மானேஜர் மேத்தாவிடம் 'மேட்டா! கழுதை எப்படிக் கனைக்கும்ப்பா?' என்று கேட்டாராம், அவ்வளவுதான். மேத்தா உடனே ஆங்-ஆங்ன்னு கழுதை மாதிரி கத்தத் தொடங்கிவிட்டானம். 'அபூர்வப் பிரகிருதிடா மேட்டா நீ, உனக்கு இணை பூலோகத்திலே எங்கே தேடினாலும் கிடைக்காது!' அப்படின்னாராம்.

மேத்தா இம்மாதிரி சமயங்களில் சேனை மடக்குவதற்காக 'ஸடீ மச்லீ (அழுகிய மீன்)', 'பூக்கா வங்காளி' (பசி மிகுந்த வங்காளி)' என்று பதிலுக்குத் திட்டுவான்.

அன்று மேத்தா அலுவலகம் விட்டதும் நேராக மிஸ் துர்பா தாஸின் வீட்டை நோக்கிச் சென்றான். துர்பா வாசல் பக்கத்து தோட்டத்தில் வருத்தத்துடன் உட்கார்ந்திருந்தாள். மேத்தா நாய்க்குப் பயந்து வீட்டுக்குள்ளே புகவில்லை. வாசலிலிருந்தே செய்தி தெரிவித்தான். "இன்று டிடிடி பவுடர், கெமாக்ஸின் இரண்டையும் போட்டு டேபிளை சுத்தம் செய்தாங்க."

இந்தச் செய்தியைக் கேட்டு துர்பா மயக்கம் போட்டு விழாத குறை.

மிஸ் துர்பா மேலும் நான்கு நாள் லீவுகேட்டு மனுச் செய்திருப்பதாக ஏழாம் நாள் தெரியவந்தது.

அனுரஞ்சன் குப்தா, மானேஜர் உத்தரவுப்படி உதவிக்கிளை மானேஜர் செய்ய வேண்டிய பணிகளின் பட்டியலைத் தயாரித்தான். மிஸ் தாஸ் வராததால் சில பணிகளைத் தானே செய்தான்.

அன்று மீண்டும் டேபிள் விவாதம் தொடங்கியது.

சேன் கேட்டான், "இந்தக் கோணத்திலிருந்து பார்த்தால்- டேபிள் ஆண்பாலா?! ஹா—ஹா—ஹா!"

மிஸ் தாஸ் நீட்டித்த விடுப்பும் ஒவ்வொரு தினமாக குறைந்து மூன்று நாட்கள் கடந்துவிட்டன.

அன்று ஆபீசிலிருந்து வீடு திரும்பியதும் அனுரஞ்சன் தன் தாயிடம் சொன்னான், "அம்மா, சீக்கிரம் குளிச்சிட்டு வர்றேன். இன்னிக்கு உன்னை இங்குள்ள ஆசிரமத்துக்கு அழைச்சிட்டுப் போறேன்— இராமகிருஷ்ண ஆசிரமம். பெரிய சுவாமிஜி கதை சொல்கிறாராம்."

குளித்துவிட்டு பாத்ரூம் கதவைத் திறந்து வெளியே வந்ததும் அம்மா அவனிடம் சொன்னாள்—"யாரோ ஒரு அம்மா வந்து காத்திருங்காங்க."

"அம்மாவா? அது யாரு?" அனுரஞ்சன் வியப்புடன் பார்த்தான், அட, இது துர்பா தாஸ். அம்மா இவளைப்போய் 'அம்மா' என்கிறாள். புது பாஷனில் கையில்லாத ப்ளவுஸ், காஞ்சீவரமா அது என்ன வரம்—அந்தப் புடவைக்கு 'மாச்'சாக—பேப்பரில் விளம்பரம் வருமே, பிரபல ப்ளவுஸ் கம்பெனி மாடலின் போட்டோவுடன்—அந்த மாதிரி அணிந்திருக்கிறாள். இன்னிக்கு என்ன ஆச்சு இந்த துர்பாதாஸுக்கு?

"வணக்கம்!- உடம்பு தேவலாமா? என்ன ஆச்சு?"

துர்பா உடனே ஏதும் பதிலளிக்கவில்லை. அதற்குள் அம்மா தேநீர் எடுத்துவந்தாள். அனுரஞ்சன் அறிமுகப்படுத்தினான்—"அம்மா, இவங்கதான் எங்க ஏபிளம்—மிஸ் துர்பாதாஸ்! இதுதான் என்னுடைய அம்மா!"

அம்மா சமையறைக்குப் போய்விட்டாள்.

"சமையல் வேலை எல்லாம் இப்பவும் உங்கம்மாவா செய்யறது?"

"ஆமாம், இந்த விஷயத்தில் நான் நிறைய பாக்கியம் செய்திருக்கிறேன். அம்மா கைச்சமையல்."

"நான் கூடத்தான் இதிலே பாக்கியசாலி."

"இதிலே மட்டும் என்ன? எல்லா விஷயத்திலும் நீங்க பாக்கியசாலிதான்."

எதிரே அமர்ந்திருப்பது கல்கத்தாவில் கண்ட அதே துர்பாதாஸ் தான் என்பதை அனுரஞ்சன் உணர்ந்தான். ஆடையலங்காரங்கள் கொஞ்சம் அதிகம். அவ்வளவுதான் வித்தியாசம்.

"அப்புறம்? பட்னா எல்லாம் எப்படி இருக்கு? பிடிச்சுப்போச்சா?"

"நல்ல ஊருதான்."

"அப்படி என்ன பெரிசா இருக்கு இங்கே? கல்கத்தா- பம்பாயை விடவா நல்லது?"

கல்கத்தா என்ற பெயர் எடுத்ததுமே என் இந்தப் பதட்டம் ஏற்பட்டது துர்பாவுக்கு? சிறிது நேரம் மௌனம்.

"அப்ப நீங்க நாளைக்கு ஆபீசுக்கு வர்றீங்க இல்லே!"

"நாளைக்கு?" கனவிலிருந்து எழுபவள்போல துர்பா பேசினாள், "நாளைக்கா? நான் வருவதும், வராததும் உங்களை- ஆமா, உன்னைப் பொறுத்தது."

"என்னையா?"

"ஆமாம். நீங்க நினைச்சாத்தான் நடக்கும். அனுரஞ்சன் பாபு! நான் சொன்னேன்லே, யார் அதுலே உட்கார்ந்தாலும் எனக்குப் பொறுக்காது. அது இல்லாமல்- தெரியுமா? இப்போ எல்லாம் தினமும் ராத்திரி தூங்கும்போது அந்த டேபிள் எனக்குத் திருப்பிக் கிடைச்ச மாதிரியும், பிறகு திரும்பவும் அது பறிக்கப்பட்ட மாதிரியும் கனவு காணறேன், தினமும். அதுக்காக பெரிய போரே நடக்கறமாதிரி- அடி, வெட்டு, குத்து ஏக ரகளை. அப்புறம் டேபிள் தீப்பற்றி எரியுது, தகதகனு

எரியுது- இப்படி மாறிமாறி பயங்கரமான சொப்பனம்."

"மிஸ் தாஸ்! எல்லாரும் அதிசயப்படறாங்க- இப்படி ஒரு-"

"தெரியும் எனக்கு. எல்லாருடைய ஆவலையும் தணிக்கறதுக்கு நான் ஆளில்லை. ஆனா, உங்ககிட்டெ சொல்லிடறேன்—எந்தப் பெண்ணாவது இன்னொரு அன்னிய புருஷனுக்கு எதிரே கையை விரித்து மனசைத் திறந்துகாட்ட உட்காருவாளா? நீங்களே சொல்லுங்க."

துர்பா இதைச் சொல்லும்போது அனுரஞ்சனின் முகம் ஏனோ சற்று விகாரமடைந்தது.

துர்பா கனிவும், பணிவும் கலந்த குரலில் சொன்னாள், "குப்தா நீ முதலிலே இப்படி இருக்கலியே! டேபிள்மேலே டிடிடி பவுடர் போடற அளவுக்கு நீ கொடூரமாப்போயிட்டே! உன் மனசு எப்படி கேட்டது? இப்பிடியா தறதறனு அதன் டிராயரை இழுக்கறது? அப்புறம் அந்த சேன் ஓங்கிக் குத்தறான். நீ ஏன் ஆணி அடிச்சே? ஏன்? சொல்லு குப்தா?" தன்மையுடன் ஏகவசனத்திலேயே பேசினாள்.

பேசும்போது துர்பாவின் போதை நிறைந்த கண்கள் இன்னும் போதை ஏற்றுகின்றன. விரல்கள் தாளகதிக்கு ஏற்ற மாதிரி நடனமிடுகின்றன.

துர்பா எழுந்து சன்னல் பக்கம் போனாள். மூக்கைச் சிந்தி முகத்தை சுத்தம் செய்துகொண்டு திரும்பினாள். அட, கல்கத்தாவில் கண்ட துர்பா திரும்பி வந்து விட்டாளே! கல்கத்தா துர்பா எந்த நிலையிலும் அழகுதான்! எது செய்தாலும். அவள் ஏப்பம் விடட்டும், நகங்களைப் பற்களால் கடிக்கட்டும், நகத்தைக் குதறித் துப்பட்டும், மூக்கைச் சிந்தட்டும், முகத்தை பயங்கரமாக வைத்துக்கொள்ளட்டும். எந்த நிலையிலும் அழகாகத்தான் தென்படுகிறாள்- பார்க்கப் பார்க்க கணந்தோறும் நவநவமான- புதிது புதிதாக அழகு மிளிருகிறது!

"நீ-"

அனுரஞ்சன் குறுக்கிட்டான், "மன்னிக்கணும் மிஸ் தாஸ். நீங்க என்னை 'நீ' என்று அழைக்கலாம். ஆனால் நான் உங்களை 'நீ'ன்னு கூப்பிடக்கூடாது."

"நான்—நீ? நான் உன்னை 'நீ'ன்னு கூப்பிட்டேனா? இல்லை, இனிமேல் உன்னை 'நீங்க'ன்னே அழைக்கிறேன். சரியா? நீயும் என்னை 'நீ'ன்னு அழையேன். ஏன் அப்படி கூப்பிடலாகாது? ஸில்லி- இதைக் கேளு குப்தா, டேபிள் பிரச்சினையைப் பத்தி நான் நல்லா யோசிச்சுப் பார்த்துட்டேன்- ஏழு நாளாக, புது டேபிளை உனக்குத் தரமுடியாதுன்னு மானேஜர் சொல்றாரு. அதனால, இப்ப ஒரேவழிதான் இருக்குது- சொல்லட்டுமா? நீ இன்னமும் பிடிவாதம் பிடிக்கமாட்டே அப்படீன்னு நம்பறேன்."

"பிடிவாதமா? நானா? மிஸ் தாஸ்!"

"ஏன்? என்னை 'துர்பா'ன்னு மட்டும் அழைத்தால் போதாதா?

போகட்டும், நல்லது! இப்ப நீ முடியாதுன்னு சொன்னா, நான் வேலையை விட்டுடணும்னு நீ நினைக்கிறதாக எண்ணிப்பேன். இத்தனை பெரிய குடும்பத்தைக் காப்பாத்த வேண்டிய பொறுப்பு என் தலையிலே இருக்கு தெரியுமா? அப்படி வேலையைவிட வேண்டிவந்தாலும் நான் அந்த டேபிள் இல்லாம எப்படி இருப்பேன்?"

"மிஸ் தாஸ்! சொல்லுங்க, என்ன யோசிச்சு வச்சிருக்கீங்க?"

இதே மாதிரிதான் போன வருஷம் துர்பா வாக்கு வாங்கிக் கொண்டாள். "ஒப்புக்கொள்ளறேன்" என்றான் அனுரஞ்சன்.

"நிஜம்மாகவா? இதோ பாரு, வேலையைப் பொறுத்தவரையில் நீ அதிக நேரம் என்னுடைய சேம்பரில்தான் இருக்க வேண்டியிருக்கும். புது ஸ்கீம்படி 'ஏபிஎம்' என்றால் 'சீனியர் ஹெட் கிளார்க்'தானே! அதனாலே நீயே என் சேம்பரில் ஏன் உட்காரக்கூடாது? அப்படீன்னா, டேபிள் என்னுடைய சேம்பரில் என் கண்ணெதிரிலேயே இருக்கும். நீ தரதரவென்று டிராயரை இழுத்து மூட மாட்டாய். சுத்தியாலே ஆணி அடிக்கமாட்டாய். குறைந்த பட்சம் நான் இருக்கும் போதாவது."

அனுரஞ்சன் முதலிலேயே வாக்களித்துவிட்டான். இருந்தாலும் துர்பாவுக்கு நம்பிக்கையாகவில்லை. அவள் அடிக்கடி கேட்டாள், "இதிலே ஏதாவது ஆட்சேபணை இருந்தால் சொல்லு. நிசம்மாத்தானே சொல்றே? நாளைக்கு வார்த்தையைத் திருப்பமாட்டாய் இல்லே? ஏதாவது காரணம் சொல்லி ஏமாற்ற மாட்டாய் இல்லே? இந்த குல்ஷன் மேத்தா ரொம்ப மோசக்காரப்பேர்வழி."

கடைசி வாக்கியத்தைக் கூறுகையில் துர்பா அனுரஞ்சனின் கையைப்பிடித்துக்கொண்டு "சொல்லு" என்றாள்.

அனுரஞ்சனின் அம்மா உள்ளேயிருந்தே கேட்டாள்— "ஏண்டாப்பா இன்னிக்கு ஆசிரமத்துக்குப் போகமுடியாது இல்லே? பலகை போடவா சாப்பாட்டுக்கு?"

துர்பா பல்லாயிரம் நன்றிகூறும் பாவனையுடன், "அப்ப நானும் கிளம்பறேன். நாளைக்கு பத்து மணிக்கு முன்பே வந்துவிடு, சரியா? மானேஜர் ஒன்பதரைக்கெல்லாம் வந்துடுவார். பிறகு மற்றப்பேர் வருவதற்கு முன்பே டேபிளைத் தூக்கி வச்சுடலாம். எல்லாரும் வந்தா அதை இழுப்பா."

"வணக்கம்."

துர்பா தன்னை 'சொடேர்', 'சொடேர்' என்று சவுக்கினால் அடித்துவிட்டுப் போனமாதிரி அனுரஞ்சன் உணர்ந்தான்.

மறுநாள் துர்பா ஒன்பது இருபத்தைந்துக்கு ஆபீசுக்கு வந்துவிட்டாள்.

மானேஜரின் வண்டி சரியாக ஒன்பதரை மணிக்கு போர்டிகோவில் வந்துநின்றது. துர்பா வணக்கம் தெரிவித்தாள்.

"சொல்லுங்க மிஸ் தாஸ். இப்ப எப்படி இருக்கீங்க?"

"சரியாகப்போயிடுச்சு சார்!" உற்சாகத்துடன் சொன்னாள் துர்பா.

மானேஜர் பிரமித்துப்போனார். ஆனாலும் அதை வெளிக் காட்டாமல் சிரித்துக் கொண்டிருந்தார்.

துர்பா மானேஜருடன் அவருடைய சேம்பருக்குச் சென்றாள். அறையில் மானேஜரின் பியூன் இருந்தவரையிலும் அவள் வாய் திறக்கவில்லை. பியூன் வெளியே சென்றதும் துர்பா மானேஜரின் 'மூடு' எப்படி இருக்கிறது என்று நோட்டம் விட்டாள். பிறகு பணிவுடன் ஆரம்பித்தாள், "சார்! டேபிள் பிரச்சினை வந்து-"

மானேஜர் கொதித்தெழுந்தார். "கேளுங்க மிஸ் தாஸ்! நான் இனிமேல் இந்த பிரச்சினை—பிராப்ளம் பத்தி ஒரு வார்த்தைகூட கேட்க விரும்பலே. நீங்கள் இப்படி டேபிள்—சேருக்காக குழந்தை களைப்போல சண்டை போட்டுக்கிட்டிருந்தா நான் ஜிஎம்முக்கு எழுத வேண்டிவரும்-ஃபென்னி!"

"இல்லே சார், இப்ப ஒரு ப்ராப்ளமும் இல்லே, எல்லாம் சரியாயிடுச்சு."

துர்பா பிரச்சினைக்கான தீர்வினை விரிவாக விளக்கினாள். தான் முந்தின தினம் மாலையில் அனுரஞ்சன் வீட்டுக்குப்போய் அவரை ஒப்புக்கொள்ள வைத்ததையும் பிரஸ்தாபித்தாள்.

மானேஜர் இந்த ஃபார்முலாவைப் பற்றி யோசித்தார். சரி என்றே பட்டது. பார்க்கலாம், இன்னும் எது வரையிலும்-அனுரஞ்சன் குப்தா இவ்வளவுதானா? ஹெட் ஆபிஸ் முதற்கொண்டு போர்டு மெம்பர்கள் வரை எல்லாரும் செயல்வீரர் என்று ஓகோன்னு புகழ்ந்த குப்தாவா இது? முதுகெலும்பில்லாத ஆளு- சரி, ஜெனரல் செக்ஷன் மேத்தாவுக்கு இன்னும் நாலுகமெண்ட் அடிக்க வாய்ப்புக் கிடைக்கும். ஒரு பக்கம் பொல்யூஷன் மேத்தா, மறுபக்கம் இந்த சாது அனுரஞ்சன்-

"சரி, ஆனால் குப்தாவுக்கு இதில் ஆட்சேபணை இருக்காதே?"

"அவருக்கு ஒரு ஆட்சேபணையும் இல்லை. இதோ வந்துடுவாரு சார்!"

பத்து மணிக்கு முன்பே துர்பா தன்னுடைய பிரியமான டேபிளை தன் சேம்பருக்கு எடுத்துவந்தாள். டேபிளைக் கொண்டு வருகையில் கூலியாட்களை உஷார்படுத்திக் கொண்டிருந்தாள்— எங்கும் இடிக்காமல் இருக்கவேண்டுமே. ஆனால் எவ்வளவுதான் கவனமாக இருந்தாலும்- டேபிள் என்பது கண்ணாடி இல்லையே! கொஞ்சம் இடித்துவிட்டது, அவ்வளவுதான், துர்பாதாஸ் அலறினாள்.

சேம்பரில் ஒரு பக்கமாக டேபிள் பிரதிஷ்டை செய்து வைக்கப் பட்டது. பிஸ்னூசிங் அதிக உற்சாகத்தில் ஓங்கி ஓங்கி தூசு தட்ட லானான். துர்பாதாஸ் கத்தினாள், "என்ன இது, ஏய் காட்டு மிராண்டி! இப்படி ஓங்கி ஓங்கி அடிக்கிறாயே! கொண்டுவா டஸ்டரை."

துர்பா தன் கையாலேயே டஸ்டரினால் தூசு தட்ட லானாள்—மிக நளினமாக, பவ்யமாக. அடடா! ஒரு பத்து நாளைக்குள் உனக்கு இத்தனையும் அனுபவிக்க நேர்ந்ததே! அப்பாடா, இப்பத்தான் போன உயிர் வந்தமாதிரி இருக்குது. நீ எனக்குக் கிடைக்கமாட்டாய் என்றுகூட நினைத்தேன், அட, சிவப்பு மை எப்படி விழுந்தது?

டேபிளைத் துடைத்தபிறகு அவள் கடிகாரத்தைப் பார்த்தாள். மணி பத்தடிக்கிறது. குப்தா வரவேண்டிய நேரமாகிவிட்டது. கதவுப் பக்கம் பார்த்தாள்—ஹான்ட்லூம் படுதாவில் பரதநாட்டிய முத்திரை யில் வரிசையாக நிற்கும் பெண்களின் சித்திரம். அவள் தன் இரண்டு புயங்களையும் இருபக்கமும் பரப்பி, வழக்கம்போல டேபிளின் கண்ணாடி மீது ஒரு கன்னத்தை வைத்தாள். அடடா பிரமாதம்! பதினைந்து நாட்களுக்குப் பிறகு இந்த ஸ்பரிச இன்பம்-ஸ்-ஸ்-அப்பாடா-! பிறகு அடுத்த கன்னம். ஸ்-ஸ்- அப்பாடா, அவளுக்கு மயிர்க்கூச்செறிந்தது. புளகாங்கித-

'டிரிங்'

'மேடம்'!

பிஸ்னூசிங் உள்ளே வந்தான். துர்பா அவசர அவசரமாக தன்னை சுதாரித்துக்கொண்டாள். "ஒன்றுமில்லை, உன்னைக் கூப்பிடவில்லை. இந்த காலிங் பெல் தானாக எப்படி அடித்தது?"

மானேஜர் பார்த்தார்—படுதாவுக்குப் பின்னே இரண்டு கால்கள் தெரிந்தன. அனுரஞ்சன் குப்தா வருகிறான். மானேஜர் ஒரு பெரிய பைலைப் பரப்பிக்கொண்டு அதில் கவனம் செலுத்தலானார்.

அனுரஞ்சன் வந்து நின்றுகொண்டிருந்தான். பெரிய அய்யாவின் கவனம் திரும்பவேவில்லை. "சார்! நான் உட்காரலாமா—சற்றுநேரம்?"

"உம்- உட்காரப்பா! என்ன விஷயம்?"

மனுக்கள். ஒன்றல்ல, இரண்டு.

"என்ன?" ஒன்றரை மாதம் விடுப்புக்கோரி ஒரு மனு- அம்மா கல்ப ஸ்நானத்துக்காக பிரயாகை செல்ல விரும்புகிறாள்- ஒரே மகன், கூடச் செல்ல வேண்டிய கடமை- இரண்டாவது மனு- பட்னா கிளைமேட் ஒத்துக்கொள்ளவில்லை. அதனால் ஹெட் ஆபிஸ் கல்கத்தாவுக்கோ அல்லது பம்பாய்க்கோ மாற்றல் கோருகிறான். அல்லது- அது முடியாவிட்டால் இந்த மனுவையே ராஜினாமாவாக ஏற்றுக்கொள்ளவேண்டும்.

"இதோ பாரு குப்தா, உணர்ச்சி வசப்பட்டு-"

"இல்லை சார், நன்றாக யோசித்துப் பார்த்துவிட்டேன். என் தாயாரும் இங்கே இருக்க விரும்பவில்லை."

மானேஜர், மனுவில் எழுதியிருந்த வாசகங்களின் நடையையும், அனுரஞ்சனின் முகபாவங்களையும் படித்து, அவன் கூறுவது உண்மையே, யோசித்து எடுத்த முடிவுதான் என்று உறுதிசெய்து

கொண்டார். குப்தாவைப் பற்றி மற்றவர்கள் கூறுவது பொய்யல்ல. அனுரஞ்சன் குப்தா-

அனுரஞ்சன் இன்று ஒருநாளைக்கு லீவு கேட்டான் வாய் மொழியாக. லீவு கிடைத்துவிட்டது.

ஒவ்வொரு செக்ஷனிலும் இந்தச் செய்தி பரவியது, பரவிக் கொண்டே போனது.

இருபது தட்டச்சுப் பொறிகளும் ஏககாலத்தில் மௌனமாயின.

எல்லா பாபுக்களும் ஒரே நேரத்தில் தண்ணீர் கேட்டனர்— "தண்ணீர்! தண்ணீர்!!"

"ஆ!"

"மிஸ் தாஸ் விரும்பியபடியே நடந்துவிட்டதே."

"இதல்லவா திரியா சரித்திரம்-! பெண்ணின் சாகசம்."

"ஆனாலும்- இவ சாமானியப்பட்டவள் இல்லை. படுபயங்கரி!"

"குப்தாஜி போய்விட்டாரா?"

துர்பாவுக்கும் செய்தி கிடைத்தது.

அவளுக்குப் பக்கென்றது. அவளது முகம் வெளிறியது. வெள்ளை வெளேரென்று இருந்தது அந்த முகமண்டலம்- ராஜினாமா? லீவு? அவர் வரவில்லையே இங்கே, ஏன்? ஆனால் அவர் வாக்களித்த படிதானே செய்தேன்.

அவளுடைய முகத்தின் செம்மை உடனேயே திரும்பியது. அவள் தன் நாற்காலியிலிருந்து எழுந்தாள். தனக்குப் பிரியமான டேபிளின் அருகே சென்றாள். அந்த நாற்காலியில் அமர்ந்தாள். உதடுகளில் புன்னகை மலர்ந்து விரிந்தது. அது விரிந்துகொண்டே போனது- "ராஜினாமா கொடுக்கட்டும் அல்லது உடைப்பிலே போகட்டும் அந்த முட்டாள் அனுரஞ்சன் குப்தா- என்னுடைய நெறி பிழைத்தது. என் தன்மானம் தப்பியது. நீ என்னுடையதாகவே இருக்கிறாய்- எனக்கு மட்டும்தான். என் வழியிலிருந்து முள் விலகிவிட்டது. ஆகா-!"

டேபிளின் கண்ணாடியில் தன்னுடைய கன்னங்களை மாறி மாறி வைத்து, ஸ்பரிச இன்பத்தினால் புளகாங்கிதமடைந்தாள் துர்பா. விசும்பினாள். பிறகு கலகலவென்று சிரிப்பு—"காதல் கொண்டேனே உன்மேலே நானே உண்மையாகவே-!"

மேத்தா சின்ன அம்மாவுக்கு நல்வாழ்த்துக்கூற ஆங்கில மொழியின் சில அரிய சொற்களை நினைவுபடுத்திக்கொண்டு அறைக்குள் நுழைந்தான் இந்த நேரத்தில். ஆ—இது என்ன மிஸ் துர்பா தாஸ் ஏபிஎம், டேபிளின் மீது கையை விரித்தவாறு, கண்ணாடிமேல் கன்னத்தைப் பதித்து, கலகலவென்று சிரிக்கிறாள், இல்லை, இல்லை அழுகிறாள்! கண்களில் கண்ணீர், உதட்டிலே சிரிப்பு? என்ன

*மாதிரியான சுகத்தை மிஸ் துர்பாதாஸ் அனுபவிக்கிறாள்! இது என்ன இன்ப உணர்ச்சி? புரியவில்லையே!*

*ஏதோ ஆபாசமான காட்சிக்கு எதிரே நிற்பதாக மேத்தாவுக்குப் பட்டது. "நான் ஒன்றும் தெரியாத மூடன். இல்லை, இது நிஜமாகவே காணக்கூடாத காட்சிதான்."*

(1961)

# தனித்தே நட மகனே!

கதையை அவன் பிறந்ததிலிருந்து ஆரம்பிப்போம். அதாவது ஏழு வருஷங்கள் முன்னாலிருந்து.

அவன் ஆணாகத்தான் பிறந்தான். அதுவும் ஒரு முக்கியமான பண்டிகை தினத்தில். இருந்தாலும் பிறந்து பூமியில் விழுந்ததும், அவனைப் பார்த்து அனைவரும் முகம் கோணினர். முகத்தைச் சின்னதாக வைத்துக் கொண்டு அவச்சொல் கூறி ஆசி வழங்கினர்.

அவன் பிறந்தது கிருஷ்ண ஜெயந்தியன்று, இரவில். எனவே குடும்பத்தினர் அனைவரும் கேட்கும்படியாக நான், "இவனுக்கு ஸ்ரீ கிருஷ்ணன் என்று பெயரிடலாமே" என்று கருத்துத் தெரிவித்தேன்.

ஆனால் அவர்களோ, நான் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவ தாகவே நினைத்தார்கள். என் பட்டிக்காட்டு மனைவி முகத்தைத் தோள் பட்டையில் இடித்து அழகு காட்டிக்கொண்டு, "கன்னங் கரேல்னு இருக்கு, இதுக்குப்போய் 'கிஸன் மகராஜ்' என்று பேரா?" என்றாள் நீட்டி முழங்கியவாறு.

எல்லாரும் சிரித்தார்கள். நான் சொன்ன பெயர் 'ஸ்ரீகிருஷ்ணன்' அவர்கள் சிரிப்பிலேயே அடிபட்டுப் போனது. மனைவி சூட்டிய மருவிய பெயர் 'கிஸன் மகராஜ்' நிலைத்தது.

கிஸன் மகராஜ் பிறந்ததற்காக நான் என் உறவினர்களைப்போல நிராசை அடையவில்லை. நல்லகறுப்பு நிறம், சுருட்டை மயிர்—எத்தனை அழகு!

அடுத்த ஆறு நாட்களிலேயே அவனுடைய எதிர்காலம் பற்றி ஹேஷ்யங்கள் கிளம்பின. "புரட்டாசி மாதம் பிறந்தாச்சு. ஐப்பசி-கார்த்திகையில் நல்ல மழை வெளுத்து வாங்கும் பாரு, ரெண்டு நாளிலேயே கிஸன் துவாரகைக்குப் போய்விடுவாரு!" சேச்சே! இப்பத்தான் பிறந்த பச்சைக்குழந்தையைப் பற்றி இப்படியா அபசகுனம் மாதிரி பேசுவாங்க! இப்படியெல்லாம் பேசறவங்களை 'ராட்சஸ கணம்' அப்படீன்னு தான் சொல்லணும்! எனத் தோன்றியது.

'சட்டீ'-அதாவது ஆறாம் நாள் இரவில்-வீட்டில் எல்லாரும் தொழுவம் தந்த எருமைச் செல்வத்தை நினைத்து ஒரு பாட்டம் அழுது தீர்த்தனர். குடும்பத்தில் வயதான பாட்டி சஷ்டி மாதாவை நோக்கிப் பிரார்த்தனை செய்தாள்—"சஷ்டி மாதாவே போற்றி!

மனிதர்களுக்கு ஆண் குழந்தையையும், மிருகங்களுக்குப் பெண் குழந்தையையும் கொடு- இந்தக் கடாவை நீயே கொண்டு போய்விடு தாயே, கன்றைத் தா கருணையுடன்!" கொண்டு போ என்றால், 'எடுத்துக் கொண்டு போய்விடு! பலி கொள்' என்றல்லவா பொருள்! தொழுவத்தில் ஆண் கடாவைத் தராதே!

எங்கள் வீட்டுத் தொழுவத்தில் இன்று இரண்டு எருமைகள் மட்டுமே உள்ளன. கோஸி நதியின் மணல்திட்டில் குடியேறியுள்ள விவசாயிகள், நிலச்சுவான்தார்கள் அனைவருமே எருமை வளர்ப்பவர்கள். ஒரு விவசாயி என்றால் இருபது-முப்பது எருமைகளாவது இருக்க வேண்டுமென்று பத்து வருஷம் முன்னால் வரையிலும் எண்ணி வந்தார்கள். இப்போதெல்லாம் பால்-தயிர் வியாபாரம் செய்பவர்களிடம்தான் இத்தனை எருமைகள் இருக்கும். ஆனால் சின்ன விவசாயியோ, பெரிய விவசாயியோ, யாருமே எருமைக் கடா பிறப்பதை விரும்புவதில்லை.

என் தீனக்குரலுக்குச் செவி சாய்த்து ஆண்டவன் இவனைச் சரியான நேரத்தில் பிறக்கச் செய்திருக்கிறார். இதில் எனக்கு மகிழ்ச்சிதான். அவன் பங்குப் பாலின் பெரும்பகுதியும் எனக்குக் கிடைக்குமே; வியாதியினால் வலுவிழந்த என் உடலுக்கு பாலும், தயிரும் இன்றியமையாதவை. இந்தப் பஞ்சகாலத்தில் பால்-தயிர் வாங்கிக் கட்டுபடியாகுமா? கிராமத்தில் கூட இவை அரிதாகிவிட்டன. என் வயிற்றுநோய்க்கு வைத்தியர் விதித்த பத்தியம் தயிரும், வாழைப் பழ ரொட்டியும்தான். 'தயிர் கிடைக்காவிட்டால் மோர் ஆனாலும் பாதகம் இல்லை. ஆனால் ஒரு சிட்டிகை உப்போ, சர்க்கரையோ சேர்க்கக் கூடாது. ஆமாம் ஜாக்கிரதை!' என்று கூறியுள்ளனர்.

தயிர்த் தட்டுப்பாடு என்ற இக்கட்டிலிருந்து என்னை விடுவிக்க வேண்டி, சமய சஞ்சீவியாகத்தான் வந்து பிறந்திருக்கிறான் கிஸன் மகராஜ் என்று நான் மகிழ்ந்தேன். இனிமேல் கவலை இல்லை. இந்த உடலுக்கு இனிமேல் தெம்பு வந்துவிடும். ஆண்டவன் குடியிருக்கும் இந்தத் திருக்கோயிலுக்கு இனிச் சேதமில்லை. அறத்தைக் காத்து கடைத்தேறலாம்! ஐப்பசி அடைமழையோ, சஷ்டி மாதாவோ கிஸனை அழைத்துக்கொண்டு போனாலும், என்னுடைய தயிர்- வாழைப்பழப் பத்தியத்துக்குப் பங்கம் நேராது.

"ம்பே! கிஸன் மகராஜ் தொழுவத்திலிருந்து குரல் எழுப்பினான். பகல் முழுதும் கட்டிலில் கிடந்து மலங்க மலங்க விழித்துக் கொண் டிருக்கும் ஆண்பிள்ளை கிராமத்தில் நான் ஒருவன்தான். குறுவை அறுவடை செய்யும் காலம், கிராமத்தில் ஒருவர் மிச்சமில்லாமல் எல்லாருமே பகலெல்லாம் வயல்காட்டில்தான் கிடந்தார்கள். தொழு வத்திலும் கிஸன் மகராஜைத் தவிர வேறு கன்றோ, கடாவோ இல்லை. அவனுடைய தாய்-சித்தி எல்லாருமே வயல் பக்கம்தான் வாசம்.

கிஸன் மகராஜுக்கு காக்காய்கள் தொல்லை தந்தன. எனக்கோ, ஈக்கள் தொல்லை பொறுக்க முடியவில்லை. பாவம் கிஸன், நல்ல நாள் பார்த்துப் பிறந்தாலும் அவமதிப்பும், அவச் சொல்லும்தான் கண்டபலன். கடாவாகவல்லவா பிறந்திருக்கிறான். பெண் கன்றாகப் பிறந்திருந்தால் கழுத்தில் சங்கு மாலையுடன், சலங்கையும் கட்டி யிருப்பார்கள். வீட்டிலுள்ள எந்தப் பெண் பார்த்தாலும் ஆசையுடன் அருகே வந்து கண் பீளையைச் சுத்தம் செய்வாள். இன்னொருத்தி, அன்புடன் கொஞ்சிக் கொஞ்சிக் கொண்டு பாலுடன் மூலிகையை அரைத்துப் புகட்டுவாள். வீட்டின் வயதான கிழவி அம்பும், வில்லும் ஏந்தி எப்பொழுது பார்த்தாலும் தொழுவத்தைக் காத்துக் கொண் டிருப்பாள். சின்னப் பூச்சியோ, பறவையோ பறந்தாலும் காக்காய் என்று நினைத்து 'காக்காய் உஷ்!' என்று ஓட்டுவாள்.

"ம்ப்பே!" கிஸன் மகராஜின் தீனக்குரல்.

உடனே காலில் செருப்பணிந்து கொண்டு சேற்றையும், சாணக் குவியலையும் கடந்து தொழுவத்தை அடைந்தேன். கிஸன் மகராஜ் என்னை வியப்புடன் பார்த்தான்-சற்று நேரம். "என்ன மகராஜ்? காக்காய் தொல்லை தருதா?" என்று கேட்டேன்.

கிஸன் எழுந்து நின்றான். நான் அவனுடைய சுருட்டை முடியைத் தடவிக் கொடுத்தேன். என்ன அநியாயம்! காதுப் பக்கம் நூற்றுக்கணக்கான சின்னச் சின்ன ஈக்கள் குடிபுகுந்திருந்தன. ஒரு அட்டை அவனுடைய ரத்தத்தை நன்றாக் குடித்துவிட்டு சுருண்டு போயிருந்தது. ரத்தக் காயம், பாவம்!

அவனை நான் உலர்ந்த இடத்துக்கு இட்டு வந்தேன். சின்னஞ்சிறு கிஸன் தத்தித் தத்தி நடந்தான். கண்ணன் தத்தி நடப்பதை வருணித்து சூரதாஸ் பாடிய கவிதை நினைவுக்கு வந்தது-"டுமகி டுமகி ப்ரபு சலஹி பராயீ."

காயத்தின் மேல் சுண்ணாம்பை வைத்தேன். கண் பீளையை நன்றாகத் துடைத்து சுத்தம் செய்தேன். பீளை மட்டுமல்ல, கண்களி லிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீரும் நிலத்தில் விழுந்தது.

வாயில் முற்றத்தினருகில் என்னுடைய கட்டிலின் கீழே மூங்கில் கொம்பை அடித்துக் கிஸனைக் கட்டினேன். இடமாற்றமா அல்லது என்னுடைய அணுக்கமா, காரணம் தெரியவில்லை. கிஸனுக்கு ஏக குஷி, அடிக்கடி வாலைத் தூக்கி நடனமாடினான்.

அன்று நெடுநேரம் வரை என் எண்ணமெல்லாம் அவனைப் பற்றியே ஓடியது. ஐப்பசி மாதத்து மேக மூட்டத்திலிருந்து தப்பினாலும் ஆணாகப் பிறந்த பாவத்தை வாழ்நாள் முழுதும் அவன் சுமந்துதான் ஆகவேண்டும்! மூன்று-நான்கு வருடங்கள் கழித்து அவனை ஏதாவது திருவிழாச் சந்தையில் கொண்டுபோய் விற்பார்கள். கிழக்கத்தியச் சீமையிலிருந்து கடா வாங்கவரும் வியாபாரிகள் இவனுடைய

பல்லைப் பிடித்துப் பார்ப்பார்கள். ஒரு 'லபானா' (கடா வாங்குபவன்) இந்த கிஸனுடைய புட்டத்தில் கை வைத்து பரீட்சை செய்வான்– 'இன்னும் சிறிசுதான் இது. ஏரிலே பூட்டற வயசாகலே–' என்பான் அந்த லபானா.

அடிக்கடி 'லேபோனா' 'லேபோனா' (வாங்க மாட்டேன், வாங்க மாட்டேன்) என்பதால்தான் அவர்களுக்கு 'லபானா' என்று பெயர் வந்ததோ என்னமோ–! லேபோனா– லபானா!

அன்று நான் கிஸன் மகராஜுடன் என்னை ஒப்பிட்டுப் பார்த்தேன்–சுத்த உதவாக்கரை, சீக்காளி, குடும்பத்துக்கு என்னால் ஒரு பிரயோசனமும் இல்லை. கிஸன் மகராஜை விற்றால் அறுபது–எழுபது ரூபாய் தேறும். என்னையோ, சும்மா கொடுத்தால்கூட யாரும் கொண்டுபோக மாட்டார்கள்– வயிற்றில் சீக்குப் பிடித்தவன் ஏன் சிடுமூஞ்சியாகிறான் என்பது எனக்கு நன்றாகப் புரிந்துவிட்டது.

பொழுது சாயுமுன்னரே பையைத் தொங்க விட்டுக்கொண்டு பள்ளியிலிருந்து திரும்பிய வீட்டின் கடைக்குட்டி வெளியிலேயே நின்று என்னையும், கிஸனையும் மாறிமாறிப் பார்க்கலானான். "இப்படி அந்தை மாதிரி விழிச்சுப் பார்க்குறியே, என்னடா அதிசயத்தைக் கண்டே?" என்று நான் திட்டினேன்.

அவன் நன்றாகப் பார்க்கட்டும் என்ற நினைப்புடன் நான் கடாவின் வாயில் என் உதடுகளைப் பதித்து முத்தம் கொஞ்சினேன். பொறாமையினாலோ வியப்பினாலோ உந்தப்பட்டு அந்த நோஞ்சான் மனிதக்குஞ்சு என்னை வெறுப்புடன் பார்த்தது. பிறகு காறி உமிழ்ந்து விட்டு முற்றத்தை நோக்கி ஓடியது–"ஐயே! இதைப்பாரு! பாபுஜி நரிக்குறவன் கணக்கா, எருமைக்கடாவுக்கு முத்தம் கொடுக்குது–!"

சிரிப்பை அடக்கிக்கொண்டு என் அருமைப் பட்டிக்காட்டு மனையாள் வந்தாள், "அடடே, கிஸன் மகராஜை வாசல் முற்றத்தில் கட்டியிருக்கே!" என்றாள்.

"கட்டியிருக்கே என்ன? கட்டியிருக்குதான். இனிமேல் இங்கே தான் கட்டியிருக்கும். இதே இடத்திலே, ஆமா!"

"தெரியுமா, பால் குடிக்கிற கடா, எப்படி சாணம் போடும்னு– ஹீ ஹீ ஹீ!"

ஆனாலும் வயிற்றுப் போக்குக்காரனின் சம்சாரம் இப்படிச் சிரிக்கக் கூடாது பல்லைக் காட்டிக்கிட்டு. யார் சொல்றது அவளுக்கு?

"ஆமாம், உன் குழந்தை சாணம் போட்டா மட்டும் சந்தனம் கணக்கா இருக்கும் இல்லே?"

அவளுடைய சிரிப்புக்கு இன்னும் நஞ்சேறியது. உள்ளே போகும்போது நாவெனும் கொடுக்கினால் கொட்டி விட்டுப் போனாள்–"ஐயே, அசட்டுக்கு அகங்காரம், செவிட்டுக்கு சூனியம்னு சும்மாவா சொல்லியிருக்காங்க? அப்படியே வயித்துக் கோளாறு

பிடிச்சவங்களுக்கு எப்பவும் முகத்திலே இஞ்சிதான்னு சேர்த்துக்கணும். நீ என்னதான் செய்து பாரேன், சிரிப்பே வராது. சொட்டு டீ கூட குடுக்கக் கூடாதுன்னு வைத்தியர் சொல்லியிருக்காரு-"

"அந்த வைத்தியர் இனிமையா ரெண்டு வார்த்தை பேசிடாதேன்னு சொன்னார் போலிருக்கிறது. பேச்சிலே சொட்டுக்கூட இனிமையைக் காணோம்- ஹூம்!"

வயல்காட்டுக்குப் போனவர்கள் அந்தி நேரத்தில் திரும்பி விட்டார்கள். வாசல் பக்கம் எருமைக்கடா கட்டியிருப்பதைக் கண்டு எல்லாருக்குமே கோபம், ஏகோபித்த குரலில் கண்டனம் தெரிவித்தார்கள். அவர்கள் எதிர்ப்புத் தெரிவிக்கத் தெரிவிக்க என் மனதில் தீர்மானம் என்ற முடிச்சு இறுகிக்கொண்டே போயிற்று- பிரும்ப முடிச்சுபோல- யார் சொன்னாலும் சரி- கடா இங்கேதான் நிற்கும்.

சற்று நேரத்தில் மகிஷி- அதுதான் எருமை, வந்தது. தொழுவத்தில்போய் நின்று கொண்டு கடாவைக் காணாமல் அங்கிருந்தே குரல் கொடுத்தது-"கடா- எங்கே-? ஏ- ஏ-?" கிஸன் மகராஜ் இங்கிருந்தே பதில் அளித்தான்-"இங்கே ஏ- ஏ- ஏ-!" அன்று கடாவின் அம்மாவுக்குத்தான் எல்லாரையும்விட மிக் அதிகமாக ஆச்சரியம்.

இன்று அவனைப்பற்றி விரிவாகவே சொல்ல வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது. ஏழு வயது இளைஞன் கிஸன் மகராஜ் செய்யும் சாகசங்களுக்கெல்லாம் என்னைச் சாட்சிக் கூண்டில் ஏற்றுகிறார்கள். அதற்கெல்லாம் நான் பதில் சொல்ல வேண்டிய நிலை.

முன்பெல்லாம் புரட்சிக்காரர்கள்தான் நீதிமன்றத்தில் இந்த மாதிரியான நீண்ட வாக்குமூலம் அளிப்பார்கள். அந்தக் காலத்து நீதிபதிகள் அதைப் படிக்கவும் மாட்டார்கள், கேட்கவும் மாட்டார்கள். ஆனால், நீங்கள் எல்லாம் அப்படி அல்ல. எந்த வழக்கானாலும் சரி, தவறாமல் படிப்பீர்கள், கேட்பீர்கள் என்று தெரியும். அதனால் துணிந்து இத்தனை நீண்ட வாக்குமூலம் தயாரித்திருக்கிறேன்.

அப்படியாக கிஸன் மகராஜின் இளம் பருவத்துக் கதை இங்கு முற்றிற்று.

சுருக்கமாகச் சொன்னாலும் ஒரு விஷயத்தை நிச்சயம் சொல்லியாக வேண்டும். இரவு பகலாக என்னுடனேயே பழகுவதால் கிஸன் நான் சொல்வதை எல்லாம் நன்றாகப் புரிந்து கொள்வான். நானும் அவன் மொழியில் வல்லுநனாகி விட்டேன்.

அந்த வருஷம் ஐப்பசியில் எட்டுநாள் வரை வானம் கண்ணே திறக்காமல் மூட்டம் போட்டிருந்தது. கிஸன் எட்டு நாளும் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு ஒன்றும் ஆகவில்லை. அவன் தயவில் என்னுடைய தீராத நோயும் கணிசமான அளவுக்கு குணமாயிற்று- தயிர் சாப்பிட்டால் சிடுசிடுப்பும் போய்விடும் போலிருக்கிறது.

காலை மாலை வேளைகளில் வயல் காட்டின் அருகே உலவலாம்

என்று வைத்தியர் எனக்கு அனுமதி வழங்கினார். என்னுடன் கிஸனும் தினம் காற்று வாங்க வந்தான் என்று சொல்ல வேண்டியதில்லை. இப்படியாகத்தானே பால காண்டம் முற்றும்.

வயிற்று நோய் குணமானது. ஆனால் வயிற்றுக் கவலை அதிகமானது. வேலைக்காக கிராமத்தை விட்டுப் புறப்பட்டேன். அன்று என் காளை வண்டியை வெகுதூரம் வரையில் பின்தொடர்ந்து வந்தது கடா- "போம்மா கிஸன், திரும்பிப் போடா கண்ணு" என்று சொல்லும்போதே என் குரல் கம்மியது. தொண்டை அடைத்தது.

நான் இல்லாதிருக்கையில் கிஸனுக்கு எந்தத் தொல்லையும் நேரக்கூடாது, பார்த்துக்கொள். வீட்டில் யாரும் அவனை விற்றுவிடக் கூடாது-மனைவிக்கு எழுதும் ஒவ்வொரு கடிதத்திலும் நினைவூட்டிக் கொண்டிருந்தேன். ஆனால் என் தம்பி விற்றுவிடுவதில் முனைப்பாக இருப்பது தெரிந்து மனைவி எனக்கு விவரம் தெரிவித்தாள்-"கனாயீ பாபு எப்பொழுது பார்த்தாலும் கடாவைப் பற்றியே பேசிக்கிட் டிருக்கார். எல்லார் பயிரையும் தின்னுடுதாம். மத்தவங்க பொல் லாப்பை தினம் தினம் யார் கேக்குறது? நம்ம கிராமத்து மக்தூம் மியான் தொண்ணூறு ரூபா தர்றேன்னு சொல்றாரு பேசாமல் கனாயீ பாபுவின் பங்கு நாற்பத்தஞ்சு ரூபாயை அனுப்பிடுங்க. அவருடைய தொணதொணப்பு சகிக்கலே."

ரூபாயை அனுப்பவில்லை. நான்கு நாள் லீவு எடுத்துக்கொண்டு கிராமத்துக்கு வந்தேன். வந்து பார்த்தால் நினைத்த மாதிரியே ஆயிருந்தது. கடா விற்கப்பட்டு விட்டது. மக்தூம் மியானின் தொழுவத்தில் கனத்த கயிற்றினால் கட்டியிருந்த கிஸன் மகராஜைப் பார்த்து என் அங்கமெல்லாம் வேதனையினால் துடித்தது. அவனை வழிக்குக் கொண்டு வருவதற்காகாக மக்தூம் மியான் கருணையே இல்லாமல் நையப் புடைத்திருந்தார். உடலெல்லாம் தடியடிபட்ட தழும்பு- நீள நீளமாக, வரி வரியாக.

நூற்றுப் பத்து ரூபாய் ரொக்கமாக வாங்கிக் கொண்டுதான் மக்தூம் மியான் கடாவை விட்டார்.

அந்தத் தடவை பஞ்சாயத்துப் பெரியவர்கள் முன்னிலையில் 'இன்றிலிருந்து இந்தக் கடா எல்லாருக்கும் சொந்தம்-கிராமத்துக் கடா, ஊர்க் கடா' என்றேன்.

பிறகு நான்கு நாளும் கிஸனிடம் மட்டும்தான் பேசிக் கொண் டிருந்தேன். மனைவி சொன்னாள்-"அன்னிக்கு என்ன நடந்திச்சு தெரியுமா? கனாயீ பாபு பணத்தை எண்ணி மடியிலே முடிஞ்சிக்கிட்டு கடாவின் கயத்தை மக்தூம் கையிலே கொடுத்தாரு, ஆனால் கொஞ்சநேரம் பொறுத்துப் பார்த்தா, கயித்தை அறுத்துக்கிட்டு ஓடியே

வந்து நிக்குது, நம்ம முற்றத்திலே. நான் அடுக்களையிலே இருந்தேன். அங்கேயே வந்துடுச்சி என்னைத் தேடிக்கிட்டு. கண்ணிலிருந்து மாலை மாலையா தண்ணி வழியுது- முந்தானையிலே வந்து ஒளிஞ்சுக்கப் பார்க்குது-" பிறகு என்ன நடந்தது என்று பிறர் சொல்லக் கேட்டேன்.

கிராமத்துக்கு வரும்போதெல்லாம் கிஸன் மகாராஜின் திரு விளையாடல் பற்றிப் புதுப் புதுக் கதைகள். அவனுடைய சிறப் பியல்புகள் ஒவ்வொன்றாகப் புலனாயின.

கிராமத்துக் குழந்தைகள் எல்லாம் முதுகின்மேல் ஏறி சவாரி செய்தாலும் பரம சாதுவாக நிற்பானாம். குழந்தைகளிடம் அப்படி அலாதியான பிரியம். ஆனால் விவரம் இல்லாத பெரியவர்கள் அவர்களுக்கே உரிய கெட்ட பழக்கத்தினால் அவனை வையவோ, திட்டவோ செய்தால் தன்னுடைய மூக்கை விரித்து புஸ், புஸ் என்று வேகமாக மூச்செறிவானாம்.

வம்புக்கார ராம்புகாருக்கு திட்டாமல் பேசவே தெரியாது 'தடிக் கழுதைக் கடா' என்பான். ஒரு தடவை 'தடிக்களுதே' என்றதும் கிஸன் மகராஜ் பின்னங்கால் குளம்பை மண்ணில் செருகியது அடுத்த கணம் ஒரு கூடை மண்ணை அள்ளி ராம்புகாரின் கண்ணில் வீசி விட்டது.

மக்தூம் மியானைக் கண்டால் போதும், கிஸன் மகராஜ் வெகுண் டெழுவான். ஆனாலும் மியான் மனதிலிருந்து பேராசை அகலவில்லை. மக்தூமுக்கு இந்தப் பக்கம் தலை காட்டவே பயம். இருந்தாலும் எப்படியாவது கடாவைப் பிடித்துவிடவேண்டும் என்ற யோசனை மனதில் ஓடிக்கொண்டிருந்தது- அண்டை கிராமத்திலுள்ள அஸ்கர் யகானாவைக் கலந்தாலோசித்தான். ஆடு மாடு திருடி அஸ்கர் எதற்கும் அஞ்சாதவன். அவன் அருமையான யோசனை கூறினான்-"இரும்புக் கம்பியும், ரம்ப மூக்கணாங் கயிறும் இருந்தால் சிங்கம் புலிகூட வெடவெடனு நடுங்கும், எருமைக்கடா என்ன பெரிசு?"

ஒருநாள் இரவில் கடா திருட வந்தார்கள்-அஸ்கரும், மக்தூமும்.

கிஸன் மகராஜ் புழுதியைக் கிளப்பி அவர்களுக்கு எச்சரிக்கை செய்திருப்பான்.-முதற்படியாக அஸ்கர் ஈட்டியை எறிந்து கிஸனின் புட்டத்தைக் காயப்படுத்தினான். அப்போது வேறு வழியில்லாமல் கிஸன் நேரடித் தாக்குதலில் இறங்கிவிட்டான். மாறி மாறி இரண்டு பேர் மேலேயும் பாய்ந்து உண்டு இல்லை என்று பண்ணி விட்டான்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவன் கிராமத்தைக் காவல் காக்கும் பணியை மேற்கொண்டான். அவன் இரவில் எப்போது காவல் பணி செய்கிறான் என்பது யாருக்குமே தெரியாது. தனுக்ஷாவின் வீட்டுக் கொல்லைப்புறத்தில் ஓர் இரவு யாரோ கூக்குரலிடுவது கேட்டது. தனுக்ஷா விழித்துக் கொண்டார். ஆனால் பின் கதவைத் திறந்து

அந்தப் பக்கம் போக யாருக்கும் துணிச்சல் இல்லை. தீனக்குரல் பெரிதாகிக்கொண்டே போயிற்று-'ஐயோ- காப்பாத்துங்களேன், இந்த கிராமத்துலே யாருமே இல்லையா- ஐயோ செத்தேன்!" இக்கூச்சலைக் கேட்டு ஜனங்கள் ஓடி வந்தார்கள். தனுக்ஷா வீட்டுக் கொல்லைப் பக்கம் யாரோ ஒருவன் ரத்தக் காயம்பட்டு முனகிக் கொண டிருப்பதையும் பக்கத்திலேயே கிஸன் மகராஜ் ஆர்ப்பரித்து நிற்பதையும் கண்டார்கள்- அந்தத் திருடனே கடாவின் பிரதாபத்தைச் சொன் னான். அவன் கிராமத்தில் நுழைந்தபோது கடா அவனை ஆச்சரிய மாகப் பார்த்துக்கொண்டு நின்றதாம். பிறகு ஷாவின் வீட்டில் அவன் கன்னம் வைக்கத் தொடங்கியதும் அது எங்கிருந்தோ வந்து அவனைக் குதறிவிட்டதாம்.

தனுக்ஷாவும் குடும்பத்தினரும் ஒரே குரலில் 'தெய்வீகக் கடா' என்று கூறி கிஸனைப் பூசித்தனர்-கொம்புகளில் நெய் தடவி, தலையில் அட்சதையும், அருகம்புல்லும் கொண்டு அர்ச்சித்தார்கள்- கிஸனுக்கு வாழைப்பழம் பிடிக்கும் என்று என் மனைவி கூறினாள்- இதைக் கேட்டு தனுக்ஷா இரண்டு டஜன் வாழைப்பழம் கொணர்ந்து கிஸன் மகராஜுக்கு ஊட்டினார். .

ஆனால் இரண்டு டஜன் வாழைப்பழம் கொடுத்து தனுக்ஷா கிஸனை விலைக்கு வாங்க முடியவில்லை. ஒருநாள் காலையில் தனுக்ஷா தலையில் கையை வைத்துக்கொண்டு ஓலமிடலானார்- 'ஐயோ மோசம் போனேனே! கடா இரண்டு ஏக்கர் புகையிலைத் தோட்டத்தையும் மிதித்து நாசமாக்கி விட்டதே! இருநூறு ரூபாய் சரக்கு போச்சே. ஐயோ அப்பா!" என்றார்.

கிராமத்தில் எவரும் அனுதாபம் காட்டவில்லை, 'வேண்டும், ஷாவுக்கு நன்றாக வேண்டும். கெடுதல் செய்தால் கெடுதல்தானே விளையும்- முந்தாநாள்தான் இந்த தனுக்ஷா அஜப்வால் தாஸின் மாட்டை ஜப்தி செய்தான். அவனை ஏமாற்றி முந்நூறு ரூபாய்க்கு பத்திரம் எழுதி வாங்கிக் கொண்டான். பிறகு கேஸ் போட்டு- சத்தம் காட்டாமல் 'டிக்ரி' போட்டு விட்டான்- கடா செய்தது சரிதான்!'

மறுநாள் நண்பகலில் தனுக்ஷா மீண்டும் ஓலமிட்டார்-"பாருங்க, பாருங்க, இந்தக் கடாவுக்கு பைத்தியம் பிடிச்சிடுச்சி. ஹோ- ஹோ-!"

தனுக்ஷாவின் வயலில் இறங்கி கடுகுப் பயிரை துவம்சம் செய்து கொண்டிருந்தான் கிஸன். கடுகுச் செடிகளில் மஞ்சள் நிறப்பூக்கள் பூத்து மஞ்சள் போர்வை விரித்தாற் போல இருந்தது வயல். வயலில் புகுந்து இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிவரை துளி பாக்கி இல்லாமல்- மஞ்சள் போர்வை எல்லாம் உருத் தெரியாமல்-

தனுக்ஷா பேசாமல் பார்த்துக்கொண்டு நின்றார். ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அன்று மாலையிலேயே அஜப்வால் தாஸின் 'டிக்ரீயை வாபஸ் பெற்றுக் கொண்டார்-அசல் முப்பது ரூபாய் மட்டும்

வாங்கிக் கொண்டார். வட்டி வாங்கவே இல்லை-ஒரு பைசா கூட—

சந்தோகி தத்மாவின் விதவை முஸம்மாத் நாள் பூராவும் ஏதேனும் கூலி வேலை செய்வாள்- விவசாயிகள் வீட்டில் தானியம் புடைத்தல், இடித்தல் இந்த மாதிரி வேலைகள். பிற்பகலில் இரண்டு மைல் தூரம் நடந்து ஸ்டேஷன் பக்கத்துச் சந்தையில் மஞ்சளும், பச்சை மிளகாயும் விற்கப் போவாள். திரும்பி வரும்போது அனேகமாக விளக்கு வைக்கும் நேரம் ஆகிவிடும். சந்தோகியின் விதவை 'கிஸன், கிஸன்' என்று குரல் கொடுத்துக் கொண்டே ஒற்றையடிப் பாதையைப் பிடிப்பாள். கடாவுக்காக அவள் தினமும் ஒரு சீப்பு வாழைப்பழம் வாங்கி வருவாள். கிஸனிடம் அவள் இத்தனை பக்தி வைத்திருந்ததன் பின்னணியில் இருள் நிறைந்த ஒரு கதை உண்டு. அவளே அந்தக் கதையை என் மனைவியிடம் இவ்வாறு கூறினாள்.

கிராமத்தில் ஒரு பெரிய மனிதருக்கு பல நாளாக அவள் மீது ஒரு கண். ஒருநாள் அவர் கெட்ட எண்ணத்துடன் வயலில் பதுங்கி இருந்தார்-சணல் வெளியில்.

ஏதோ பாடிக்கொண்டு முஸம்மாத் வயலருகே வந்தாள். அந்தப் பெரிய மனிதர் மிருகத்தனமாக ஆக்கிரமிக்கவில்லை, அவரின் மனநிலை மிருகத்தைவிட கீழ்த்தரமாக இருந்தது அந்த நேரத்தில்.

முறைப்படி தன் காதலை வெளியிட்டார் அந்தக் கனவான்.

மூன்றணாவுக்கு மஞ்சள் விற்றுவிட்டு ஓரணாவுக்கு உப்பு வாங்கிக்கொண்டு திரும்பிய முஸம்மாத் பத்து ரூபாய் நோட்டைக் கண்டதும் நடுநடுங்கிப் போனாள். பெரிய ஐயா ஜேபியிலிருந்து பாம்பு இறங்கிவந்து விட்டதுபோல அரண்டு போனாள். ஆனால் அவளால் கத்த இயலவில்லை. கூக்குரல் எழுப்ப இயலவில்லை. ஏனெனில் பெரிய அய்யா நெடுஞ்சாண் கிடையாக அவள் காலடியில் விழுந்தார்.

"சீச்சி, எழுந்திருங்க பெரிய அய்யா!" சரியாக இதே நேரத்துக்கு எங்கிருந்தோ வந்து நின்றது கடா.

கடாவைக் கண்டதும் கிராமத்துப் பெரியவரின் பொதிகாளை வலிமை இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

"நிசம்மா சொல்றேன் அம்மா. அன்னிக்கு கிஸன் மகாராஜ் வந்து உதவலீன்னா நான் நாசமாய் போயிருப்பேன்." சந்தோகியின் விதவை முஸம்மாத் நன்றிப் பெருக்குடன் என் மனைவியிடம் இந்தக் கதையை விவரித்திருந்தாள்.

கிஸன் மகாராஜ் கிராமத்தில் ரகுவர் மெஹ்தோவின் கிணற்றைத் தவிர, குளம் குட்டைகளில் தண்ணீர் குடிக்க மாட்டான். தினமும் மதியமானால் ரகுவர் மெஹ்தோவின் கிணற்றருகே போய் நிற்பான். வயதான மெஹ்தோ தன் கையினாலேயே தண்ணீர் இறைத்துக்

கொடுப்பான். தோட்டத்தில் மெஹ்தோவுக்கு இரண்டு மாமரங்கள் உண்டு-புளிப்பும், இனிப்பும் கலந்த சுவை. மாம்பழக் காலத்தில் பிஞ்சு விடும்போதே ரகுவர் மெஹ்தோ மரத்தினால் மேடைகட்டி அதன் மேல் காவலுக்கு உட்கார்ந்து விடுவான்-இராப்பகலாக உட்கார்ந்து கிடப்பான். போனவருஷம் ஒருநாள் கிழவனுக்கு நோய் வந்து படுத்த படுக்கையாகி விட்டான். பகல் முழுதும் அவனுடைய பெண் பத்சியா காவல் புரிந்தாள். ஆனால் இரவு நேரத்தில் யார் காவல் காப்பது?

ரகுவர் மெஹ்தோ சொல்கிறான்-"சூரியன் மறைவதற்கு முன்பே மரத்தடியில் வந்து படுத்து விட்டது கடா. மறுநாள் காலை பத்சியா வந்த பிறகுதான் எழுந்தது- இது கடா இல்லை, தெய்வம்தான்!"

கடைசியாக ஒரு கதை. என் கண்ணால் பார்த்த கதை.

பீகார் சட்டசபையில், நில உச்ச வரம்பு பற்றிய சட்டம் இன்னும் நிறைவேறவில்லை. ஆனால் சட்டசபையில் இதன் பிரஸ்தாபம் முதன் முதலாக வந்தபோதே விவசாயிகளின் மனதில் கெட்ட எண்ணம் குடிகொண்டு விட்டது. மாவட்டத்தில் விவசாயிகளுக்கும் ஏழை குத்தகைக்காரர்களுக்கும் இடையே பலமுறை சச்சரவுகள் நடந்து விட்டன. இது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்.

கிராமத்திலிருந்து எனக்கும் கடிதம் வந்தது- நிலத்தில் எனக்கும் பங்கு உண்டு. எனவே, இந்த இக்கட்டான நேரத்தில் நானும் இருக்க வேண்டுமாம். மனைவி செய்தி அனுப்பினாள்-"நிலம் அளந்து திட்டப் படுத்தும்போது அண்ணா காரணமாகத்தான் ஐம்பது பீகா நிலம் கையைவிட்டுப் போனது என்று கனாயி பாபு சொல்கிறார். இன்னமும் விட்டுக் கொடுப்பதானால் அவரே வந்து தன்னுடைய பங்கு நிலத்தி லிருந்து யாருக்கும் தானம் கொடுத்துக் கொள்ளட்டும்- என்கிறார்."

கிராமத்தை அடைந்ததும் என் தம்பி கனாயி பாபு ரகசியமாக ஒரு சேதி தெரிவித்தான். "இந்தத் தடவை குத்தகைக்காரங்க அறுவடை செய்த நெல்லைக் கொண்டு போகாதபடி பார்த்துக் கொள்ளணும். எல்லா விவசாயிகளுக்கும் இதேதான் கவலை. தானியம் அவங்க கைக்குப் போனால் ஒரு மணி கூட நமக்குக் கிடைக்காது. அதனாலே நாங்க எல்லாரும் சேர்ந்து ரகசியமாகப் பேசி இந்த முடிவு எடுத்திருக் கோம்- அதாவது- வந்து- முதல்லே அடுத்த கிராமத்து சிவசங்கர்சிங் தானே அறுவடை செய்து தானியத்தை களஞ்சியத்துக்கு எடுத்துப் போவார். பிறகு, நாங்க குத்தகைக்காரங்ககிட்ட கேட்கப் போறோம்- 'மற்ற கிராமத்து விவசாயிங்க அறுவடையான தானியத்தை அவங்க களஞ்சியத்துக்கு கொண்டு போறாங்க. நாங்களும் ஏன் உங்களை எடுத்துக்கொண்டு போக விடணும்?' என்று கேட்கப் போகிறோம் அண்ணா. நீங்க சும்மா இருங்க தயவு செய்து இல்லேன்னா-"

"குத்தகைக்காரங்களே சந்தோஷமாக அறுவடை தானியத்தை நம்ம களஞ்சியத்துக்கு எடுத்து வந்தால்?"

கனாயீ பாபு இடைமறித்துக் கூறினான்-"இதப் பாருங்க அண்ணா, நீங்க இந்தத் தடவையும் குறுக்குக் கால் போடாதீங்க. அவங்க ஏன் கொண்டு வர்றாங்க?"

நான் விடவில்லை-"சண்டை போடாமல் சமரசம் செய்து கொண்டு வழிகண்டு பிடிக்கலாம் அல்லவா? விவசாயியும் கொண்டு போக வேண்டாம், குத்தகைக்காரனும் கொண்டு போக வேண்டாம். அப்படீன்னு முடிவு செஞ்சா என்ன? கிராமத்துக்கு வெளியிலே பஞ்சாயத்துக் களஞ்சியம் ஒண்ணு பொதுவாக ஏற்படுத்தி-"

கனாயி பாபு கோபித்துக்கொண்டு முற்றத்தை நோக்கி நடந்தான். போகும்போது எதுவும் பேசவில்லை. ஆனால் அவனுடைய முகபாவம் கூறியது- "உங்களைப் போல் முட்டாளைப் பார்த்ததே இல்லை!"

என் மனைவி முற்றத்திலிருந்து முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்தாள். அவளுடைய வாதத்தைக் கேட்டு நான் பேச்சிழந் தேன்-"நமக்கு நிலமே இருக்காதுன்னா எதை வெச்சு சாப்பிடுவோம்? 'பத்திரிகை வேலையும் ஒரு வேலையா?' என்று கனாயி பாபு கேக்கறாரு. பென்சன் கூட கிடைக்காதாமே! நீங்க சும்மா இருங்க."

ஐந்து நாள் நான் பேசாமல் இருந்தேன். பத்திரிகை வேலையும் ஒரு வேலையா?

ஐந்தாவது நாள் ஒப்பந்தப்படி பக்கத்து கிராமத்து விவசாயி சிவசங்கர்சிங் ஆயுதங்கள், தடியேந்திய அடியாட்கள், அடாவடிக் காரர்களுடன் வந்து நின்றான்.

கிராமத்துக் குத்தகைக்காரர்கள் பேச்சற்றுப் போனார்கள்-என்ன ஆயிற்று? திடீரென்று சட்டம் ஏதும் நிறைவேறிடிச்சா? இது அநியாயம்! அக்கிரமம்!!

திடீரென நீரிழிவு நோய்க்கு இரையாகி விட்டோமோ என்ற பிரமை ஏற்பட்டது எனக்கு.

ஒவ்வொருவராக ஏழைக் குத்தகைக்காரர்கள் எங்கள் வீட்டு வாசலுக்கு வந்து குழுமினார்கள். பாவம், அழுது கதறிக் கொண்டே வந்தார்கள். கனாயி பாபு, தனக்கு இதில் எந்த சம்பந்தமும் இல்லாத மாதிரி அவர்கள் வயிற்றெரிச்சலைக் கிளப்பிக் கொண்டிருந்தார். வெற்றிலை மென்றுகொண்டே 'இதெல்லாம் எங்ககிட்ட சொல்லி பிரயோசனம் இல்லை' என்றார்.

"நீங்க வந்து சிவசங்கர் பாபுவைக் கேளுங்களேன்-"

"ஊஹூம்"

பாவம் குத்தகைக்காரர்கள்- என் பக்கமாகத் திரும்பினார்கள். எனக்கு வேலை கிடைப்பதற்குமுன் நான்தான் கிராமத்தில் ஏழைகள் கட்சிக்குக் கொடி பிடித்தேன். ஒருவேளை என்னுடைய கதர்

வேட்டியைக் கண்டு அவர்களுக்கு என் பேரில் நம்பிக்கை வந்திருக்கலாம். என்னிடம் வந்து மன்றாடலானார்கள்- "லால் பாபு-! இது நியாயமா? நீங்களே சொல்லுங்க- பெண்டு பிள்ளை, குழந்தைகுட்டி எல்லாருமாகச் சேர்ந்து வருஷம் பூரா பாடுபட்டிருக்கோம்- இன்னிக்கு- நீங்க எல்லாம் பார்த்துக் கிட்டிருக்கும்போதே-"

லால்பாபு பேசவில்லை. உருகிய தன் மனதை உள்ளுக்குள்ளேயே கல்லாக்கிவிட முயன்று கொண்டிருந்தார். கண்களை மூடிக் கொண்டார் லால்பாபு. மிகுந்த பிரயாசைப்பட்டுப் பதிலளித்தார்– "நான் என்னத்தைச் செய்ய? என்னால் என்ன செய்ய முடியும்? என் கையில் என்ன இருக்கிறது-? பத்திரிகை வேலையும் ஒரு வேலையா? போலீஸ் கான்ஸ்டபிளாக இருந்தால்கூட என் காக்கிச் சட்டைக்கு மத்தவங்க பயப்படுவாங்க"

பெருமூச்சு விட்டவாறு அவர்கள் திரும்பி விட்டார்கள்.

குத்தகைக்காரர்கள் குடியிருப்பில் ஒரே இரைச்சலும் கூப்பாடும். பெண்கள் மார்பில் அடித்துக் கொண்டு அழுதார்கள். குழந்தைகள் கிரீச்சிட்டுக் கத்தின. நாய்களும் ஊளையிட்டு அழுதன.

வயலில் கொள்ளைக்காரர்கள், தடியெடுத்தவர்கள், அடாவடிக் காரர்கள் வெற்றி முழக்கமிட்டனர்- "ஹோ-ஹோ-ஹோ-ஹோ-ஹோ!"

என்னுடைய நரம்பு மண்டலம் எதிர் விளைவு புரிந்தது. இம்மாதிரி நேரங்களில் என் உடல்நடுங்க ஆரம்பிக்கும்–மலேரியா காய்ச்சல் ஏறும்போது நடுக்கம் ஏற்படுமே, அதே மாதிரி.

—அய்யோ அப்பா! வாயிலே மண் விழுந்திடிச்சே- ஏ- ஏ-!

—அம்மா! அரிவாளாலே வெட்டறானே-ஏ-!

-பிள்ளை குட்டி எல்லாம் செத்துப் போகுமே ஆண்டவனே!

—அய்யோ! அப்பா!

-ஹோ-ஹோ-ஹோ- ஹோ-ஹோ-ஹோ-!!

ஓடி வருவது யார்? உடம்பில் ஆடையில்லாமல் வரும் பெண் யார்? இவளுக்கு பைத்தியமா? உடம்பிலே துணியே இல்லையே? ஆடு வேறு செய்கிறாள்-கொள்ளையடிக்கிறீங்களா? பாவிங்களா! அடிங்க விட்டு வைக்காதீங்க சத்துருக்களா-!

காக்கைகளின் இரைச்சல்? இல்லை, எனக்குத்தான் பைத்தியம் பிடித்து விட்டதா?

-லால் பாபு! நீங்க தெய்வம்- கா, கா! லால்பாபு-! நீங்க அரக்கன்தான்- கா கா!!

-லால் பாபு? லால் பாபு? கா கா!!

-லால் பாபு! கொஞ்சம் வயல் பக்கம் வாங்களேன்.

நான் என்ன செய்ய முடியும்? நான்- நான்-!

யாரது? சிவசங்கர்சிங்கின் தம்பி தேவசங்கர் சிங்கா? என்னை ஏன் கூப்பிட வந்திருக்கிறான்? நான் எங்கேயும் போக முடியாது.

எனக்கு நீரிழிவு நோய். என்னால் ஓர் அடி கூட எடுத்து வைக்க இயலாது. நான் போதையில் இருக்கிறேன். நான் மிருகம். என்னை யாவது, யாராவது கூப்பிடவாவது?

"-லால் பாபு!" தேவசங்கர் சற்று உரக்கவே அழைத்து போதை மயக்கத்திலிருந்து என்னை எழுப்ப முயன்றான். "நீங்க உங்க கடாவைக் கூப்பிடுங்க. அது வயல்லே-"

என்ன! வயல்லே கடாவா? அதாவது கிஸன் மகராஜ் குருக்ஷேத் திரத்தில் இறங்கி விட்டானா? போர்க்களத்தில் குதித்து விட்டானா? பிறகு என்ன-எங்கே கிருஷ்ணனோ- அங்கேதான் வெற்றி!!

"லால் பாபு! சீக்கிரம் வாங்க."

"அண்ணா! வாங்களேன், கடாவைக் கூப்பிடுங்களேன்."

திடீரென என்னுடைய குளிர்நடுக்கம் நின்று விட்டது. மூச்சுத் திணறிக் கொண்டிருந்த என் உணர்ச்சி வேகத்துக்கு வழி கிடைத்து விட்டது. "நான் ஏன் போகணும்? கடா என்னுடயது இல்லை. கிராமத்து மக்களுடையது. எல்லாருக்கும் பொதுவானது. நான் ஏன் அதைக் கூப்பிடப் போகணும்? நான் யாருக்கும் வேலைக்காரன் இல்லை. உன்னுடைய சேவகனும் இல்லை. உன் சிவசங்கர் வெச்ச ஆளும் இல்லை."

தேவசங்கர் திரும்பிப் போய்விட்டான். அம்மணமாக ஆடிய பெண்ணும் அழுது புலம்பிக் கொண்டு போய்விட்டாள். கனாயி பாபுவும் போய்விட்டான்.

வயலிலிருந்து மீண்டும் ஹோ-ஹோ என்ற இரைச்சல் கேட்டது. நான் காதைத் தீட்டிக்கொண்டு கேட்டேன்-இம்முறை வெற்றியின் அட்டகாசமோ, மகிழ்ச்சிக் குரலோ கேட்கவில்லை-! போர்க்களத்தி லிருந்து, குருக்ஷேத்திரத்திலிருந்து, கிஸன் மகராஜை விரட்டுவதற்கான முஸ்தீபு நடக்கிறது-உஸ்! ஹோ-ஹோ!

-அடி, டோய், செம்மையா அடிடோய்-!

-ட்வி! ட்விஸ்! ஹாங்- ஹாங்- ஹாங்

-பிடிடா, கட்டுடா! ஓடுடா! ஹோ-ஹோ-ஹோ-!

சத்தமும் இரைச்சலும் அதிகமாகியது. இப்போது கிஸன் மகராஜ் முன்னங் காலை கீழே அடித்து, குளம்புகளினால் புழுதி கிளப்பிக் கொண்டிருப்பான்.

-கண்ணீர்ப் புகை!

-அடி! அடி! ஹோ ஹோ ஹோ!

-ட்டாய்! ட்டாய்ங்!!

வெற்று வேட்டா? அல்லது- அல்லது?

ஓடு! பிடி, ஓடு!!

ட்டாய்ங்!

அய்யோ! இது வெற்று வேட்டல்ல.

நான் ஓடினேன்.

வயலை அடைவதற்குள் கிஸன் மகராஜின் தேர் வெகுதூரம் போய்விட்டிருந்தது. வெற்றிகரமாக வாபஸ் பெறும் மும்முரத்தில் அவனுடைய உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. கால்கள் அடிக்கடி மேலே எம்பி விழுந்து கொண்டிருந்தன- கிஸன் ஓ கிஸன்!

என்னுடைய கிஸன் எவருடைய உயிரையும் பலி வாங்கவில்லை. அவன் ஏழைகளின் உரிமையைக் காப்பாற்றிக் கொண்டிருந்தான். கல்வீச்சையும், செங்கல் வீச்சையும் தாங்கிக்கொண்டு அவன் வெறுமனே புழுதிதான் கிளப்பினான். எச்சரிக்கை விடுத்துக் கொண் டிருந்தான். பிறகு தடியடி விழுந்தது. பொறுமையாகத் தாங்கிக் கொண்டான். அகிம்சையைக் கடைப் பிடித்தான். கொம்பால் பய முறுத்தினான். புழுதி கிளப்பினான். இம்சிக்கவில்லை. அம்புகள், ஈட்டிகளினால் காயமடைந்தான் உடம்பு சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்டது. அப்போதுதான் அவன் தடியடி செய்த இரண்டு பேரைக் கீழே தள்ளி அவர்கள் கை கால்களை முறித்தான். சிவசங்கர் வெற்று வேட்டை வெடித்தான்; ஆனால் தேவசங்கர் நிஜமாகவே சுட்டு விட்டான் மார்பை நோக்கி! குண்டு பாய்ந்தும்கூட கிஸன் யாரையும் கொலை செய்யவில்லை. சாவதற்குமுன் அவன் சிவ சங்கரையும் தேவசங்கரையும் காயப்படுத்தினான். அவ்வளவே! நினைத் திருந்தால் அவன் கொன்றிருக்கலாம். பிறகு கிஸன் கிராமத்தை நோக்கி ஓடலானான்; ஓடவில்லை, அவன் நிச்சயம் என்னிடம்தான் வந்து கொண்டிருந்தான். என் மனைவியின் முந்தானையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு உறங்குவதற்காக- ரகுவர் மெஹ்தோவின் கிணற்றுத் தண்ணீரைக் குடிப்பதற்காக- சந்தோகியின் விதவை கையிலிருந்து வாழைப்பழம் சாப்பிடுவதற்காக... என் மகன் கையிலிருந்து வெல்லம் தின்பதற்காக-!

சிறிது தூரம் ஓடினான்- தள்ளாடினான்- விழுந்தான்!

நான் அவனுடைய காதருகே என் வாயைப் பதித்து அவனை அழைத்தேன்-"அடே கிஸன்! அய்யோ, தெரியலியே! நான் ஏன் முதல்லேயே வந்து உன்னைக் கூப்பிடவில்லை-? ஆனா-நீ இன்னிக்கு நான் கூப்பிட்டிருந்தாலும் வந்திருக்க மாட்டே- நீ அறப்போரிலிருந்து பின் வாங்கியிருப்பாயா?"

கடைசியாக போலீசின் குற்றச் சாட்டுகளுக்கு இப்போது பதிலளிக்கப் போகிறேன்.

போலீசின் குற்றச்சாட்டு-நான்தான் கிராமத்தின் அமைதியைக் குலைத்தேனாம்.

இதற்கு என்னுடைய தாழ்மையான விண்ணப்பம்- கிராமத்தில்

அமைதி நிலவுகிறது. புனிதமான அமைதி. கிராமத்தின் சிறு விவசாயிகளும் பெரும் புள்ளிகளும் குத்தகைக்காரர்களிடம் சொல் லிட்டாங்க-"நீங்க அறுவடை செய்து எங்கு வேண்டுமானாலும் தானியத்தை எடுத்துச் செல்லலாம்." சிவசங்கருக்கு அவன் பங்கு நெல் கிடைத்து விட்டது கனாயி பாபுவின் நெல்லை குத்தகைக்காரர்கள் அவருடைய களஞ்சியத்திலேயே வைத்து விட்டார்கள்- எங்கேயும் எந்தவிதமான ரகளையும் இல்லை.

கிஸன் இறந்ததும் கிராம மக்கள் கொதிப்படைந்தார்கள். பிறகு பிரார்த்தனைப் பாடல் கேட்டு அமைதியானார்கள். அவனுடைய உடலைச் சுற்றியிருந்து இரவு முழுதும் பக்திப்பாடல்கள் பாடப் பட்டன. காலையில் மிக ஆடம்பரமாக சவ அடக்கம் செய்யப்பட்டது. அவனுடைய சமாதியில் அக்கம் பக்கத்து பத்து கிராமத்து மக்கள் எல்லாரும் கூடி அஞ்சலி செலுத்தினார்கள். கண்ணீரினால் நனைந்த மண்ணை இட்டு சமாதி எழுப்பினார்கள். பெண்கள் மாறி மாறி அமர்ந்து தங்கள் முந்தானையைப் பரப்பி சமாதிக்கு நிழலளித்தார்கள். தூப, தீபங்கள் என்ன, சங்கொலி என்ன- பரிபூரண அமைதி நிலவியது.

சம்பவம் பற்றிய செய்தி நகரத்தை எட்டியது. விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் செயலர் வந்தார். கிஸான் சபை மற்றும் காங்கிரஸ் தொண்டர்கள் வந்தார்கள். போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்தார். யார் வந்தார்கள், யார் போனார்கள்- எதுவுமே எனக்குத் தெரியாது. கிஸன் இறந்தபின் எனக்குப் பேச்சே எழவில்லை. கண்களை மூடிக்கொண்டு முடங்கிக் கிடந்தேன்.

சமாதியில் வைக்கும்போது அங்கே குழுமியிருந்த அனைவரும் 'கிஜனுக்கு ஜே, கிஸனுக்கு ஜே' என்று முழக்கமிட்டார்கள். கிஸன் இல்லாமல் தங்களுடைய பலமே இழந்து போன மாதிரி ஒவ் வொருவரும் உணர்ந்தார்கள். அதனால், தொடர்ந்து சிலநாள் வரை கோரஸாக ஒப்பாரியும் வைத்தார்கள். குய்யோ முறையோ என்று அழுதார்கள்- ஆனால் இவற்றினால் ஒன்றும் அமைதி குலையவில்லை.

போலீஸ் ரிப்போர்ட்டில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது-'சூடு பறக்கும் பிரசங்கங்கள் நிகழ்ந்தன. மக்களின் உணர்ச்சியைத் தூண்டும் வகையில், மக்களை அக்கிரம நடவடிக்கைகளில் இறங்கத் தூண்டும் வகையில் புரட்சிக் கீதங்கள் பாடப்பட்டன!

எனக்குத் தெரிந்த வரையில் எந்தத் தலைவரும் வந்து உரை யாற்றவில்லை. கிராமத்தின் உணர்ச்சி வசப்பட்ட ஒரு மாணவன் ஏதோ தனக்குத் தெரிந்தபடி திக்கித் திக்கி ஏதோ சொன்னான். அவ்வளவுதான். ஆனால் அவனும் சூடு பிடித்த பிரசங்கம் செய்ய வில்லை. அவன் சொன்னான், "மனிதனின் வேதனையை மனிதன் புரிந்து கொள்ளாத போது, மிருகமாக இருந்தாலும், கிஸன் மகராஜ் மனிதத் தன்மையுடன் நடந்து கொண்டான். அவன் செய்த பணி

மனிதனுடைய பணி அல்ல, தெய்வத்தின் பணி. தன் உயிரைப் பலி கொடுத்து, நாம் எல்லாரும் மிருகங்களைவிடக் கீழானவர்கள், துச்சமானவர்கள் என்று நிரூபித்து விட்டான்."

என்னுடைய தெருவில் வசிக்கும் பெண் சம்பா, அவளுடைய மூன்று தங்கைகளுடன் சேர்ந்து உலகக் கவி தாகூரின் பிரபலமான கீதத்தைப் பாடினாள்-"யதி தோர் டாக் ஸுனே கேவு ந ஆஸே."

இன்ஸ்பெக்டர் எழுதியிருக்கிறார்-சமாதியின் மீது செங்கொடி பறக்கவிடப்பட்டிருக்கிறது.

இதைக்கேட்டு, துயரம் நிறைந்த இந்த வேளையிலும் எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. கிராமத்தில் எந்த தேவாலயத்திலும் செங் கொடி ஏற்றப்படுவதில்லை. ஆஞ்சனேயரின் கொடியோ, துர்க்கையின் கொடியோ எதுவானாலும் சிவப்பாக இருக்கும் என்பது வேறு விஷயம்.

(இதையெல்லாம் விட ஆச்சரியம் என்னவென்றால்-இந்த ரிப்போர்ட்டைப் படித்து நீங்களே என்னிடம் கேட்பீர்களே ஒரு கேள்வி-ஆமாம், உங்க பேர் 'லால் பாபு' அதிலே உள்ள 'லால்'(சிவப்பு) ஏதாவது 'அரசியல் சிவப்பை'த்தான் குறிக்கிறதா என்று- உங்களுடைய ஹாஸ்ய உணர்ச்சியை நான் மெச்சுகிறேன்.)

கிஸன் மகராஜின் சமாதிமீது நாட்டப் பட்டிருக்கும் கொடியும் சிவப்புத்தான்-ஒப்புக் கொள்கிறேன்.

கிராமத்துத் தையற்காரர் கொடிகளில் கடாவின் உருவத்தைச் சித்திரிக்க முயன்றிருக்கிறார்-வெள்ளைத் துணியினால். கொடிகளில் பொறிக்கப்பட்டிருக்கும் கிஸன் மகராஜின் கொம்பின் உருவைப் பார்த்து இன்ஸ்பெக்டர் அதை அரிவாள் சின்னம் என்று நினைத்து விட்டார்- அதன் கால்களை கலப்பை என்றும்- வாலைச் சக்கரம் என்றும்- முகத்தைச் சுத்தியல் என்றும்-

கோளாறு அவருடைய பார்வையில்தான்.

(1962)

# நல்ல மனிதர்கள்

உஜாகிர் இரண்டு பெரிய கெட்டில்களையும் புதிய அடுப்பின்மீது வைத்துவிட்டு, கிழக்குப் பக்கம் பார்த்தான். வானத்தில் இரவே திருவா திரை நட்சத்திரம் உதித்துவிட்டதுபோலும். சூரியன் உதித்துவிட்டதா இல்லையா என்று தெரியவில்லை. லேசாக வீசிய கீழைக்காற்றில் மேகங்கள் மிதந்து வந்தன. தொலைவில் பெய்கிற சாரலில் மரங்களின் இலைகள் மறைந்திருந்தன. எதிரில் அகன்ற மைதானம், பசும் புல் வெளி, நடுவே கப்பி போட்ட புதிய சாலை.

உஜாகிரின் மனதிலிருந்து திடீரென்று பாரம் இறங்கிவிட்டாற் போன்ற உணர்ச்சி. என்ன தைரியம் அவனுக்கு அப்படிப் பேச! "நீதான் ஆளைப்பார்த்து டீயிலே சீனி போடறேன்னா பக்கோடா போடறாளே மகராசி! அங்கேயும் இதே கதைதான். முகத்தைப் பார்த்து விட்டு இஞ்சியும், பச்சை மிளகாயும் வகையா அரிஞ்சு போட்டு கறு முறுன்னு பக்கோடா பண்ணிக் கொடுக்கறா. வேறொருத்தன்னா-வதங்கின வெங்காயத்தை பழைய மாவிலே போட்டு கொடுக்கறா."

இப்படிப் பேசின பயணி ஜோக்பனியிலோ, பார்பிஸ் கஞ்சிலோ ரெண்டு குவளை கஞ்சி குடிச்சுட்டுத்தான் வந்திருப்பான். ஐய! இந்த மாதிரி துடுக்குப் பயணியை இதுவரையிலும் கண்டதில்லை.

உஜாகிர் மீண்டும் புல்வெளியை நோக்கினான்.

புல்வெளியின் வலதுபக்கம் மழையில் நனைகிறது. அரசாங்க வனத்துறையின் மூங்கில் காடு ஆயிரம் கொடிகள் பறப்பதுபோல தோற்றமளிக்கிறது. மழையில் துளிர்த்த இளம் பச்சை இலைகள் கொடிகளைப்போல அசைந்தாடுகின்றன. மைதானத்தில் உலர்ந்து வெள்ளை வெள்ளையாகக் காணப்பட்ட அருகம்புல் இப்போது பசுமையாகத் தழைத்து எங்கும பசும்புல் மூடியிருக்கிறது. இரண்டே வருடங்களில் இந்த மூங்கிற்காடு பிஜீவன்-பிஜிகண்ட்- ஆகிவிடும்.

உஜாகிரின் வீடு கிராமத்தின் தென்கோடியில் உயர்ந்த இடத்தில் அமைந்திருக்கிறது. எதிரே தொலைதூரம் வரையிலும் ஒரே இறக்க மான சரிவு. தூரத்தில் கோஸி ஆற்றங்கரையின் வறண்ட மணல் வரையிலும் மேடும், பள்ளமுமாக இருக்கிறது. கடிஹாரிலிருந்து ஜோக் பனி வரை கப்பிச்சாலை. போனவருஷம்தான் போட்டு முடிந்தது. முதன்முதலாக சாலையின் வரைபடம் தயாரானபோது, உஜாகிரின்

வீட்டுக்குச் செல்லத்தான் சாலை போடுவதாகத் தோன்றியது. உஜாகிரின் வீட்டைத் தொட்டபிறகு சாலை வலப்பக்கமாகத் திரும்புகிறது.

உஜாகிர் பார்த்தான். படுத்திருக்கும் நிலமகளின் கழுத்தில் சந்திர ஹாரம்போல் கிடக்கிறது–கப்பி ரோடு.

ஒரு கெட்டிலில் உள்ள தண்ணீர் கணகணத்தது.

பிறகு அடுத்த கெட்டிலும் கணகண என்று ஒலித்தது.

உஜாகிரின் மனக் கண்களில் 'பிரதீப்பின் அம்மா' கழுத்தில் அணிந்திருந்த சந்திரஹாரம் மின்னியது. ஆனால் இன்று பிரதீப்பின் அம்மாவுக்கு என்ன ஆயிற்று? ஏன் இந்தச் சுணக்கம்? கெட்டில்களில் தண்ணீர் கொதித்து விட்டது. கடலை மாவு கலக்கும் வட்டில் இன்னும் ஓசை எழுப்பவில்லை, வாணலியும், கண் அகப்பையும் கை கலக்கும் ஒலியும் கேட்கவில்லை. இன்று என்ன ஆகிவிட்டது.

உஜாகிர் தன்னுடைய மூன்று வயதுப் பையனைக் கூப்பிட்டான் செல்லமாக "ஓ- பாபு பிரதீப் குமார்! கண்ணு! அம்மாகிட்ட போயி வண்டி வர்ர நேரமாயிடிச்சி, அப்பா 'டிப்பாட்' வேலை எல்லாம் ஃபினிஸ் அப்படீன்னு சொல்லு."

உள்ளேயிருந்து பதில் ஏதும் வரவில்லை.

உஜாகிர் தன்னுடைய 'டிப்பாட்டை' ஒருமுறை பார்த்துக் கொண்டான்—டீ டிப்பாட், அதாவது கப், ப்ளேட்டு, கிளாஸ், டீ வடிகட்டி, ஸ்பூன், டீத்தூள், சீனி, பால் எல்லாம் சரியாக ஒழுங்காக இருக்குது. என்ன ஆச்சு இவளுக்கு?

உஜாகிரின் வீடு அந்த வட்டாரத்தின் அறிவிக்கப்படாத 'பேருந்து நிலையம்' போல செயல்பட்டது. இருபது முப்பது பயணிகளாவது இங்கே பஸ் ஏறி இறங்குவார்கள். தென் கடிஹாரிலிருந்து வரும் பஸ் அரரியா கோர்ட்டிலிருந்து ஒன்றரை மணிநேரத்தில் வரும். வடக்கே ஜோக்பனி - பார்பிஸ் கஞ்சிலிருந்து வரும் பஸ் ஒண்ணே கால்மணி நேரத்தில் வரும். எந்த பஸ்ஸானாலும் உஜாகிரின் டீக்கடை வாசலில் பத்து பதினைந்து நிமிடங்களாவது நிற்கும்.

இந்த லைனிலேயே உஜாகிர் கடை பக்கோடாவும், டீயும் மிகவும் பிரபலம். சாதா வண்டி, காக்கி நிறம் மற்றும் நீல வண்டிகளின் ஓட்டுனர்கள்- நடத்துனர்கள், பயணிகள், கிளீனர்கள் எல்லாருமே டீ-பக்கோடாவைப் புகழ்ந்து பேசுவார்கள்.

பிரதீப் குமாரின் அம்மா வந்து விட்டாள்.

அப்போதுதான் குளித்துவிட்டு வந்த தன் பெண்சாதியைக் கண்டதும் உஜாகிரின் மனதில் கிளுகிளுப்பு ஏற்பட்டது. கண்ணாடி டம்ளர்களில் வெந்நீர் ஊற்றியவாறு அவன் முறுவலித்தான். பிரதீப் குமாரின் முகத்திலும் புன்னகை அரும்பியது. மனதில் எதையும் மறைக்க விரும்பாதவன்போல அவன் சொன்னான், "இப்ப ரேடியோ வாங்கி வெக்கறது அவசியம் அப்படீன்னு தோணுது."

நேற்றுவரை உஜாகிரின் மனதில் நல்ல சுவர்க் கடிகாரம் வாங்கி வைப்பது அவசியம் என்று தோன்றிக் கொண்டிருந்தது. இன்று திடீரென்று ரேடியோ வாங்கலாம் என்ற யோசனையைக் கேட்டு பிரதீப்பின் அம்மாவுக்கு வியப்பாக இருந்தது. அவள் அவனை உன்னிப்பாகக் கவனித்தாள்.

உஜாகிர் தொடர்ந்தான்–"ரேடியோவிலே ஒண்ணுதான் கேட்க லாம் என்பதில்லை. ஒரே நேரத்திலே மூணு விசயம் கேட்கலாம். பாட்டு, செய்தி, அப்புறம் டயமும் தெரிஞ்சுக்கலாம்."

பிரதீப்பின் அம்மா வாணலியை அடுப்பில் ஏற்றினாள்.

தூங்கி விழித்து கண்களைக் கசக்கிக்கொண்டே பிரதீப்குமார் வந்தான். உஜாகிர் அன்பொழுக அவனைக் கூப்பிட்டான்–"இங்கே வா கண்ணூ–! ஓ பாபு!"

தினமும் முதல்லே மூணு டீ போடுவான் அவன்– முதல் டீ பிரதீப் குமாருக்கு. பிறகு பிரதீப் அம்மாவுக்கு. அப்புறம்தான் தனக்கு! பிரதீப் குமார் ஒரு நாளைக்கு ஐந்து டீ குடிப்பான்.

பஸ்ஸில் போகக்கூடிய 'ஆபீஸ் பயணிகள்' ஒவ்வொருவராக வரலானார்கள். அதோ, அந்தக் காளை வண்டியில் போவது புது மணப்பெண்ணோ? ஆவணி-புரட்டாசி மாதம் இல்லே, பிறந்தகம் போகுது போலிருக்கிறது. இந்த சைக்கிள்காரன் தினம் போல வந்து தொல்லை கொடுப்பான். இனிமேல், சைக்கிளை இங்கே வைக்க வேண்டாம்னு சொல்லிடணும். அதைப் பார்த்துக் கொள்கிற பொறுப்பு யார் எடுத்துக்கறது? பூட்டி வெச்சாலும் முடியாது.

அன்று முதல் போணி, கிஸன்புர் பாபுதான்–"நாலணாவுக்குப் பக்கோடா, இரண்டு கிளாஸ் டீ பாலும்-சீனியும் அளவா இருக்கணும், கிளாஸைக் கொஞ்சம் நல்லா கழுவுப்பா."

பிரதீப் குமாரின் அம்மா, தலையை மறைத்திருந்த சேலைத் தலைப்புக்குள்ளே இருந்து மெல்ல பார்வையைச் செலுத்தினாள். அந்த கிஸன்புர் பாபு அப்படியொரு பார்வை பார்க்கிறாரே– உள்ளங் கையிலிருந்து தோள்பட்டை வரையிலும் பச்சை குத்தியிருக்கும் மீன்களை வைத்த கண் வாங்காமல் பார்க்கிறார் மனுஷன். ஜதை ஜதையாக மீன்கள். தண்ணீரில் நெளியும் மீன்கள்–

பிரதீப் குமாரின் அம்மா முந்தானையை இழுத்து மூடிக் கொண்டாள். கிஸன்புர் பாபு சொன்னார், "பக்கோடா கொஞ்சம் நல்லா– முறுவலா–"

கண் சல்லடையில் எடுத்து வைத்திருந்த பக்கோடாவை கொதிக்கும் எண்ணெயில் போட்டாள் பிரதீப்பின் அம்மா.

கீழைக்காற்றின் குளுமையான வீச்சில் பக்கோடாவின் நறுமணம் கலந்து கிராமமெங்கும் தவழ்ந்தது.

பக்கோடா! டீ! சாய்! ஆஹா!

கிராமத்துக் கிழவனார் சந்தோகீ சிங் தினம் இதே நேரத்துக்குத் தான் வருவார்– இதே நேரம். போணி ஆகவில்லையென்றால் வெகு பொறுமையாக உட்கார்ந்திருப்பார். போணியாக வேண்டியது தான் தாமதம். கையைச் சொடக்குப் போட்டு 'ஜெய் சிரி சீத்தாராம்' என்பார்.

இன்று போணி ஆனபிறகும் கூட உஜாகிர் சந்தோகீ சிங்கை கவனிக்கவில்லை. இம்மாதிரி சந்தர்ப்பங்களில் சந்தோகீ சிங் ஏதாவது வம்பு ஆரம்பித்து விடுவார். நிச்சயம் ஏதாவது திருட்டு, கன்னம் வைத்தல் போன்ற சம்பவங்கள் பற்றியதாக இருக்கும் அந்த வம்புப் பேச்சு. கையும் களவுமாக பிடிபட்ட திருடனை 'சம்சோர்' கதையைத் தொடங்கினார்.

சந்தோகீ சிங்கை இந்தப் பேட்டையில் எல்லாரும் அறிவார்கள். சாதி-இனத்தார்கள் கூடி சந்தோகீ சிங்கை சாதியிலிருந்து நீக்கிவைத்து விட்டார்கள். சாதி இனத்தவர்கள் வீட்டில் அவருக்கு ஹுக்காவோ, தண்ணீரோ எதுவும் கிடைக்காது. ஆனால், அவர் உஜாகிர் சிங்கின் கடை பக்கோடாவையும், டீயையும் விடமாட்டார். இப்போதெல்லாம் பக்கோடாவும், டீயும்தான் கதி. முன்னே - பின்னே யாரும் இல்லை வீட்டில். நாதியே கிடையாது.

சந்தோகீ சிங் ஓய்வு பெற்ற டபேதார். எத்தனையோ 'எஸ்பீக்கள், இன்ஸ்பெக்டர்களிடம் வேலை பார்த்திருக்கிறார். புதிதாக எந்த நிகழ்ச்சியும் நடக்கவில்லையானால் சந்தோகீ சிங், பழைய சம்பவத் தையே வருணிக்க ஆரம்பித்துவிடுவார்.

ஆனால் இன்று ஆரம்பித்திருக்கிற கதை, புத்தம் புதிய - சூடான செய்தி, நேற்று இரவில் நடந்தது.

கிஸன்புர் பாபு, பச்சை மிளகாயின் காரத்தினால் 'உஸ் உஸ்' என்றபடியே இதை ஆமோதித்தார், "ஆமா, அதனாலேதான் ராத்திரி ஒரே ரகளையா இருந்திச்சு; இல்லே–? உஸ் உஸ்!"

–கேஸை எல்லாரும் சேர்ந்து அமுக்கிவிட்டார்கள். இந்த சமாசாரமும் சந்தோகீ சிங் காதுக்கு எட்டிவிட்டது. சாந்தோகீ சிங்கின் விதவையின் பணமும் பொருளும்தான் பறிபோனது. பாவம், என்ன செய்வாள்? பஞ்சாயத்தார்கள் சொல்லை மீற முடியுமா–? பிரதீப் குமாரின் அம்மா பக்கோடா கொடுக்கவில்லை.

உஜாகிர் டீ கிளாஸை அவர் பக்கமாக நீட்டியவாறு, "சந்தோகீ பெரியப்பா, கொஞ்சம் பொறுங்க, வண்டி போன பிறகு பக்கோடா கிடைக்கும்." என்றான்.

"ஏன் அப்படி?" ஏதோ, காசு கொடுத்து சாப்பிடுபவர் போன்ற கெடுபிடியுடன் கேட்டார் சந்தோகீ சிங்.

பிரதீப் குமாரின் அம்மா மெதுவாக ஏதோ சைகை காட்டினாள். வாழை இலையில் சூடான பக்கோடாவை எடுத்து அவர் முன்னே

வைத்தான் உஜாகிர். இப்பல்லாம் சந்தோகீ சிங் அதிகார தோரணையில் கேட்க ஆரம்பித்திருக்கிறார்.

சந்தோகீ சிங் கிஸன்புர் பாபுவிடம் சொன்னார், "ராஸோ பாபு! இந்தப் பாழாய்ப் போற ரோடு வந்தாலும் வந்தது, கிராமத்தில் திருட்டு அதிகமாயிடுச்சி. முன்னே எல்லாம் கிராமத்துக்குப் பக்கத்துல உள்ள திருடங்க, கொள்ளைக்காரங்கதான் திருட்டும், கொள்ளையும் செய்யறது வழக்கம். இப்ப என்னடான்னா, மனிஹாரிகாட் திருடன் ஜோக்பனி வந்து திருடிட்டுப் போறான். ராவோட ராவா, வந்துபோற சுவடே தெரியாமெ!"

கிஸன்புர் பாபு மறுப்புத் தெரிவித்தார்-"அதுக்கு ரோடு என்னா செய்யும்? ரோடு போடறதுக்கு முன்னேயே கல்கத்தா திருடங்க கடிஹார்லே ஜேபடி செஞ்சாங்களே!"

இந்த ரோடு போடும்போது இங்கே பலமுறை சாலை எதிர்ப்புப் போராட்டங்கள் நடந்த விஷயம் கிஸன்புர் பாபுவுக்குத் தெரியும். அரசியல் தலைவர்கள் கிராம மக்களைத் தூண்டிவிடும் நோக்குடன் இந்தப் 'பாயின்டை' ஆயுதம்போல உபயோகித்தார்கள்-'சாலை போட்டதும் கல்கத்தா ஜேப்படிக்காரர்களும் பட்னா முடிச்சு மாறிகளும் பட்டப் பகலில் கிராமங்களில் புகுந்து கைவேலையைக் காட்டுவார்கள்'-என்றார்கள்.

கிஸன்புர் பாபு தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தார். பிறகு அதைக் காதருகே வைத்தவாறு சொன்னார்-"பஸ் இன்னிக்கு லேட்டா, இல்லே, கடிகாரம்தான் நின்னு போயிருச்சா?"

உஜாகிர் பதிலளித்தான்-"ரெண்டு பக்கத்து வண்டியும் இன்னிக்கு லேட். ராத்திரி ஜோக்பனி பக்கம் நல்ல மழை பெய்திருக்கு."

சந்தோகீ கூறினார்-"ஆமாம், கிழக்கேயும் மழைதான்."

உஜாகிருக்கு திருட்டு - கொள்ளை கதைகளில் சற்றும் விருப்பம் இல்லை. அதிலும் இன்றைக்குச் சொன்ன 'சம்சோர்' கதை! படுபோர்!

உஜாகிர் 'சம்சோர்' சமாசாரத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து விட எண்ணி உரையாடலைத் திசை திருப்பினான், "கிழக்கு-மேற்கு, தெற்கு-வடக்கு எங்கும் மழைதான். நம்ம பேட்டையிலே மட்டும்தான்_"

சந்தோகீ சிங் இடைமறித்துக் கூறினார்-"இந்தப் பேட்டையிலே எப்படியப்பா மழைபெய்யும். பட்டப் பகல்லே 'சம்சோரி' நடக்குது. இங்கே மழை பெய்யறதாவது! இடிதான் விழும்—பேரிடி!"

நிஜமாகவே மேகம் இடித்தது. பிரதீப்பின் அம்மா தலையைக் குனிந்தவாறே சிரித்துக் கொண்டாள். 'இடி இல்லே, பஸ் வர்ற சத்தம்!'

பிரதீப் குமாரின் அம்மாவுக்கு முந்தின வருடத்து மாரிக்காலம் நினைவுக்கு வந்தது. மழைக்காலத்தில் பஜ்ஜி-பக்கோடா டீ நிறைய விற்பனையாகும். பக்கோடா- டீ வாங்கிச் சாப்பிட பணம் இல்லை

என்றால் ஜனங்கள் வேட்டி-குடையைகூட கூசாமல் அடகு வைப்பார்கள்.

கிஸன்புர் பாபு பையைத் திறந்து பிளாஸ்டிக் பையிலிருந்து வாட்டர் ப்ரூஃபை வெளியே எடுத்தார். மலேரியாத் தடுப்பு இலாகாவில் மருந்து தெளிப்பவரிடம் ரொம்பவும் கேட்டுக் கொண்டதன் பேரில் அவருக்கு இந்த மழைக் கோட்டு கிடைத்திருக்கிறது. அடித்துக் கொட்டுகிற மழையானாலும் உள்ளே ஒரு நூலிழை கூட நனையாது.

கிஸன்புர் பாபு எழுந்துகொண்டே உஜாகிரிடம் ஒரு யோசனை தெரிவித்தார்–"ஏம்ப்பா, இங்கே நாலடி நீட்டி உட்கார வசதி செய்யலாம், மேலேயும் மறைக்கலாமே!"

பிரதீப் குமாரின் அம்மா சேலையை முழங்கைக்கு மேலே இழுத்து விட்டுகொண்டு உஜாகிரிடம் ஏதோ சொன்னாள். கிஸன்புர் பாபுவின் கண்களில் பச்சை குத்திய மீன்கள் மீண்டும் பளபளத்தன.

உஜாகிர் சொன்னான், "ராஸோ பாபு! ஒரு வண்டி மூங்கில் இல்லாமெ வேலையெல்லாம் நின்னுபோச்சு. உங்க தர்பாரிலே 'மனு' எடுத்துக்கிட்டு ஒருநாள்–"

சேலை மறைவிலிருந்து ஒரு ஜோடி கண்களும் தன்னிடம் ஏதோ பேசுவதை கிஸன்புர் பாபு கண்டு கொண்டார். "நல்லது, ஒருநாள் வா. ஒரு வண்டி என்ன, ரெண்டு வண்டி மூங்கில் கிடைக்கும்."

உஜாகிர் பல்லைக் காட்டிக்கொண்டு பிரதீப்பின் அம்மாவைப் பார்த்தான். பிரதீப்பின் அம்மாவும் 'ராஸோ பாபுவுக்கு ரொம்ப நல்ல மனசுன்னு சொன்னேன்லே' என்று கண்களாலேயே பேசினாள்.

சந்தோகி சிங் சொன்னார், "ஒரு வண்டி புல் ஏன் கேட்கவில்லை நீ? இன்னிக்கு ராஸோ பாபுவின் மனசு கடல் மாதிரி தாராளமா இருக்கு."

மழை பெய்யத் தொடங்கியது. இரண்டு பக்கத்திலிருந்தும் பஸ்கள் வந்தன சேர்ந்தாற்போல– பக்கோடா, டீ பைசே– நயே பைசே.

உஜாகிருக்கு இன்று பேசக்கூட நேரம் இல்லை.

"ஒரு இலை பக்கோடா, மிளகாய் இல்லாமெ."

பிரதீப் குமாரின் அம்மா முக்காட்டிற்குள் இருந்தவாறே ஏதோ சொன்னாள். இன்று அவளுக்கு மிளகாய் இல்லாத பக்கோடா தனியாக யாருக்காகவும் போட விருப்பம் இல்லை.

"சிவப்பு பஸ் டிரைவர் கேட்கிறாராம்."

பிரதீப்பின் அம்மா மிளகாய் இல்லாத பக்கோடாவுக்காக கடலை மாவைப் பிசையலானாள்.

சிவப்பு பஸ் டிரைவர் நல்லவர். 'மனிஹாரி காட்'டில் கப்பலிலிருந்து இறங்கும் பயணிகளிடம் கூட உஜாகிர் கடை பக்கோடாவையும், டீயையும் ஓகோவென்று புகழ்ந்து வலையில் சிக்க வைத்து

இவ்வளவு தூரம் கொண்டு வருவார் -"அண்ணாச்சி வழியில் எந்த இடத்திலே டீ குடிக்கிறதும் பணத்தை வீணாக விட்டெறிவதும் ஒண்ணுதான். டீயும் நாஸ்தாவும் ரஹிக்பூர்லே சாப்பிட்டுப் பாருங்க. ஒருநாள் சாப்பிட்டீங்க, அப்புறம் மறக்கவே மாட்டீங்க. சூடா டீயும், கறுமுறுன்னு பக்கோடாவும், ஆஹா!"

சிவப்பு பஸ் டிரைவர் வண்டியை நிறுத்தும் கோணமே தனியானது. அங்கேயிருந்து பார்த்தால் அவருடைய கண்கள் பிரதீப்பின் அம்மாவின் கண்களை ஓரக்கண்ணால் சந்திக்கும்.

வண்டியில் உட்கார்ந்திருக்கும் பயணிகளின் பார்வை கடையின் முன்பகுதியில்தான் விழும். பிரதீப் குமாரின் அம்மா உட்கார்ந்திருக்கும் இடத்தில் மூங்கில் தட்டி வைத்து மறைத்திருக்கும், சின்னதாக. அங்கிருந்து பிரதீப்பின் அம்மாவின் கைமட்டும்தான் தெரியும். பக்கோடா போடும் விரல்கள். கண் சல்லடையிலிருந்து பக்கோடாவை எடுத்து எண்ணெயில் போடும்போது கண்ணாடி வளையல்கள் 'ஜிலிங், ஜிலிங்' என்று ஒலிக்கும்.

உஜாகிருக்கு அந்தண்டை இந்தண்டை திரும்ப ஏது நேரம்?

கிளாஸ், சீனி, தண்ணீர், டீத்தூள், ஸ்பூன், பைசா, வாடிக்கையாளர்கள்!

பக்கோடாவைக் கையில் வாங்கும்போது மட்டும் அவன் ஒருமுறை பிரதீப்பின் அம்மாவைப் பார்ப்பான், "இதப் பாருங்க, சத்தம் போடாதிங்க. அமைதியாக. அமைதியா இருங்க! எல்லாம் கிடைக்கும்."

இரண்டு பஸ்களும் வந்து கிளம்பி விட்டன. பிரதீப்பின் அம்மா எழுந்து உள்ளே போய் விட்டாள். உஜாகிர் சில்லறைகளையும், நோட்டுக்களையும் எண்ணலானான்.

சந்தோகீ சிங்குக்கு இன்னொரு டீ வேண்டும். பலத்த மழையும் ஆரம்பித்தது.

"தண்ணீர் கொதிக்கட்டும், தரேன்" என்றான் உஜாகிர்.

உஜாகிர் இளம் பருவத்திலிருந்தே டீ தயாரிக்கும் பணியைத் தொடங்கிவிட்டான்.

கமல்தஹ் என்றொரு குட்டி சமஸ்தானம். ஜமீன்தார் ஒவ்வொரு வேலைக்கும் தனித் தனி ஆளை நியமித்திருந்தார். டீ போட ஒருத்தன், ஹுக்காவின் சிலம் அணையாமல் நெருப்பைப் போட்டு கண கணப்பாக வைத்திருக்க ஒருத்தன், எண்ணை தேய்த்து உடம்பெல்லாம் மாலிஷ் செய்ய ஒருத்தன், பங்கி அரைத்துக் கலக்க ஒருத்தன்-இப்படி

கமல்தஹ் ஜமீன்தாரின் சமஸ்தானம் இப்போது இல்லை. ஆனால் உஜாகிர் அப்போது பழகின 'வித்தை' அவனுக்குக் கை கொடுத்தது. இந்த 'வித்தை'யினால் அவனுடைய கனவும் பலித்து, வீட்டில் லெட்சுமி காலெடுத்து வைத்தாள்.

ரஹிக்பூர் கிராமத்திலுள்ள தன் சொந்த மனையில் வீடு கட்ட

வேண்டும். தனக்கு மகாலட்சுமிபோல அழகான மனைவி வாய்க்க வேண்டும் என்று அவன் சின்னப் பருவத்திலேயே கனவு கண்டான். கமல்தஹின் சின்ன எஜமானருக்கு வாய்த்த மாதிரி ஒரு ராணி தனக்கும் கிடைத்தால் அந்த 'அழகை' மட்டுமே பருகிக் கொண்டு வாழ்நாளைக் கழிக்க அவன் சித்தமாக இருந்தான்.

அழகான மணப்பெண்!

மணற்பாங்கான நிலத்திலுள்ள கிணறும், கிராமத்துப் பெண்ணின் அழகும் ஒரே மாதிரியானவை. மணல் நிறைந்த நிலத்தில் ஊறும் தண்ணீர் துல்லியமாகவும், இனிப்பாகவும் இருக்கும். ஒரு விழுங்கு குடித்தாலே உள்ளமெல்லாம் இனிக்கும். கிராமத்துப் பெண்ணின் அழகை ஒருமுறை பார்த்தாலே கண்களில் உறக்கம் வந்துவிடும். மணலில் ஊறும் கிணறு இரண்டு வருஷத்தில் தூர்ந்துவிடும். கிராமத்து அழகும் ஒரு வருடம் திரும்பினதும் இறங்கிவிடும்.

உஜாகிர் பகல்புர், தர்பங்கா, பட்னா போன்ற நகரங்கள் எல்லாம் சுற்றித்திரிந்து வேலை செய்தான். எங்கேயுமே அழகின் நிழல்கூடத் தென்படவில்லை. எல்லாம் போலி–வெறும் மேல் பூச்சு. இதெல்லாம் ஒரு அழகா?

பட்டணத்திலிருந்து மூட்டை மூட்டையாக அவன் பணம் கொண்டு வந்தான். ஆனால் அவனுடைய உள்ளம் என்னும் பை இன்னும் காலியாகவே இருந்தது.

கிராமத்து 'கல்யாணத் தரகர்கள்' அவனிடம் பணம் கறந்து கொண்டு தண்ணி காட்டினார்கள். சாதி இனத்தைச் சேர்ந்த பஞ்சாயத் தார்கள் வெற்றிலை பாக்குக்கு என்று நிறைய பணத்தைப் பறித் தார்கள்- ஆனால் அழகான மனையாட்டி இன்னும் குதிரவில்லை.

ஆனால் உஜாகிர் நிராசையடையவில்லை. கமல்தஹ் மாளிகையின் சின்ன மருமகள் ஒருநாள் சொன்னாள், "உஜாகிர், நீ இந்த மாதிரி தேநீர் தயாரித்துக் கொடுத்தால் இந்திரலோகத்து தேவகன்னிகைகூட மயங்கிடுவா, தெரியுமா?"

உஜாகிர் இந்த வார்த்தையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு ஒருநாள் வீட்டிலிருந்து புறப்பட்டான். எங்காவது டீக்கடையில் வேலை கிடைத்தாலும் அவன் செய்யத் தயார்.

உஜாகிருக்கு அந்த நன்னாளை மறக்க முடியுமா?

குர்ஸேலா ஸ்டேஷனில் ரெயிலை விட்டு இறங்கி அவன் வெகுநேரம் உட்கார்ந்திருந்தான்.

வெள்ளரிப்பிஞ்சு வாங்கிச் சாப்பிடும்போது அவனுக்குக் குழந்தைப் பருவத்து விளையாட்டு ஒன்று நினைவிற்கு வந்தது. சிறுவர்கள் வெள்ளரி விதையை விரலினால் நன்றாகப் பிதுக்கிக் கொண்டு "இன்னார் கல்யாணம் எங்கே நடக்கும்?" விரலிலிருந்து

வெள்ளரி விதை எம்பி எந்தப் பக்கம் விழுமோ அந்தத் திசையில் நடக்கும் என்பார்கள்.

உஜாகிர் ஒரு வெள்ளரி விதையை விரல்களில் அழுத்திக் கொண்டு மனதிலேயே கூறிக்கொண்டான், "இந்த விதை எந்தப் பக்கம் சென்று விழுமோ என்னுடைய அழகுராணி நிச்சயமாக அந்தத் திசையில் கிடைப்பாள்.'

விதை வடக்குப் பக்கமாக விழுந்தது. வேறொன்றும் யோசிக் காமல் அவன் குர்ஸேலாவிலிருந்து ராணிகஞ்ச் போகும் பஸ்ஸில் ஏறி அமர்ந்தான். கண்டக்டர் கேட்டார், "எங்கே போவணும்?"

உஜாகிர் என்ன பதில் சொல்வான்? இந்த பஸ் எந்தெந்த ஊர்கள் வழியாகப் போகிறது என்பது அவனுக்கு என்ன தெரியும்? அதற்குள் பக்கத்து ஸீட்காரன் பிரௌலி என்று கேட்டு டிக்கட் கேட்டான். உஜாகிரும் பிரௌலிக்கே டிக்கட் எடுத்தான். வண்டி பிரௌலியை அடைந்து பக்கோடாக்காரி கடை வாசலில் நின்றது. பிரௌலியில் இறங்க வேண்டிய பயணிகள் இறங்கியாயிற்று. உஜாகிர் இறங்கவில்லை, உட்கார்ந்தே இருந்தான். பிரௌலி கிராமத்தில் இறங்கி என்ன செய்ய? கண்களை மூடிக்கொண்டு ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். அதற்குள் கண்டக்டர் அவனை உசுப்பி எழுப்பினார், "ஏய் தம்பி, பிரௌலி வந்துடுச்சி, இறங்கு!"

உஜாகிர் தன் பையை எடுத்துக் கொண்டான். மனமில்லா மலேயே இறங்கினான்.

பஸ்ஸிலிருந்து இறங்கிய பயணிகள் பக்கோடாக்காரி கடையில் சிறிது நேரம் அமர்ந்து பலகாரம் சாப்பிட்டுவிட்டுச் சென்றார்கள். உஜாகிர் பேசாமல் அங்கே போட்டிருந்த 'மோடா'வில் உட்கார்ந்தான். கிழவி பக்கோடா வாணலியை இறக்கிவிட்டு அவனிடம் கேட்டாள், "எங்கே போவணும்?"

உஜாகிர் சோம்பல் முறித்துக்கொண்டே பதில் சொன்னான், "எங்கேயும் இல்லே, ஓரணாவுக்கு பக்கோடா வேணும்."

கிழவி அலுத்துக் கொண்டாள், "இம்மாநேரம் வாயைத் தெச்சுக்கிட்டா உட்கார்ந்திருந்தே? வாணலியை இறக்கின பிறவு கேட்கிறாரு துரை, ஓரணாவுக்கு பக்கோடா! இப்ப பக்கோடா எல்லாம் கிடைக்காது. கத்தரிக்காய் பஜ்ஜி சாப்பிடணும்னா சொல்லு. வாணலியை ஏத்தட்டுமா? அடி சிதியா! எத்தினி நேரம் உக்காந்து கத்தரிக்கா நறுக்குவே? எவ்ளோ அரிஞ்சயோ எடுத்தா- இங்கே கிராக்கி காத்திருக்கு."

குடிசைக்குள்ளேருந்து அதே மாதிரியான சன்னக் குரலில் பதில் வந்தது. சுடச்சுட. "நாளையிலிருந்து சொத்தைசொள்ளை கத்தரிக்காய் எல்லாம் நான் நறுக்க மாட்டேன். ஆமாம் சொல்லிப்புட்டேன். ஒவ்வொரு கத்தரிக்காயிலும் அஞ்சஞ்சு புழு, ஐய!"

கிழவி, சிதியா எனப்படும் அந்தப் பெண்ணை கத்தரிக்காயுடன் இணைத்து மோசமான வசவு மொழிகளைப் பொழிந்தாள்.

சிதியா முறத்தில் கத்தரிக்காய் துண்டுகளை எடுத்து வந்தாள். "இந்தா சித்தி, நான்தான் நெதம் சொல்றேன் இல்லே, வெளியாட்கள் முன்னாலெ என்னை இந்த மாதிரி திட்டாதே திட்டாதேன்னு."

உஜாகிர் சிதியா என்ற அந்த சீதையின் அழகைக் கண்டு சொக்கிப் போனான். ஒவ்வொரு கத்தரிக்காயிலும் அஞ்சஞ்சு புழு- பிறகு கத்தரிக்காயை சம்பந்தப்படுத்தி கிழவி சொன்ன கெட்ட வார்த்தை. இதையெல்லாம் கேட்டு அவனுக்கு குமட்டல் வந்து கொண்டிருந்தது. ஆனால் சீதையைக் கண்டதுமே எல்லாம் மறந்து விட்டது- இதுவல்லவா அழகு! ஆஹா! இதுவன்றோ அழகு!!

அவன் சற்றே கனைத்து தொண்டையை சரிசெய்து கொண்டான், "அம்மணி, தாயே! ஒரு அணா பஜ்ஜி இல்லே, நாலணாவுக்கு கொடு."

கிழவி உருட்டினாள், "ஹுங்! ஆளைப் பாருடா. இந்த ஆம்பிளை புத்தி தடுமாறிட்டே இருக்குது பாரு. என்ன வேணுமோ, ஒரே தடவையிலே சொல்லலாம் இல்லே?"

உஜாகிர் பேசவில்லை. ஆனால் வாடிக்கையாளருக்காக சீதா பரிந்தாள், "ஒரு தடவையிலே சொன்னா என்ன, ஆயிரம் தடவையிலே சொன்னாத்தான் என்ன-நீ இப்படி வர்றவங்ககிட்டெ எல்லாம் சண்டை போட்டுக்கிட்டு கிடந்தே, ஒரு பைசாவுக்குக்கூட விக்காது உன் கத்தரிக்கா பஜ்ஜி."

கிழவி கத்தரிக்காயை கடலைமாவில் தோய்த்து வாணலியில் இட்டுக்கொண்டே பேசினாள், "பெரிசா வந்துட்டா இவ 'ஆம்படையானுக்கு' பரிஞ்சுக்கிட்டு."

கிழநாக்கும், இளநாக்கும் 'வாய்ச்சண்டையில் இறங்கியபோது உஜாகிர் தன் ஆண்பிள்ளைத் தனத்தைக் காட்டினான், "சீச்சி, நீங்க இப்படி காரணமில்லாமெ சண்டை போட்டிட்டிருந்தா வெச்சுக்குங்க உங்க பஜ்ஜியை! யாருக்கு வேணும் கத்தரிக்கா பஜ்ஜி?"

சீதா சொன்னாள், "கேட்டியா? இப்ப உக்காந்து வடிகட்டிட்டிரு- நாலணா பஜ்ஜியை கண் சல்லடைலே போட்டு, நானும் பார்க்கறேன், எவன் வந்து திங்கப்போறான்னு."

"சாப்பிடவேண்டாம்னா பைசா கொடுத்துட்டுப் போயிடு" கிழவி தீர்மானமாகச் சொன்னாள்.

சீதா முதன்முறையாக உஜாகிரை கண்ணெடுத்துப் பார்த்தாள். ஏதோ சொல்ல வந்தவள் பதில் பேசாமல் உள்ளே போய்விட்டாள்.

உஜாகிர் அங்கேயே உட்கார்ந்து யோசிக்கலானான், "நாலணா பஜ்ஜியைத் தின்ன முடியுமா? ஒரு கூடை கத்தரிக்கா பஜ்ஜி!"

கிழவி மீண்டும் குரல் கொடுத்தாள், "அடீ சிதியா! இலை எங்கே?

கத்தரிக்காய் பஜ்ஜியை உந்தலை மண்டையிலேயா போட்டுக் கொடுக்கறது?"

உஜாகிர் கத்தரிக்காய் பஜ்ஜி தின்ன ஆரம்பித்தான். அப்போது கிழவி மென்மையான குரலில் சொன்னாள், "தம்பி, தப்பா நினைக்காதே. இந்த வாயாடி சீதைப்பொண்ணு நேராப் பேசினா எதையுமே கேக்காது. ஏட்டிக்குப்போட்டி பதில் சொல்லிக்கிட்டிருக்கும். இரு, நான் தண்ணி எடுத்தாரேன்."

கிழவி எழுந்திருப்பதற்கு முன்னமேயே சிதியா தண்ணீர் கொண்டு வந்து வைத்தாள். "எனக்குத் தெரியுமே. வண்டிவர்ற நேரமாச்சுன்னா நீ எதையாவது சொல்லிக்கிட்டு அடுப்பங்கரையி லிருந்து வெளியே வந்துடுவே. வாணலியை எடுத்து ரோடிலே போடட்டுமா?"

கிழவி மீண்டும் உட்கார்ந்தாள். ஏதோ கெட்ட வார்த்தை வாயில் உருவாகிக் கொண்டிருந்தது. உஜாகிர் இடை மறித்தான், "இங்கே ஒரு டீக்கடை நல்லா நடக்கும், அம்மா!"

கிழவி தன் பொக்கை வாயைக் கோணிக்கொண்டு கேட்டாள், "என்ன நடக்கும் நல்லா?"

"டீக்கடை."

"எவன் போடுவான்?"

"யாரு போட்டாலும் நடக்கும், நல்லா நடக்கும்."

கிழவி இதைக் கேட்டுச் சலித்துக்கொண்டே பதிலளித்தாள், "தீயை வைக்க டீக்கடையிலே! ஒரு பக்கோடா அடுப்பை வெச்சுக் கிட்டே என் எலும்பெல்லாம் உருகிச் சாம்பலாப் போவுது!"

சீதா மீண்டும் ஒருமுறை உஜாகிரைப் பார்த்தாள். டீக்கடை என்ற சொல்லைக் கேட்டதுமே அவள் அப்படியொரு பார்வை பார்த்தாள். விழுங்கி விடுகிற மாதிரி! உஜாகிர் சொன்னான்–"டீயிலே எட்டு மடங்கு லாபம் தெரியுமா? நாலணா முதல் போட்டா ரெண்டு ரூவா தேறும்!"

'ரெண்டு ரூவாயா!' கிழவிச் சித்தியும் சிறிசு சீதையும் வியப்பில் வாயை அகல விரித்துக் கேட்டார்கள், "ரெண்டு ரூவாயா?"

கிழவி சிறிதுநேரம் பேசாமல் இருந்தாள். பிறகு, "கிடக்கட்டும் தம்பி, லாபமெல்லாம். இங்கே யாரு டீ குடிப்பாங்க?" என்றாள்.

"கிடைச்சா எல்லாரும்தான் குடிப்பாங்க" சீதைக்குட்டி சொன்னாள்.

"உண்மையான வார்த்தை", உஜாகிர் சொன்னான்.

கிழவி, கண சல்லடையைக் கையில் எடுத்து ஆட்டிக்கொண்டே கேட்டாள், "நான் கேக்குறேன், எவண்டீ போடுவான் டீயெல்லாம்? உம்புருசனான்னு கேக்குறேன்."

சீதை இந்தத் தடவை செம்மையாகத் திருப்பிக் கொடுத்தாள்,

"எம்புருஷன் இல்லை, உம் புருஷன்."

என்ன ஆச்சரியம்! இந்த வசைவைக் கேட்டு பொக்கை வாய்ப்பாட்டியும் சிரித்துவிட்டாள். சீதையும் சிரித்தாள். ஆனால் உஜாகிரின் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. சிறிதுநேர மௌனத்துக்குப்பின் அவன் பேச்சைத் தொடர்ந்தான்-"ஆமாம், சரிதான்- டீக்கடை ஆம்புளைதான் நடத்த முடியும்."

கிழவி பெருமூச்சு விட்டாள். சீதை முற்றத்தினுள் போய்விட்டாள்.

பிறகு வெகுநேரம் வரையிலும் உஜாகிர் சித்திப்பாட்டிக்கு டீக்கடைத் திட்டம் பற்றி விரிவாக எடுத்துரைத்தான்.

அடுத்த பஸ் திரும்புவதற்குள் உஜாகிர் கிழவியைத் தன் இனிமை யான பேச்சினால் மயக்கி விட்டான், "அம்மா! உங்களுக்கெல்லாம் இஸ்டம்னா நான் போய் டீக்கடைக்கு வேண்டிய சாமான் எல்லாம் வாங்கி வரட்டுமா?"

"உன் வீடு எங்கேப்பா?"

"ரிஹிக்புர்"

"என்ன சாதி-? அடடே, அப்ப நம்ம இனம்தான்னு சொல்லு!"

விஷயம் உறுதியாகிவிட்டது.

உஜாகிர் குர்ஸேலா பஜாருக்குப் போய் டீக்கடை நடத்துவதற்கு வேண்டிய சாமான்கள் எல்லாம் வாங்கிக்கொண்டு இரவு பஸ்ஸில் திரும்பி வந்தான். கிழவி கூறினாள்-"அட, நிசம்மாகவே திரும்பி வந்துட்டியே தம்பி! எவனோ வாய்ச்சவுடால்காரன் வந்தான். புருடா விட்டுட்டு அம்பேல்னு போயிட்டான்னு அல்லவா நினைச்சேன்!"

உள்ளேயிருந்து சீதை கடிந்து கொண்டாள்- "உனக்கு வயசு ஏறிப்போச்சு தவிர மனுசங்களைப் புரிஞ்சுக்கற விவேகம் இன்னும் வரலே."

டீக்கடை சாமான்களைப் பார்த்து வயதான கண்களும், இளவயதுக் கண்களும் ஆச்சரியத்தினால் விரிந்தன. 'அடேங்கப்பா! இத்தினி சாமான் வேணுமா டீக்கடை வெக்க?"

அன்றிரவு சீதை தன் கையினாலேயே சோறும், குழம்பும் பரிமாறினாள்—முதல்முறையாக. அந்த நாட்களை நினைத்து இன்றும் கூட உஜாகிரின் உடம்பு சிலிர்க்கிறது. சீதையின் பேச்சு, சீதையின் சிரிப்பு. சீதை அங்கும் இங்கும் பரபரப்பாக நடப்பது. இரவு பகல் எந்நேரமும் உஜாகிர் கனவுலகிலேயே இருந்தான்—அந்த அழகைப் பருகிப் பருகி வாழ்ந்தான்.

டீக்கடை தொடங்கியது. நன்றாக நடக்கவும் செய்தது.

கிராமத்தில் எல்லாரும் பேசிக்கொண்டார்கள்- "பக்கோடாக்காரி கிழவியின் ஒரு உறவுக்காரப் பையன் வந்திருக்கிறான். டீக்கடை வெச்சிருக்கிறான் பாரு! டீ பிரமாதம் போ."

பக்கோடாக்காரக் கிழவி தன்னுடைய கடையில் உட்கார்ந்து இன்றளவும் திட்டி நொறுக்கிக் கொண்டிருக்கிறாள். "அந்தத் தேன் பாகுப் பேச்சுக்காரன் வந்தான் பாரு, டீயைக் கொடுத்து டீயைக் கொடுத்து இந்தச் சிறுக்கியை மயக்கிட்டான்ப்பா- ராப்பகலா அதுங்க போட்ட நாடகம் எனக்கு கொஞ்சம்கூடப் பிடிக்கலே. 'ரெண்டு பேரும் நடையைக் கட்டுங்க இங்கிருந்து' அப்படீன்னு சொல்லிட்டேன்!"

மவராசி அவள், ராஜயோகத்தையல்லவா கொண்டு வந்தாள்.

சீதை இல்லை அவள், லட்சுமிதான்.

ராணிகஞ்ஜிலிருந்து குர்ஸேலா திரும்பும் வண்டியில் லெட்சணமான பெண்சாதியை பக்கத்தில் இருத்திக்கொண்டு உஜாகிர் சொந்த கிராமத்துக்குப் பயணமானான். கிராமத்தில் காலடி எடுத்து வைத்ததும் இனிய செய்தி அவனுக்காகக் காத்திருந்தது, "இங்கேயும் புதுரோடு போடப் போறாங்க, சீக்கிரமே!"

மெய்யாகவே பிரதீப்குமாரின் அம்மா லட்சுமிதான்.

புதிதாகப் போடும் சாலையின் கண்டிராக்டர் உஜாகிரின் குடிசையிலேயே டேராப் போட்டான்.

கிராமத்தார்கள் சுற்றி வளைத்துப் பேசி உஜாகிரை உஷார்ப் படுத்தினார்கள். "வீட்டுக்குள்ளே மனைவியை வெச்சுக்கிட்டு வெளித் தாழ்வாரத்திலே மாற்றானைக் குடி வெச்சிருக்கியே, இது நல்லதுக் கில்லேப்பா!"

எப்பொழுது கண்டாலும் சந்தோகீ சிங் பட்டப் பகலில் 'சம்சோரி' கதை ஏதாவது சொல்லத் தவறுவதில்லை. வீட்டுக்குள்ளே வந்து மனைவியின் அழகைப் பருகியவாறே உஜாகிர் சொல்வான், "ஊர்ச்சனங்க என்னவெல்லாம் சொல்றாங்கன்னு தெரியுமா?"

"ஊர்ச்சனங்க சொல்றதைக் கேட்கப் போறீங்களா, கண்டிராக் அய்யா சொல்றதைக் கேக்கப் போறீங்களா? கண்டிராக் அய்யா சொல்றாரு, பக்கோடா- டீக்கடையெல்லாம் பின்னாலே பார்த்துக் கிடலாம். இப்ப நிறையப் பேரு கூலி வேலை செய்யறாங்க. பேசாம சோறு-பருப்புக் கடை வை. வேலை செய்யறவங்களுக்கு கடன்லே சோறு போடு. வாரம் முடிஞ்சதும் ஒண்ணுக்கு ஒண்ணரையா வாங்கிக்க. இதுதான் நல்ல வாய்ப்பு அப்படீங்கறாரு."

"நெசமாவா? கடன்லே சாப்பிட்டுட்டு ஓடிட்டாங்கன்னா?"

"ஓடி எங்க போயிடுவாங்க? அவங்க குடுமிதான் கண்டிராக் அய்யா கையிலே இருக்குதே!"

"அப்படியா? அடி என் பிரௌலிக்காரி! நீ சரியாத்தான் சொல்லுறே. கண்டிராக் அய்யா மெய்யாவே நல்லவர்தான்."

"என்னங்க? என்னை பிரௌலிக்காரின்னு ஏன் சொல்றீங்க? கொஞ்சம் கூடப் பிடிக்கலே."

"அப்ப என்ன சொல்லிக் கூப்பிட?" உஜாகிர் கலகலவென்று

சிரித்தான், "ஓ சரி, சரி! அப்ப நான் கண்டிராக் அய்யா கூப்பிடறாப் போல 'பட்டுப் பொண்ணு'ன்னு கூப்பிடறேன்."

கிராமத்து ஊர்சுற்றி இளவட்டங்கள் உஜாகிரைக் கோபப்படுத்த அடிக்கடி சொல்லலானார்கள், "கண்டிராக் அய்யா மெய்யாகவே நல்லவரு."

நல்லவரை நல்லவர் என்று சொல்லாமல் வேறென்ன சொல்ல? கிராமத்து ஜனங்களுக்கு வீண் பொறாமை. உஜாகிரின் பெண்சாதி அழகி. நல்ல லட்சணமானவள், கிராமத்திலே எந்த மருமகளாவது வந்த உடனே சாலை போடற வேலை தொடங்கிச்சா? கிராமம் மட்டுமில்லை, இந்த சுற்று வட்டாரத்திலேயே அந்த மாதிரி வரலாறு இல்லை. எவனும் அப்படிச் சொல்லிப் பெருமைப்பட முடியுமா? அப்புறம், சோறு-பருப்புக் கடைன்னு ஆரம்பிச்சு அஞ்சே மாசத்திலெ பத்து பீகா நிலம் யாரு வாங்கியிருக்காங்க? ஜனங்க அப்படித்தான் பொறாமைப்படுவாங்க. கண்டிராக்டர் அய்யா இங்கிலீசுலே கடுதாசி எழுதறாரு. இந்த கிராமத்திலே இங்கிலீசு தெரிஞ்சவன் எவனாவது இருக்கானா? பட்டுப் பொண்ணு சரியாத்தான் சொல்லுது-"எந்த வேலை செஞ்சாலும் அக்கம் பக்கம் பொறாமைப்படும்படி செய்யணும்."

பையன் பிறந்த அன்னிக்கு கண்டிராக்டர் அய்யா தோல் பையைத் திறந்து இருபத்தஞ்சு ரூபாய் குழந்தை கையிலே கொடுத்தார். ஆறாம் நாள் 'சடீ' அன்று இரவெல்லாம் உட்கார்ந்து ராமாயணம் வாசித்தார். பிரதீப் குமார் என்ற பெயரே அவர் வைத்ததுதான். கிராமத்துக் குருக்களையா இருக்கிறாரே பண்டிதர், 'பதாஸு' என்று பெயர் வைத்தார். அய்யே, பதாஸுவும் ஒரு பேரா?

கண்டிராக்டர் அய்யா இன்னிக்கு எந்த ஊரில் இருக்கிறார் என்று தெரியாது. எங்கே இருந்தாலும் அவர் வாழ்க! மெய்யாகவே அவர் நல்லவர். பிரதீப் அம்மாவுக்கு இப்பவும் ஒவ்வொரு மாசமும் அவர் நினைவு வருது. 'பிரதீப் குமாரைப் பார்த்துவிட்டுப் போக நடுநடுவிலே வருவேன்' அப்படீன்னு சொல்லிட்டுப் போனார்.

'பிரதீப் குமார் முகத்தைப் பார்த்தா அப்படியே கண்டிராக்டர் அய்யாவை உரிச்சு வெச்சிருக்கு' அப்டீன்னு சொன்னான் சித்னூ கிராமத்து ராம்டோல்வா. சுத்த கிறுக்குப் பையன் அவன்!

சிவப்பு பஸ் டிரைவரும் ரொம்ப நல்ல மனுசர்தான். தினமும் சொல்லுவார், "இதப்பாரு உஜாகிர்- அடுப்படியிலே உட்கார்ந்து உட்கார்ந்து பிரதீப் அம்மா கருப்பு நிறமா ஆயிட்டு வர்றா. டால்கம் பவுடர் போட்டா நிறம் ஜோரா இருக்கும்." அப்படியே அடுத்த நாள் வரும்போது ஞாபகமா பவுடர் டப்பா வாங்கி வந்திட்டாரு—பூர்ணியாஸாஹா கம்பெனியிலிருந்து. இத்தினி நல்ல மனுசரை, இந்த கிராமத்திலே மட்டுமா, சுத்து வட்டாரம் எங்கேயும் பார்க்க முடியாது!

புதுசா வந்திருக்கிறாரே, இன்ஸ்பெக்டர் அய்யா அவரும் தங்கமான மனுசர்தான். ஒருநாள் சொன்னார்-'எஸ்பி அய்யா உன்னுடைய பக்கோடாவைப் புகழ்ந்துக்கிட்டே இருக்காரு' இந்தப் பக்கோடா பேரைக் கேட்டாலே ஜோக்பனி லாலாவின் மகனுக்கும் வாயிலே தண்ணி ஊறுமாம். இரவு பனிரெண்டு மணிக்கு இன்ஸ்பெக்டர் கூட ஜீப்பிலே போய் பக்கோடா திருடித் தின்பானாம். லாலா சைவம் தான். அவங்க வீட்டிலே வெங்காயம்கூடச் சேர்த்துக்க மாட்டாங்க. அப்படி இருக்கறப்ப, லாலா மகன் உஜாகிர் கடையிலே உட்கார்ந்து வெங்காயப் பக்கோடா தின்பானா? பிரதீப்பின் அம்மா சொல்லுவா, "லாலா மகன் அப்படியே பசுப்போல சாது. ஒல்லியா இருக்கிறான். அதனாலெ பக்கோடாவோட, இங்கிலீஷ் சாராயம் குடிக்கிறான். அவ்வளவுதான்." அன்னிக்கு பிரதீப்பின் அம்மாவுக்கு ஒரு உடம்பு வலி. சாயங்காலத்திலே இருந்து-"ஒரு கிளாஸ் கொண்டு வா இங்கே. ஒருவாய் குடிச்சாலே எல்லா வலியும் இருந்த இடம் தெரியாமெ பறந்து போயிடும்" அப்படீன்னு சொன்னார் இன்ஸ் பெக்டர் அய்யா. மெய்யாவே அப்படித்தான் நடந்தது. சாயங்காலம் முனகிக்கிட்டிருந்த பிரதீப்பின் அம்மா இத்தனூண்டு உள்ள போனதும் என்னமா டாண்டாண்ணு பேசினா. லாலா மகனோட சரிசமமா உட்கார்ந்து வம்பு பேசத் தொடங்கிட்டாளே! லட்சுமிதான் பிரதீப்பின் அம்மா!

மூன்று மணி பஸ் வந்து கொண்டிருக்கிறது. 'எங்கே கண்ணு! அம்மாகிட்டே சொல்லு மூணு மணி பஸ் வருதுன்னு. என்னுடைய டீப்பாட் வேலை எல்லாம் ரைட்!'

"பாபு! பிரதீப்குமார்! அம்மா எங்கே?"

ப்ரதீப் குமாருக்கு அதிகாலை தூக்கம் கலையவில்லை. உஜாகிர் பேசாமல் உட்கார்ந்து பீடி குடிக்கலானான். இன்னிக்கு, காலங் கார்த்தாலே பிரதீப்பின் அம்மா எங்கே போய்விட்டாள்? உடம்பு சரியில்லையோ? இல்லை, சிவப்பு பஸ் டிரைவர் சொல்வது சரிதான்- சுவர் இருந்தாத்தானே சித்திரம் எழுதலாம்! பிரதீப்பின் அம்மா நாள்பூரா அடுப்படியிலே உட்கார்ந்திருப்பது சரியில்லை. பக்கோடா போட சுகனியின் அம்மாவுக்கு கூலி கொடுத்து உட்கார்த்த வேண்டியதுதான், இனி.

உஜாகிர் உட்கார்ந்தான். வானத்தில் வெள்ளி நட்சத்திரம் மறைந்து, வெளிச்சம் பரவலாயிற்று. பிரதீப் அம்மா இன்னும் வீட்டுக்குள்ளே வரவில்லை. அவன் வெளியே வந்து பார்த்தான். பாத்திரங்கள் எல்லாம் அப்படியே பரந்து கிடக்கின்றன. வெளி வாசலுக்கு எடுத்துச் செல்லும் மொந்தை இரண்டும் அங்கேதான்

கிடக்குது. அப்ப எங்கே போனா இவ?

உஜாகிர் வீட்டுக்குள் வந்து பார்த்தான்-பெட்டி திறந்திருக்கிறது. பட்டுச் சேலையும், பட்டு ரவிக்கையும் எங்கே காணோமே! பூமியே சுற்றுவதுபோலத் தோன்றியது அவனுக்கு. உரத்த குரலில் உஜாகிர் மகனை எழுப்பினான், "மகனே, பாபு! பிரதீப்குமார்! அம்மா எங்கே?"

பிரதீப்குமார் எழுந்து உரத்த குரலில் அழலானான்-"அம்மா-ஆ- ஆங்"

உஜாகிர் விழித்துக் கொண்டான். பிரதீப்குமார் அழுது ஊரைக் கூட்டாமல் இருக்கவேண்டும் என்ற கவலையில் அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டான். "மகனே, அம்மா கங்கைக் கரையிலே திருவிழாவுக்குப் போயிருக்குது. மத்தியானம் பனிரெண்டு மணி பஸ்ஸிலே வந்துடும்," என்றான்.

பிறகு தன் மனதிற்குள் சொல்லிக்கொண்டான்- "எங்கே வரப்போறா, பனிரெண்டு மணிக்கு? எங்கேயோ வேலையாத்தான் போயிருப்பா."

காலைநேர பஸ்கள் வரும் நேரமாயிற்று. சந்தோகீ சிங் சரியான நேரத்துக்கு வந்துவிட்டார். வந்ததுமே கேட்டார்-"இன்னிக்கு என்ன, பக்கோடா அடுப்பு எரியவில்லை?"

உஜாகிர் இன்று 'போணி' பண்ணாமலேயே சந்தோகீ சிங்குக்கு பெரிய கிளாஸ் நிறைய டீ கொடுத்தான். சந்தோகீ சிங் டீயை உறிஞ்சிக்கொண்டே சொன்னார்-"காலம் கெட்டுக் கிடக்கு. பெண்கள் தனியா வெளியிலே போறது-"

இரண்டு பக்கத்திலிருந்தும் வண்டிகள் வந்தன. உஜாகிர் சிவப்பு பஸ்ஸைப் பார்த்தான். புது டிரைவர் போலிருக்குதே! "சிவப்பு பஸ் டிரைவர் இன்னிக்கு எங்கே போனாரு?" "லீவிலே இருக்காரா?" "எத்தினிநாள் லீவு?" "இன்னிக்கு பக்கோடா கிடையாது, அண்ணே. டீ மட்டும்தான்."

மதியத்திற்குப் பின் உஜாகிர் கடையை மூடிவிட்டான்.

மனதிற்குள் இனந்தெரியாத பயம் கவ்விக் கொண்டது. வாய் விட்டு உரக்க அழவேண்டும்போல தோன்றியது. ஆனால் பிரதீப் குமாரின் முகத்தைப் பார்த்து தன்னைச் சுதாரித்துக் கொண்டான். அவனே அழத்தொடங்கினால் குழந்தை பயந்து விடமாட்டானா?

"அப்பா! பனிரெண்டு மணி வண்டி வருது."

பிரதீப்பின் அம்மா வரவில்லை. "மகனே, இதிலே வரலேன்னா மூணு மணி பஸ்ஸிலே வருவாடா!"

"அப்பா! மூணு மணி வண்டி வருது."

வரவில்லை அவள்.

வண்டிபோனதும் அப்பனும், மகனும் முற்றத்தில் உட்கார்ந்து அழலானார்கள். பிரதீப் குமாருக்கு அழுது அழுது விக்கல் வந்தது.

மேல்பல்லும் கீழ்ப்பல்லும் சேர்ந்துகிட்டிப் போயிற்று. இதைக் கண்டு உஜாகிருக்கு சுயநினைவு வந்தது. அவன் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு, மகனைச் சமாதானப் படுத்தினான்–"கண்ணு! ராத்திரி வண்டிலே கண்டிப்பா வந்திடுவாடா. உனக்கு பிஸ்கட்டு கொண்டு வருவா– அப்புறம் விளையாட்டு சாமான்!"

பிரதீப்குமாரின் அம்மா இரவு வண்டியில் வந்துவிட்டாள்.

"வந்துடிச்சி! அம்மா வந்துடிச்சு!"

பிரதீப்குமார் உரக்க அழுதான்– உஜாகிரும் அழுதான்–"எங்கே போயிட்டே நீ. பிரதீப்பின் அம்மாவே–ஆ– ஆ–?"

"அய்யே! என்ன ஆச்சு இப்ப உங்க ரெண்டு பேருக்கும்?"

"எங்கே போனே? எந்த வண்டியிலே போனே?"

"வேலையாப் போயிருந்தேன், பூர்ணியாவுக்கு– வண்டிலே போகலே, டிரக்கிலே போனேன்!"

"சொல்லிட்டுப் போகலாமில்லே?"

"வேலை முடியறதுக்கு முன்னாலே விசயம் சொல்லக்கூடாது."

பிரதீப்குமாருக்கு விளையாட்டுப் பொம்மையைப் பார்த்து ஒரே மகிழ்ச்சி. அவனுடைய அம்மா பையிலிருந்து பிஸ்கட் டப்பாவை வெளியே எடுத்தாள். உஜாகிர் பேசாமல், கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் –எத்தனை மாசத்துக்குப் பிறகு பிரதீப்பின் அம்மா பட்டுச்சேலை கட்டியிருக்கிறாள்– அவள் அழகு கொஞ்சங்கூட மங்கவில்லை. கிராமத்து அழகு வருசம் போய் வருசம் வர்றதுக்குள்ளே தேஞ்சு போவும்னு எவன் சொன்னது?

இப்போது பிரதீப்பின் அம்மா முந்தானை முடிச்சைத் திறந்து ஒரு காகிதத்தைப் பிரித்துக் காட்டினாள்–"என்னன்னு சொல்லுங்க."

உஜாகிர் லாந்தர் வெளிச்சத்தில் கடுதாசியை திருப்பித் திருப்பிப் பார்த்தான். "இது என்னமோ, ஆண்டவனுக்குத்தான் தெரியும்! நீதான் சொல்லேன், என்னான்னு! பார்த்தா கவர்மென்டு கடுதாசிபோல இருக்குது."

பிரதீப்குமாரின் அம்மா சிரித்தாள், "சரியா கண்டுபிடிச்சுட்டீங்க. கவர்மென்டு கடுதாசிதான்– பெர்மிட்டு!"

"பெர்மிட்டா? என்ன பெர்மிட்டு?"

"சிமென்டு, கரி, இரும்புக் கம்பி இதெல்லாம் வாங்க."

"இதை வெச்சுக்கிட்டு என்ன செய்வே?"

"கிராமத்துக்காரங்களை இன்னும் நல்லா வயித்தெரிச்சல் படவைப்பேன்" பிரதீப்பின் அம்மா கூறினாள்.

"அப்படீன்னா? ஓகோ! புரிஞ்சுது. பக்கா வீடு கட்ட, இல்லே? மெய்யாத்தான் சொல்றேன், பிரதீப்குமார் அம்மா, புண்ணியவதிதான். நீ முதல்லேயே எங்கிட்ட சொல்லாததும் நல்லதுதான். இத்தினி பெரிய விசயம் என் வயித்திலே செரிக்காது. எனக்குப் பைத்தியம் பிடிச்சுடும்

போல இருக்கு; அவ்வளவு சந்தோசம் வருது, நிசம்மாத்தான்-நீ லெட்சுமி-மகாலெட்சுமி!"

"நான் என்ன செஞ்சுட்டேன்? எல்லாம் அந்த சிவப்பு பஸ் டிரைவர் புண்ணியம். பெரிய அதிகாரியின் சொந்த கிளார்க் அய்யா அவருக்கு ரொம்ப வேண்டப்பட்டவரு... இன்னொரு விசயம் தெரியுமா..? இந்த பெர்மிட்டு இருந்தா வீடு கட்டறதுக்கு வேண்டிய பணத்திலே பாதி கிடைச்சிடும்."

"அதெப்படி?"

"பார்த்துக்கிட்டே இருங்க, அந்த லாலா மகன் வரட்டும்."

"மெய்யாகவா? கூரையைப் பிச்சிட்டு அல்ல கொடுக்குது தெய்வம்! நாளைக்கு சங்தோசீ சிங் வரட்டும், போணியாவறதுக்கு முன்னாலேயே அஞ்சு கிளாஸ் டீ கொடுப்பேன் அவருக்கு- அப்ப உன்னை என்ன சொல்லிக் கூப்பிடணும் பிரதீப்பின் அம்மா?"

"பட்டுப் பொண்ணு."

"ஹி ஹி ஹீ-"

உஜாகிரின் வீட்டின் அஸ்திவாரம் இடப்பட்டது. ஒரு மூங்கில்மீது துணியினால் பொம்மை செய்து வைத்தார்கள்-கண் திருஷ்டிபடாமல் இருக்க. கிராமத்து ஜனங்கள் மனதுக்குள்ளேயே பொறாமைப்பட்டுப் புழுங்கினார்கள்.

ஆனால் இப்போதெல்லாம் உஜாகிர் மனதில் பழைய உற்சாகம் இல்லை. மனதிற்குள் அப்படியொரு குமைச்சல், எரிச்சல். என்ன காரணம் என்று தெரியவில்லை. பெர்மிட்டை லாலா மகனிடம் கொடுத்து செங்கல், சிமெண்டு, இரும்பு எல்லாம் வாங்கியாயிற்று. பெர்மிட்டைக் கையில் வாங்கும்போது லாலா மகன் பிரதீப்பின் அம்மா கையைக் கிள்ளினான். அது அவ்வளவு பெரிய விஷயம் இல்லை. இன்ஸ்பெக்டர் சாராய போதையில் அவளை 'பெண் புறா' என்று கூப்பிட்டார். கவர்மெண்டு ஆளு. அவர் ஏழு கொலை செய் தாலும் குற்றமாகாது. சிவப்பு பஸ் டிரைவர் ஹோலிப் பண்டிகையின் போது கன்னத்தில் கலர்ப் பொடியை அப்பினாரு. ஹோலியில் இதெல்லாம் சகஜம். அப்புறம் டிரைவரும் நல்ல மனிதர்தான். ஆனால்-

கெட்டிலில் கொதித்துக் கொண்டிருந்த தண்ணீர் கெட்டில் மூக்கு வழியாகக் கீழே சிந்த ஆரம்பித்தது. பிரதீப்பின் அம்மா கடிந்து கொண்டாள், "பாருங்க, பாருங்க! இப்ப எல்லாம் உங்க கவனம் எங்கே போறது?-சுய நினைவிலேதான் இருக்கீங்களா..?"

"நல்லா நினைவோடுதான் இருக்கேன்." உஜாகிர் பதில் சொன்னான்.

அவன் கெட்டிலை இறக்கினான். 'வீடு கட்டறானே, அந்த மூஞ்சூறு மூஞ்சி மேஸ்திரி ஒண்ணும் சொல்லாமெ, முற்றத்துக்குள்ளே எங்கே போகிறான்? உள்ளே போறதுக்கு முன்னாலே பிரதீப்பின்

அம்மாவைப் பார்த்து ஏன் கண்ணைச் சிமிட்டினான்? பிரதீப் அம்மா என்னத்துக்குச் சிரிச்சுது? எழுந்து உள்ளே எதுக்குப் போச்சு?'

உஜாகிரின் உள்ளம் புகைந்தது.

"பாபு! மகனே பிரதீப்குமார்!" அவன் குரல் கொடுத்தான்.

பிரதீப்குமார் வந்தான். அவன் முகமும் சிவந்திருந்தது. உஜாகிர் மெல்லக் கேட்டான், 'பாபு! அம்மா எங்கே கண்ணு, என்ன செய்யறா?"

"அப்பா! மேஸ்திரி ரொம்ப கெட்ட ஆளுப்பா! என்னை பதாஸ¬ன்னு கூப்பிடறாரு."

உஜாகிரின் முகம் கோபத்தால் சிவந்தது. அந்த மூஞ்சூறு மூஞ்சிக்கு இத்தனை திமிரா? என் மகன் பிரதீப் குமாரை பதாஸூன்னு கூப்பிட அவன் யாரு?

அவன் எழுந்து வாயிற்படியருகே வந்து நின்றான். முற்றத்துக் குள்ளே என்ன பிரைவேட் சமாசாரம் பேசறாங்க? அந்த மேஸ்திரிப் பய தொடையிலிருந்து துணியை நீக்கிட்டு ஏன் உட்கார்ந்திருக்கிறான்?

உஜாகிருக்கு தன் தலையிலேயே அடுப்பு எரிகிற மாதிரி தகித்தது. முற்றத்தில் வந்து அவன் கர்ச்சித்தான், "என்ன மேஸ்திரி! சுவர் பூச்சுன்னியே, இதுதான் அந்தப் பூச்சா?"

மேஸ்திரி தட்டுக்கெட்டு எழுந்தான். சிரித்துக் கொண்டிருந்த பிரதீப்பின் அம்மாவும் திடுக்கிட்டாள். உஜாகிர் கதவை 'டப்'பென்று அடைத்தான்.

பிரதீப்குமாரின் அம்மா உஜாகிரின் கண்களைப் பார்த்துப் பயந்துவிட்டாள். உஜாகிர் உதடுகளைப் பற்களினால் கடித்தவாறு அவளருகே சென்றான், "நாய்! வெட்கம் கெட்ட நாய்!" என்று கத்தினான்.

பிரதீப்குமாரின் அம்மாவும் உரக்கக் கத்தினாள், "என்ன ஆயிடுச்சி உங்களுக்கு?"

உஜாகிர் பேசாமல் அறையின் உள்ளே சென்றான். வெளியே கடையில் அடுப்புகள் எரிந்து கொண்டிருந்தன.

வண்டிகள் வந்தன. டிரைவர்கள் ஹார்ன் அடித்துக் கூப்பிட்டார்கள். சந்தோகீ சிங்கும் வெளியே இருந்து குரல் கொடுத்தார். முற்றத்திலிருந்து பதிலே வரவில்லை. "பக்கா வீடு கட்டறாரு இல்லே? எப்படிப்பா உட்காருவாரு கடையிலே இனிமேலே?"

வண்டிகள் வந்தன, நின்றன, ஹார்ன் அடித்தன, பிறகு போய் விட்டன.

பகல் முழுதும் உஜாகிர் வீட்டிலிருந்து வெளியே வரவில்லை. பிரதீப் குமாரும் மூச்சை அடக்கிக் கொண்டு அப்பா பக்கத்திலேயே முடங்கிக் கிடந்தான். பிரதீப்பின் அம்மா தாழ்வாரத்தில் உட்கார்ந்து மெல்லிய குரலில் அழுது கொண்டிருந்தாள்.

மாலை நேரம் ஆயிற்று. உஜாகிர் எழுந்தான். பிரதீப்பின் அம்மா

அருகே சென்று கத்தினான்-"அந்த மூஞ்சுறு மூஞ்சி மேஸ்திரியிடமே போகிறதுதானே, மூதேவி! என் வீட்டிலிருந்து இறங்கு!"

பிரதீப்பின் அம்மா சொன்னாள், "இத்தினி ரோசம் இருந்தா நாளையிலிருந்து வேலைக்காரங்களை நீங்களே பார்த்துக்கிடுங்க. பக்கா வீடுகட்டறது என்ன விளையாட்டா?"

"உடைப்பிலே போடு உன் பக்கா வீட்டை!"

"கடையிலே எல்லார் முன்னாலேயும்-"

"தீயை வை உன் கடையிலே."

உஜாகிர் வெளியே போய் ஓங்கி உதைத்து இரண்டு அடுப்பு களையும் நொறுக்கினான். வாயிற்கதவை அடைத்து விட்டு அவளைப் பார்த்துக் கத்தினான். "போயிடு பேசாமெ, கொல்லைப் பக்கம் வழியா. இல்லேன்னா இன்னிக்கு கொலை பண்ணிடுவேன்."

பிரதீப்குமார் அழலானான். உஜாகிர் அவனை எடுத்துக் கொண்டு அறைக்குள் புகுந்து கொண்டான். பிரதீப்பின் அம்மா தாழ்வாரத்திலேயே உட்கார்ந்து கிடந்தாள். பிரதீப்குமார் அழுது கொண்டே உறங்கி விட்டான்.

அந்தி மயங்கியது. இரவும் வந்தது. ரோட்டில் ஒரு டிராக்டர் கடகடவென்று பெருத்த ஓசையுடன் ஓடி மறைந்தது. உஜாகிர் வெளியே வந்து பார்த்தான். உஜாகிரின் அம்மா தாழ்வாரத்திலேயே படுத்துக் கிடந்தாள்.

உஜாகிர் ஓசைப்படாமல் அவளருகே சென்றான்-"போயி மேஸ்திரி கட்டில்லே படுக்கறதுதானே! பாசாங்கு பண்ணிட்டு இங்கே தரையிலே ஏன் விழுந்து கிடக்கே?"

உஜாகிர் அவளைத் தள்ளினான், "எழுந்திரு மூதேவி! இந்த மாய்மாலமெல்லாம் வேறெங்காவது போய்க்காட்டு."

பிரதீப்பின் அம்மா எழுந்து உட்கார்ந்தாள். இரண்டு கைகளாலும் உஜாகிரின் கால்களைப் பிடித்தவாறு சொன்னாள், "பிரதீப்பின் அப்பா! உங்க காலிலே விழறேன். என் கழுத்தை நெரிச்சு கொன்னு போடுங்க- கொன்னுடுங்க என்னை!"

உஜாகிர் இரண்டு கைகளினாலும் அவளுடைய கழுத்தைப் பிடித்தான். நீண்ட தலைமுடி குலைந்து பறந்தது. "ஆமாம், கொலை தான் பண்ணப் போறேன்" அவன் ஆக்ரோஷத்துடன் கத்தினான்.

"கொன்னு போடுங்க. எனக்கு வாழ வேண்டாம்."

"கொன்னுடுவேன், கொரவளையை நெரிச்சு, மூதேவி!"

"கொல்லுங்க. பிரதீப்பின் அப்-ஆ-அக்"

"சொல்லு, நாளையிலிருந்து முற்றத்துக்கு வெளியே காலெடுத்து வெப்பியா?"

"மாட்டேன்."

"யார்கிட்டேயும் சிரிச்சுப் பேசமாட்டியே, சொல்லு!"

"மாட்டேன்"

"மேஸ்திரிகிட்டே?"

"ஊஹூம், மாட்டேன்"

"இன்ஸ்பெக்டர்கிட்டே?"

"மாட்டேன்."

"அந்த லாலா மகன்கிட்டே?"

"- இல்லை, மாட்டேன்."

"சிவப்பு வண்டி டிரைவர்கிட்டே?"

"- மாட்டேன், மாட்டேன், மாட்டேன்! பிரதீப்பின் அப்பாவே- ஆ- ஆ-!"

பிரதீப்குமாரின் அம்மா உஜாகிரின் மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டு விசும்பினாள். கல்யாணத்துக்குப் பிறகு முதல் தடவையாக தன் கணவனுடன்-தன் புருசனுடன்- முதலிரவு கொண்டாடுவதாக அவள் உணர்ந்தாள்- அங்கமெல்லாம் சிலிர்ப்பு- அலை அலையாக- புயல் காற்றுப் போல- பிரதீப்பின் அப்பாவே! என்னைக் கொன்னு- போடுங்க!!

சாலைவழியாக ஒரு டிரக் வெகு வேகமாகப் பாய்ந்து மறைந்தது.

(1962)

# செய்தித் தூதுவன்

ஹர்கோவிந்துக்கு ஒரே வியப்பாக இருந்தது. இன்றும் கூட செய்தித் தூதுவனின் சேவை தேவைப்படுகிறதா என்று நினைத்து அவன் வியந்தான். கிராமந்தோறும் அஞ்சலகங்கள் வந்துவிட்ட இந்தக் காலத்திலும் ஏன் தூதுவன் மூலம் செய்தி அனுப்ப வேண்டும்? வீட்டில் அமர்ந்தவாறே பிற நாடுகளுடன் தொடர்பு கொள்ளலாம்; நலன் விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம். அப்படி இருக்கையில் என்னை யாராவது கூப்பிடுவார்களா, செய்தி கொண்டு போவதற்காக?

ஹர்கோவிந்த் அப்பெரிய ஹவேலியின் (மாளிகையின்) சிதில மடைந்த வெளி வாசலைக் கடந்து உள்ளே நடந்தான். வழக்கம்போல சுற்றுச் சூழலை முகர்ந்து செய்தியின் தன்மை எப்படி இருக்கும் என்று யூகிக்க முயன்றான்– ஏதோ இரகசியச் செய்திதான். சந்தேகமே இல்லை. சூரிய சந்திரர்களுக்குக்கூடத் தெரியக்கூடாது– ஊர்வன-பறப்பன வற்றுக்குக் கூடத் தெரியலாகாது.

"கும்புடறேன் பெரிய அண்ணி!"

பெரிய மாளிகையின் 'படீ பஹுரியா' (மூத்த நாட்டுப்பெண்) ஹர்கோவிந்துக்கு மரப்பலகை அளித்து சற்றுநேரம் அமைதியாக உட்காரும்படி கண்களால் சமிக்ஞை செய்தாள். பெரிய மாளிகை இன்று பெயரளவுக்குதான் பெரிய மாளிகை. ஆட்களும் அதிகாரமு மாக வாழ்ந்த மாளிகை இது. சிப்பந்திகள், பணிப்பெண்கள், எடுபிடி ஆட்கள், வருவோர்-போவோர் என்று எப்பொழுது பார்த்தாலும் ஜே ஜே என்று இருந்த அந்த மாளிகையில் இன்று ஒண்டியாக மூத்த நாட்டுப்பெண் முறத்தில் தானியம் எடுத்துப் புடைத்துக் கொண் டிருக்கிறாள். இந்தக் கைகளுக்கு மருதாணி அரைத்து இட்டே ஒரு குடும்பம் வயிறு பிழைத்துக் கொண்டிருந்தது. அதுவும் ஒரு காலம்! எங்கே போய் மலையேறின அந்த நாட்கள்? ஹர்கோவிந்த் பெருமூச்சு விட்டான்.

பெரியண்ணா காலமானதும் ஆட்டம் முடிந்து களைகட்டி விட்டது. மூன்று சகோதரர்களும் தங்களுக்குள் சண்டையிடத் தொடங்கினர். ஜமீனுக்குச் சொந்தமான நிலங்களை விவசாயிகள் ஆக்கிரமித்துக் கையடக்கிக் கொண்ட பிறகு மூன்று சகோதரர்களும் கிராமத்தைவிட்டு பட்டணத்தைப் பார்க்கப் போய்விட்டனர். மூத்த

மருமகள்-பெரிய அண்ணி-எங்கே போவாள் பாவம்! ஆண்டவன் நல்லவர்களுக்குத்தான் மேலும் மேலும் சோதனை அளிக்கிறான். அப்படி இல்லையென்றால், பெரியண்ணா ஒரே மணி நேர நோயில் ஏன் கண்ணை மூட வேண்டும்? பெரிய அண்ணியின் உடம்பிலிருந்து நகை நட்டுகளை ஒவ்வொன்றாக இழுத்து உருவி பாகப்பிரிவினை என்ற அந்த லீலை நடந்தது. பாஞ்சாலியின் துகில் உரித்த லீலையை ஹர்கோவிந்த் சொந்தக் கண்களாலேயே பார்த்திருக்கிறான். பனாரசி பட்டுப் புடவையை மூன்றாகக் கிழித்து பாகம் பிரித்துக் கொண்டனர் இவர்கள். பாவம் பெரிய அண்ணி!

கிராமத்துக் கடைக்காரக் கிழவி முற்றத்தில் உட்கார்ந்து முணு முணுத்துக் கொண்டிருந்தாள், "கடன் வாங்கிச் சாப்பிடும்போது இனிப்பாக இருக்கும்- பணம் தரும்போது மட்டும் கசக்குமாக்கும். நான் இன்னைக்கிப் பணம் வாங்காமெ இந்த இடத்திலிருந்து எழுந் திரிக்க மாட்டேன், ஆமாம்."

பெரிய அண்ணி பதிலே பேசவில்லை.

ஹர்கோவிந்த் மீண்டும் பெருமூச்செறிந்தான். இந்தக் கடைக்காரக் கிழவி எழுந்துபோகும் வரையில் பெரிய அண்ணி அவனிடம் சேதி எதுவும் சொல்லமாட்டாள். அவனுக்குப் பொறுக்கவில்லை, "கடைக் காரப் பெரியம்மா! நிலுவை பாக்கியெல்லாம் வசூல் பணற இந்த பட்டாணிக்காரச் சட்டத்தை நீ நல்லா கத்துக்கிட்டே!" என்றான்.

'பட்டாணிக்காரன் சட்டம்' என்ற வார்த்தையைக் கேட்டதுமே கடைக்காரக் கிழவிக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. அவள் சிலிர்த்துக்கொண்டு எழுந்தாள், "மூடு வாயை, உன் வாயிலே தீயை வைக்க! மீசை தாடியில்லாதவனே-!"

"என்ன செய்ய பெரியம்மா! ஆண்டவன் எனக்கு மீசை தாடியே தரலே. பட்டாணிக்காரன் மாதிரி ஆட்டுத்தாடி கூடத் தரலே-"

"இன்னொரு தடவை பட்டாணிக்காரன் பெயரைச் சொன்னா, உன் நாக்கைப் பிடிச்சு உருவிடுவேன்."

ஹர்கோவிந்த் தன்னுடைய நாக்கை கிழவியின் முன் நீட்டினான். 'இப்பவே உருவிக்க' என்று சொல்லாமல் சொன்னான் அவன்.

ஐந்து வருஷங்களுக்கு முன்னால் குல் முகமது ஆகா கடனுக்குத் துணிகள் கொடுக்க கிராமத்துக்கு வந்தான். கிழவி வீட்டுச் சாய்ப்பில் கடைவிரித்து உட்கார்ந்தான். 'ஆகா'-அதுதான் அவன் பெயர்-துணி விற்கும்போது தேனொழுகப் பேசுவான்.

பிறகு பணம் வசூலிக்கும்போது ஒரே கடுகடுப்பாக இருப்பான். ஒட்டிக்கு இரட்டி கறந்து விடுவான். கடன் வாங்கினவர்கள் எல்லாருமாகச் சேர்ந்து கொண்டு ஒரு தடவை 'ஆகா'வை நையப் புடைத்து விட்டார்கள். அப்போதிருந்து அவன் கிராமத்துப் பக்கமே வருவதில்லை. அதற்குப் பிறகு கடைக்காரக் கிழவி 'ஆகா' பெயரை

எடுத்தாலே கோபக்காரக் கிழவி ஆகி விட்டாள். பட்டாணிக்காரன் என்ன, பட்டாணிக் கடலை என்ற பெயர் கேட்டால் கூட மூக்கு மேலே கோபம் வந்துவிடும். கிராமத்தில் தெருக்கூத்து நாடகமாடிப் பிழைப்பவர்கள் பட்டாணிக்காரன் வேஷம் போட்டு ஆடினார்கள், "எங்க ஊரு மேலே வருவியா நீ யாவாரிக் கிளவி? பாதாம்-பிஸ்தா-தாரேன் நானே யாவாரிக் கிளவி.!"

கடைக்காரக் கிழவி முணுமுணுத்துக் கொண்டும், வைது நொறுக்கிக் கொண்டும் எழுந்து போன பிறகு, பெரிய அண்ணி ஹர்கோவிந்திடம் சொன்னாள், "ஹர்கோவிந்த், ஒரு சேதி கொண்டு போகணும், இன்னிக்கே கொண்டு போவே இல்லே?"

"எங்கே?"

"என் அம்மாகிட்டே."

ஹர்கோவிந்த் பெரிய அண்ணியின் குளமாகிக் கிடந்த கண்களைப் பார்த்து அதிலேயே மூழ்கி விட்டான், "என்ன சேதி, சொல்லுங்க" என்றான்.

சேதி சொல்லுகையில் பெரிய அண்ணி விசும்பினாள். ஹர் கோவிந்தனின் கண்களும் நனைத்தன. இந்தப் பெரிய மாளிகையின் லட்சுமி விசும்புவதை அவன் முதன்முறையாகக் காண்கிறான். "பெரிய அண்ணி, மனசைக் கெட்டியா வெச்சுக்குங்க" என்றான் அவன்.

"இன்னும் எவ்வளவு கெட்டியா வெச்சுக்கணும் மனசை.? அம்மாகிட்டே சொல்லு, நான் அங்க வந்து அண்ணன்-அண்ணி மாருக்கெல்லாம் ஊழியம் செஞ்சு வயித்தைக் கழுவிக் கறேன். குழந்தைங்க சாப்பிட்ட மிச்சம் மீதியைத் தின்னுக்கிட்டு ஒரு ஓரத்திலே விழுந்து கெடக்கிறேன். ஆனா, இனிமே. இங்கே ஒரு கணம் கூட இருக்க மாட்டேன். இருக்க முடியாது. அப்புறம் சொல்லு, அம்மா இங்கேயிருந்து என்னை அழைச்சிக்காட்டி, கழுத்திலே தவலையைக் கட்டிக்கிட்டு குளத்திலே விழுந்து செத்துப் போயிடுவேன். பசலைக் கீரையைத் தின்னு எத்தினி நாள் வாழணும்? எதுக்காக. எதுக்காக?"

ஹர்கோவிந்தின் ஒவ்வொரு மயிர்க்காலும் வேதனையினால் துடித்தது. மைத்துனர்களுக்கும், ஓரகத்திகளுக்கும் கல்மனதுதான். ஈவு இரக்கமே இல்லாத நெஞ்சங்கள். மார்கழி-தையிலே சரியாக அறுவடை நேரம் பார்த்து பட்டணத்திலேயிருந்து வந்து விடுவார்கள் பெண்டு-பிள்ளைகளுடன். பத்துப் பதினைந்து நாள் டேரா போடுவார்கள். ஊரில ஏற்பட்ட கடனெல்லாம் பெரிய அண்ணி தலையில் வந்து விடியும். திரும்பிப் போகும்போது தலைக்கு இரண்டு மணங்கு அரிசியும் அவலும் கொண்டு போவார்கள். பச்சையோ, பழுத்ததோ அத்தனை மாங்காய்களையும் கோணிப்பையில் பறித்துக் கொண்டு நடையைக் கட்டுவார்கள். பிறகு அடுத்த வருஷம்வரை திரும்பிப்

பார்ப்பதே கிடையாது- ராட்சதர்கள்!

பெரிய அண்ணி முந்தானை முடிச்சை அவிழ்த்து ஒரு பழைய ஐந்து ரூபாய் நோட்டை எடுத்தாள், "வழிச் செலவுக்குக் கூடக் காணாது இது. திரும்பி வருவதற்குப் பணம் அம்மாவிடம் கேட்டு வாங்கிக்கொள். தெரிந்ததா? அண்ணாவும் உன் கூடவே வருவார் அப்படீன்னு நினைக்கிறேன்," என்றாள்.

"பெரிய அண்ணி, வழிச்செலவுக்குப் பணம் எதுவும் வேண்டாம். நான் ஏற்பாடு செய்துக்குறேன்." ஹர்கோவிந்த் உறுதியாகக் கூறினான்.

"நீ எங்கிருந்து ஏற்பாடு செய்யப் போறே?"

"நான் இதோ பத்து மணி வண்டிக்கே கிளம்பறேன்."

பெரிய அண்ணி நோட்டைக் கையில் வைத்துக் கொண்டு மௌனமாக ஹர்கோவிந்தைப் பார்த்தாள். வெறிச்சோடிய பார்வை. ஹர்கோவிந்த் மாளிகையிலிருந்து வெளியே வந்தான். "உன்னை எதிர்பார்த்துக் கொண்டு இங்கேயே உட்கார்ந்திருப்பேன்" அண்ணியின் வார்த்தை அவன் காதில் விழுந்தது.

'சம்வதியா–!' அதாவது செய்தி கொண்டு செல்பவன்.

ஹர்கோவிந்த் செய்தித் தூதுவன்–! செய்தி கொண்டுபோகும் வேலையை யாரும் செய்துவிட முடியாது. உண்மையில் மனிதனே செய்தித் தூதுவன்தான். ஆண்டவனுடைய இல்லத்திலிருந்து செய்தி கொணர்ந்த தூதுவன்! செய்தி கூறுவது என்பது இலேசான வேலையல்ல. செய்தியின் ஒவ்வொரு வாசகத்தையும், சொல்லையும் அப்படியே நினைவில் இருத்த வேண்டும். சொல்லும்போது ஒவ்வொரு வார்த்தையிலும் பொருளுக்கேற்ப எப்படி ஏற்ற இறக்கங்கள் வந்ததோ, அதையெல்லாம் அப்படியே எடுத்துக் கூற வேண்டும். வேதனை, ஆதங்கம், மகிழ்ச்சி, உல்லாசம் எல்லாம் அதேபோல் தொனிக்க வேண்டும். வேலை செய்ய வக்கற்றவன், உழைப்புக்கு அஞ்சிய சோம்பேறி, போக்கற்ற வயிற்றுப் பண்டாரம், இவர்கள்தான் செய்தித் தூதுவர் வேலைக்குப் போவார்கள் என்ற தவறான நினைப்பு மக்களிடையே நிலவியுள்ளது. சில சமயம் செய்தி கொண்டுபோக காசும் கிடைக்காது. இப்படியொரு வேலையை ஏற்றுக்கொண்டு செய்பவர்களைப் பின்னே என்ன சொல்வது–? பெண்களுக்கு அடிமை எனலாமா? சற்றே இனிமையாகப் பேசினால் மயங்கிவிடும் இந்த மாதிரி ஆண்கள் எதிலே சேர்த்தி? யார் என்ன சொன்னாலும் சரி, இந்த கிராமத்தில் ஹர்கோவிந்த் மூலம் செய்தியனுப்பாத வீடே கிடையாது. அத்தனை வீட்டு மாதரசிகளுக்கும், பெண்-நாட்டுப் பெண்களுக்கும் அவன் தொண்டு செய்திருக்கிறான்– ஆனால் இதுபோல ஒரு சேதியை இதற்கு முன் ஒரு போதும் கொண்டுபோனதே இல்லை.

ரெயிலில் ஏறி அமர்ந்ததுமே ஹர்கோவிந்த் மனதில் பழைய நாட்களும், செய்திகளும் திரைப்படம்போல ஓடின. துயரம் நிறைந்த ஒரு பாட்டின் முதலடி வெகுநாளைக்குப் பிறகு இன்று நினைவுக்கு வந்தது.

"சேதி கொண்டு செல்லாயோ சம்வதியா
சேதி கொண்டு செல்லாயோ!
காலிலே விழுந்து கேட்கிறேன் சம்வதியா
சேதி கொண்டு செல்லாயோ–"

பெரிய அண்ணி சொன்ன செய்தியின் ஒவ்வொரு வார்த்தையும் அவன் மனதை முள்ளைப் போல துளைத்து எடுத்தது. யாரை நம்பிக்கிட்டு நான் இருப்பது? ஒரே ஒரு வேலையாள் இருந்தான். அவனும் நேற்று ஓடிப் போயிட்டான். தொழுவத்திலே நிக்குற மாடு பசியாலே கத்துது. நான் யாருக்காக இந்தத் துன்பத்தையெல்லாம் தாங்கிக்கணும்?

ஹர்கோவிந்த் தன் பக்கத்தில் அமர்ந்திருந்த ஒரு பயணியிடம், "ஏன் அண்ணாச்சி, ரெயில் வண்டி தானாபிஹபுரில் நிக்குமா?" என்று கேட்டான்.

அதற்கு அந்தப் பயணி, "எல்லா வண்டிகளும்தான் தானா பிஹபுரில் நிக்கும்" என்றான் அலுத்துக் கொண்டே.

இந்த மனுசன் ஒரு சிடுமூஞ்சி. இவனிடம் பேச்சுக் கொடுக்கப் படாது என்று ஹர்கோவிந்த் எண்ணிக் கொண்டான். பிறகு அவன் பெரிய அண்ணி சொல்லியனுப்பிய செய்தியை மனதிற்குள்ளே உருப்போடலானான்– ஆனால், இந்தச் செய்தியைச் சொல்லும்போது தன்னால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வது சாத்தியமா? செய்தி சொல்லும்போது பெரிய அண்ணி அழுத இடத்தில் எல்லாம் அவனும் அழுவானே!

கடிஹார் ஜங்ஷன் வந்தது. பத்துப் பதினைந்து வருடங்களில் எல்லாமே மாறிவிட்டதை அவன் உணர்ந்தான். ஸ்டேஷனில் இறங்கினால் இப்போதெல்லாம் யாரிடமும் எதுவும் விசாரிக்க வேண்டிய அவசியமில்லை. வண்டி நின்ற உடனே ஒலிபெருக்கி மூலம் அறிவிப்பு செவியில் விழுகின்றது– "தானாபிஹபுர், ககடியா, பரோனி செல்லும் பயணிகள் மூன்றாவது எண் பிளாட்பாரத்துக்குச் செல்லவும். வண்டி தயாராக நிற்கிறது."

ஹர்கோவிந்த் மகிழ்ச்சியடைந்தான்–நிஜமாகவே சுயராஜ்யம் கிடைத்துவிட்டது என்பதை கடிஹார் வந்ததும் உணர முடிகிறது. முன்பெல்லாம் கடிஹார் வரும்போது எந்த வண்டியில் ஏறவேண்டும், எந்தப் பக்கமாகப் போகவேண்டும் என்று விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். இம்மாதிரி விசாரணைகளுக்கிடையில் எத்தனையோமுறை அவன் ரெயிலைத் தவறவிட்டிருக்கிறான்.

வண்டி மாற்றியபிறகு மீண்டும் பெரிய அண்ணியின் பரிதாப முகம் அவன் கண்முன்னே வந்து நின்றது–"ஹர்கோவிந்த் அண்ணே, அம்மாகிட்டெ சொல்லு, ஆண்டவன் பாராமுகமாயிட்டார். ஆனா, நீதான் இருக்கியே அம்மா– எதுக்காக நான் பசலைக் கீரையைத் தின்னுக்கிட்டு வாழணும்? சொல்லு."

தானாபிஹபுர் ஸ்டேஷனில் வண்டியிலிருந்து இறங்குகையில் ஹர்கோவிந்தின் நெஞ்சு ஒரேயடியாகக் கனத்தது.

இதற்கு முன்பும் பலமுறை நல்லதும், கெட்டதுமான செய்திகளை எடுத்துக்கொண்டு அவன் இந்தக் கிராமத்துக்கு வந்திருக்கிறான். அப்போதெல்லாம் நெஞ்சு இந்த மாதிரி கனக்கவில்லை. அவனுடைய கால்களும் கிராமத்துக்குள் போக மறுத்தன. இந்த ஒற்றையடிப்பாதை வழியாக பெரிய அண்ணி பிறந்த வீட்டுக்குத் திரும்புவாள். அவள் நம் கிராமத்தை விட்டுப் போய்விடுவாள். பிறகு ஊருக்கு வரவே மாட்டாள்!

ஹர்கோவிந்தின் மனம் சொல்லொணா வேதனையினால் துடித்தது. அண்ணி ஊரைவிட்டுப் போனப்புறம் அந்தக் கிராமத்திலே என்னதான் வெச்சிருக்கும்? கிராமத்தின் லட்சுமியே அல்லவா கிராமத்தை விட்டுப் போகப் போகிறாள்– கேட்பவர்கள் ஹர் கோவிந்தினுடைய கிராமத்தின் பெயரைச் சொல்லி 'தூ!' என்று துப்ப மாட்டார்களா? 'லெட்சுமி மாதிரி அண்ணி துன்பப் படணும்னா அது எப்படிப்பட்ட மோசமான கிராமம் அப்படீன்னு காறி உமிழ்வார்களே!'

மனமில்லாமலேயே ஹர்கோவிந்த் கிராமத்தில் அடியெடுத்து வைத்தான்.

ஹர்கோவிந்தைக் கண்டதுமே கிராமத்து ஜனங்கள் புரிந்து கொண்டார்கள்-ஜலால்கட் கிராமத்திலிருந்து 'சம்வதியா' அண்ணா– செய்தித் தூதுவன் வந்திருக்கிறார்– என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாரோ?

"வணக்கம் அண்ணே! எல்லாம் சௌக்கியம்தானே?"

"வணக்கம். அண்ணாச்சி, ஆண்டவன் புண்ணியத்திலே எல்லாரும் நலம்தான்."

"அங்கே மழை எப்படி?"

பெரிய அண்ணியின் அண்ணா மட்டும் ஹர்கோவிந்தை அடையாளம் புரிந்து கொள்ளவில்லை. ஹர்கோவிந்த் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டான். அப்போது, "தங்கச்சி எப்படி இருக்கு?" என்று சுருக்கமாகக் கேட்டார்.

"கடவுள் கிருபையிலே சௌக்கியமாக இருக்காங்க."

கை கால் கழுவிக் கொண்டபிறகு, ஹர்கோவிந்துக்கு உள்ளேயிருந்து அழைப்பு வந்தது. அவன் உள் முற்றத்துக்குச் சென்றான்.

அவன் மனது படபடவென்று அடித்துக் கொண்டது- இப்படி ஒரு போதும் நேர்த்ததில்லையே.! பெரிய அண்ணியின் கண்ணீர் மல்கும் கண்கள்! விசும்பல்களுக்கிடையே சொல்லியனுப்பிய சேதி! அவன் பெரிய அண்ணியின் அம்மாவுடைய கால்களைத் தொட்டு வணங்கினான்.

அம்மா கேட்டாள், "சொல்லு தம்பி- என்ன சேதி?"

"உங்க ஆசீர்வாதத்திலே எல்லாம் நல்லபடியா இருக்கு அம்மா."

"ஏதாவது சேதி உண்டா?"

"ஆங்-? சேதியா-? சேதி ஒண்ணும் இல்லே அம்மா. நான் நேத்து ஸிர்லியா கிராமத்துக்கு வந்தேன். திரும்பிப் போகையிலே உங்களையெல்லாம் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன். அவ்வளவுதான்."

ஹர்கோவிந்தின் இந்த வார்த்தைகளைக் கேட்டு வயதான தாயாரின் முகம் சற்றே வாடியது, "அப்ப, நீ சேதி எதுவும் கொண்டு வரவில்லை, அப்படித்தானே?"

"விசேஷமா சேதி எதுவும் இல்லே... பெரிய அண்ணி சொன்னாங்க- ஓய்வு கிடைச்சா நவராத்திரி சமயத்திலே வந்து உங்களைப் பார்த்துப் போவாங்களாம்." வயதான தாய் எதுவும் பேசவில்லை. ஹர்கோவிந்த் தொடர்ந்தான், "ஓய்வு எங்கே கிடைக்கப் போவுது! வீட்டுப் பொறுப்பெல்லாம் அண்ணிதானே கவனிக்கணும்."

தாயார் கூறினாள், "பிள்ளையாண்டான் கிட்டெ நேத்திக்குக் கூடச் சொல்லிட்டிருந்தேன், ஒரு நடை போயி தங்கச்சியை இங்கே அழைச்சிட்டு வந்திரு. இனிமே அங்கே என்ன வெச்சிருக்கு? நிலபுலன் எதுவும் இல்லை. மூணு கொழுந்தன்மாரும் பட்டணத்துக்குப் போயிட்டாங்க. யாரும் என்னன்னு கூட கேக்குறதில்லே. என் பெண் ஒண்டியா-"

"இல்லே அம்மா! வயல்-விதைப்பாட்டுக்கு இப்பவும் குறைச்சல் ஒண்ணும் இல்லே. இப்ப இருக்கிறதே போதும். நொடிச்சுப் போனது மலை போன்ற அந்த வீடுதான். முன்ன மாதிரி பண்ணையும், ஜமீனும் இல்லேங்கறது சரிதான். ஆனா, அண்ணிக்கு கிராமமே சொந்தக் குடும்பம் மாதிரி. எங்க கிராமத்து லெட்சுமியல்லவா பெரிய அண்ணி-! கிராமத்து லெட்சுமி கிராமத்தைவிட்டு பட்டணத்துக்கு எப்படிப் போவாங்க! கொழுந்தன்மார்கள் வரும்போதெல்லாம் வா வா அப்படீன்னு வருந்தியழைக்கிறாங்க."

கிழத்தாயார் தானே உள்ளே போய் ஹர்கோவிந்துக்குச் சிற்றுண்டி கொணர்ந்தாள். "முதல்லே கொஞ்சம் பலகாரம் சாப்பிடு மகனே!"

பலகாரத்தை உண்ணும்போது அவன் மனக்கண் முன்னால் கிராமத்தில் வாயிற்படியில் விழியை வைத்து தன் வருகையை எதிர்நோக்கும் பெரிய அண்ணியின் முகம் தெரிந்தது-பசி தாகத்துடன்

உட்கார்ந்திருக்கிறாள் பாவம்- இரவில் அவன் சாப்பிடும்போதுகூட அண்ணி எதிரிலேயே அமர்ந்திருப்பது போலத் தோன்றியது. அவள் சொல்கிறாள்- 'கடன் கிடைப்பது கூட இப்போது பஞ்சமாகிவிட்டது- நாயும் பிழைக்கும் இந்த மாதிரி பிழைப்பு! ஆனால் நான்-? அம்மா கிட்டே சொல்லு-!!'

ஹர்கோவிந்த் தட்டைப் பார்த்தான்-சோறு, பருப்பு, மூன்று விதமான கறிகாய் பதார்த்தம், நெய், அப்பளம், ஊறுகாய்- பெரிய அண்ணி பசலைக் கீரையைக் கொதிக்க வைத்துத் தின்றிருப்பாள்.

"ஏம்பபா, சாப்பிடவே இல்லே?" பெரிய அம்மா கேட்டாள்.

"பலகாரம்தான் வயிறு நிறைய தின்னுட்டேனே அம்மா!"

"அட, நீ ஒண்ணு. உன் வயசுக்காரங்க நாலு தரம் பலகாரம் தின்னாக்கூட ஒரு தட்டுச் சோறு சாப்பிடுவாங்களே."

ஹர்கோவிந்த் எதுவுமே சாப்பிடவில்லை. அவனுக்குச் சாப்பாடு இறங்கவில்லை.

செய்தித் தூதுவன் என்பவன் வயிறு முட்டச் சாப்பிடுவான், பிறகு கவலையில்லாமல் நீட்டி நிமிர்ந்து தூங்குவான். ஆனால் ஹர் கோவிந்துக்கு உறக்கம் வரவில்லை- என்ன காரியம் செய்து விட்டான் அவன்? என்ன சொல்ல வந்தான். ஆனால் என்ன சொன்னான்? பொய்சொன்னது எதற்கு-? இல்லை, இது தப்பு. காலையில் எழுந்ததுமே பெரிய அம்மாவிடம் சரியான சேதியைச் சொல்லிவிட வேண்டியது தான்-ஒரு எழுத்துக்கூட விடாமல். "அம்மா, உங்க அருமை மகள் ரொம்பக் கஷ்டத்திலே இருக்காங்க. இன்னிக்கே யாரையாவது அனுப்பி இங்கே கூட்டிட்டு வாங்க. இல்லேன்னே அவங்க எசவு கேடா ஏதாவது செய்திடப் போறாங்க. எதுக்காக அவங்க இதை யெல்லாம் பொறுத்துக்கிட்டு அங்கேஇருக்கணும்-? அண்ணி சொல்லி யனுப்பினாங்க, இங்கே அண்ணிமார் குழந்தைங்களோட மிச்சம் மீதியெச் சாப்பிட்டுக்கிட்டு ஒரு மூலையிலே கிடந்து கழியறேன்-!"

இரவு முழுதும் ஹர்கோவிந்துக்குத் தூக்கம் வரவில்லை.

அவன் கண் முன்னால் பெரிய அண்ணி அமர்ந்திருந்தாள்; விசும்பியவாறு, கண்ணீரைத் துடைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். காலையில் எழுந்ததும் அவன் தன்னுடைய மனதைக் கல்லாக்கிக் கொண்டான். அவன் செய்தி சொல்பவன். செய்தியை உள்ளபடி தெரிவிப்பதுதான் அவனுடைய பணி. அவன் பெரிய அண்ணி சொல்லியனுப்பிய செய்தியைக் கூற அம்மாவிடம் போய் அமர்ந்தான்.

'ஏம்ப்பா, ஏதாவது சொல்லப் போறியா?'

"அம்மா, இன்னிக்கு வண்டியிலே ஊர் திரும்பணும். ஊரை விட்டுக் கிளம்பி ரொம்ப நாளாச்சு."

"என்ன அவசரம்? ரெண்டு நாள் இருந்து சாப்பிட்டுப் போறது!"

"இல்லேம்மா, உத்தரவு கொடுங்க. நவராத்திரி சமயம் நானும்

அண்ணியோட வர்றேன். அப்ப பத்துப் பதினஞ்சு நாள் இருந்து நல்லா சாப்பிடறேன்."

அம்மா கேட்டாள், "இவ்வளவு அவசரமாப் போகணும்னா எதுக்குத்தான் வந்தே? மகளுக்கு அவலும், தயிரும் அனுப்பலாம்னு நெனச்சேன். இன்னிக்குத் தயிர் உறையாதே! கொஞ்சம் அவல் இருக்குது, எடுத்திட்டுப் போ."

அவல் பொட்டலத்தைக் கையில் எடுத்துக் கொண்டு ஹர்கோவிந்த் புறப்பட்டான். பெரிய அண்ணியின் அண்ணா கேட்டார், "ஏம்ப்பா, வழிச் செலவுக்குப் பணம் இருக்குதா?"

ஹர்கோவிந்த் பதில் கூறினான், "அய்யா, உங்க புண்ணியத்திலே எதுக்கும் குறைச்சல் இல்லே."

ரெயில் நிலையத்தை அடைந்ததும் ஹர்கோவிந்த் தன்னிடமிருந்த பைசாக்களை எண்ணிப் பார்த்தான். கடிஹார் வரையிலும் டிக்கட் வாங்கப் போதுமான காசே மிஞ்சியிருந்தது. கடிஹார் வரையிலும் டிக்கட் எடுப்பான். அதிலும் நாலணாத் துட்டு செல்லாது என்றால் சைமாப்பூர் வரையிலும்தான் போகலாம்- டிக்கட் இல்லாமல் அவன் மேலே ஒரு ஸ்டேஷன்கூடப் போகமாட்டான். பிடிபட்டால் என்ன ஆவது? நினைக்கும்போதே பயமாக இருந்தது.

வண்டியில் உட்கார்ந்ததும் அவன் மனம் மிகவும் சங்கடப் பட்டது. எதற்காக வந்தான்? என்ன காரியம் செய்துவிட்டுத் திரும்புகிறான்? பெரிய அண்ணிக்கு என்ன பதில் சொல்வான்?

வண்டியில் பக்திப் பாடல் பாடும் குருட்டு சந்நியாசி வந்திருக்க வில்லையானால் அவன் நிலைமை இன்னும் மோசமாகி இருக்கும். வைராக்கியம் தரும் அந்தப் பாடல்களைக் கேட்டு அவன் மனம் உறுதி பெற்றது, ஓரளவுக்கு.

"-ராமா ஓ ராமா!
பிறந்தமனை சொகம் இப்ப சொப்பனமாச்சே
புகுந்தமனை போகுதையே இந்தப் பல்லக்கு
கலங்காதே என் மனமே! ஓ ராமா!
இதுதான் விதியன்றோ பெண்கள் வாழ்க்கையில்
இதுதான் விதியன்றோ ஓ ராமா-!"

குருட்டு சந்நியாசி போனபிறகு அவனுடைய உள்ளத்திலே அமர்ந்திருந்த பெரிய அண்ணி மீண்டும் அழலானாள்-எதுக்காக நான் இத்தனை துன்பப்படணும்?

விடியற்காலை ஐந்து மணிக்கு அவன் கடிஹார் ஸ்டேஷனை அடைந்தான்.

ஒலி பெருக்கியில் அறிவிப்பு-'பைர் கத்தி, குஸியார், ஜலால்கட்

போகும் பயணிகள் முதல் நம்பர் பிளாட்பாரத்துக்குச் செல்லவும்.'

ஹர்கோவிந்த் ஜலால்கட் செல்ல வேண்டும். ஆனால் அவன் முதல் நம்பர் பிளாட்பாரத்துக்கு எப்படிப் போவான்? அவனிடம் கடிஹார் வரையிலும்தானே டிக்கட் இருக்கிறது-! ஜலால்கட்! இருபது காதம்-! பெரிய அண்ணி வழி பார்த்துக் கொண்டிருப்பாள்- இருபது காதம் ஒரு பெரிய தூரமா? அவன் நடந்தே போய்விடுவான்.

ஹர்கோவிந்த் ஆஞ்சநேயரின் பெயரை உச்சரித்துக்கொண்டே நடக்கலானான். பத்து காதம் நடக்கும் வரை அவன் காற்றைக் குடித்தான். பிறகு கஸ்பா-பட்டணம் வந்ததும் வயிறு முட்டத் தண்ணீரைக் குடித்தான். பொட்டலத்தின்மீது மூக்கை வைத்து முகர்ந்து பார்த்தான்-ஆகா! வாசம் மிகுந்த அருமையான அவல். அம்மா தன் பெண்ணுக்கு அனுப்பிய அவல் வேண்டாம், இதிலிருந்து அவனால் ஒரு பிடிகூடச் சாப்பிட முடியாது- அவல் இருக்கட்டும். அவன் அண்ணிக்கு என்ன பதில் சொல்லப் போகிறான்?

அவனுடைய கால்கள் தள்ளாடின- ஊஹூம், அதைப் பற்றி இப்ப யோசிக்கக்கூடாது. இப்ப நடக்கணும். அதையேதான் நினைக்கணும். சீக்கிரமா ஊர்போய்ச் சேரணும்...அண்ணியின் கண்ணீர் ததும்பும் கண்கள் அவனை கிராமத்துப் பக்கமாக இழுத்தன- 'வழி பார்த்துக் கொண்டிருப்பேன்-!'

பதினைந்து காதம் ஆயிற்று-! 'அம்மாவிடம் சொல்லு, இனிமேலே நான் இங்கே இருக்க முடியாது.' பதினாறு- பதினேழு- பதினெட்டு- ஜலால்கட் ஸ்டேஷன் ஸிக்னல் கண்ணுக்குத் தெரிந்துவிட்டது- கிராமத்தின் அந்த நெடிய பனைமரம் தன் மண்டையை உயர்த்தி அவனுடைய நடையைப் பார்வையிடுகிறது. அந்தப் பனைமரத்தின் கீழே பெரியமாளிகையின் முற்றத்தில் பேசாமல் உட்கார்ந்து வழி பார்த்துக் கொண்டிருக்கிறாள் பெரிய அண்ணி- பசியோடு, தாகத்தோடு.

'சேதி கொண்டு செல்லாயோ சம்வதியா-
சேதிகொண்டு செல்லாயோ!!'

ஆனால் ஹர்கோவிந்த் வழி தவறி எங்கு வந்து விட்டான்? இது எந்தக் கிராமம். இருட்டுகிற நேரமாச்சு அவ்வளவுதான்- ஆனா, ஏன் இப்படி கண்ணை இருட்டுகிறது அமாவாசை இரவுபோல? வழியே தெரியவில்லையே..? இது பாதையா அல்லது நதியா? அட, இங்கே ஏது ஆறு? ஆறு இல்லை, இது வயல்- முன்னாலே தெரியுதே இதெல்லாம் குடிசைங்களா இல்லே யானைக் கூட்டங்களா? அந்தப் பனைமரம் எங்கே போச்சுது? வழி தப்பி எங்கே போயிட்டேன்- இந்த கிராமத்திலே யாருமே குடியிருக்கிறதில்லையா..? எங்கும் வெளிச்சமே தெரியலியே, யாரிடம் கேட்க..? எங்கே, அது வெளிச்சமா, இல்லே கண்களா? நான் நிக்கறேனா, நடக்குறேனா? நான் வண்டியிலே

போறேனா, பூமியிலா-?

"ஹர்கோவிந்த் அண்ணே, வந்துட்டியா?" பெரிய அண்ணி கேட்டாள். ஹர்கோவிந்தின் காதில் இப்போதும் கடிஹார் ஸ்டேஷன் ஒலி பெருக்கி அலறிக் கொண்டிருப்பதுபோல ஓலம்!

"ஹர்கோவிந்த் அண்ணே! என்ன ஆச்சு உனக்கு-?"

"பெரிய அண்ணி?"

ஹர்கோவிந்த் கையினால் துழாவிப் பார்க்கிறான். அவன் ஏதோ விரிப்பில் படுத்திருக்கிறான் முன்னால் தெரிந்த நிழலைத் தொட்டுக் கேட்டான், "பெரிய அண்ணி?"

"ஹர்கோவிந்த் அண்ணே, எப்படி இருக்கு-? இந்தா இன்னும் ஒரு விழுங்கு பால் குடிச்சுக்க- வாயைத் திற- ம்- குடிப்பா- கொஞ்சம் குடிச்சுக்க!"

ஹர்கோவிந்த் தன் நினைவிற்கு வந்தான்- பெரிய அண்ணி பால் தருகிறாளா?

அவன் மெல்ல தன் கையை முன் பக்கமாக பரப்பி பெரிய அண்ணியின் கால்களைப் பிடித்தான், "பெரிய அண்ணி-! என்னை மன்னிச்சுடுங்க. உங்க சேதியை என்னாலே சொல்லவே முடியலே- நீங்க கிராமத்தை விட்டுப் போகாதீங்க. உங்களுக்கு ஒரு கஷ்டமும் இல்லாமெ பார்த்துக்கறேன். நான் உங்க மகன்! பெரிய அண்ணி, நீங்க என்னோட தாயார், கிராமத்துக்கே நீங்கதான் அம்மா! நான் வேலை வெட்டியில்லாமா சுத்த மாட்டேன். உங்களுக்கு எல்லா வேலையும் செய்து தருவேன்- பெரியம்மா, சொல்லுங்க நீங்க- நீங்க கிராமத்தை விட்டுப் போகமாட்டீங்க இல்லே? சொல்லுங்க-!!"

பெரிய அண்ணி சூடான பாலில் ஒரு பிடி அவலைப் போட்டுப் பிசைந்து கொண்டிருந்தாள். சேதி சொல்லி அனுப்பிய பிறகு ஏன் அப்படி அவசரப்பட்டு அனுப்பினோம் என்று அவளே வருந்திக் கொண்டிருந்தாள்.

(1962)

# ஓர் ஆதிகால இரவின் வாசம்

ஊஹூம்– கர்மாவுக்கு தூக்கம் வராது.

புதிதாகக் கட்டி சுண்ணாம்பு அடித்த கட்டிடத்தில் அவனுக்கு உறக்கம் வரவே வராது. சுண்ணாம்பும், வார்னிஷூம் கலந்து வரும் நெடி அவனுடைய நெற்றிப் பொட்டில் நாலணா அளவு இடத்தில் சுள்சுள் என்று குத்திக்கொண்டே இருக்கும். பழைய லைனிலுள்ள பழைய 'டேசனில்', அது எத்தனை தொல்பொருள் காலத்து 'டேசன்' ஆனாலும் சரி, அவனுக்கு நன்றாகத் தூக்கம் வரும்– பாரு, மூக்குத் துளையினுள் திருப்பியும் விர்ரென்று ஏறுதே நெடி–!

கர்மா தும்மலானான். அந்தப் புதிய கட்டிடத்தில் அவனுடைய தும்மல் ஒலி எதிரொலித்தது.

"கர்மா, தூக்கம் வரலியா என்ன?" ஸ்டேஷன் மாஸ்டர் கேம்ப் கட்டிலில் புரண்டு படுத்தவாறு கேட்டார்.

மேல் துண்டினால் மூக்கைத் துடைத்துக் கொண்டே கர்மா, "எனக்கு இங்கே தூக்கம் வராது பாபுஜி, முதலிலேயே தெரிஞ்சதுதான்" என்றான்.

புத்தம் புதிய கட்டிடத்தில் பாபுஜிக்கும் சுண்ணாம்பு நெடி அடிக்குதா? நெற்றிப் பொட்டுப் பக்கத்திலே வலி எடுக்குதா என்று டேசன் மாஸ்டர் ஐயாவிடம் கேட்க வேண்டும்போல இருந்தது கர்மாவுக்கு– ஆனால் அவர் ஏதோ பாட்டை முணுமுணுக்கலானார். ஒரு நாய் ரோந்து சுற்றிக்கொண்டு சிக்னல் கேபின் வரையிலும் வந்தது. பிறகு வராந்தா அருகில் வந்து அங்கே நின்று விட்டது. கர்மா பேசாமல் நாயின் நோக்கத்தையும் செயல்களையும் நோட்டமிடத் தொடங்கினான். நாய் பாபுஜியின் கட்டில் பக்கமாக மூக்கை உயர்த்தி காற்றில் மோப்பம் பிடித்தது. பிறகு முன்னால் சென்றது. கர்மாவுக்குத் தெரிந்து விட்டது—இந்த நாய் சரியான செருப்பு நக்கி–! இல்லை, வெறுமனே கூட மோப்பம் பிடிச்சிருக்கலாம் நாய். இப்போது அது கர்மா பக்கம் திரும்பியது. காற்றை மோப்பம் பிடித்தது. பிறகு பயணிகள் தங்கும் அறைப் பக்கமாக இரட்டைக் குதிகுதித்து ஓடிப்போய் விட்டது–

பாபுஜி கேட்டார், "உன் பேரு கர்மாவா, கரம்சந்தா அல்லது கர்முவா?"

–அப்பா! ஏழுநாள் கூடவே இருந்த பிறகு இன்னி ராத்திரி நடு

ஜாமத்திலேதான் பாபுஜி மனம் திறந்து ஒரு கேள்வி கேட்டிருக்கிறார். அதுவும் 'அயனான' கேள்வி!

"பாபுஜி, பேரு கர்மாவேதான். ஆனா ஆயிரம் சனங்களா, ஆயிரம் வாய் இருக்குமே. அந்தக் கணக்கிலே பலவிதமா கூப்பிடு வாங்க. நித்தாய்பாபு என்னை 'கோர்மா'ன்னு கூப்பிடுவாரு, கோஷ்பாபு 'கரீமா' அப்படீம்பாரு. சிங்ஜி பொழுதெல்லாம் 'காமீ, காமீ'ன்னு கூப்பிடுவாரு, அஸ்கர் பாபுவோ 'கரம்-கரம்'ன்னு சொல்லி அழைப்பாரு. அவுருக்கு சந்தோசம் வந்திச்சுன்னா அவ்வளவுதான்- 'அய்யோ என் கருமமே!' அப்படிக் கூப்பிடுவாரு! பேரிலே என்ன வெச்சிருக்கு பாபுஜி! எப்படித் தோணுதோ, கூப்பிடுங்க. ஆயிரம் பேரு..!"

"உன் வீடு சாந்தால் பர்கானாவிலே இருக்கணும் இல்லை, ராஞ்சி அல்லது ஹலாரி பாக் பக்கம்- எந்த ஊரு?"

இந்தக் கேள்வியைக் கேட்டதும் கர்மா விதிர்த்துக் கொண்டான். இம்மாதிரி கேள்விகளுக்கு விடையளிக்க வேண்டி வரும்போதெல்லாம் அவன் பற்றற்ற துறவி போன்ற முகபாவத்தை வரவழைத்துக் கொள் வான். வீடா? எங்கே கட்டை கிடக்குதோ அதுதான் வீடு. அம்மா-அப்பா யாருன்னா கேக்குறீங்க?—ஆண்டவன்தான்..! ஆனால் பாபுஜியிடம் இம்மாதிரியான பதில் சொல்ல முடியாதே..!

..பாபுஜி பெரிய ஆளுதான்! பெயரின் பொருளைக் கொண்டே ஆராயத் தொடங்கி விட்டாரே-வீடு சந்தால் பர்கானா அல்லது ராஞ்சி-ஹலாரி பாக் பக்கம் இருக்கும் அப்படீன்னு! 'நிச்சயமா ஏதோ பண்டிகை அல்லது சடங்கு நாளிலே பொறந்திருப்பான். அதனால தான் 'கர்மா'ன்னு பேரு வந்திருக்கும். அப்படிக்கூட யோசிக்கிறாரு போலிருக்கு. நெற்றி, தலை, மண்டை, உதடு, உடலமைப்பு இதைக் கொண்டெல்லாம் கூட—

-இந்த பாபுஜி ரொம்ப விசயம் தெரிஞ்சவருன்னு தெரியுது. நெசமாலே என்னைப் பத்தி எனக்கே ஒண்ணும் தெரியாது. ஆனா, இந்த பாபுவோ, நெத்தியைப் பார்த்து, மூஞ்சியைப் பார்த்து எல்லாம் சொல்லுறாரே! இத்தினி நாளைக்கப்புறம் கோபால் பாபுபோல ஒரு பாபு கிடைச்சாரையா!

கர்மா பதிலளித்தான், "கோபால் பாபுவும் இப்படித்தாங்க சொல்லுவாரு, 'கர்மா'ங்கற பேற அவரு வெச்சதுதான்."

கர்மா கோபால் பாபுவின் கதையை விவரிக்கலானான்— "கோபால் பாபு சொல்லுவாரு, அசாம்லேருந்து வந்த கூலிச் சிப்பாய்கள் வண்டியிலே ஒரு 'டெக்'கில நீ படுத்துக் கிடந்தே, ரசீது இல்லாத சாமான்போல.. அனாமத்துச் சரக்குப்போல!"

..கதை கேட்டுக் கொண்டே பாபுஜி தூங்கிட்டாரு போலிருக்குது. குறட்டை ஒலி கேக்குதே! கோபால் பாபுவின் கதை பாதியிலேயே நின்றுவிட்டது.

*–நாய் மீண்டும் ரோந்து சுற்றிக்கொண்டு வந்தது. கார்த்திகை மாசமோ இல்லியோ! அது எதையோ நெனச்சிக்கிட்டு பரபரக்குது. இங்கே அங்கே ஓடுது- மூச்சிரைத்ததும் நிக்குது- அட நாயே, நீயும் தூங்க மாட்டியா? உம், கருமம், நாயினுடைய நாத்தம் இதுவரையிலும் அடிக்குது-துத்! போ தள்ளி!*

*பாபு திடீரென்று கண்விழித்துக் கொண்டார். "ஊ-ம், அப்புறம் என்ன ஆச்சு உன்னோட கோபால் பாபுக்கு?" என்று கேட்டார்.*

*ஸ்டேஷன் வராண்டாவிலிருந்து இறங்கி ஓடிய நாய் திரும்பிப் பார்த்தது. உர்- என்று உறுமியது ஒருமுறை. பிறகு இரண்டு மூன்று தடவை அமுங்கிய குரலில், "புஃப், புஃப்' என்று சத்தம் எழுப்பினபின் பெண் பயணிகள் தாங்கும் அறையினுள் ஓடிவிட்டது.*

*"பாபுஜி, தூங்கிட்டீங்களா?"*

*–போகட்டும், தூங்கட்டும். பாபுஜிக்காவது தூக்கம் வருதே. பாபுஜியின் குறட்டை ஒலி ஐயாமாரு விடற குறட்டை மாதிரித்தான் கேட்குது பாயின்டு மேன் இருக்கானே, அது குறட்டையா, ரம்பம் போட்டு மரம் அறுக்கறது மாதிரிதான் கேட்கும்.*

*–கோபால் பாபுவின் குறட்டை வீணை நாதம் போலவே இருக்கும்–என்ன இனிமை–! அஸ்கர் பாபுவின் குறட்டை– சிங் ஜி 'புஃப், புஃப்' என்று குறட்டை விடுவார். சாஹு பாபு தூக்கத்திலேயே கத்துவாரு–ஆமா, டௌன் கொடு, வண்டி விட்டாச்சா–!*

*'தந்திப் பொறியின் மணியோசை! டேசன்லே கட்டியிருக்கிற சேகண்டி மணி! கார்டு ஐயாவின் விசில் ஒலி! இஞ்சினின் கூக்குரல்! கப்பல்லேருந்து சங்கு ஒலி–! விதவிதமான விசில் ஊதல்– சங்கு– ஓலங்கள்! அதே போ–ங்–ங்–ங்!*

*–ஆயிரம் தடவை, லட்சம் தடவை முயன்றும்கூட கர்மா தன்னை தண்டவாளத்திலிருந்து விடுவித்துக் கொள்ள முடியவில்லை. அவன் துடித்தான், ஓலமிட்டான். ஆனால் கிடந்த இடத்திலிருந்து அசையவே மாட்டேன் என்கிறது உடம்பு. அவன் ஒட்டிக் கொண்டிருந்தான் தண்டவாளத்துடன். தடதட கடகடவென்று ஓடிவந்த ரெயில் அவன் கழுத்தையும், கால்களையும் துண்டித்து எறிந்துவிட்டு ஓடிப்போய் விட்டது- தண்டவாளத்தின் இந்தப் பக்கமாக அவனுடைய தலை உருண்டு கிடக்கிறது. அந்தப் பக்கம் இரண்டு கால்களும் கவட்டைபோல வெவ்வேறு திசையை நோக்கியவாறு கிடக்கின்றன. அவன் அவசர அவசரமாக கால்களை ஒன்று சேர்த்தான்—அட, இது கார்டு ஐயா அன்டோனியோட பூட்சு இல்லே? நீளமான பூட்சு! என் தலை எங்கே போச்சு? அட– ச்சீ போ தூர! கருமம், நாய் வந்து காதையும், மூக்கையும் கவ்வுது–*

*"கர்மா!"*

*"அட சீ"*

"எழுந்திரு கர்மா, எழுந்திரிச்சு டீ போடு!"

கர்மா அடித்துப் புடைத்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்தான்- ஆச்சு, பொழுது விடிஞ்சிருச்சி. கூட்ஸ் வண்டிக்கு 'த்ரூ பாஸ்' கொடுத்து விட்டு பாயின்டுமேன் வர்றாரு கையிலே பிரம்பு வளையத்தை எடுத்துக்கிட்டு- கருமம், இப்படியா ஒரு சொப்பனம்? நல்லாயிருக்கு போ! பனிரெண்டு வருசத்திலே, இன்னிக்குத்தான் மொதமொதலா இந்த மாதிரி கனவு கண்டிருக்கான் கர்மா.

இந்தப் பனிரெண்டு வருஷத்திலே ஒரு நாளாவது ரயில்வே லைனிலிருந்து வெகு தொலைவில் எங்கும் போனதில்லை கர்மா. இந்த மாதிரி 'விபத்துக் கனவும்' ஒரு நாளாவது கண்டதில்லை.

கர்மா ரெயில்வே கம்பெனி சிப்பந்தி இல்லை. அவன் நினைத் திருந்தால் கலாசியோ, பாயின்டுமேனோ அல்லது வாட்டர்மேனோ ஆயிருக்கலாம் என்றைக்கோ. வெகு எளிதில் ரெயில்வே வேலையில் புகுந்திருக்கலாம். ஆனால் மனசுதான் காரணம். அப்படி எந்த வேலை யையும் அவன் மனம் நாடவே இல்லை. ரெயில்வே கம்பெனியின் நீல உடுப்பும், இஞ்சின் நிறத்துக்குப் பொத்தானும் அணிய வேண்டும் என்று அவன் மனது ஆசைப்பட்டதே இல்லை!

ரெயில்வே கம்பெனி என்ன, வேறு எந்த வேலையும் பார்த்த தில்லை கர்மா. ஊரும், பேரும் கேட்டபிறகு சனங்கள் வேலையைப் பற்றிக் கேட்பார்கள். அதற்கு கர்மா, 'பாபுஜிகூட இருக்கிறேன்' என்பான். ஒரு பைசாவாவது வாங்காதவனை வேலை பார்ப்பவன் என்று யாரும் ஒப்புக் கொள்வதில்லை.

- கோபால் பாபுவுடன் தொடர்ந்து ஐந்து ஆண்டுகள்! இதன்பின் எத்தனை டேசன் மாஸ்டர்கள்கூட இருந்தான். ஒவ்வொருவராகப் பெயர் சொல்லி எண்ணிக் கூறுவான் அவன். ஆனால் ஒரு விஷயம்- அவன் இருந்ததெல்லாம் 'லீவு ரிசர்வாக' பணி புரியும் ஸ்டேஷன் மாஸ்டர்களுடன்தான். இவர்களைத் தவிர நிரந்தர 'போஸ்டிங்' உள்ள குவார்ட்டரில் பெண்டாட்டி-பிள்ளைகளுடன் இருக்கும் பாபுக் களுடன் அவன் இருந்ததே இல்லை.

-கோபால் பாபு சரியான பாபு! அவர் மாதிரி ஒரு பாபுஜி கிடைக்கவே மாட்டார்! கர்மாவுக்கு தாய்-தகப்பன், உடன் பிறப்பு, குடும்பம் எல்லாமே கோபால் பாபுதான்! - ரசீதில்லாத சாமான்போல அவருக்குக் கிடைத்தான் கர்மா. ரெயில்வே மருத்துவமனையிலிருந்து விடுவித்து அவனைத் தன்னுடனேயே வைத்துக் கொண்டார் கோபால் பாபு. அவர் எங்கே போனாலும், கர்மா கூடவே போவான். அவர் என்ன சாப்பிடுகிறாரோ அதுதான் அவனுக்கும்- ஆனால் மனுசனுக்கு புத்தி எப்பவும் ஒரே நிலையில் இருக்காது என்பது சரிதான்- 'ரிலீவிங்

பாபு' வேலையை விட்டு ரெகுலர் ஸ்டேஷன் மாஸ்டர் வேலையை ஒப்புக் கொண்டார் அவர். அப்புறம், ஒருநாள் திருமணம் செய்து கொண்டார். பௌமா. கோபால் பாபுவின் மனைவி—அடராமா! அவள் ஒரு பொம்பளையா? சரியான ராட்சசி! பகல் பொழு தெல்லாம் கோபால்பாபு சரியாத்தான் இருப்பார். மாலை மங்கும் போது அவருடைய ஆத்மா பயந்த குருவிக் குஞ்சுபோல இங்குமங்கும் அலைபாயும். பாதி ராத்திரி சில சமயங்களில் ஸ்பெஷல் வண்டிக்கு 'பாஸ்' கொடுக்க கோபால் பாபு வெளியே வருவார். அந்நேரம் அவரைப் பார்த்தால், ஏதோ அமெரிக்கன் ரெயில்வே இஞ்சின் பாய்லரில் கரி அள்ளிபோட்டுவிட்டு வந்த மாதிரி தோன்றும். கர்மா அவருடைய குவார்ட்டர் வராண்டாவிலேதான் தூங்குவான். மூன்று மாசம் வரையிலும் அவனுக்குத் தூக்கமே வரவில்லை. பௌமா எப்பப் பார்த்தாலும் சீறிக்கொண்டே இருப்பாள்—பாபுஜி அவ்வப்போது ஏதாவது முணுமுணுப்பார். பிறகு அழுகையும், கூக்குரலும் கேட்கும். சில சமயம் திட்டு-வசவு, அடிதடி எல்லாம்! பாபு வெளியே ஓடி வருவார். அந்த மாதரசி அவருடைய முன்பக்கத்து கிராப்புத் தலையைப் பிடித்து உள்ளுக்கு இழுப்பாள். அப்போது கர்மா ஒரு யுக்தியைக் கையாளுவது வழக்கம். இம்மாதிரி நேரத்தில் அவன் எழுந்து கதவை இடிப்பான், "பாபுஜி, ஸ்பெஷல் வண்டி வர்ற சத்தம் கேக்குது." இந்த மாதிரி எத்தனைநாள் அவன் பாபுஜியின் உயிரைக் காப்பாற்றி யிருக்கிறான்! பௌமா ஒருநாள் அலறினாள் "டேய் பையா, கள்ளக் கழுதை, இவனை விரட்டு இங்கேயிருந்து! திருட்டுப் பயல்" இவன், பக்காத் தி-ரு-ட-ன்!"

இதன்பிறகு ரெயில்வே காலனியில் எந்த ஃபேமிலி குவார்ட் டரைக் கண்டாலும் கர்மாவின் மனதில் ஒரு பெண் குரல்-கீச்சுக் குரல்-கேட்கும்; தி-ரு-ட்-டு-ப் பையன்! படவாப் பயல்! ஃபாமிலி குவார்ட்டர் மட்டுமில்லை—பெண்மணிகளின் தங்குமிடம், ரெயிலில் பெண்கள் பெட்டி, பெண். பெண் என்ற பெயரை எடுத்தாலே கர்மாவுக்குக் குமட்டிக்கொண்டு வரும்.

ஒரே வருஷத்தில் அந்த ராட்சசி கோபால்பாபுவை அப்படியே விழுங்கி விட்டாள்! பூப்போன்று மென்மையான கோபால்பாபு! தன் வாழ்நாளில் முதன்முறையாக கர்மா வாய்விட்டுக் கதறி அழுதான்.

- ஆன்ம தியானத்தில் ஆழ்ந்த யோகியைப் போன்றவர், ஓடுகிற தண்ணீர் போன்றவர் ரிலீவிங் பாபு! எங்காவது ஒரு டேசன் மாஸ்டர் ட்யூடிக்கு வராமல் இருபத்து நான்கு மணியாக வேண்டியதுதான் தாமதம், ஆர்டர் வந்து விடும்—'இன்ன ஸ்டேஷன் மாஸ்டர் 'சிக்'காகி விட்டார். சிக் ரிப்போர்ட் வந்தாயிற்று. உடனே அங்கே ட்யூடிக்குப் போகவும். ரிலீவிங் பாபுவின் பெட்டி படுக்கை கட்டப்பட்டுத் தயார் நிலையில் இருக்க வேண்டும் குறைந்தபட்சம் ஒரு வாரம், அதிகம்

போனால் மூணு மாசத்துக்கு மேல் எந்த இடத்திலும் தங்கியிருக்க முடியாது ரிலீவிங் பாபு! ஒரு மரப்பெட்டியில் தன்னுடைய சாமான் களை எடுத்துப் போட்டுக் கொண்டு இன்று இங்கே, நாளை அங்கே என்று ஓடவேண்டியதுதான்- பானிபடாவிலிருந்து பாத்காம், குரைட் டாவிலிருந்து ரௌத்தாடா, பிறகு கடிஹார் ஹெட் குவார்ட்டர்.

-கோபால் பாபுதான் அவனை கோஷ் பாபுவுடன் சேர்த்து விட்டார்—"ரொம்ப நல்ல பாபு! நல்லா வெச்சுப்பாரு" என்றார். ஆனால், கோஷ்பாபுவுடன் ஒரு மாதத்துக்குமேல் தாக்குப்பிடிக்க முடியவில்லை கர்மாவினால். எதற்கெடுத்தாலும் திட்டுவது அவருடைய பழக்கம். திட்டுன்னா, அப்படி ஒரு வசவு, கேட்கவே நாராசமாக இருக்கும். அம்மா, அக்கா பேரைச்சொல்லி பச்சையான வசவுகள்- இதைத் தவிர கோஷ்பாபு மேலே எந்தக் குறையும் கிடையாது. தன்னுடைய சொந்த 'உடம்பு' போல வைத்துக் கொள்வார்- இன்னிக்கு எங்கேயாவது பார்த்தாலும் வசவில் தான் ஆரம்பிக்கும் அவருடைய பேச்சு. "என்னாடா- கர்மா? தா- யார் கூட இருக்கே இப்பல்லாம்?"

-கோஷ் பாபுவைப் பார்த்து அவருடைய அம்மா, அக்கா பேரால் திட்டக்கூடிய யாரும் கிடையாது. அப்ப யாராவது திட்டினால்தான் அம்மா அக்கா பேரைக் கேட்டு மனுசன் ரத்தம் எப்படிக் கொதிக் கும்னு அவருக்குத் தெரியும்! இதுவரையிலும் இந்த மாதிரி பச்சை பச்சையாக வையக்கூடிய வேறுயாரையும் கண்டதில்லை கர்மா.

-ராம் பாபுவின் பழக்கவழக்கம் எல்லாம் சரிதான். அதைப்பற்றிக் குறை சொல்லக்கூடாது. ஆனால், அவருக்கு அப்படியொரு பெண் ணாசை! எந்த ஸ்டேசனுக்குப் போனாலும் பாயின்ட்மேன்- போர்ட்டர்- ஸ்வீப்பரைக் கூப்பிட்டு கிசுகிசுப்பார். பிறகு ராத்திரியானால் சாமான்கள் கிடங்கிப்பக்கம், சில நாள் பெண் பயணிகள் தங்கும் அறை, சில நேரத்தில் பெண்கள் கழிப்பிடம் சீச்சி- எங்கே போனாலும் இப்படிக் கேட்பார், "என்னப்பா, அசல் சரக்கு ஒண்ணும் இங்கே அம்புடாதா-?" கடைசியில் கர்மா சொன்னபடிதான் நடந்தது-சரக்கே அவருக்கு எமன் ஆனது. போன வருஷம் ஜேக்பனி லைனில் ஒரு நேப்பாளி தன்னுடைய பிச்சுவாவினால் இரண்டாக வெட்டிப் போட்டுவிட்டான் அவரை. 'இப்ப அனுபவிடா சரக்கை' என்றான்- தனக்கு மானம் இருப்பது போலத்தானே அடுத்தவனுக்கும் இருக்கும்!

-சிங்ஜி பெரிய பூசாரி! சீதா பிராட்டி சமேதராக ராம-லட்சுமணர்களின் விக்கிரகங்கள் அவருடைய ஜோல்னாப் பையில் எப்போதுமே இருக்கும். தினமும் காலை நாலு மணிக்கே குளித்து பூசைமணியை அடிக்க ஆரம்பித்து விடுவார். அங்கே வண்டி வருகிற மணி அடித்துக் கொண்டிருக்கும்- ராமபிரான் விக்கிரகங்கள் வைத்திருக்கும் அறையினுள் குளிக்காமல் யாரும் காலடி எடுத்து வைக்கலாகாது- தன் உடம்பை யார் அந்த அளவுக்குச் சுத்தமாக

வைத்திருக்க முடியும்? எவன் தினமும் பத்துத் தடவை குளிப்பான்? ஆயிரம் தடவைகால் கழுவுவான்? அதுவும் குளிர் காலத்தில்-! எதை யாவது தொட்டுவிட்டால் ஆ-ஊ- அடடே- தொட்டுட்டியா படுபாவி! கெடுத்திட்டயே காரியத்தை! என்பார்- இப்படிச் சுத்தம் பார்க்கிற ஆசாமி ரெயில்வே கம்பெனிக்கு எதுக்கு வர்றாரு-? சிங் கூடவும் ஓட்ட முடியவில்லை கர்மாவால்.

-சாஹு பாபுவுக்கு தாராள மனசுதான். ஆனால் சரியான குடிகாரர். ஒரு நாளைக்கு மத்தியான நேரம் செமையாகக் குடித்து விட்டு கூட்ஸ் டிரெயினுக்கு 'த்ரூ பாஸ்' கொடுத்து விட்டார். வண்டிகள் இரண்டும் மோதிக் கொண்டன. கர்மாவுக்கு நன்றாக நினைவு இருக்கு. ஆக்ஸிடென்டு நடந்தது என்று கேள்விப்பட்டதும் இன்னொரு பாட்டிலை உள்ளே தள்ளினார்- கடைசியில் டாக்டர் மூளைக் கோளாறுன்னு சர்பிடிகேட் கொடுத்தார்.

-ஆனால், அப்படியொரு விபத்து நடந்த அன்று இரவில்கூட கர்மா இந்த மாதிரி கனா காணவில்லை!

-கூடாதுதான்- காலை நேரத்திலே இந்த மாதிரி பயங்கரக் கனாவை அவன் பாபுஜியிடம் சொல்லியிருக்கக்கூடாதுதான். பாவம், ரெயில்வே வேலையில் இப்பத்தான் அவர் நுழைந்திருக்கிறார்.

-தெரியாது- பாபுஜியின் சுபாவத்தைப் பற்றி அவனுக்கு இன்னும் சரியாகத் தெரிந்துகொள்ள வாய்ப்புக் கிடைக்கவில்லை. ஒரு வாரம் கூடவே இருந்தும்கூட நேற்று இரவுதான் மனம் திறந்து அவர் ஒரு கேள்வி கேட்டார், இரண்டு வார்த்தை பேசினார். அதனால், கர்மாவும் காலையில் எழுந்ததும் மனம்திறந்து தான் கண்ட கனவை அவரிடம் விவரித்து விட்டான்! தேநீர்க் கோப்பையை அவர் முன்னால் வைத்துவிட்டு அவன் சிரித்துக்கொண்டே ஆரம்பித்தான், "ஹ-ஹா! பாபுஜி, ராத்திரி வேடிக்கையான ஒரு கனவு கண்டேங்க. கடகடா- தடதடான்னு வந்தது ஒரு இஞ்சின். என்னோட உடம்போ, தண்ட வாளத்தோட ஒட்டிக்கிட்டு கெடக்குது, எடுக்கவே வரலே- என்ன ஆச்சு, தலை அந்தப் பக்கம் காலு ரெண்டும் தாறுமாறா லைனுக்கு இந்தப் பக்கம்- அன்டோனி சாரோட நீள பூட்சு வேறெ மத்தியிலே- கம்போட் பூட்சு-!"

"சட்! தூரப் போ! விடிஞ்சதும் எழுந்திரிச்சதுமா என்னென் னமோ பேத்தறியே! கஞ்சா-கள்ளு ஏதாச்சும் குடிச்சியா?"

- பாபுஜியிடம் தான் கண்ட கனவைச் சொல்லியிருக்கக் கூடாது கர்மா.

கர்மா எழுந்து மோட்டு வளையில் வைத்திருந்த கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தான். வே-டி-க்-கை-யா என்ற வார்த்தையை

உச்சரித்துக் கொண்டே பார்த்தான். சீ, அவனுக்கே தன்னுடைய உதடு போனபோக்கு அசிங்கமாகத் தெரிந்தது-பறவையின் அலகுபோல-

"ஏம்பா கரம்ச்சன்! அடுப்புலே, என்ன ஆயிக்கிட்டிருக்குது?"

- வாட்டர்மேன் பாண்டே நல்ல மாதிரி. வெகு நாளைய பழக்கம். எத்தனையோ ஸ்டேசனில் இருவரும் சேர்ந்து இருந்திருக்கிறார்கள். ஆனால், பாயின்ட்மேன் இருக்கிறானே, இடக்குப் பேர்வழி. மனசுக்குள்ளே ஒண்ணு, வெளியில் ஒண்ணு. காரணமில்லாமல் சிரிப்பு வேறு-

"கரம்ச்சன், பாபு என்ன சாதி?" பாண்டே கேட்டார்.

"ஏன்? வங்காளிதான்"

"தம்பி, வங்காளிலேகூட பன்னிரண்டரை வருணங்கள் உண்டு."

"அது என்னமோ பாண்டேஜி, அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் பாபுஜி விசயம் தெரிஞ்சவரு. உங்க பேரிலிருந்து அர்த்தம் கண்டு பிடிப்பாரு. முகத்தைப் பார்த்து எல்லாம் சொல்லிடுவாரு- இதோ, இரண்டு மணி வண்டியின் மணி கணகணக்க ஆரம்பிச்சாச்சு. கூட்டு இன்னும் கூட வெந்துக்கிட்டு இருக்கு."

"எனக்கும் கொஞ்சம் கூட்டு வெச்சிரு கரம்ச்சன்"- சொல்லிக் கொண்டே வாட்டர்மேன் பாண்டே அங்கிருந்து நகர்ந்தார்.

-வீடு எங்கே? சாதி என்ன? மனிஹாரி படித்துறை மஸ்தான் பாபா கற்றுத்தந்த பதில் எல்லா இடத்திலும் செல்லாது-'ஹரி கே பஜே ஸோ ஹரி கே ஹோய்' அதாவது 'ஹரியைப் பாடிப் புகழ்பவன் ஹரிக்கே ஆளாகிறான்' ஆனால் ஒரு சந்தேகம் ஹரி என்ன சாதி-? இதப் பாருடா, இந்த வண்டியிலே மூஞ்சூறு மூஞ்சி இஞ்சினைப் பூட்டிருக்காங்களே இன்னிக்கு! சந்தால் பகுதி மூங்கில்போல சன்னமா விசிலடிக்குதே-ஸீ-ஈ-ஈ-!

-பாரு, நிசம்மா! இந்த வண்டியிலிருந்து ஒரு பயணிகூட இறங்கலே இன்னிக்கும்! எதுக்காக இத்தினி பணம் செலவுபண்ணி இங்கெல்லாம் டேசன் போட்டாங்களோ- கர்மாவின் புத்திக்கு இந்த விசயம் எட்டவே இல்லை. என்ன பிரயோசனம்? பேருதான் பெரிசா 'ஆதம்புரா' தம்பிடி வரும்படி இல்லை- ஏழு நாளிலே ரெண்டு டிக்கெட் வித்திருக்குது. அஞ்சு ஆசாமி இறங்கியிருக்கு, அதிலேயும் ரெண்டு 'வித்தௌட்டு-' இத்தினி நாளைக்குப் பிறகு பதினஞ்சு மூடை கத்திரிக்காய் இன்னிக்கு 'புக்' ஆச்சுது. பதினஞ்சு கத்திரிக்காய் கொடுத்து வேலையை முடிச்சுட்டான் அந்தக் கிழவன்- கத்திரிக்காக்காரன் பேசற விதமே வேடிக்கையா இருந்தது- கர்மாகிட்ட வம்படிக்கணும்னு ஏக ஆசை அந்தக் கிழவனுக்கு. வீடு எங்கே? சாதி என்ன? வீட்லே யார் யார் இருக்காங்க-? கர்மா எல்லாக் கேள்விக்கும் ஒரே பதில்தான் சொன்னான்-மேலே கையைத் தூக்கிக் காட்டிக் கொண்டு. கிழவன் பலமாகச் சிரித்து விட்டான்- வேடிக்கையான சிரிப்பு!

-மூஞ்சூறு மூஞ்சி இஞ்சின்! ஸீ- ஈ-ஈ-!!

கர்மா மனிஹாரிகாட் ஸ்டேஷனிலும் இருந்திருக்கிறான். ஒரு தடவை சேர்ந்தாற்போல மூணு மாசம், பின்னொரு தடவை ஒரு மாசம். மனிஹாரி ஸ்டேசன் கதையே வேறுதான். மனிஹாரி காட் எங்கே? இந்த ஆதம்பூர் பஞ்சை ஸ்டேசன் எங்கே?

-புது இடத்துக்கு, புதிய டேசனுக்கு வந்தால் அக்கம் பக்கத்து கிராமத்தையெல்லாம் ஒரு சுற்றுச் சுற்றி வராவிட்டால் கர்மாவுக்கு என்னமோபோல இருக்கும். ஏதோ, பாழடைந்த கிணற்றிலே இருப்பது போலத் தோன்றும். கடைசி சிக்னலுக்கு அப்பால் வெகுதூரம் வரையில் பரந்து கிடக்கிறது வயல் வரப்பு. அதற்கு அப்பாலே கரிசல் காடு. தன்னந்தனியாக ஒற்றைப் பனைமரம். இன்னிக்கு பாபு சாப்பிட்ட பிறகு அவன் அந்தப் பக்கம் சுற்றப் போவான். இப்படி ஒரே இடத்திலே உட்கார்ந்து கிடந்தால் வயிற்றிலே போட்ட சோறு கூடச் செரிக்காது. அவன் கிராமங்களிலே-வயல்வெளி, தோப்புத் துரவுகளிலே சுத்தலேன்னா, அவனுக்கு மரமேறத்தான் தெரிஞ் சிருக்குமா? இல்லே, நீந்தத்தான் கத்திருப்பானா?

-லக்பதியா ஸ்டேசன்! பேரு என்னமோ பெத்த பேரு, லட்சாதி பதி அப்படீன்னு. ஆனா, டேசன் எதிரிலே சத்துமாவு வேர்க்கடலை கடைகூட கிடையாது. அக்கம் பக்கம் அஞ்சு காதத்துக்கு கிராமமே இல்லை. ஆனால், ஸ்டேஷனுக்குக் கிழக்காலே, ரெண்டு குளம் இருக்குது. கர்மா அதை மறப்பானா? பளிங்குபோல தெளிவான தண்ணி, சலசலன்னு நிக்கும். வைகாசி மாச வெயிலிலே கழுத்தளவு தண்ணிலே மணிக்கணக்கா குளிக்கலாம். அந்த சொகத்தை வாயாலே சொல்லி முடியாது.

-கதம்புரா-நிசமாகவே கதம்புராதான். டேசன்லேருந்து கிராமம் வரையிலும் ஆயிரக்கணக்கா கடம்ப மரங்கள். கடம்புச் சட்டினி சாப்பிட்டு காலம் ரொம்ப ஆச்சு!

பாரிஸ் கஞ்ச் டேசன் ஊருக்கு மத்தியிலே இருக்குது. பெரிய பெரிய சரக்குக் கிடங்குகள், ஆயிரக் கணக்காக சணல் கட்டுகள், அரிசி, கோதுமை தானிய மூட்டைகள், கரி, சிமெண்டு மூட்டைகள், சுண்ணாம்புக் குவியல்கள்! எப்பப் பார்த்தாலும் ஆயிரம் சனங்க! கர்மாவுக்கு அவங்க மூஞ்சியெல்லாம் நினைவில் இல்லை. ஆனால் டேசனை ஒட்டினாற்போல வடக்குப் பக்கம் திறந்தவெளியில் கூடாரமடித்து இருக்காங்களே, கழுதை மேய்க்கும் மகஹியா. டோம் சாதிக்காரங்க, அவங்க நினைவு அடிக்கடி வருவதுண்டு. சருக்கு சுருக்கு காக்ரா-பாவாடைக்காரி பொம்புளைங்க, கைகளிலே அகல அகலமாக காப்பு போட்டுக்கிட்டு, காதிலே ஜிமிக்கி மின்ன. வேஷம்கூட கட்டாத குழந்தைங்க. காதிலே குண்டலம் போட்ட ஆம்புளைங்க...! அவங்களோட சேவல் கோழிங்க! அவங்களோட நாய்ங்க!

-பத்னாஹா ஸ்டேஷனைச் சுத்தி இன்னிக்கு ஆயிரம் வீடுங்க.

அஞ்சு வருசம் முன்னாடி பத்னாஹா டேசன்லே மத்தியானத்திலே கூட நரி ஊளையிட்டுதுன்னு சொன்னா யாராவது நம்புவாங்களா?

எத்தனை ஊர்கள், எத்தனை பேர்கள் எல்லாம் நினைப்புக்கு வருது- லோன்பர்சா மாம்பழம்- காலூரசக் மீன்- படோதர் துயிர்-குஸியார் காம் கரும்பு!

ஆனா, மனிஹாரி காட் டேசன்தான் ரொம்பவும் நினைவுக்கு வருது. ஒரு பக்கம் தண்ணீர், இந்தப் பக்கம் பூராவும் நிலம்-கரை மறுபக்கம் நீர்ப்பரப்பு. ஒரு புறம் ரெயில் நிலையம். இன்னொரு புறம் கப்பல்துறை. இப்பால் எங்கும் வயல்வெளிகள்-கிராமங்கள். அந்தப் பக்கம் சாஹப் கஞ்ச்-கஜரோடியா நீலமலைத் தொடர். நீல நிறமான நீர்-பரல் பரலான மணல்-! மூன்று, பிறகு ஒன்று ஆக நாலு! நாலு மாதம் தொடர்ந்து முப்பது நாளும் கங்கையில் குளித்திருக்கிறான் கர்மா. நாலு ஜென்மத்துக்குப் பாவமே அண்டக் கூடாது அவனை. எந்த ஸ்டேஷனுக்காவது இத்தனை சிறப்பான பெயர் உண்டா-மனிஹாரி-! அற்புதமான பெயர். மீனவர்கள் படகிலிருந்து மீன்களை இறக்கும்போது அவற்றின் ஒளியைக் கண்டு கர்மாவின் கண்கள் கூசியிருக்கின்றன.

-இரவில், அந்தப் பக்கம் நீரின் மீது 'தூம் தூம்' என்று கப்பல் புறப்படும். இந்தப் பக்கம் 'சுக்-சுக்' என்று ரெயில் வண்டி புறப்படும். பிறகுதான் அஜுஸாஹுவின் கடைப் பலகைகள் மூடப்படும். அப்புறம் மஸ்தான் பாபுவின் தொண்டர் குழாம் துறையில் கூடும்.

மஸ்தான் பாபா கூலி இனத்தவர். மனிஹாரி துறையில் கூலிப் பணி செய்துவந்தார். ஒருநாள் அவரது மனது விரக்தியடைந்து விட்டது. தாடியும், ஜடாமுடியுமாக அவர் துறவியாகி விட்டார். கஞ்சிரா அடித்துக் கொண்டு ஞானப் பாடல்களை மெய் மறந்து பாடுவார். பாபா அடிக்கடி சொல்லுவார்—எத்தனையோ துறையில் நீர் அருந்தினோம்-எல்லாமே சுவையற்றது. கங்கை நீர் மட்டும் இனிமையானது- பாபா ஹுக்கா பிடித்துக் கொண்டே ஐந்தாறு கதைகள் சொல்லுவார். எல்லாமே வேத-புராணக் கதைகள். கர்மா இரண்டொரு ஞானத் துளிகளைப் பெற்றது மனிஹாரி காட்டிலிருந்து தான். ஆனால் கஞ்சாவின் சுவையை அவன் அறிந்ததில்லை- இன்று பாபுஜி கேட்டாரே, கஞ்சா-கிஞ்சா குடிச்சியான்னு. அப்போது கர்மாவுக்கு மஸ்தான் பாபாவின் ஞாபகம் வந்தது. எந்த இடத்துக்கும் தனதான நறுமணமும் உண்டு. துர்நாற்றமும் உண்டு என்பார் பாபா- இந்த ஆதம்புராவின் நாற்றத்தினால் கர்மாவுக்குச் சாப்பாடே ருசிக்கவில்லை.

மஸ்தான் பாபாவை நினைக்காமல் மனிஹாரி காட்டின் ஞாபகமே வராது.

மோட்டு வளையில் வைத்திருந்த கண்ணாடியை எடுத்துக் கர்மா மீண்டும் தன் முகத்தைப் பார்த்தான். கண்களை பாதி மூடி பற்களைத் திறந்து சிரித்தவாறு அவன் மஸ்தான் பாபா மாதிரி முகத்தை வைத்துக்கொள்ள முயன்றான்-கவலையைவிட்டு மகிழ்ச்சியாக இரு-! எப்பவும் கண்ணையும், செவியையும் திறந்து வை- பூமித்தாய் சொல்லுகிறாள்- மரஞ்செடிகொடிகளும் தன்னவர்களைத் தெரிந்து கொள்ளும்- பயிர்கள் உல்லாசமாக ஆடுவதைக் கண்டிருக்கிறாயா? அமாவாசை இரவு எப்பவாவது அழுவதைக் கண்டதுண்டா-? ஹே-ஹையா- மனிதா- மகிழ்ச்சியுடன் இரு!

-பாபுஜி தன் பின்னால் நின்றுகொண்டு வேடிக்கை பார்ப்பது கர்மாவுக்குத் தெரியவில்லை. பாபுஜி ஆச்சரியத்துடன் கேட்டார், "அட நீ விழித்துக்கொண்டு கூட கனாக் காண்பதுண்டா? ஆளைப் பாருடா, கஞ்சா குடிப்பதிலைன்னு வேறே சொல்றான்."

நிஜமாகவே அவன் நின்ற நிலையில் கனவுகண்டு கொண்டுதான் இருந்தான். மஸ்தான் பாபாவின் முகம் ஆலமரம்போல பெரிதாகிக் கொண்டே போனது. அவருடைய கவலையற்ற சிரிப்பொலி எங்கும் முழங்கியது. கஞ்சாப் புகை எங்கும் பரவியது. கங்கையில் அலைகள் எழும்பின. தொலைவில் கப்பலின் சங்கொலி கேட்டது-போ-ங்-ங்!

பாபுஜி சொன்னார், "சாப்பாடு பரிமாறு. என்ன ஆக்கியிருக்கிறாய், பார்க்கலாம். உன்னை வெச்சுக் காலம் தள்ள முடியாதுன்னு தான் தோணுது."

ஒரு கவளம் மென்று விழுங்கியதும் அவர் அதே குரலில் தொடர்ந்தார்-"ஆனா நல்ல ருசியா சமையல் பண்றேப்பா!"

சாப்பிடும்போதே பாபுஜி பழைய மகிழ்ச்சியான மனநிலைக்கு வந்து விட்டார். நேற்று இரவு போலவே மனம் திறந்து வம்படிக்க லானார், "யார் உனக்கு சமைக்கக் கற்றுக் கொடுத்தது? கோபால் பாபுவின் வீட்டுக்காரியா?"

-கோபால் பாபுவின் வீட்டுக்காரி? அதாவது பௌமா? அவன் சொன்னான், "அய்ய- பௌமா குணமே இல்லாதவ ஆச்சே! அவ குரலைக் கேட்டாலே ஏனத்திலே வெச்ச பால் பிரிஞ்சுருமில்லே! அவ என்னத்தைக் கத்துத் தர? குணங்கெட்ட பொம்புளை!"

"அப்ப, யார்தான் கத்துக் கொடுத்தா, சொல்லு!"

கர்மாவுக்கு மஸ்தான் பாபாவின் வார்த்தை ஞாபகத்துக்கு வந்தது. அவன் கேட்டான், "கற்பிப்பது யார் பாபுஜி? நகர்க் காவல னுக்குப் பாடம் புகட்டுவது நகரமல்லவா?

"அப்ப, உன் பெண்டாட்டி பாடு வெகுசுகம்தான்னு சொல்லு! அவ காலாட்டிட்டே இருக்கலாம்."

பாபுஜியின் மனநிலை இப்படியே மகிழ்வுடன் இருந்தால் ஒருநாள் அவருக்கு மஸ்தான் பாபாவின் முழு வரலாற்றையும்

எடுத்துரைக்கலாம் என்று எண்ணமிட்டது அவன் மனம்.

"பாபுஜி, இன்னிக்கு கொஞ்சம் விடுமுறை வேண்டும்."

"விடுமுறையா? ஏன்? எங்கே போகிறாய்?"

கையினால் ஒரு பக்கத்தைச் சுட்டியவாறு கர்மா பதிலளித்தான், "கொஞ்சம் இப்படி சுத்திட்டு வரலாம்னு_"

பாயின்ட் மேன் வெளியே இருந்து குரல் கொடுத்தான், "கர்மா, பாபுஜிகிட்டச் சொல்லு, தந்திப்பொறி மணியடிக்குது."

*உன் பெண்டாட்டி பாடு சுகம்தான் அப்படின்னல்ல சொன்னாரு-! கர்மாவின் பெண்சாதி! பாரிஸ் கஞ்ச் டேசன்- மகஹியா டோம் இனத்தவரின் கூடாரம்- வயசுக்கு வந்த பொண்ணு- மூக்கிலே நத்து- மூக்கு நத்திலே பதிச்ச கறுப்புக் கல்லு... மஞ்சள் நிறப் பல்லில் வெத்திலைக் காவி!!*

*கர்மா தன் கையினால் தயாரித்த அல்வா-பூரியை அந்தப் பெண்ணுக்குத் தின்னக் கொடுத்ததில்லை. ஒருநாள் காகிதத்தில் பொட்டலம் கட்டி எடுத்துச் சென்றான். ஆனால் உடம்பெல்லாம் வேர்த்து, குளித்ததுபோல் ஆகிவிட்டது. துணிவே வரவில்லை அவனுக்கு- அந்தச் சிறுக்கி எங்கேயாவது கூச்சலிட்டு வெச்சுதுன்னா என்ன ஆவுது? நீ ஒளிஞ்சு மறைஞ்சு எனக்கு என்னாத்துக்கு அல்வாவும், பூரியும் கொண்டாந்தே? ஓ, பாயி-யோ-ஓவ்!! அப்படீன்னு ஓலமிட்டு ஊரைக் கூட்டிருச்சின்னா-*

*-பாபுஜி என்னதான் சொல்லட்டும், அவனுடைய வீடு சந்தால் அல்லது பர்கானா அல்லது நாஞ்சிப்பக்கம் இருக்கும்னு அவன் மனது நம்பிவில்லை. மனிஹாரி காட்டில் இரண்டு முறை தங்கி வந்திருக்கிறான் அவன். அதற்கும் அப்பாலுள்ள சாகப் கஞ்ச்-கஜரோடியாமலை அவனைத் தன் பக்கம் ஈர்க்கவே இல்லை. பாரிஸ் கஞ்ச், கதம்புரா, காலூசக், லக்பதியா, இந்தப் பெயர்களைக் கேட்டாலே அவன் உள்ளம் குதூகலமடைகிறது. தெரிந்ததும், தெரியாததுமான எத்தனை எத்தனை முகங்கள் கண்முன்னே தோன்றி மறைகின்றன! கூட்டம் கூட்டமான முகங்கள்! இன்ப துன்பங்கள் கலந்த எத்தனை விஷயங்கள், அனுபவங்கள்! வயல்-களம், மரஞ்செடி, ஆறு-குளம், பட்சி-பறவைகள் எல்லாமே கர்மாவின் மனதில் இன்ப ஒலி எழுப்புகின்றன.!*

*-ஏழு நாளாக கரிசல் காட்டு ஒற்றைப் பனைமரம் அவனை சைகையினால் அழைக்கிறது. காட்டுக்கு மேலே ஆகாயத்தில் பறக்கும் கழுகு வந்து கர்மாவை அழைக்கிறதே! எதற்காக?*

ரெயில்வே வளைப்பைக் கடந்த பிறகுகூட நாய் திரும்பிப் போகாமல் தொடர்வதைக் கண்டு அவன் அதைத் திட்டினான், "நீ எங்கே கிளம்பிட்டே மடப் பயலே! உன்னைப்பாத்து மத்த

நாயெல்லாம் குரைச்சிட்டு வராதா-? போ! திரும்பிப் போ!!"

நாய் நின்றுகொண்டு கர்மாவையே கவனிக்கலாயிற்று. அடர்ந்த வயல்களுக்கு நடுவே செல்லும் ஒற்றையடிப் பாதையில் கர்மா நடந்துபோகிறான். நெற்கதிர்கள் இன்னும் முற்றவில்லை- கர்மாவுக்கு ஹெட்குவார்ட்டர் சௌதரி பாபுவினுடையை கருவுற்ற மனைவியின் ஞாபகம் வந்தது. டாக்டரம்மா உள்ளே போட்டோ எடுத்துப் பார்த்தாளாம்-வயிற்றிலே இரட்டைக் குழந்தையாம்!

-மேலே பார்த்தான். வானத்தில் ஹஸ்த நட்சத்திரம் உதயமாகி விட்டது. வயல்களில் தண்ணீர் பாய்ச்சியிருக்கிறார்கள்- மீன்?

-தண்ணீரில் 'மாங்குர்' மீன்கள் துள்ளுவதைக் கண்டதும் கர்மாவின் உடல் அப்படியே மந்திரத்துக்குக் கட்டுப்பட்டாற்போல் நின்றுவிட்டது. அவன் சிலைபோல நின்று கவனித்தான். பிறகு மெல்ல வயல்-வரப்பை நோக்கி நடந்தான். மீன்கள் துள்ளின. கண்ணாடி போன்று நிலைத்த நீர் திடீரென்று நடனமாடியது- கர்மாவினால் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை- வரப்புப் பக்கமாகக் குனிந்து தண்ணீரை இரண்டு அள்ளு அள்ளலாமா-?

—அட, வந்திருப்பது வீராதி வீரனல்ல! காட்டு நரி எங்கே போயி ஒளியும்? இன்னும் துள்ளுவியா-? அட, உன்னோட வாள் செதிலாலே என்னை வெட்டலாம்னு பார்க்குறியா? கர்மா புதிய வேட்டைக் காரனா என்ன?

எட்டு 'மாங்குர்' மீனும் ஒரு 'கரயீ' மீனும் அகப்பட்டன. எல்லாமே கறுப்பு மீன்கள்தான்! கடிஹார் சந்தையிலே இத்தனை மீனுக்கு கண்ணை மூடிகிட்டு மூணு ரூபா வாங்கலாம்- கர்மா மேல் துண்டில் மீன்களை முடிந்து கொண்டான். இன்றுபோல இவ்வளவு மகிழ்ச்சி முன்னால் எப்போதும் ஏற்பட்டதில்லை. இதற்கு முன்பும் அவன் எத்தனையோ முறை மீன் பிடித்திருக்கிறானே!

எருமைக்காரக் கிழவன் ஒருவன் எதிர்ப்பட்டான். தன்னுடைய எருமையைத் தேடி அலைகிறான்—"ஏ தம்பி! அந்தப் பக்கம் எங்கனாச்சும் எருமை கிருமை தென்பட்டிச்சா?"

எருமைக்காரன் கர்மாவிடம் ஒரு பீடி கேட்டான். கிழவனுக்கு வியப்பாக இருந்தது. என்னடா மனுசன் இவன்! பீடியும் குடிக்க மாட்டானாம், புகையிலையும் போடுறதில்லையாம்! அவன் கோபத்தில் குறுக்கு விசாரணை வேறு செய்ய ஆரம்பித்து விட்டான்— "இந்தப் பக்கம் எங்க போவணும்? மீன் எதுக்காவக் கொண்டு போறே?"

-பனைமரம் பின்னுக்குத் தள்ளிப் போகிறதே! கிராமம் வந்துவிட்டது என்பதை கர்மா உணர்ந்தான். கிராமத்தில் ஏதோ வித்தை காட்டுபவன் வந்திருக்க வேண்டும். பிள்ளைகள் ஓடுகிறார்கள். ஆமாம், கரடி வித்தைக்காரன்தான். உடுக்கை ஒலியைக் கொண்டு கர்மா கண்டுபிடித்து விட்டான்.

– காற்றிலே கிராமத்து மணத்தின் முதல் அலைவீச்சு!

கிராமத்தில் தென்பட்ட முதல் மனிதன், அந்தக் கிழவன் முட்டைக் கோசு பயிருக்கு நீர் பாய்ச்சுகிறான். தலை நன்றாக நரைத்து விட்டது. ஆனால் தண்ணீர் பாய்ச்சும் கரங்களில் இன்னும் வாலிபப் பருவத்து உரம் காண்கிறது– அட, இந்தக் கிழவன்தானே அன்னிக்கு கத்தரிக்காய் மூட்டையைப் 'புக்' பண்ண வந்தது! கர்மாகிட்ட வம்பு பேசினது! துளைத்தல்லவா எடுத்துவிட்டான்— அப்பா-அம்மா இருக் காங்களா? இல்லே, அப்பா-அம்மாவை வுட்டுட்டு ஓடியாந்துட்டியா–? அட, அவன் கர்மாவை அடையாளம் வேறு கண்டுகொண்டான்!

"என்னப்பா தம்பி! எங்கே இந்தப் பக்கம்?"

"சும்மாத்தான். இப்படிக் கொஞ்சம் சுத்திட்டுப் போகலாம்னு– உங்க வீடு இந்த கிராமத்தில்தான் இருக்குதா?"

கிழவன் சிரித்தான். அவனுடைய அடர்ந்த மீசை குலுங்கியது. கிழவனுடைய சிரிப்பு அப்படியே சத்தோ பாபு, டிடியின் அப்பா சிரிக்கிற மாதிரியே இருக்குது.

சிவப்புச் சேலை கட்டிய ஒரு குட்டி ஹுக்காவில் நெருப்பு வைத்து ஊதிக் கொண்டே வந்தது. நெருப்பை ஊதும் போது அவளுடைய இரண்டு கன்னங்களும் பலூன்போல உருண்டு அழகாகத் தென்பட்டன. கர்மாவைக் கண்டதும் அவள் திடுக்கிட்டு நின்றாள். பிறகு முட்டைக்கோசு வயலைத் தாண்டிப்போகத் தொடங்கி னாள். அவளைப் பார்த்து கிழவன், 'நடபுள்ளே! நாங்களும் ஊட்டுக்குத்தான் வாறோம்" என்றான்.

கிழவன் கைகால் கழுவிக்கொண்டு வயலிலிருந்து வந்தான்— "போவலாம் தம்பி வா" என்றான்.

அந்தக் குட்டி கேட்டாள், "இது யாருப்பா?"

"கரடி வித்தைக்காரன்"

"துத்! சட்"

கர்மா வெட்கிப் போனான்– அவனுடைய மூஞ்சி கரடி வித்தைக் காரன்போல இருக்குதா என்ன? கிழவன் கேட்டான்—"நீ ரிலீவிங் பாபுவின் வேலைக்காரன் இல்லே?"

"இல்லை, வேலையாள் இல்லே– சும்மா பாபுஜிகூட இருக்கேன் அவ்வளவுதான்."

"சும்மாவா? கூடவா? சம்பளம் எவ்வளவு கிடைக்குது?"

"கூட இருந்தா சம்பளம் கிடைக்குமா என்ன?"

கிழவன் ஹுக்கா புகையை இழுக்க மறந்தான். "என்ன சொல்றே தம்பி! சும்மா, சம்பளம் இல்லாத வேலையாளா?"

கிழவன் முற்றத்தை நோக்கிக் கூவினான், "சரஸதியா, உன் அம்மாவைக் கொஞ்சம் அனுப்பு இங்கே– வேடிக்கையான ஒரு ஆளு வந்திருக்கு இங்கே–"

கிழவி தட்டி மறைவில்தான் நின்று கொண்டிருந்தாள். உடனே வந்துவிட்டாள். கிழவன் அவளைப் பார்த்து, "இதப்பாரு, வாட்ட சாட்டமான இந்த இளவட்டத்தை! ஒரு வயிறு சோற்றுக்காக நாளெல்லாம் உழைக்குறானாம்..! ஏம்ப்பா! கட்டறதுக்கு துணிமணி யாவது கிடைக்குதா..? உன்னைப் பார்த்துத்தான் சொல்லியிருப் பாங்க—சாப்பாட்டு ராமன், சோத்துப் பண்டாரம் அப்படீன்னு!"

முற்றத்தில் மெல்லிய குரலில் சிரிப்பொலி. கரடி வித்தைக்காரன் பக்கத்தில் எங்கேயோ வேடிக்கை காட்டுகிறான்-உடுக்கையை இப்படி வேகமாக அடிக்கும்போது கரடி கையை வீசிக்கொண்டு தபுக்கு தபுக்கென்று ஆடுமே-மூக்கை உயரத் தூக்கிக்கொண்டு. வித்தைக்காரன் கரடியிடம் இப்படித்தான் சொல்வான்—'நல்லா ஆடிக் காட்டினே தம்பி. இப்ப அய்யாமாருக்கெல்லாம் காட்டு, கொணம்கெட்ட பொம்புளை புள்ளையை மடியிலே போட்டுகிட்டு எப்படி குறட்டை விடுதுன்னு காட்டு. சபாஷ் தம்பி!'

கை கொட்டிச் சிரிப்பு கும்மாளம்!

"பேரு என்ன சொன்னே! மரம்சன்னா? பேரு ரொம்ப லட்சண மாத்தான் இருக்குது. ஆனா, வேலையோ? வேலை அடுப்புச்சன்?"

கர்மா வெட்கிப் போனான். பேச்சைத் திசை திருப்ப நினைத்து, "உங்க கொல்லைக் கத்தரிக்காய் ரொம்ப நல்லா இருக்கு. அப்படியே வெண்ணெய்போல.." கிழவன் புன்னகைத்தான்.

கிழவியின் சிரிப்பு கர்மாவின் உடலுக்குப் புத்துயிர் அளிப்பதாக இருந்தது. "பாவம் தம்பியை மூச்சு விடத்தான் விடுங்களேன். அப்ப பிடிச்சு வதைக்கிறீங்களே உடாமெ," என்று அவனுக்காகப் பரிந்து கொண்டு வந்தாள்.

"இது என்ன, மீனா? பாபுஜிக்கு எடுத்திட்டுபோறே போல!"

"இல்லே, சும்மாத்தான்-வழியிலே பிடிச்சது.."

"சரசுதியின் அம்மா! விருந்தாளிக்கு அவலை வறுத்து, மீன் கறியோட கொடேன்.. ஏம்ப்பா ஒரு நாளைக்காவது இன்னொருத்தர் கையாலே பண்ணின மீன்கறி சாப்பிட்டுப் பாரு!"

அவன் சிற்றுண்டி சாப்பிடும்போது யாரோ அண்டை வீட்டுக்காரி கேட்பது கர்மாவின் காதில் விழுந்தது—"ஏ, சரசுதியின் அம்மா! எங்கிருந்து விருந்து?"

"கடிஹார்லேயிருந்து."

"யாரது?"

"நம்ம குடும்பம்தான்."

"கடிஹாரிலே உங்க குடும்பம் எப்பப் பிடிச்சு இருக்குது?"

"இப்பத்தான், கொஞ்சநாளாச்சு."

மீண்டும் மெல்லிய குரல் சிரிப்பு. கரடிவித்தை காட்டுமிடத்தில் பலருடைய சிரிப்பொலி.

-ஹுக்காவில் நெருப்பு வைத்து ஊதும்போது சரசுவதியின் கன்னங்கள் சாத்துக்குடி போல உருளுகின்றன. கிழவி அன்புடன் கேட்டாள், 'ஏன் தம்பி, தந்திக் கம்பி வழியா மனுசன் பேசற பேச்சு எப்படிப் போவுது? கொஞ்சம் வெளக்கமாச் சொல்லேன்!"

அவன் கிளம்பும்போது கிழவி அவனிடம் மெல்லிய குரலில் கூறினாள், "கிழவனார் ஏதாச்சும் தப்பாச் சொல்லியிருந்தா மனசிலே வெச்சுகிடாதே தம்பி. வயசுப் பையன் இறந்து போனப்புறம் இப்படித் தான் ஏடாகூடமா ஏதோ பேசறாரு- நெஞ்சிலே வேகிற புண்ணு-"

"இன்னொரு நாள் வாப்பா."

"உன் சொந்தவீடுன்னு நெனச்சுக்க."

திரும்புகையில் கர்மா தன் முதுகின் மீது மூன்று ஜோடிக் கண்களின் ஒலி பாய்வதை உணர்ந்தான். கண்கள் அல்ல அவை; சிக்னல்கள்-'டிஸ்டன்ட் சிக்னல், ஹோம் சிக்னல், பாயின்ட் சிக்னல்களின் சிவப்பான வட்டமான வெளிச்சம்!!

எந்த வயலில் கர்மா மீன் பிடித்தானோ, அதனருகே ஒரு பெரிய பாம்பு உட்கார்ந்திருந்தது. காலடி ஓசை கேட்டு அது புஸ்புஸ் என்று ஓடியது- என்ன ஆச்சரியம்! அவன் விட்டுவிட்டுப்போன இடத் திலேயே உட்கார்ந்து நாய் வழி பார்த்துக் கொண்டிருந்தது. கர்மாவைக் கண்டதும் ஒரே களிப்பும், கும்மாளமுமாக வாலாட்டியது.

ரெயில்வே லைனுக்குள் காலடி எடுத்து வைத்தபோது, கிழவன் தன்னை ஏய்த்துவிட்டதாக கர்மா எண்ணமிட்டான். மூணு ரூபா பெறுகிற மாங்குர் மீனை வாங்கிக்கொண்டு ஒருபிடி அவல் கொடுத் தான் சாப்பிட. நாலு வார்த்தை பேசினான் இனிப்பும், காரமுமாக-

கர்மா மீன்பிடித்த கதையைத் தன் மனதுக்குள்ளேயே வைத்துக் கொண்டான். ஆனால் பாபுஜிதான் மனசுக்குள்ளாற இருக்கிறதத் தெரிஞ்சுக்கற 'சித்துவேலை'யெல்லாம் படிச்சவராச்சே! நாலு முழ தூரத்திலிருந்தே கேட்டார், "கர்மா, உன்னோட உடம்பிலிருந்து பச்சை மீன் வாசம் வீசுதே! மீன் கொண்டு வந்திருக்கியா என்ன?"

-கர்மா என்ன பதில் சொல்லுவான்? வாழ்நாளில் முதல் முறையாக அவன் ஒரு பாபுஜிக்கு இன்று துரோகம் செய்திருக்கிறான்- மீனைப் பார்த்திருந்தா பாபுஜி துள்ளியிருப்பார் சந்தோஷத்திலே!

பதினைந்து நாட்கள் இப்படியே ஓடிவிட்டன. இப்பத்தான் இரவு வண்டியில் டேசனின் நிரந்தர ஸ்டேஷன் மாஸ்டர் வந்து சேர்ந்தார்- குழந்தை குட்டிகளுடன். பதினைந்து நாளாக மௌனம் குடி கொண்டிருந்த ஃபேமிலி குவார்ட்டர்ஸில் ஒரே கும்மாளம். காலை வண்டியிலே கர்மா தன்னுடைய பாபுஜியுடன் ஹெட் குவார்ட் டருக்குத் திரும்ப வேண்டும்- அப்புறம், மணிஹாரி காட்!

-இல்லை- இன்னிக்கு இரவும் கர்மாவுக்குத் தூக்கம் வராது. இல்லை, இல்லை, வார்னிஷ், சுண்ணாம்பு நெடி வீசவில்லை- பாபுஜி

நிச்சிந்தையாகத் தூங்குகிறார். இந்த பாபுஜி கோபால் பாபு மாதிரியே தான். மனசிலே துளியாவது கள்ளம்-கபடம், பற்று-பாசம் இருக்க வேண்டுமே, கிடையாது- கர்மாவின் மனம் தவிக்கிறது. இப்படி ஒரு நாளும் நடந்ததில்லை- மறுபடியும் இன்னொரு நாள் வா. இது உன் குடும்பம்தான்- சாப்பாட்டு ராமன்!

-திடீரென்று கர்மா ஒரு வினோதமான நெடியை உணர்ந்தான். அவன் எழுந்தான். எங்கிருந்து வருகிறது இந்த வாசம்? பேசாமல் அதை முகர்ந்து கொண்டே முன்னே நடந்தான். ரெயில்வே லைனில் காலடி எடுத்த வைத்ததுமே எல்லா சிக்னல்களும் ஒளி வீசின—ஹோம், டிஸ்டன், பாயின்ட் எல்லாம்—விசில் அடிக்கும் ஒலி உரக்கக் கேட்டது- ஃபேமிலி குவார்ட்டரிலிருந்து ஒரு பெண்பிள்ளை 'திருடன், திருடன்' என்று கூவினாள். அவன் ஓடலானான். ஒரு இஞ்சின் பின்னாலேயே ஓடி வருகிறது- மகஹியாடோமின் மகள்-! அவன் கூடாரத்தில் ஒளிந்து கொண்டான்- சரசுதியா குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கிறாள். டோம் பெண்ணின் பரட்டைத் தலைமுடி, குளிக்காத உடம்பின் நாற்றம் கர்மாவின் உள்ளத்தைத் தாக்குகிறது- அவன் பயந்து போய் சரசுவதியின் மடியில் தன் முகத்தைப் பதித்துக் கொள்கிறான்- ரெயில், கப்பல் இரண்டின் ஓலங்களும் ஒரே நேரத்தில் எழும்புகின்றன. சிக்னலின் சிவப்பு நிற ஒளி-

"கர்மா! எழுந்திரு! கர்மா, சாமானை வெளியே எடு."

-வாசகங்களின் கடலில் முழுகியிருக்கிறான். அவன் எழுந்து சட்டையை அணிந்துகொண்டான். பாபுஜியின் பெட்டியை வெளியே எடுத்தான். வாட்டர்மேன் பாண்டேயிடம், "தப்பா ஏதாச்சும் பேசி யிருந்தா மன்னிச்சுக்குங்க!" என்றான் கர்மா. அப்பொழுதும் கூட தன் போக்கில் முழுகித்தான் இருந்தான்.

-வண்டி வந்தது. பாபுஜி தன்னுடைய பெட்டியில் ஏறி அமர்ந்தார். கர்மா அவருடைய பெட்டியை வண்டியில் ஏற்றினான்- அவன் சர்வென்டு பெட்டியில் ஏறவேண்டும். "எல்லாம் ஏற்றியாச் சாப்பா! ஒண்ணும் விட்டுப்போகலியே?" பாபுஜி கேட்டார். கார்டு விசில் கொடுத்தார். கர்மா பார்த்தான். பிளாட்பாரத்தில் குந்திக் கொண்டிருந்த நாய் அவனைப் பார்த்து 'கூங்- கூங்' என்று கூவிக் கொண்டிருந்தது- ரொம்ப வருத்தம் போல அதற்கு!

"பாபுஜி!"

"என்ன?"

"நான் வரலே." கர்மா ஓடுகிற வண்டியிலிருந்து இறங்கினான். தரையில் கால் வைத்ததும் சற்றுத் தள்ளாடினான். ஆனால் சமாளித்துக் கொண்டு விட்டான்.

(1964)

# உச்சாடன மந்திரம்

அவன் நினைத்த மாதிரியேதான் நடந்தது. அப்படியே அந்தக் காட்சி நடக்கத் தொடங்கியது. வருஷக்கணக்காக மனதில் 'நினைத்தது' எழுத்துக்கு எழுத்து பலித்தது. இரவு வண்டியில் அவன் திரும்பியிருக்கிறான் இரண்டு வருடங்களுக்குப் பிறகு. இந்த 'குரங்குப் பிடி' மிஸ்ராவுக்கு எப்படியோ சேதி தெரிந்துவிட்டது. வெள்ளி முளைக்கும் போதே அந்தப் 'பாப்பாரச் செட்டி' கட்கட் என்று மிதியடிகளை ஓசைப்படுத்திக்கொண்டு வந்துவிட்டான் வாசலுக்கு. வந்ததுமில்லாமல் காறிக் காறித் துப்பிக் கொண்டிருக்கிறான் வாயிற்படிக்கு முன்னால்.

முதலில் இது ஏதோ காலை நேரத்துக் கனவு என்று தோன்றியது. இரண்டு ஆண்டுகளாக மனதில் உருவகப்படுத்திய காட்சி காலை நேரத்துக் கனவுபோல ஆரம்பித்துவிட்டது.

இருமி இருமி, கபம் துப்பித்துப்பி தொண்டை நாளத்திலிருந்து கழுதை கனைக்கும் அழகில் குரல் வெளிவந்தது, "பிலஸ்- வா-ா-ா!- ஆக்ஹ-த்-தூ-!"

அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த அவனுடைய வீட்டுக்காரி அடித்துப்புரண்டு எழுந்தாள். அவிழ்ந்திருந்த சேலையைச் சரிசெய்து கொண்டே அரற்றினாள், "மிசிரா மகாராஜ்?"

-மகாராஜ்? கனவு இல்லை. நிஜமாகவே வந்துவிட்டார்.

அவனுக்கு வியப்பாக இருந்தது- நினைத்தபடியே நடக்கிறதே என்று. இது இப்படித்தான் நடக்கும் என்று அவன் எதிர்பார்த்திருந்தான். அப்படியே நடக்கையில் முழு மூச்சுடன் எதிர்த்து நிலைமையை இப்படி எப்படி சமாளிக்க வேண்டும் என்று கடந்த இருபத்து நான்கு மாதங்களாகக் கருவிக் கொண்டிருந்தான். இந்த அளவுக்கு ஆயத்தமாக இருந்தும்கூட அவனுடைய மனம் படபடத்தது. எலும்புகளுக்குள் பதுங்கியிருந்த பழைய அச்சம் தலை தூக்கி தாடை எலும்புகள் கடகடவென ஆடின. கன்னமும், செவி மடலும் ஜிவ்வென்று சிவந்தன. நாடகத்திலே படுதா உயர்ந்ததும் திடீரென்று 'வசனம்' மறந்து போனது போன்ற தடுமாற்றம்.

தன்னுடைய வீட்டுக்காரியின் கண்களில் உறக்க மயக்கத்திற்குப் பதிலாக இப்போது பயம் கவ்வியிருப்பதை அவன் கண்டான். அவளது விழிகள் கேட்டன, "மிசிரா மகாராஜுக்கு என்ன பதில்-?"

வீட்டுக்காரியின் கலவரமடைந்த கோலத்தைக் கண்டு அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டான். இடை ஸ்தாயியில் ஆரம்பித்தான், "உன்னோட மகராஜுக்கா-! ஏன் இப்படி விறைச்சிக்கிட்டு நிற்கிறாய்-? பாக்கிறாயா வேடிக்கை?"

அதற்குள், வெளியே மிஸ்ரா இருமலின் முதல் கட்டத்தைத் தாண்டிச் சமாளித்து விட்டார். இப்போது அவர் குரலில் இயல்பாக மணியடித்தாற்போல ஒலித்தது, "பிலஸியா-ா-ா!"

அவன் வெளியே முற்றத்துக்கு வந்து பார்த்தான். கிழட்டுத் தாய் எங்கோ மூலையில் பதுங்கிக் கிடந்தாள்-துணி மூட்டை போல. கையில் பிடித்திருந்த ஹுக்காவைக் குடிக்கவில்லை அவள்- ஹுக்காவின் 'குடு குடு' ஒலி கேட்கவில்லை. மிஸ்ராவுக்குத் தெரிந்துவிடுமோ என்ற பயம்!

தங்கப் பொத்தான் வைத்த 'புஷ்கோட்டு' அணிந்து அவன் முற்றத்திலிருந்தே பதிலளித்தான், "யார் ஐயா-? யாரு வேணும்? இந்த மாதிரி ரகளை பண்றது யாரு?"

இந்த மாதிரி அம்பு போன்ற சொற்களைக் கேட்ட அவனுடைய தாயும் தாரமும் மட்டுமல்ல, வாசலில் நின்றிருந்த எழுபத்திரண்டு வயதுக் கிழவர், இந்தக் கிராமத்துக்கே தலைவர் மிஸ்ராவும் விக்கித்துப் போனார்கள் 'இவன் மயக்கத்திலே பேசுகிறானா?'

அவனுடைய வீட்டுக்காரி சின்னக் கட்டிலைத் தூக்கிக்கொண்டு வாசல் பக்கம் போக ஆரம்பித்தாள். அவன் அதட்டினான்-"எங்கே போகிறாய் கட்டிலெ எடுத்துக்கிட்டு, இடுப்பைக் குறுக்கிக்கிட்டு? போ, அடுப்பைப் பத்த வச்சிசுட்டு தண்ணி வை"

முற்றத்திலிருந்து வெளியே வந்து அவன் சாவகாசமாக பீடிப் புகையை ஊதிவிட்டான்- ஊஹும், இத்தனை நாளாக உருப்போட்ட வசனங்கள் அவனுக்கு எப்படி மறந்துபோகும்? கடுப்புடன் கேட்டான், "சொல்லுங்க, என்ன வேணும்?"

மிஸ்ராவை வாயடைக்கச் செய்ய இந்த ஒரு வார்த்தை போதுமே கும்பிடவில்லை, காலைத்தொட்டு வணங்கவில்லை? முகத்துக்கெதிரே பீடிப் புகையை வேறு உமிழ்கிறான்-

"அட, நீ ஒரேயடியா மாறிப்போயிட்டே பிலஸியா!"

- என்ன ஆச்சரியம்! அவன் நினைத்தபடி அதே வார்த்தையை அல்லவா கேட்டார் மிச்ரா-

அவன் இந்தக் கேள்விக்கு விடையாகத் தயாரித்து வைத்திருந்த வசனத்தைப் பேசினான், "பிலஸியா-பிலஸியான்னு யாரைச் சொல் றீங்க? என் பேரு ராமவிலாஸ்- ஆமா, ராமவிலாஸ் ஸிங்."

ராமவிலாஸ் அம்மாவுக்குக் குரல் கொடுத்தான், "ஆத்தே, போயி ஒரு கூடை சாணியும், துடைப்பக் கட்டையும் எடுத்துக்கிட்டு வா-!"

ராமவிலாஸின் வீட்டுக்காரி தன் மாமியாரைப் பார்த்தாள்-

'என்ன ஆச்சு இவருக்கு? முதல்லே சுடு தண்ணி வைன்னாரு, இப்ப என்னடான்னா, சாணியும், துடைப்பக் கட்டையும் கேக்குறாரே!'

குரலில் நடுக்கம் தொனிக்க கிழவி முற்றத்திலிருந்தே கேட்டாள், "துடைப்பமும், சாணியும் எதுக்கு மவனே?"

மிஸ்ராவின் கண்கள் விரிந்தன. வேகவேகமாக மூச்சு இரைக்கும் ஓசை கேட்டது. அவமானம், கோபம், பயம் காரணமாக மிஸ்ராவின் தொண்டை மீண்டும் கரகரத்தது. இருமலை நிறுத்தும் முயற்சியில் வாயும், முகமும் கோணின வயிற்றிலிருந்து "அபான வாயு!"

"சுடு தண்ணி எதுக்குன்னு மருமக கேக்குது." இது அம்மா.

ராமவிலாஸ் கடுப்படைந்தான். "உடமாட்டியே நீ! தண்ணி எதுக்கு துடப்பம் எதுக்குன்னு கேள்வி மேலே கேள்வி, வந்து பாரு இங்க, எப்படி வாசப்படி எல்லாம் கோழை துப்பி அசிங்கப்படுத்தி யிருக்காருன்னு- ஏ- ஏய் மிசிராஜி, துப்பணும் கொள்ளணும்னா வயக்காடு கிடக்குல்ல, சீச்சீ- இப்படியா?"

மிஸ்ரா இருமலை அடக்க முயன்றார். குபுக்- அவருடைய மேல்துண்டெல்லாம் கபமும் கோழையுமாக ஒரே அசிங்கமாகிவிட்டது.

ராம்விலாஸ் வெறுப்புடன் முகத்தைக் கோணிக்கொண்டு "இந்த மாதிரி அடங்காத இருமல்னா வீட்டுலே படுத்துக் கிடக்குறதுதானே, எதுக்கு அலையுறீங்க கிராமத்திலே- இந்த நோயை வச்சு வளத்துக் கிட்டிருக்கீங்க, வைத்தியம் செஞ்சுக்கக் கூடாது-? போட்டோ எடுத்துப் பாருங்க, டிபி கீபி வந்திருக்கப் போவுது!"

மிஸ்ராவின் இருமல் காரணமாகக் காட்சி அலங்கோலமானது. ராமவிலாஸ் நினைத்து வைத்திருந்த மாதிரி காட்சி அமையவில்லை. இருந்தாலும் 'டிபி கீபி என்று சொல்லி ராமவிலாஸ் சீண்டியதால் மிஸ்ராவால் சும்மா இருக்க முடியுமா?—"வாயை மூடுடா ஒக்கா- டிபி வரட்டும் உனக்கும் உன் புள்ளைக்கும்-!"

இப்படி மிஸ்ரா வசனம் தப்பி வசனம் பேசலானார்.

"ஏண்டாப்பா, இப்ப இந்த வயசிலே என்ன வைத்தியம் என்ன மருந்து பாக்க? டிபி. வந்தா என்ன, ஆஸ்துமா வந்தா என்ன, போகவேண்டிய வேளை வந்தாச்சில்லே."

-போன வருஷம் இப்படித்தான், மகேந்திரபுர் பேட்டையில் துர்க்கா பூஜை 'டிராமா' நடந்து கொண்டிருந்தது. வேடம்போட்டு ஆடிக் கொண்டிருந்த வெற்றிலை பாக்குக்கடை ஜுகல் மஹ்தோ இந்த மாதிரித்தான் ஆட்டத்தைக் கெடுத்தான். கொலையாளி வேடமணிந்து இறங்கினான். வாளை உயர்த்தி வெட்டும்போது பேச வேண்டிய வசனம் மறந்துவிட்டது. கன்னா, பின்னா என்று ஏதோ வசனம் பேசி, வாளைத் தூர எறிந்து மேடை மேலேயே அழத் தொடங்கிவிட்டான்- மிஸ்ராவும் அழுகிறாரோ? இல்லை, மூக்கைத் துடைத்துக் கொள்கிறார்.

மிஸ்ராவும் திகைத்தார்- 'இது என்ன, வெள்ளமாக் கொட்டுதே. எப்பவும் மூக்கு ஒழுகும், இப்பொ, அதை அடக்கப் போயி ஏகமாகக் கொட்டுது!'

ராமவிலாஸின் கிழட்டுத்தாய் கையில் துடைப்பத்துடன் வந்தாள்–"கும்புடறேன் மகாராஜ்!"

கிழவி கையில் துடைப்பத்துடனேயே குனிந்து வணங்குறாளே!

"ஹரி! ஹரி! ஹரி! இந்தத்தடவை பில்டீ ராமவிலாஸ் பாபு! கண்ணியம் - மானத்துடன் திரும்பப் போகணும்னு வேண்டிக்கறேன். இப்படியே நடந்து வந்துக்கிட்டிருந்தேன். பில்டீ ராமவிலாஸ் பாபு திரும்பி வந்தாச்சுன்னு கேள்விப்பட்டேன்- ரொம்ப சந்தோஷம்- பேஷ், நல்லா முன்னேறியிருக்கே தம்பி! நல்லாயிரு."

இப்பொழுது ராமவிலாஸ் என்ன பதில் சொல்ல-? பார்ட்டுக்கு ஏற்ற வசனமல்லவே!

"நீங்க பாக்கிப் பணத்தை வசூலிக்க வந்துட்டீங்களோன்னு நெனச்சேன். ராத்திரி வந்ததுதானே- எங்கேயாச்சும் ஓடிப்போயிடப் போறேனா-? நல்லது. வந்தது வந்தீங்க, பணத்தை வாங்கிட்டுப் போங்க."

கிழவி கேட்டாள் "தண்ணி சூடாயிடுச்சி என்ன செய்யணும்னு கேட்கிறாள் மருமவ?"

"ஒவ்வொரு விசயமும் கேட்டுத்தான் செய்யணுமா? தண்ணி சூடாயிடுச்சின்னா டீ போடட்டும்."

"பண விசயம் எல்லாம் பிறகு பார்த்துக்கலாம். இப்ப என்ன அவசரம்?" என்றார் மிஸ்ரா.

"இல்லே வந்து." மிஸ்ரா எழுந்து போகும்போது கூட பிலஸியா காலைத்தொட்டு வணங்கவில்லை.

ராமவிலாஸ் தன் சூட்கேஸைத் திறந்து தேயிலை, சீனி, கப் எல்லாவற்றையும் வெளியே எடுத்தான். மருமகள் கூறினாள், "இப்ப, மிச்ரா மகாராஜ் அல்வாபோல மெதுவா ஆயிட்டாரு. அம்மாகிட்டே கேட்டுப்பாருங்க, மாசம் ரெண்டு தடவையாச்சும் அப்பனும் மவனும் என்ன கூத்தடிச்சாங்கோ- எருமை மாட்டை ஜப்தி பண்ணுவம் அப்படீ இப்படீன்னு- யம்மோவ்!"

"இந்த விசயத்தை ஏன் அப்பச் சொல்லலே? வாயிலே என்ன இருந்தது, வாழப்பழமா?"

ராமவிலாஸுக்கு நன்றாக நினைவிருந்தது. மிஸ்ராவின் சுடுசொல் பொறுக்க மாட்டாமல்தான் அவன் 'சபதம்' செய்து வீட்டிலிருந்து ஓடினான்–பட்டணத்தைப் பார்த்து, பணம் சம்பாதிக்க! 'மிச்ரா என்ன கொடுமையாப் பேசினாரு- பாவிப்பயலே, பணத்தை வாங்கிட்டுப் கால்மேலே காலைப்போட்டு தூங்கிக்கடா நிம்மதியா- என் பணத்தைத் திருப்பித் தரணும்ங்கிற நினைப்பே இல்லாமல்- அடே? உன்கிட்டெ பணம் இல்லேன்னா எப்படிடா நெதமும் அப்பம் தின்னறே?'

படுபாவி, இந்தச் சொல்லை நினைச்சா இன்னிக்கும் காதெல் லாம் ஜிவ்வுங்குது.

"மகனே, இப்ப என்னத்தைச் சொல்ல? அன்னிக்கு மிச்ராவின் மூத்தமகன் பால் வாங்க வந்தான். பால் எல்லாம் வித்துப் போயிருந்தது. எங்கேயிருந்து கொடுக்க? ஏனத்தை எடுத்திட்டுப் போறப்ப, நாக்கு மேலே பல்லைப் போட்டுச் சொல்றான், 'காலம் மாறிப்போச்சு. இல்லாட்டி இந்தத் தெருவிலேயிருந்து எருமைப்பாலுக்குப் பதிலா பொம்பளைப் பாலு கறந்து வந்திருப்பாங்க எங்க சிப்பாய்ங்க தெரியுமா?' அப்படீன்னு"

"பொம்பளை பாலா? ஈனப்பயல், நாக்கை அறுக்க வேண்டாமா?"

"ஏ புள்ளே, சூட்கேசிலே புது ரவிக்கை வச்சிருக்கு, எடுத்துப் போட்டுக்க. இங்கிலீசு ப்ளவுசு."

பொழுது விடியும் போதே கிராமத்தில் சேதி பரவியது.

பிலஸியா திரும்பி வந்திருக்கிறான் நேத்து ராத்திரி. சாக்கிரதை, இப்ப யாரும் அவனை பிலஸியான்னு கூப்பிடக் கூடாது. மிச்ராஜியை காலங்காத்தாலே நின்ன நிப்பிலே தோலுரிச்சிட்டான். சொன்னானாம். 'பிலஸியான்னு கூப்பிடாதீங்க, ராமவிலாஸ்னு சொல்லுங்க. மிச்ரா மூஞ்சிலே இருநூறு ரூபா கத்தை நோட்டை வீசி எறிஞ்சிட்டானாம்—ஆமா, அவனோட சட்டைப் பாக்கெட்டிலே 'லைசன்சு' இருக்காம், கவர்மெண்டு முத்திரை போட்டது. பட்னாவில் 'ரிக்ஷா-டெலிவரி' அல்ல செய்யறான். கவர்மேன்டு முத்திரைக் கட்டாயமா கிடைச்சிருக்கும்—அப்புறம் ஒரு விசயம் பொஞ்சாதியைப் பேரைச் சொல்லிக் கூப்பிடறானாம், 'ஏ, ஜூம்கீ!'

ராமவிலாஸின் பெண்சாதி ஜூம்கி அந்தச் சிவப்பு ரவிக்கையை அணிந்துகொண்டு தண்ணீர் மொண்டு வரப்போனாள். அவ்வளவு தான், கிராமத்துப் பெண்கள் அவளை அப்படியே சூழ்ந்து கொண் டனர். "அடி ராசாத்தி, நாங்களும் பாக்கட்டும் பார்சிக்காரி ரவிக்கை. துரைசாணிங்க போடுற மாதிரியல்லவா இருக்கு! வயிறு தெரிஞ்சுக் கிட்டு. அடி ஆத்தே, இம்மாத்துண்டு ரவிக்கைக்கு அஞ்சு ரூவாயாமே! பொத்தானே கிடையாதா? எப்பவுமே இந்த மாதிரி உடம்போட ஒட்டினாப்பல இருக்குமா? இந்த சேலையும் வாங்கியாந்திருப்பாரே! ராத்திரி எப்ப வந்தாரு? மொதச் சாமத்திலேயே வந்தாச்சா?"

ஜூம்கி வெட்கிச் சிரித்தவாறு பதில் சொல்கிறாள். "நம்ம வூட்டுக்கு லாடம் போட்ட செருப்போட வந்தது யாருன்னு நான் பயந்தே போயிட்டேங்கா! உக்கிராணத்துக்குப் பின்னாலே போயி ஒளிஞ்சுக்கிட்டேன். மூச்சை அடக்கிக்கிட்டு பட்டணத்துக்குப்போனா ஆளுங்க குரலே மாறிடும்போல! யாரு என்னான்னு புரியவே இல்லே. ஆனா, கருத்த எருமைக்கு மட்டும் எப்படியோ குரலைப் புரிஞ்சுடிச்சு. ஊய் ஊய்னு கத்திக்கிட்டு கயித்தை அறுத்துக்கிட்டு முற்றத்திலே

ஓடி வந்திச்சு. வந்து உடம்பை நக்குது பாரேன்- வந்ததுமே ஏச ஆரம்பிச்சுட்டாரு- உங்க எல்லாரையும் விட என்னோட இந்த கருத்த எருமைதான் உசத்தி- மனுசனைவிட எத்தனையோ மேல்-"

"அப்புறம்? ராத்திரி அந்நேரத்துக்கு சாப்பிட என்ன குடுத்தே?"

"என்னத்தைச் சொல்ல அக்கா? நேத்திக்குப் பாத்து ஊட்லே எதுவுமே கிடையாது. நல்ல வேளையா தயிரு உறைஞ்சிருந்திச்சு- தயிரைச் சாப்பிட்டுக்கிட்டே சொல்றாரு, "இப்பவும் பாரு எருமை மட்டும் கை குடுக்கலீன்னா ராத்திரிக்குப் பட்டினிதான்."

"பொறவு என்ன நடந்தது?"

"ரவிக்கையை ராத்திரியே போட்டுக்கிட்டியா?"

"வாசனைத் தைலமும் வாங்கியாந்திருப்பாரே!"

"பட்டணத்துக்குப்போயி ஆளுங்க குரல்தான் மாறுமா, இல்லே-"

ஜூம்கி பெருமிதமாகப் புன்னகைத்தாள். தண்ணீர் எடுக்க வந்த பெண்களும் சிரித்தனர். எல்லாருக்குமே ஜூம்கியின் சிவப்பு ரவிக்கை மிகவும் பிடித்திருந்தது. அந்த ரவிக்கையைப் போட்டுக்கொண்டு ஜூம்கி முன்னிலும் அழகாகத் தோற்றமளித்தாள்.

குளிக்கும்போது பெண்களும், சிறுமிகளும் சேர்ந்து ஒரே கொட்டம். எல்லாரும் ஜூம்கியின் 'மூன்லைட் சோப்'பை வாங்கி கையில் நுரைத்து உடம்பிலே தேய்த்துக் கொண்டார்கள். ஜூம்கி இனி நெதமும் சோப்புத் தேய்த்துக் குளிப்பாளா? அப்படீன்னா, பார்ஸிக்காரி-வங்காளி மாதிரி சிவப்பா ஆயிடுவா இல்லே?

சாயங்காலம் கடைக்குச் சென்றாள் நெற்றியில் பளபளக்கும் பிந்தி அணிந்துகொண்டு. வழியில் செவிட்டுச் சித்தியின் தெருவில் சிவதாரி நின்று கொண்டிருந்தான். ஜூம்கியைப் பார்த்து ஆள் அப்படியே அசந்துவிட்டான். "அம்மாடியோவ்! இனி நான் எப்படிப் பொளைக்க- என் கதி என்ன?"

"அய்ய, ரோட்டுலே நடக்கறப்ப கேலியும், கிண்டலும் எனக்குப் புடிக்காது."

-கேலியும் கிண்டலும் பிடிக்காதா? முகத்தை வலித்துக்கொண்டு முன்னே சென்றுவிட்டாள். வீட்டுக்குபோய் இதைச் சொல்லி விடுவாளோ என்று சிவதாரி பயந்துவிட்டான். பட்டணத்திலிருந்து வரும்போது பேரோடு கூட 'சிங்' சேர்த்துக்கிட்டு வந்திருக்கானா மில்லே! பட்டணத்துத் தண்ணி குடிச்ச ஆளு கிராமத்திலே எத்தினி நாளைக்கு இருப்பான்? இத்தினி நாளா நான்தான் எல்லாம். பார்த்துக்கிட்டேன் ஓடியாடி- எல்லாம் அவ்வளவுதானா?

அத்தனை பேருக்கு நடுவிலும் கடைக்காரச் செட்டிச்சி இதே விஷயத்தைச் சுற்றிவளைத்து ஜூம்கியிடம் சொன்னாள். "சாக்கிர தையா இரும்மா உன் மாமியார் கிட்ட தனியா இருக்கறப்ப மகனைக் கையிலே போட்டுக்கப் போறா. பசப்பு வார்த்தை பேசி, கிழவி

பணத்தைக் கையிலே வாங்கிடாமெ பார்த்துக்க..!"

ஜூம்கி புதுமருமகளைப்போல புடவைத் தலைப்பால் முகத்தை மறைத்துக் கொண்டு பதில் சொன்னாள். "சித்தி, யார் என்ன வேணும்னாலும் சொல்லட்டும். எனக்கு என்ன பயம்? ஆண்டவன் இருக்காரு. அண்டை, அசல் வீட்டுக்காரங்க இருக்காங்க. எல்லாருமே பார்த்துக்கிட்டுத்தானே இருக்காங்க. இந்த எருமை மாடு மட்டும் இல்லேன்னா என்ன ஆயிருக்கும்னு நினைச்சே பார்க்க முடியலே. ரெண்டு வருசத்தை எப்படித் தள்ளினோம்னு எல்லாருக்குமே தெரியும்."

ஜூம்கியும் விஷயத்தைச் சுற்றி வளைத்துப் பேசுவதில் கெட்டிக் காரி. எத்தனை சாமர்த்தியமாக, சிவதாரி விஷயத்தை இதனுடன் இணைத்து பதில் சொல்லிவிட்டாள் என்பதை எல்லாருமே புரிந்து கொண்டனர். அதாவது, சிவதாரி மட்டும் இல்லைன்னா எருமையை யாரு மேய்ப்பது?

ஜூம்கி தொடர்ந்தாள், "வீட்டுக்குப் பின்புறமா கொஞ்சம் நிலம் 'பட்டா'விலே கிடைச்சிருக்குது. நிலத்தை வச்சிட்டு என்னா செய்யிறது? அதை வெட்டுறதும், உழுறதும் பொம்பளைங்களாலே முடியுமா? இருபது ரூபாய்க்கு முட்டைக்கோஸு, கொஞ்சம் வெங்காயம், பூண்டு எல்லாம் விளைஞ்சுது. இதெல்லாம் ஒத்தையிலே முடியுமா..? இந்த கிராமத்திலே இருக்கறவங்களைப்பத்தி நான் சொல்லித்தான் தெரியணுமா? வாங்கிட்டுப்போறப்ப பாலும், தயிரும் நல்லாத்தான் இருக்கும் எல்லாருக்கும். பணம் கொடுக்கறப்ப மட்டும் கசக்கும். சந்தைக் கடையிலேயோ, மார்க்கெட்டிலேயோ எங்கே பார்த்தாலும் கேட்டுக் கேட்டுத்தான் பால்-தயிர் பணத்தை வசூலிக்க வேண்டியிருக்குது. இதெல்லாம் பொம்பளைங்க எங்கே செய்ய முடியும்.."

கடையிலிருந்து திரும்பிவரும்போது ஜூம்கி செவிட்டுச் சித்தியின் வீட்டுப்பக்கமாகச் சென்றாள். சிவதாரி முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு சணல் கயிறு நூற்றுக் கொண்டிருந்தான். ஜூம்கி சற்றே சிரித்துக்கொண்டு அவனிடம் சொன்னாள். "எனக்கு நிசமாகவே உன்மேலே கோவம். காலையிலிருந்து எல்லாரும் வந்தாங்க. நீ எருமையைக் கறந்திட்டு அப்படியே ஓடியாந்துட்டே..? காலையிலிருந்து பத்து வாட்டியாவது உன்னைப் பத்தி விசாரிச்சிருப்பாரு. கஸ்டமான நாளிலே எல்லாம் நீ என்னென்ன ஒத்தாசை செஞ்சே அப்படீங்கறது நீ வராட்டி எப்படித் தெரியும்? எனக்குத் தெரிஞ்சபடி நான் சொல்லியிருக்கேன்.. உனக்கு எதுக்காக பயம்? மடியிலே கனம் இருந்தாத்தானே பயப்படணும்?

ஜூம்கி தன் கூடையிலிருந்து பீடிக்கட்டு ஒன்றை எடுத்து வைத்தாள், "இந்தா, உன்னோட பீடியும், பாக்கும்.. இப்படி பயந்து ஒளிஞ்சிக்கிட்டிருந்தா.. அப்புறம் யாரானும் ஏதாச்சும் சொன்னா நம்பத்தான் தோணும், ஆமா, சொல்லிட்டேன்."

நிலைகொள்ளாது தவித்துக் கொண்டிருந்த சிவதாரியின் மனம் சற்றே அமைதி பெற்றது. போன உயிர் திரும்பிவந்த மாதிரி.. தன்னுடைய புத்தி மேயத்தான் போயிருந்தது- ஜூம்கியின் கோபம் நியாயமானதுதான்!

-ஜூம்கியின் காதில் ஆடும் குண்டலம்- சிவப்பு ரவிக்கை- பளபளக்கும் பிந்தி- உடம்பிலே இந்த மெருகும், மணமும்- உயிரை வாங்கும் சிரிப்பு!

சிவதாரிக்குத் தன் உடம்பு அனலாகக் கொதிப்பது போலத் தோன்றியது- தீப்பற்றிவிட்டதோ என்ற ஐயம் ஏற்பட்டது.

அவன் பீடிக்கட்டிலிருந்து ஒரு பீடி எடுத்துப் புகைத்தான். அவனுடைய ஊக்கமும், உற்சாகமும் படுத்துவிட்டது- எப்பொழுதும் ஆசை காட்டிக்கொண்டே இருந்தாள்- "நான் எங்கேயும் ஓடிப்போக மாட்டேன்லே?" அப்படியொரு கேள்வி வேறு.

—இனிமேல் ஒளிஞ்சு, மறைஞ்சுதான் சந்திக்க முடியும்.

சிவதாரி வெகுநேரம் வரையிலும் பீடிப்புகையை ஊதிக் கொண்டிருந்தான்.

ராம்விலாஸின் மச்சில் காலையிலிருந்தே பீடிப்புகை வளையங்கள் பலூன்போல உயர்ந்து கொண்டிருகின்றன. அடிக்கடி சிரிப்பலைகள் எழுகின்றன. வண்டித் தொடர்போல கிளுகிளுப்பூட்டும் கதைகள் சொல்லி நண்பர்களை மகிழ்விக்கிறான் ராம்விலாஸ். எல்லாம் பட்னா நகரத்துக் கதைகள்.

-இரண்டு வருசம் முன்னால் ஒரு சித்திரை மாதத்து நள்ளிரவில் வீட்டைவிட்டு ஓடிப்போனான் ராமவிலாஸ்-கிராமத்தைவிட்டு, மிஸ்ரா வீட்டு வேலையை விட்டு, மிஸ்ராவின் கடனை விழுங்கிவிட்டு.

—அடுத்த நாள் இந்த மச்சிலும், வீட்டு முற்றத்திலும் ஏகப்பட்ட சனங்கள். அவனுடைய தாய் அழுது புலம்பியவாறு மருமகளைக் குறை கூறினாள். "கண்ணாலத்துக்குப் பிறகுதான் செல்வமகனின் புத்தி மண்ணடிச்சுப் போச்சு. மாற்றான் வீட்டுப்பொண்டு வந்து என்னமோ துர்ப்போதனை செஞ்சிருக்கு. இந்த ஓடுகாலி வந்துதான் நான் வளர்த்த கிளியை வீட்டுவிட்டு விரட்டிச்சு."

ஜூம்கி சேலைத் தலைப்பை முகத்துக்கு முன் இழுத்து விட்டுக் கொண்டு கண்ணீர் விட்டவாறே கிழவியை மனதிற்குள் திட்டிக் கொண்டிருந்தாள். முளையிலே கட்டியிருந்த எருமைமாடு அடிக்கொரு தடவை- ஊ-யே-ங்-ஏ-ஏங்-ஏ-ங்- என்று அரற்றிக் கொண்டிருந்தது.

மிஸ்ராவின் சிப்பாய் ராமசிங்காசன் சிங் வந்து ஆகாத்தியம் செய்தான், "எனக்கு எல்லாம் தெரியும். ரெண்டு பேரும் நாடகம் ஆடறாங்க. பிலஸியா தானா ஓடிப்போகலே. அம்மாகிட்டெயும்,

பொஞ்சாதிகிட்டெயும் யோசனை கேட்டுக்கிட்டுத்தான் கிராமத்தை விட்டு நழுவியிருக்கான். எங்கதான் போவான் பாப்பமே.! அவன் வராட்டி இந்த எருமை இங்கே நிக்குமா? இழுத்துக்கிட்டு போயிட மாட்டேனா முதலாளி வீட்டுக்கு- ஒரு நா இல்லாட்டி ஒருநாள்."

"அந்தக் கயவாளி இப்ப எங்கே- வேலைலே இருக்கானா போய்ட்டானா?" ராம்விலாஸ் கேட்டான். இதைகேட்டு சேக்காளிகள் அனைவரும் ஆச்சரியத்துடன், "அண்ணே, உனக்குத் தெரியாதா அந்தக் கதை" என்றார்கள்.

இத்தனை நேரமும் பட்னா கதைகள் கேட்டபிறகு அதற்கு இணையாக 'கிராமத்துக் கதை-உண்மைக் கதையை' கூறும் வாய்ப்புக் கிடைத்தது கோத்னாவுக்கு.

"சொல்லு, கோத்னா நீயே சொல்லு."

"ராமவிலாஸ் அண்ணே, நீங்க இன்னிக்கு வீரத்தனம் காட்டினீங்க இல்லே, மிச்ராவை எதிர்த்து- இதைவிட பிரம்மாதமான சூரத்தனம் காட்டிச்சு பச்சியாலி தெரு முசம்மாதின் புது மருமகப் பொண்ணு- இந்த சிங்காசன் சிங்கு வேலைதான் தெரியுமே- எந்த வீட்டுக்குப் புதுமருமகப் பொண்ணு வந்தாலும் இவன் கண்ணிலே தூக்கம் கெட்டுப் போகும். மெள்ளப் பூனைகணக்கா ஊட்லே புகுந்து, உறியை ஆட்டாமலேயே வெண்ணையைத் துன்னுட்டு வந்திடுவான். ஆனா இந்த வெண்ணெய எல்லாம் வெளியே எடுத்திட்டுது முசம்மாதின் மருமகப் பொண்ணு-! கயவாளி சிங்கை கீழே புடிச்சி பிசைஞ்சு எடுத்தா பாருங்க, சிங்கு சப்த நாடியும் ஒடுங்கி பேச்சு மூச்சில்லாமெ கிடந்தான்-"

"ஆங்! அப்படியா?"

"கேட்டுப் பாரு எல்லார்கிட்டயும். கடைசியிலே அரரியா ஆஸ்பத்திரிலே ஆபரேசன் செஞ்சு வெரையைத் தட்டிப் போட்டாங்க. ஆஸ்பத்திரி டாக்டர் அய்யா கேட்டாராம், என்ன சிங்கு திரிவைக் கல்லுக்கு நடுவிலே போய் மாட்டிகிட்டே போல? ஆஸ்பத்திரி லேயிருந்து வந்த பொறவு பய இந்த கிராமத்துப் பக்கமே தலை காட்டலே. வெரைதட்டின காளை- ஹஹ்ஹ-ஹ்ஹா."

"இந்தப் பொம்பளைக்கு கவர்மெண்டுலே மெடல் கொடுக்கணும். இந்தக் கதை பட்டணத்திலே நடந்திருந்தா பேப்பர்காரன் அமக்களமா பேப்பர்லே எழுதியிருப்பான், போட்டோவோட-"

போட்டோ என்றதும் ராமவிலாஸுக்கு தன்னுடைய போட்டோ நினைவுக்கு வந்தது. ஜேபியிலிருந்து லைசன்சை எடுத்துக்காட்டினான். ஒவ்வொருவராக கையில் வாங்கி ஆச்சரியத்துடன் பார்த்தனர். போட்டோ போட்ட ரிக்ஷா-லைசன்சை- நிசம்தான், ராமவிலாஸ் பொய் சொல்லலே. இங்கே என்னடான்னா கதை உட்டானுக, சனங்க, "கிறிஸ்தானி ஓட்டல்லே பாத்திரம் விளக்குகிறான்"- சனங்கன்னா

யாரு, அந்த துபே வீட்டு மூத்த புள்ளையாண்டான்தான். பூணூலைப் பிடிச்சுக்கிட்டு சத்தியம் பண்ணினான், நான் என் கண்ணாலே பார்த்தேன் அப்படீன்னான்.

சிவதாரியைக் கண்டதும் எல்லாரும் மவுனமாகிவிட்டார்கள் சற்று நேரத்துக்கு- 'ராமவிலாஸுக்கு 'லாட்—ஸாட்' கதை தெரியுமோ என்னமோ? தெரிஞ்சா உசிரோடு வெச்சிருக்கமாட்டான்- விசயம் என்னிக்காவது தெரியத்தானே போவுது!' என நினைத்தனர்.

"என்னப்பா, சிவதரியா! காலையிலிருந்து காணோமே, எங்கே போயிருந்தே?"

"டேசனுக்குப் போயிருந்தேன் அண்ணே!"

ராமவிலாஸ் சம்சாரம் இப்பவே எதுக்கு தண்ணி மொள்ளக் கிளம்பிடிச்சி- பானைத் தண்ணியைக் கீழே சரிச்சிட்டுக் கிளம்பி யிருக்குது போல. சிவதாரியின் குரல் கேட்டால் அதுக்கு வீட்டுக் குள்ளே அடங்கிக் கிடக்க முடியுமா?

தண்ணீர் மொண்டு கொண்டுவந்த ஜும்கி தலைப்பால் முகத்தை மறைத்தபடியே சொன்னாள், "நான் தண்ணி எடுத்திட்டு வாறையிலே சகஜோ பெரியம்மா கேட்டிச்சு- ஏம்மா, உங்க ஊட்டுப் புறக்கடையிலேயிருந்து முஸ்லீம் வீட்டு வாசனை வருதே? கோழிக்கறி முட்டைக்கறி வைக்கிறீங்களா-?"

புரிந்தும், புரியாமலும் ராமவிலாஸ் உடனே பதில் கூறினான், "ஆமாம் குட்டி, நாளையிலிருந்து இங்கே கோழிக்கறிதான் வெக்கப் போறோம், எந்தப் பய என்ன சொல்றான் பார்க்கலாம்- உம், இதுவும் ஒரு ஊரா? உருளைக் கெளங்குக் கறியிலே கொஞ்சம் கரம் மசாலா போட்டப்ப கிராமம் முழுக்க கோழிக்கறி முட்டைக்கறி வாசனை அடிச்சுதாம்!"

"இந்தக் கிராமமே இப்படித்தான் அண்ணே. சிறகில்லாமலேயே பட்சியைப் பறக்கவிடறவங்க இங்கே நிறைய உண்டு." சிவதாரி சொன்னான்.

"பட்டணத்திலே எல்லாரும பொஞ்சாதி பேரைச் சொல்லித்தான் கூப்பிடுவாங்க. நான் எம்பொஞ்சாதிக்கு ஆயிரம்பேரு வச்சுக் கூப்பிடுவேன். இவங்களுக்கு என்ன வந்ததாம்?"

ராம்விலாஸ் தன் சம்சாரத்தைச் சத்தம்போட்டுக் கூப்பிட்டான், 'ஏ ஜும்கீ! சிவதரியா வந்திருக்கான் பாரு. அவனுக்கு ஒரு கோப்பை சாயா அனுப்பு."

"கேட்டீங்களா அத்தே, இந்தப் புருசன் பேசுற பேச்சை?" முற்றத்தில் மருமகள் தன் மாமியாரிடம் சொன்னாள்.

சம்பாதிக்கிற புள்ளையாண்டானின் சமர்த்தைப் பார்த்ததும் மசாலாவின் மணத்தை நுகர்ந்தும் கிழவி மகிழ்ந்து போயிருந்தாள், "பேச்சைப்பத்தி சொல்றியா? எந்த ஊருக்குப் போறாங்களோ அந்தப்

பேச்சும், வழக்கமும்தானே பிடிபடும்" என்றாள். "போக்கத்தவங்க இவங்க! நாம பகல்லே டீ குடிப்போம், ராத்திரியானா கள்ளுச்சாராயம் குடிப்போம், இவங்களுக்கு என்ன வந்ததுன்னு கேக்குறேன்— சிவதரியா? டேசன் பக்கத்துல உள்ள சாராயக்கடையிலே அசல் கள்ளு கிடைக்குமா, இல்லே தண்ணி சேர்த்து விப்பானா? இன்னிக்குப் பாரு, ரெண்டு பாட்டில் அடிப்போம்."

சிவதாரிக்குப் பாவம் கள்ளுச் சாராயத்தைப் பற்றி என்ன தெரியும்? அவன் கஞ்சாவைப் பற்றி வேணுமானால் சொல்லுவான்.

"ஏ ஜூம்கி, வா இந்தப்பக்கம்!– நீ ஏன் எப்பவும் முக்காடு போட்டிட்டிருக்கே?"

ஜூம்கி வெட்கத்துடன் முற்றத்துப்பக்கம் ஓடிவிட்டாள்.

எல்லாம் திட்டமிட்டபடியே நடந்தன. ராம்விலாஸ் பட்னாவில் உட்கார்ந்துகொண்டு என்னவெல்லாம் கனவு கண்டானோ அவை யெல்லாம் அப்படியே நனவாயின– மிஸ்ராவின் 'விஷப்பல்லை' அவன் பிடுங்கி எறிந்துவிட்டான். இந்த ஒரு வெற்றிக்காகவே கிராமத்தில் எல்லாரும் அவனை வாய்க்குவாய் புகழ்கிறார்கள். ஒவ்வொரு வீட்டிலும் குறைந்தது பத்துத்தடவையாவது அவனைப்பற்றிப் பேசாமல் இருக்கமாட்டார்கள்—புள்ளை பிறந்தா இப்படித்தான் பிறக்கணும்! ஆம்பிளை சிங்கம்!

அவனுடைய புறக்கடை மச்சு இப்போது கிராமத் தலைவர் களுக்கு மிஸ்ராவின் வாசல்திண்ணை ஆகிவிட்டது எப்பொழுது பார்த்தாலும் ஜேஜே என்று கூட்டம். இப்போது அக்கிரகாரத்து இளைஞர்களும், க்ஷத்திரிய வீதிப் பையன்களும்கூட இங்கே வந்து மணிக்கணக்காக உட்கார ஆரம்பித்துவிட்டனர். நாள்பூராவும் டீ, பீடி, சீட்டுக்கச்சேரி, பிறகு இரவில் இங்கிலீஷ் சீட்டு!

அன்று மிஸ்ராவின் மூத்த மகன் ராமவிலாஸின் மச்சில் சீட்டாடிக் கொண்டிருந்தான். அந்தி மயங்கியதும் ராமவிலாஸ் கேட்டான், "இப்ப இங்கிலீசு சீட்டு ஆடப்போறோம்– விளையாட நீங்களா? ஒரு மடக்கு!"

மிஸ்ராவின் மூத்த மகன் இப்போதெல்லாம் கால் பாட்டில் குடிக்கிறான், முழு பாட்டிலுக்கான விலையைக் கொடுத்துவிடுகிறான்.

கிராமத்து இளைஞர்கள் எல்லாருமே இந்த முறை ராம விலாஸூடன் பட்னா போகத்துடிப்பாக இருக்கிறார்கள். ராம்விலாஸ் கூறும் பட்னாக் கதைகளைக் கேட்டபிறகு எந்த இளவட்டத்துக்காவது கிராமத்தில் இருக்கப் பிடிக்குமா என்ன?

"ரஜின்னா நகரா! (ராஜேந்திர நகர்–பட்னா நகரின் ஒரு பகுதி) அடேங்கப்பா, அதன் அழகை இன்னிக்கெல்லாம் பேசிக்கிட்டே இருக்கலாம். சர்க்கார் இஞ்சினீயர்லே அப்படி ஒருத்தர் வாய்ச்சாரய்யா, நேரே இந்திரபுரிக்கே போய் போட்டோப்படம் எடுத்தாந்து அப்படியே

கட்டியிருக்காரு.. ரோட்டுக்கு இரண்டு பக்கத்திலேயும் கலர் கலரா பூச்செடிங்க, பக்கத்துக்குப் பக்கம் பூங்கா, ஒவ்வொரு பூங்காவிலேயும் ரம்பை மாதிரி பொண்ணு- பாட்டு பாடிக்கொண்டு."

"அப்ப நிசம்மாவே தேவலோகத்து இந்திர சபை-"

"இன்னும் கேளு! அங்கே தெருக்கூட்டற பொம்பளைங்களை ஜமாதாரின் அப்படீன்னு சொல்லுவாங்க. பார்த்தா ஜமீந்தார்னி மாதிரியே இருப்பாங்க மதமதனு."

"அத்தனை அழகா"?

"பார்க்க கொஞ்சம் நிறம் கம்மலா இருக்கும். அதனாலே என்ன? உடம்பு வடிவா இருக்கிறதுதானே முக்கியம்? ராஜவதின்னு ஒருத்தி. எங்க ரிக்ஷா இஸ்டான்டு கிட்டத்தான் இருக்குது. அவ காலங் காத்தாலே சுங்கடிச்சேலையைக் கட்டிக்கிட்டு தோள்மேலே நீளமா துடைப்பத்தை மாட்டிக்கிட்டு நிமிர்ந்த நடைபோட்டுக் கிளம்புவா பாரு, அவ தெரு சுத்தம் செய்யறவ மாதிரி இருக்கமாட்டா, அல்லி ராணி ஏதோ ராச்சியத்தை செலிக்கப் புறப்பட்டமாதிரி இருக்கும்."

"அடேங்கப்பா!"

-இந்தப் பாழாப்போன கிராமத்திலே எந்த இளவட்டம்தான் இருக்கப் பிரியப்படும்?

-ராம்விலாஸ் அண்ணே, இந்தத் தடவை நானும் வருவேன்- நானும்! நானும்!! நானும்!! இங்கே வருசம்பூரா ஏரைப்பிடிச்சு நிலத்திலே பாடுபடறோம், வெறும் நூத்தெட்டு ரூபாய்க்கு. அங்கே, மாசா மாசம் இருநூறு ரூபாயா!- ராம்விலாஸ் அண்ணே, நானும்! என்னை மறந்திடாதீங்க சித்தப்பா. ரிக்ஷா-ஓட்டற வேலை கிடைக் காட்டியும் பரவாயில்லை. ஏதோ ஓட்டல்லே சொல்லி வேலை வாங்கிக்கொடுங்க. அதுவும் இல்லைன்னா வேர்க்கடலையானும் விக்கறேன்- மாமா, அன்னிக்கு நீங்க சொன்னீங்களே, காயிதம்—பாட்டில்—மூடி பொறுக்கற வேலையிலேகூட நல்ல காசு கிடைக்கும்னு-

சிவதாரி ஒருவனைத் தவிர எல்லாருமே பட்டணம்போக நிச்சயித்துவிட்டார்கள். சிவதாரி இதைப்பற்றி வாயே திறக்கவில்லை.

நினைத்தபடியே எல்லாம் நடந்தது. ஆனால் ராம்விலாஸ் மனதிற்குள் ஏதோ ஒன்று முள்போல உறுத்திக்கொண்டே இருக்கிறது. பல நாளாக அன்னிக்கு ராத்திரி ஜூம்கி ஏன் அப்படிச் சொன்னாள்?- "எல்லாம் சரிதான் ஆனா-!"

"ஆனா என்ன, சொல்லு!"

ஜூம்கி கண்ணை மூடிக்கொண்டு சிரிக்கிறாள்.

"கண்ணை எதுக்கு மூடிவச்சிருக்கே?"

"லாந்தரை எதுக்கு எரிய வச்சிருக்கீங்க? அணைக்கிறதுதானே."

ராம்விலாஸ் விருப்பமில்லாமலேயே லாந்தர் திரியை இறக்கி

வெளிச்சத்தை மட்டுப்படுத்தினான். "வேண்டாம், வெளிச்சத்தை அறவே அணைச்சிடுங்க" என்றாள் ஜ்ம்கி.

-- இவ பொம்பளையா, வௌவாலா?

சிவதாரி கஞ்சா குடிப்பான், கட்டாயப்படுத்திப் பார்த்ததும் ஒருவாய் சாராயம் கூடக் குடிக்கவில்லை. ருசிபார்க்க ஒருவாய் குடிக்கணுமே, ஊஹும்.

காலையில் தூக்கம் கலைந்ததும் இரவு அவள் சொன்னது மனதில் முள்போல தைத்தது, "எல்லாம் சரிதான், ஆனா-!"

இப்ப நாலுநாள்தான் பாக்கி- ராமா, ஓ ராமா! காலமெல்லாம் கரைந்துபோச்சே ராமா!- ஏதோ, பழையபாட்டு நினைவுக்கு வந்தது. "அனுதினமும் உன் நினைவு ராமா உலகமெலாம் வெறுத்துப்போச்சே ராமா!"

கிராமத்திலிருந்து புறப்பட ஆயத்தமான வாலிபர்கள் எல்லாரும் ஸ்டேஷன் பக்கத்து சலூன் கடைக்குப்போய் கிராப்பு வெட்டிக் கொண்டு வந்துவிட்டார்கள்- 'பட்டணத்திலே தலைமுடி வெட்டி யிருக்கிற தினுசைப் பார்த்தே இவன் எந்த ஊர்க்காரன்னு கண்டு பிடிச்சுடுவாங்க' என்று ராம்விலாஸ் சொல்லியிருந்தான்- எல்லா வாலிபர்களின் மனமும் உற்சாகத்தினால் துள்ளுகிறது. ஆனால் ராம்விலாஸின் மனதில் மட்டும் ஏதோ ஒன்று முள்போல வெட்டி இழுக்கிறது.

...இன்று இரவு ஜ்ம்கியிடம் நேராகக் கேட்டுவிட வேண்டியதுதான்."

"ஜ்ம்கி, இனிமேல் நாலுநாள்தான் இருக்குது."

"ஊஹு-ஹுங்!"

ராம்விலாஸ் வெகுநேரம்வரை மௌனமாக இருந்தான்.

ஜ்ம்கி கேட்டாள், "இனிமே எப்ப வருவீங்க?"

"வருவதைப் பத்தி இப்பச்சொல்ல முடியுமா?"

இன்று ராம்விலாஸ் கள்ளுச்சாராயம் எதுவும் குடிக்கவில்லை. ஸ்டேஷன் "பஜார் கள்ளு அப்படியே பால்போல வெள்ளை வெளேர்னு இருக்குது- ஒரு கோப்பை குடிச்சாலே போதை தலைக்கு ஏறுது- இன்னிக்கு 'இங்கிலீசு சீட்டு' கிடையாது தம்பிங்களா!"

ராமவிலாஸின் விரக்திப் பேச்சுக்குப் பதிலேதும் கூறவில்லை ஜ்ம்கி, ஆனால் விழித்துக்கொண்டிருக்கிறாள்.

"ஜ்ம்கி!"

"உம்- இன்னிக்கு நீங்க கள்ளுச்சாராயம் ஏன் குடிக்கலே?"

"இன்னிக்கு ராத்திரி முச்சூடும் முளிச்சக்கிட்டே இருப்பேன்."

-நிசமாவே இரவு முழுதும் விழித்திருந்தான் ராம்விலாஸ். காலை நேரத்தில் காகம்—மைனா கத்த ஆரம்பித்ததும் ஜ்ம்கி அவனிடம் "மெல்லப்பேசுங்க" என்றாள்.

இனிமே மூணே நாள்தான் பாக்கி. நாலாம் நாள் சாயங்கால வண்டியில் புரோனி பாசஞ்சரில்—கிராமத்திலிருந்து இருபது இளைஞர்களும் கிளம்பிவிடுவார்கள். சிவதாரி ஒருவனைத்தவிர, பலநாளாக அவனை இந்தப் பக்கம் காணவே இல்லை. எருமை கறப்பதற்குக்கூட வரவில்லை. ராமவிலாஸ் தானே கறக்கிறான்.

"ஜூம்கி!"

"என்ன?"

"இன்னிக்கு நான் சாராயம் குடிக்கலே. கஞ்சாதான் குடிச்சேன். அப்படியே வானத்திலே பறக்கற மாதிரி இருக்குது."

"சிவதாரி இனிமேல் ராத்திரி எருமை மேய்க்க மாட்டானாம். செவிட்டுச்சித்தி வந்து சொல்லிட்டுப்போச்சு."

"அவனை உட்டுத்தள்ளு. நான் வேற ஒரு எருமைக்காரனை வைக்கிறேன்."

"எந்த எருமைக்காரன் வந்து மேய்க்கப்போறான் உங்க எருமையை?"

"ஏன்?"

"ஊரிலே இருக்கிற மேய்ச்சல்காரன்—கலப்பைக்காரன் அல்லாத்தையும் நீங்க விரட்டிட்டுப் போறீங்களே!"

"நான் விரட்டிட்டுப்போறேன்னு எவன் சொன்னது?"

"ஊர்க்காரங்க, அவங்க தகப்பன்மாருங்கதான் சொல்றாங்க!"

"ஊர்க்காரங்க ஒருத்தனும் சொல்லமாட்டான். உன்னோட சிவதரியாதான் அப்படிச் சொல்லியிருப்பான்."

ஜூம்கி பேசவில்லை. ராம்விலாஸ் தொடையைத் தட்டிக் கொண்டுகேட்டான், "ஏண்டி, சிறுக்கி, சரியாத்தான் சொல்றேன் இல்லே?"

"என்ன வேணும்னா சொல்லிட்டுப்போங்க."

"நான் சொன்னா கணக்காத்தான் சொல்லுவேன்."

ஜூம்கி பெருமூச்சுவிட்டாள்.

"சரியாச் சொன்னேன் இல்லே?"

"உம்."

"நாலாம் நாளுமுதல் மஜாவா இருக்கலாம்."

"நான் மஜாவா இருக்கப்போறேனோ இல்லே துக்கத்திலே துடிதுடிச்சுச் சாகப்போறேனோ, உங்களுக்கு என்ன? பட்னாவிலே ராஜவதி ஜமாதாரின் உங்ககூட மஜாவா இருப்பா."

"என்ன சொன்னே?"

ஜூம்கி பிறகு பேசவில்லை. ராம்விலாஸ் மீண்டும் தொடையைத் தட்டிக்கொண்டு கேட்டான், "என்னடி சொன்னே?"

"என்னைக் கொல்லணும்னா ஒரேயடியா கொண்ணு குழியைக் குழிச்சு மூடிடுங்க."

"சதிகாரி! போவறதுக்கு முன்னாலே உன்னையும், உன்னோட சிவதரியாவையும் துண்டம் போட்டுட்டுத்தான்_"

ராம்விலாஸ் தலையில் ஏதோ சங்கிலிப்பூதம் ஏறினமாதிரி எகிறிக் குதித்தான். இன்று அவன் இரண்டு குழாய் கஞ்சா குடித்து விட்டு வந்திருக்கிறான்.

"கத்தாதீங்களேன் இப்படி"

"ராட்சசி! பட்னாவிலே பெரிய பெரிய பாலிஸ்டராலேகூட என் வாயை மூட முடியா. நீ என்னைப் பார்த்து கத்தாதேன்னு சொல்றே. எத்தனை திமிர் இருந்தா அப்படிச் சொல்லுவே?"

"அப்படீன்னா கத்திட்டே கிடங்க!"

"நான் இன்னிக்குச் சாராயம் குடிக்கலே. நீ எதுக்கு திரும்பிப் படுத்துக்கிடக்கே? இந்தப் பக்கமாத் திரும்பு. உன்னை_!"

"வாணாம்."

"சதிகாரி!"

- இன்றைக்கு ராமவிலாஸ் கொலைசெய்துவிடுவான். ஜும்கியை இரண்டாகப் பிளந்து வைத்துவிடுவான். "என்னா நெனச்சிக் கிட்டிருக்கே? உம்? ரிக்ஷா ஓட்டுறவன் ஒண்ணுக்கும் ஆகாதவன்னு நெனப்பா? உம், சொல்லு? நான் சொல்றதெல்லாம் பொய்யினு சொல்லப்போறயா?_ மிச்ராகிட்ட நாலுபங்கு வட்டிக்குக் கடன் வாங்கி அந்த சிவதரியா உன்னைக் கண்ணாலம் கட்டிக்கிட்டானா... உம்சொல்லு! ஏன் பேசமாட்டேங்கிற- சத்தியம் போட்டுச் சொல்லு- என்னா நெனச்சிக்கிட்டிருக்கே? பட்டணத்திலே கிடந்து கள்ளுச் சாராயம் குடிக்கிறவன் எதுக்கும் ஆகாதவன் அப்படித்தானே- சதிகாரி, எல்லாம் எனக்குத் தெரியும்."

ஜும்கி வெகுநேரம் அழுதுகொண்டிருந்தாள். ராம்விலாஸ் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது ஜும்கி அவனுடைய பனியனைப் பிடித்துக்கொண்டாள்.

"என்ன?"

"நீங்க பட்னா போகாதீங்க."

"என்ன உளர்றே?"

"ஆமா, நெசமாத்தான். உங்க காலைப்பிடிக்கிறேன், போகாதீங்க."

"உம்- போகலீன்னா வயித்துப்பொழப்பு எப்படி நடக்கும்?"

"இத்தனைபேரு பொழப்பு நடக்கலியா என்ன?"

"ஊஹூம்"

"அப்படீன்னா என்னையும் இட்டுகிட்டுப்போங்க!

"அப்ப சிவதரியா?"

ஜும்கி குலுங்கிக் குலுங்கி அழுதாள். சூரியன் உதித்து வெகு நேரமாகிவிட்டது. கிழவி குரல் கொடுத்தாள்—"பஹூ"

ஆகாயத்திலே பறந்துகொண்டிருந்த கிராமத்து இளைஞர்கள் எல்லாரும் அப்படியே கீழே விழுந்தனர். ராம்விலாஸ் இன்று மிஸ்ராவின் முன்னிலையில் சரணாகதியாகிவிட்டான். அவரிடம் சொன்னானாம்– "வீட்டிலே பாதிரொட்டி கிடைச்சாலும் அதுவே போதும். பட்டணத்திலே என்ன வச்சிருக்குது? எத்தனை வரும்படி வந்தாலும் அதுக்கு நாலுமடங்கு ரத்தம் வத்திப்போவுது. கிராமம் கிராமம்தான்." மிச்ராஜி மீதிப் பணத்துக்கு வட்டி வேண்டாம் என்று சொல்லிவிட்டாராம். கிராமத்தில் யாராவது வட்டியை விட்டுக் கொடுப்பார்களா?– பட்னாவானால் என்ன, டில்லியானால்தான் என்ன, கிராமத்திலே கிடைக்கக்கூடிய ஆனந்தம் இந்திர லோகத்திலே கூடக் கிடைக்காது.

–மிஸ்ராவின் மூத்தமகன் மாவுமில்—எண்ணெய் மில் வைக்கப் போகிறானாம். ராம்விலாஸ்தான் அங்கே மேனேஜராம்!

–கிராமத்துப் பெரியவங்க எல்லாம் சேர்ந்து ராமவிலாஸுக்கு 'லஞ்சம்' கொடுத்தாங்களாம். அவங்க உழவுக்காரங்க பட்டணத்துக்குப் புறப்பட்டாங்க இல்லே?

–ராம்விலாஸ் பட்டணத்திலே ஒரு டொம்பச்சி வலையிலே விழுந்துட்டானாம். அதனாலே அவன் திரும்பிப்போக பயப் படுறானாம். அந்த டொம்பச்சிக்குக் குழந்தை பிறக்கப் போவுதாம்.

நாலாம் நாள் கிராமத்தில் ஒரு சேதி பரவியது. சிவதாரி கிராமத்தைவிட்டு ஓடிப்போய்விட்டானாம். நேற்று இரவு ஸ்டேஷன் பஜாரில் குடிபோதையிலே மயங்கிக் கிடந்தானாம்.

அவனுடைய செவிட்டுச் சித்தி சொன்னாளாம், ராம்விலாஸின் பெண்சாதி அந்த நேரத்திலே வந்து என்னமோ காதைக் கடிச்சிட்டுப்போச்சு. இவன் ராத்திரியே ஓடிப்பூட்டான்.

ராமவிலாஸ் ஜூம்கியிடம் சொன்னான், "ஜூம்கி, சேதி தெரியுமா? சிவதரியா ஓடிப்பூட்டானாமே!"

"என்னுடைய நாற்பது ரூபா பணத்தையும் கொண்டுபோய் விட்டானே!"

"நீ அப்பவே ஏன் சொல்லலே? வாயிலே என்ன வாழப்பழமா?"

"இந்த மாதிரி நம்பிக்கைத் துரோகம் பண்ணுவான்னு யாருக்குத் தெரியும்?"

"உனக்கு ஆளைப் புரிஞ்சுக்கவே தெரியாது?"

"என்னிக்காவது திரும்பி வருவான். அப்பக் கேட்டுக்கறேன்."

ராம்விலாஸ் ஜூம்கியை இழுத்து மார்புடன் அணைத்துக் கொண்டான். தன்னுடைய மார்பில் அவளுடைய முகத்தைப் புதைத்துக்கொண்டு சொன்னான், "உடைப்பிலே போடு அவனை! அவன் எங்கே தப்பி வரப்போறான் பட்டணத்திலே இருந்து– சாராயம் அவனைக் குடிச்சு ஏப்பம் விட்டுடும், பார்த்துக்க!"

*ஜூம்கி திடீரென நிமிர்ந்து உட்கார்ந்தாள். "எருமை எதுக்கு இப்படிக் கத்துது?" என்றாள்.*

*ராம்விலாஸ் சொன்னான், "காலையிலே கடா எருமையைத் தேடிக்கிட்டு போகவேண்டியதுதான். எருமை அதுக்குத்தான் கத்துது."*

*இன்று ஜூம்கி மீண்டும் புது மருமகளைப்போல நாணத்துடன் புன்னகை பூக்கிறாள். இன்று குடிக்காமலேயே, ராமவிலாஸ் போதைக் கிறக்கத்திலே இருக்கிறான்.*

*"ஏய், சாராயம் குடிச்சுப் பார்க்குறியா?– ஒரே ஒருவாய்."*

*ஜூம்கி சிரிக்கலானாள்—"வாணாம், வாணாம்! ஊஹூம்! எனக்கு அந்த வாடையே– உயேக்– ஊ–ஹூ–ஹூ–ம்!"*

(1964)

# ஆத்ம சாட்சி

வேகவைத்த உருளைக்கிழங்குகளின் தோலை மெதுவாக உரித்துக் கொண்டிருந்தான் கணபத். அப்போது வெளியே யாரோ தொண்டை யைக் கனைக்கும் குரல் கேட்டது. தன் வருகையைக் குறிப்பால் உணர்த்தும் அறிவிப்பு. அது அறிவிப்பா அல்லது அபாய அறிவிப்பா? கணபத் கேட்டான், "யாரது...?"

"உள்ளே யாரு? கணபத்ஜி...! இந்தப் பக்கம் ஆபீஸ் ரூம் ஏன் ஒரே இருட்டா இருக்குது? லாந்தரை எடுத்துட்டு வாங்க."

கணபத்துக்கு ஒரே வியப்பு. தோழர் பலராம் பட்னாவிலிருந்து எப்போ வந்தாரு? மற்ற தோழர்கள் ராலியிலிருந்து இன்னும் திரும்ப வில்லை. பலராம்ஜி மட்டும் எப்படித் திரும்பி வந்துட்டாரு?

அவன் ஒரு தட்டை எடுத்து உருளைக்கிழங்கு பாத்திரத்தை மூடினான். பிறகு லாந்தருடன் வெளியே வந்தான். "லால் ஸலாம் காம்ரேட்! ராலியெல்லாம் நல்லா நடந்திச்சா?"

பலராமின் முகம் தொங்கிப்போயிருந்தது. இதைக்கண்டு கணபத்தின் மனமும் வாட்டமுற்றது. பலராமின் கடுப்பான முகத்தைக் கண்டு அவன் மனம் துணுக்குற்றது. வரப்போகும் சூறாவளியின் அறிகுறி அந்த முகத்தில் தெரிந்தது.

"ஆபீஸைத் திறங்க கொஞ்சம்."

"கொஞ்சம் என்ன, முழுசாகவே திறக்கிறேன்." 'எதுக்காக இந்த மாதிரி முகத்தைத் தூக்கி வச்சுக்கிட்டு பேசறீங்க?' என்று கணபத் மனதிற்குள் எண்ணமிட்டான். ஒருதடவை பட்னா சென்றுவிட்டால் இந்தத் தோழர்கள் எப்படி மாறிவிடுகிறார்கள்...

அலுவலகம் எனப்படும் குடிசையின் கதவைத் திறந்தான் கணபத். வெகுநாளாக அடைத்துக்கிடந்த அறையிலிருந்து மக்கின வாடை அடித்தது. லாந்தர் ஒளி இரண்டு மூன்று முறை 'பக் பக்' என்று கண் சிமிட்டியபின் ஆடத்தொடங்கியது.

பலராம் தன் முகத்தை இன்னும் அதிகமாகக் கோணிக்கொண்டு, "லாந்தரில் எண்ணெய் விட்டிருக்கிறாயா, இல்லே தண்ணியா? நல்ல சிம்னியா வாங்கிப்போடக்கூடாது?" என்றார்.

கணபத்துக்கு சாப்பாட்டு நினைவு வந்தது. ஆறினசோறு அவனுக்கு ஒத்துக்கொள்ளாது. ஆறிய சோற்றைச் சாப்பிட்டால் 'வாயு'

தொல்லைகொடுக்க ஆரம்பித்துவிடும். அவன் அடுக்களையிலிருந்த விளக்கை ஏற்றியவாறு பலராமிடம் சொன்னான், "எண்ணெயைப் பற்றியும், சிம்னியைப் பற்றியும் கேக்குறீங்களா காம்ரேட், நான் முதல்லே சாப்பிடட்டும், அதுக்குப் பொறகு பதில் சொல்றேன்.. உங்களுக்கும் டீ-கீ குடிக்கணும்னா சொல்லுங்க, தண்ணி வைக்கிறேன். அடுப்பிலே இப்பக்கூட நெருப்பு இருக்குது. பொட்டலத்திலே டீத்தூளும், எலுமிச்சம்பழமும்கூட இருக்குது."

கறுத்துப்போன அலுமினிய ஏனத்தை அடுப்பில் ஏற்றிவிட்டு கணபத் அடுப்பை எரிய விட்டான். பிறகு உருளைக்கிழங்கை உரிக்க லானான். உருளைக்கிழங்கு மசியலும், சுடச்சுடச்சோறும்! கணபத் தைப் பொறுத்தவரையிலும் இதைவிட மேலான பதார்த்தம் உலகில் வேறு எதுவுமே இல்லை. குஸுமி சில நேரங்களில் அவனை 'சோற்றுப் பண்டாரம்' என்று கேலி செய்வாள். அதற்கு கணபத் சிரித்தவாறு 'நீ கூடத்தான் சாப்பாட்டு ராமி' என்று அவளைக் கிண்டல் செய்வான். பரலாம்ஜி இன்று எச்சரித்த நேரத்தில் குஸுமி மட்டும் உள்ளே இருந்தால் கணபத் தன்னுடைய கோபத்தை அவள்மீது காட்டி யிருப்பான், "வேலை செய்யவிருப்பம் இல்லேன்னா உட்டுட்டுப் போறதுதானே. உன் மவனைப்போலவே நீயும் சோம்பேறிதான்," என்று கூறியிருப்பான். அதைக்கேட்டு குஸுமி சிரித்துக்கொண்டே புடவைத் தலைப்பின் மறைவிலிருந்து பதிலுக்கு ஏதாவது சொல்லுவாள்.

மசியல் பண்ணிக்கொண்டிருக்கும்போது கணபத்துக்கு காலைப் பேப்பரில் படித்த செய்தி நினைவுக்கு வந்தது. "நம்முடைய ஜவான்கள் எதிரியின் டாங்குகளை நொறுக்கி மசியல் செய்துவிட்டனர்."

வெங்காயம், மிளகாய், கொத்தமல்லியை அரிந்து எண்ணெயில் வதக்கி கிழங்கை அதனுடன் சேர்த்துக் கிளறினான். பளபளக்கும் பித்தளைத் தட்டில் சோற்றை இடும்போது அதிலிருந்து எழும் ஆவியின் நறுமணம் உடலிலும், உள்ளத்திலும் நிறைந்து உவகை யளிக்கிறது. சுடுசோற்றின் இந்த நறுமணத்தை முதன்முதலாக அவன் தொண்டர்கள் முகாமில்தான் நுகர்ந்தான். அன்றிலிருந்து இன்று வரை எத்தனை முகாம்கள், ஆசிரமங்கள், ராலிகள், மாநாடுகள், சிறைச் சாலைகள் என்று எத்தனை இடங்களில் கணபத் சாப்பிட்டிருக்கிறான். ஆனால் இந்த நறுமணம் எங்கும் எப்போதும் கிடைக்குமா?

திருப்தியாக வயிறு நிறையச் சாப்பிட்ட பிறகு தட்டையும், அடுப்பங்கரையையும் நன்றாகக் கழுவிச் சுத்தம் செய்தான். காலையில் குஸுமி வந்து அடுப்பை நன்கு மெழுகித்தருவாள். அவன் அடுப்பங் கரையிலிருந்தே குரல் கொடுத்தான், "சோபித்லால், சாப்பாட்டை எடுத்துக்கொண்டுபோ!"

மரப்பெட்டியிலிருந்து டம்ளரை வெளியில் எடுத்து அதில் பலராம்ஜிக்காக எலுமிச்சம்பழ டீயை ஊற்றி, கையிலே டீ டம்ளரை

ஏந்தியவாறு அலுவலக அறையை அடைந்தான். சோம்புப் பொடி தவிர வேறெந்தப் பழக்கமும் கணபத்துக்குக் கிடையாது. பீடி–சிகரெட் குடிப்பதில்லை. வெற்றிலை புகையிலை கூடப் போடுவதில்லை.

ஒருவாய் டீயை உறிஞ்சியவுடனேயே பலராம்ஜியின் கோணிய முகம் நேராகிவிட்டது. தோல்பையில் காகிதங்களைப் போட்டுக் கொண்டே பலராம்ஜி கேட்டார், "நீங்களே ஏன் சமையல் பண்றீங்க? சோபித்தின் அம்மா என்ன செய்யுறா?"

பலராம்ஜி பொடிவைத்துப் பேசுவதை கணபத் புரிந்து கொண்டான். இதன் மூலம் பலராம்ஜி கேட்க விரும்புவது இதுதான்: 'சோபித்துக்கு மாதம் மூணு ரூபாயும், குஸுமிக்கு ஏழுரூபாயும் எதுக்காகக் கொடுக்கணும்?'

பலராம்ஜியின் அடுத்த கேள்வி, "அப்போ– இங்கே ஏதாவது சந்தா–கிந்தா வசூலாச்சா?"

கணபத் ஏப்பம் விட்டவாறு பதிலளிக்க ஆரம்பித்தான், "அதான் சொல்லிட்டிருந்தேன்லே காம்ரேட்—"

பலராம்ஜி இடையிலேயே குறுக்கிட்டார், "இதப்பாருங்க, நீங்க எதுக்கு வாய்க்கு வாய் 'காம்ரேட், காம்ரேட்'னு சொல்றீங்க?"

"இதென்ன கூத்தா இருக்குதே! காம்ரேடைக் காம்ரேட்னு சொல்லாமல் எப்படிக் கூப்பிடணும்? இதிலே புதுசா என்ன வந்திட்டுது? 1930இல் பார்ட்டியிலே சேர்ந்ததிலிருந்து காம்ரேட்—"

"அந்தக் காலத்து விஷயத்தை உடுங்க. இன்னிக்கு யாரும் இப்படி கூப்பிடுறதில்லை– நீங்க இந்த மாதிரி பேசறதைப் பார்த்துத்தான் எல்லாரும் சிரிக்கிறாங்க."

"இதிலே சிரிக்கறதுக்கு என்ன இருக்குது?"

"சரி, எதுக்கெடுத்தாலும் எதிர்வாதம் பண்றதே உங்க தொழிலாப் போச்சு. வாதத்திலே உங்களை எவனும் ஜெயிக்க முடியாது. ஆமாம், சந்தாவைப்பத்தி என்ன சொல்லிட்டிருந்தீங்க?"

"சொல்ல என்ன இருக்குது? ஆறு மாசமாச்சு, ஸாஹு கடை பாக்கி அப்படியே நிக்குது. மாவட்ட அளவிலே ராலி நடத்தினப்ப, தேஷன் மார்வாடியின் ஐம்பது ரூபாய் நிலுவையும் அடைந்த பாடில்லை. சணல் அறுவடை சமயத்திலே சந்தா கிடைக்கும்னு எதிர் பார்த்தோம். ஆனா, பஞ்சத்திலே அரைப்பட்டினியும், முழுப்பட்டினி யுமாகக் கிடக்கறப்ப, யாரு சந்தா கேட்க, யாரு கொடுக்க? இப்ப நெல் அறுவடைக்காலம் நெருங்கிக்கிட்டிருக்கு, ஆனா காம்ரேடு எல்லாரும் 'அவுட்'–"

பலராம்ஜி திடுக்கிட்டார், "அவுட்டா? யாரு அவுட்டு?"

கணபத் புன்னகை புரிந்தவாறு, "அவுட்டுன்னா அந்த அர்த்தம் இல்லே. எல்லா காம்ரேடும் ஊரிலே இல்லேன்னு அர்த்தம்," என்று விளக்கினான்.

பலராம்ஜி முகம் மீண்டும் கடுப்பாகிவிட்டது. எழுந்துகொண்டே, "கணபத்ஜி நீங்க சொல்றது சரிதான். இனி எல்லாருமே 'அவுட்' ஆகவேண்டியதுதான்." என்றார்.

"அதாவது?"

"அதைப் புரிஞ்சுக்கிட்டு நீங்க என்ன செய்யப்போறீங்க? ஹை லெவலி'லுள்ள கொள்கைப்பூசல் உங்களுக்கு எங்கே புரியப்போவுது?"

கணபத்துக்கு எது புரியுமோ, புரியாதோ, எதிராளியின் உள்ளத்தில் என்ன இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளத் தெரியும். பலராம்ஜியின் பேச்சில் ஒரு அலாதியான முத்தாய்ப்பைக் கண்டு கொண்டான். உருளைக்கிழங்கு மசியலில் காறல் எடுத்த எண்ணெய் வாசம் வீசுவதுபோல.

ஹை லெவல்! பலராம்ஜி இங்கிலீஷ் படிக்காவிட்டால் என்ன? நூற்றுக்கணக்கான ஆங்கிலச் சொற்கள் அவருக்கு அத்துபடி அவரது வாயில் உருளும் இங்கிலீஷ் வார்த்தைகள் ஏராளம்—கேபிடலிஸ்டு, பூர்ஷுவா, ப்ராலிடேரியட், ரியாக்ஷனரி, காந்தியைட், பார்ட்டி லிடரேச்சர், இன்னும் எத்தனையோ சொற்கள்.

பலராம்ஜி மட்டுமல்ல, எல்லா புது 'காம்ரேடு'களும் கணபத்தை ஒரு காசுக்குப் பிரயோசனமில்லாத ஆளாகவே கருதுகின்றனர். ஜியாவுதீன், சைலேந்தர், கோபால்ஜி இவர்களாக இருந்தால் ராலி அல்லது மீட்டிங்கிலிருந்து திரும்பி இதேபோல முகத்தை 'உர்'ரென்று வைத்துக்கொண்டபிறகு, கண்ணையும் முகத்தையும் உருட்டி ஏதேதோ பேசியபிறகு, வீட்டை நோக்கி நடையைக் கட்டுவார்கள்—பெண்சாதி மார்களுடன் ஒட்டிக்கொண்டு உறங்குவதற்கு. ஆபீஸ் செக்ரடரி பலராம்ஜியும் முன்பெல்லாம்-அதாவது மணமான புதிதில்-சூரியன் மறையும் முன்பே ஆபீஸை மூடிவிட்டு வீட்டுக்கு ஓடிவிடுவார்.

இப்போது பல வருஷங்களாகவே எங்கும் ஒரு மௌடீகம் பரவி யிருப்பதை கணபத் உணர்கிறான். எவர் மனதிலும் உற்சாகமின்மை. இந்த நோய் கணபத்தின் பார்ட்டியையும் பீடித்துக் கொண்டுவிட்டதா என்ன? இந்தத் தடவை மாவட்ட மாநாட்டில் இதைப்பற்றிக் கேள்வி எழுப்பவேண்டியதுதான்.

அவன் இந்தக்கேள்வியை எழுப்பியதுமே இளவட்ட தோழர்கள் ஒருவரையொருவர் பார்த்து நமுட்டுச்சிரிப்பு சிரித்துக்கொள்வார்கள். சிலர் அவனைப் பார்த்து உரக்கக் கூவுவார்கள். "காம்ரேட் கணபத்! இந்தக் கேள்வியை நீங்கள் கல்ச்சுரல் புரோக்ராம் நடக்கையில் மேடையிலே கேட்கலாம் இல்லே!"

"ஹூம், மேடையிலே கேட்கணுமாம், மேடையிலே..."

விரலை மடக்கி வருஷக்கணக்குப் போடத் தேவையில்லை.

கணபத் ஏற்கெனவே கணக்குப்போட்டு வைத்திருக்கிறான். முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்னால் முதன்முதலாக அவன் ஆரிய சமாஜ் மேடைகளில் கஞ்சிரா அடித்துக்கொண்டு 'தீண்டாமை எதிர்ப்பு'ப் பாடல்களைப் பாடத் தொடங்கினான்.

அந்த மேடைகளின் நினைவுடன் பர்வதியா நினைவும் கூடவே வந்தது. பர்வதியா கீழ்ச்சாதிப்பெண். அவள் கையால் தண்ணீர் குடித்தாலே அந்தக்காலத்தில் சாதியிலிருந்து விலக்கிவிடுவார்கள். அப்படிப்பட்ட பர்வதியாவின் இதழ்களில் அவன் முத்தம் கொடுத்தான். எப்பேர்ப்பட்ட தியாகங்கள் செய்யவேண்டி வந்தாலும் சரி, அவளைவிட்டுப் பிரியமாட்டேன் என்று சத்தியம் செய்துகொடுத்தான். சாதி இனத்தினர் மட்டுமல்ல, குடும்பத்தினரும் அவனைப் பாடாய்ப் படுத்தினர். கணபத் ஆரியசமாஜ் செயலரிடம் புகார் செய்தான். ஆனால் அதற்குள்ளாக பர்வதியாவின் தகப்பன் குடும்பத்துடன் கிராமத்தை விட்டே ஓடிப்போய் விட்டான்.

கணபத் பிறகு அந்தக் கிராமத்துப் பக்கம் திரும்பவே இல்லை. தாய் தந்தையர், அண்ணன், தங்கை, குடும்பம், கிராமம் எல்லாவற்றையும் துறந்து அறப்பணியிலும், சமூக வேலையிலும் ஈடுபட்டான். ஆரிய சமாஜ் பொதுக்கூட்டம் எங்கே கூடினாலும் சரி, கணபத் கையில் கஞ்சிரா எடுத்துக்கொண்டு ஆரம்பித்துவிடுவான், "இந்து சகோதரரே, சிந்திப்பீர் சற்றே..."

இந்தப் பாட்டைப் பாடிய குற்றத்திற்காக 1930இல் அவனை போலீஸ் பிடித்தது. சிறைத்தண்டனையும் கிடைத்தது. சிறையில் சர்மாஜியை சந்தித்தான். விளைவு? ஆரிய சமாஜத்தை விட்டு அவன் கம்யூனிஸ்டு ஆகிவிட்டான்.

மீசை மயிரை வெட்டும் தன்னுடைய கத்தரிக்கோலினால் சர்மாஜி அவனுடைய உச்சிக்குடுமியைக் கத்தரித்துவிட்டார். பிறகு பூணூலை அறுத்து அதைப் பைஜாமா நாடாவாகக் கட்டிவிட்டார். பிறகு, "இன்றிலிருந்து உன்பெயர் காம்ரேட் கணபத். சரியா? சிங்கு-கிங்கு எதுவும் கிடையாது. வெறும் காம்ரேட்... தெரிஞ்சுதா?"

பாவன்தாஸும் நண்பர்களும் சேர்ந்து கணபத்தை இதற்காக நையாண்டி செய்தனர். ஆனால் கணபத் அசைந்து கொடுக்கவில்லை. சர்மாஜி சொல்லிக்கொடுத்த கேள்வியை கிளிப்பிள்ளைபோல பாவன் தாஸிடம் கேட்டான்—"ஏன்ய்யா, ராட்டையச் சுத்தினா, ஆட்டுப் பாலைக் குடிச்சா சுயராச்சியம் கெடச்சிடுமா? சொல்லுங்க..."

சிறையிலிருந்து வெளிவந்த சத்தியாக்கிரகத் தொண்டர்களில் 'பார்ட்டி காம்ரேடு' அதாவது 'கம்யூனிஸ்டு' ஆனது கணபத் ஒருவன் தான். மாவட்டத்திலேயே அவன் ஒருவன்தான் கம்யூனிஸ்டு. ஒரே வருஷத்துக்குள் பீகார் மாநிலத்தில் பல 'விவசாயிகள் மாநாட்டிலும்', 'தொழிலாளர் முன்னணி'களிலும் உற்சாகமாகக் கலந்துகொண்டு

கணபத் உரக்கக் கோஷமிட்டான்; மறியல்கள் செய்தான், பாடல்கள் பாடினான். 'தீண்டாமை ஒழிப்பு' கீதத்துக்குப் பதிலாக சர்மாஜி கற்றுத்தந்த சர்வதேசியப் பாடலை இசைத்தான்—"செங்கதிர் தோன்றுது வானத்திலே, செம்மை படருது வானத்திலே! விவசாயிகளே! பாட்டாளிகளே! எழுவீர், எழுவீர் தோழர்களே!"

கணபத் சுத்த சைவமாகத்தான் இருந்தான், பிறந்ததிலிருந்தே தீவிர சைவம் ஏன், கருப்பையிலிருக்கும்போதே சைவம் தவிர எதுவும் தெரியாதவன். அப்பேர்ப்பட்ட கணபத் சர்மாஜி வைத்த தேர்வில் அமோக வெற்றிபெற்றான். கோழிமுட்டை என்ன, முகத்தை ஒரு சற்றும் கோணாமல் கோழிக்கறியை அல்வா சாப்பிடுகிற மாதிரி விழுங்கிவிட்டான். சர்மாஜிக்கு ஒரே குஷி, "சபாஷ் காம்ரேட்! நீதான் பிறவிப் புரட்சிக்காரன்," என்று தட்டிக்கொடுத்தார்.

பள்ளித் தேர்விலே திரும்பத் திரும்பத் தோற்றுவிட்டு கட்சி வேலைக்கு வரும் இன்றைய பிள்ளைகளுக்கு 'காம்ரேடு பயிற்சி' பற்றி என்ன தெரியும். அந்தக் காலத்திலே கட்சி ஆபிஸிலே ஏழு தோழர்களுக்குச் சேர்த்து பொதுவாக இரண்டு பைஜாமா, மூணு அரை நிஜார், ஒரே ஒரு எட்டு முழ வேட்டி இருக்கும். மாறி மாறி உடுத்துக்கொண்டு எத்தனை சாமர்த்தியமாக சமாளித்துவிடுவார்கள். வாரம் பூராவும் சத்துமாவைத்தான் தோழர்கள் கரைத்துக் கரைத்துக் குடிப்பார்கள். இப்போதோ... ஒவ்வொரு ராலியிலும் இலை போடும்போதே புரட்சிக்கொடியை உயர்த்தி விடுவார்கள் தோழர்கள். "என்ன அநியாயம் இது. அவங்க பூரியும், அல்வாவும் சாப்பிடுவாங்களாம், எங்களுக்கு மட்டும் அவல்பொரியா, இதெல்லாம் இங்கே நடக்காது இது அக்கிரமம், அநியாயம்!"

இன்றைக்கு எந்தத் தோழரிடமாவதுபோய், 'இதப்பாருங்க, ஜீப் கிடையாது, மைக்கும் கிடையாது, கூட்டம் நடத்தணும்' அப்படீன்னு சொல்லிப் பாருங்கள். பொட்டிலே அடித்தாற்போல திருப்பிக் கேட்பார்கள், "எங்களை என்ன 'வாலண்டியர்'னு நெனச்சிங்களா?" சொந்தக் கட்சியின் கொடியைத் தோளில் தூக்கிச்செல்லத் தயக்கம். ஏதோ மானம் போகிற மாதிரி நினைப்பு. அந்தக் காலத்தில் கணபத் ஒண்டியாகவே தண்டோராப்போட்டுக் கூப்பாடும் போட்டிருக்கிறான், "சகோதரர்களே, நாட்டின் வறுமையை விரட்டியடிக்க, முதலாளித்துவ சக்திகளை முறியடித்து விவசாயிகள்-பாட்டாளி மக்களின் ஆட்சியைக் கொண்டு வர, இன்று மாலை நாலு மணிக்கு-"

கணபத் மட்டும் இல்லாமல் இருந்தால் இன்று அந்தக் கிராமத்தில் 'ஷஹீத் கிஸான் ஆசிரமம்' நிறுவப்பட்டிருக்குமா? ஈவிரக்கம் இல்லாமல் மூன்று ஜமீன்தார்கள் அடக்குமுறை தர்பார் நடத்தும் இந்தப் பிரதேசத்தில் கட்சித் தொண்டர்களுக்கு 'இம்' என்று தும்முவதற்குக்கூட அச்சம். பட்டப்பகலில் கொலைசெய்து சடலங்

களையே காணாமல் அடித்த மூன்று ஜமீந்தார்களையும் எதிர்க்க பார்ட்டி என்ன செய்தது தெரியுமா? அவர்களுடைய எண்ணூறு ஏக்கர் நிலத்தை உழவிடாமல் மறியல் செய்வோம் என்று முடிவெடுத்து விட்டு தூங்கப்போய்விட்டது. எட்டு மாதங்களாகியும் அசையவே இல்லை. அந்த நிலங்களில் போராட்டம் நடத்த எந்த வீர சூர காம்ரேடும் ஓரடி எடுத்து வைக்கவில்லை. ஒரு புரட்சிக்கார விவசாயியும் முன்னே வரவில்லை. கடைசியில் இந்த கணபத்தான் சவாலை ஏற்றுக் களத்தில் இறங்கினான்.

ஜமீந்தாரின் ஆட்கள் அவனை நையப்புடைத்துத் தூக்கி எறிந்து விட்டார்கள். அவர்கள் நினைப்பில் கணபத்தின் கதை முடிந்து விட்டது. ஆனால் கணபத் செத்துப் பிழைத்துவிட்டான். மருத்துவ மனையில் நினைவு திரும்பியதும் கோஷமிடலானான், "உழவு நிறுத்தப் போராட்டம் வாழ்க! பிஸன்புர் விவசாயிகள் போராட்டம் வாழ்க!" அன்று கணபத் அடிபட்டு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டதால் விவகாரம் அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்தது- எண்ணூறு ஏக்கர் நிலமும் விவசாயிகளுக்குச் சொந்தமாகவே, அதிலிருந்து இரண்டு ஏக்கர் நிலத்தை எல்லா விவசாயிகளும் சேர்ந்து ஆசிரமம் அமைப் பதற்காக அளித்தனர்; வற்புறுத்தல்கள், ஏசல்களுக்குப் பிறகுதான்.

ஆசிரமம் ஆரம்பித்தபிறகு மாவட்டத் தோழர்களுக்கு ஒரு புது வேலை. தை மாத அறுவடையானதும் கோணிப்பைகளுடன் கிளம்பி தானிய வசூல் செய்வது. பிறகு அவர்களுடைய தேவைகள்- 'தங்கைக்குத் திருமணம் வருகிறது. உதவி வேண்டும்', 'குடும்பச் செலவுக்குக் கட்டவில்லை, பணம் வேண்டும்!" கணபத் தன்னந் தனியாக நின்று மாவட்டத்தோழர்கள் அனைவரின் தேவைகளையும் பூர்த்தி செய்வான்.

லாந்தர் 'குபுக்', 'குபுக்' என்று குதித்துவிட்டு பொசுக்கென்று அணைந்து விட்டது. சித்தர் பாடல் ஒன்று நினைவுக்கு வரவே கணபத் பாட லானான்—"வாழ்வே பொய்யடா... மாயனார் குயவன் செய்த மண்பாண்டம் தானடா."

கணபத் கனவு கண்டான்—திருடன் 'பார்ட்டி' ஆபீஸ் பணப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறான்! கணபத் ஓலமிட எண்ணுகிறான்- 'திருடன், திருடன்! விடாதே பிடி!' என்று கத்த நினைக்கிறான். குரல் எழும்பவில்லை.

கணபத் கண்டது சொப்பனமல்ல; மெய்யாகவே நடந்துவிட்டது.

காலையில் தோழர் சந்திரிகா பாபு அந்த அவலச் செய்தியைத் தெரிவித்தார், "கட்சி இரண்டாகப் பிளந்துவிட்டது!"

இந்தச் செய்தியைக் கேட்டதும் கணபத்துக்குத் தன் தலையில்

இடிவிழுந்ததுபோல ஆனது. பார்ட்டி ஆபீஸிலிருந்த காகிதம், சந்தா ரசீது, வவுச்சர் எல்லாம் அபேஸ். கணபத் சொன்னான், "நேத்து ராத்திரி ஒன்பது மணிபோல தோழர் பலராம் வந்தார்—"

கணபத் வாயை மூடவில்லை. பளார் என்று கன்னத்தில் ஓர் அறைவிட்டார் தோழர் சந்திரிகா பாபு. அதிர்ந்துபோன கணபத் ஏதோ சொல்ல யத்தனித்தான். அதற்குள் சந்திரிகா கூச்சலிட ஆரம்பித்து விட்டார், "ஏன்ய்யா, மூளை இருக்குதா? உம்மை எதுக்காக இங்கே வச்சிருக்கு? சும்மா சந்தா வசூல் பண்ணி வயித்தை நிரப்பவா? பலராம் இப்பவெல்லாம் அதிருப்தியாளர் குழுவில் சேர்ந்திருக் கிறார்னு தெரியாதா?"

கணபத் பாவம் உள் கட்சிப் பூசலைப் பற்றி என்ன அறிவான்? அப்பாவித்தனமாகப் பதிலளித்தான், "எனக்குத் தெரியாது காம்ரேட், யார் எதிர்ப்பாளர், யார் அடாவடிக்காரன் என்பதையெல்லம் நான் என்ன கண்டேன்?"

சந்திரிகா பாபு கைத்துப்பாக்கிபோல சுட்டுவிரலை கணபத்தை நோக்கி நீட்டியவாறு, "நீ துரோகி, கட்சிக்கு எதிரி, கயவாளி!" என்றார்.

ஒவ்வொரு சொல்லும் கணபத்தின உடலில் கூரம்புபோலத் தைத்தன. இந்தச் சண்டையை வேடிக்கை பார்க்கக் கிராமத்து ஜனங்கள் ஆண்களும், பெண்களுமாகக் கூடினர்— "துரோகி, கட்சியின் எதிரி, உளவாளி, கயவாளி—"

காம்ரேட் சந்திரிகா பாபு எச்சரித்துவிட்டுச் சென்றார். "நீங்க செய்த துரோகத்துக்கு கட்சி நிச்சயமா நடவடிக்கை எடுக்கும். இப்ப உடனடியா நான் உம்மை டிஸ்மிஸ் செய்யறேன். வெளியே போம்—!"

காம்ரேட் சந்திரிகா அந்தப்பக்கம் போனாரோ இல்லையோ, இந்தப் பக்கத்திலிருந்து காம்ரேட் பலராம் தன் புதிய சகாக்களுடன் வந்தார். கணபத்தின் கண்களில் நிரம்பியிருந்த நீர் பொலபொல வென்று உதிர்ந்தது.

பலராம் அவனைத் தேற்றினார், "காம்ரேட் கணபத், இதற்கெல் லாம்போய் வருத்தப்படலாமா? இந்த மாதிரி தான்தோன்றி தலைவர் களைத் தைரியமா எதிர்க்கணும். இந்த அற்ப பூர்ஷ்வா குள்ள நரிகள் கட்சியைத் தன்சொந்தச் சொத்துன்னு நெனச்சு ஆட்டம் போடுது."

கணபத் கரகரத்த குரலில் பேசினான், "காம்ரேட் பலராம், நீங்க ஏன் இந்த மாதிரி காரியம் செஞ்சீங்க? நீங்க ராத்திரி பார்ட்டி பேப்பர்களை எடுத்திட்டுப்போவீங்கன்னு தெரிஞ்சா நான்—"

பலராமுக்குப் பதிலாக அகானு மெஹ்தோ சட்டைக் கையைச் சுருட்டியவாறு முன்னே வந்தான், "கணபத்ஜி, நீங்க தண்ணியிலே மூழ்கி தண்ணி குடிக்கிறீங்க. அப்புறம் விசயம் யாருக்கும் தெரி யாதுன்னு நெனக்கிறீங்க, இது பார்ட்டி ஆபீசு, தெரியுமா? துலுக்கச்சி கம்மனாட்டியோடு கொஞ்சற இடம் இல்லை."

கணபத்துக்கு கட்டின துணியை யாரோ உரிந்தமாதிரி இருந்தது. ஊரார் முன்னிலையில் மானம்போய்விட்டது. அவன் துரோகி, கட்சியின் எதிரி, கயவாளி- இவ்வளவும் போதாது என்று ஒழுக்கம் கெட்டவன் அப்படீன்னு புதிய பட்டம். இன்னும் மீதி என்ன இருக்கிறது கேட்க?

பலராம் போகும்போது சிவப்புநிற நோட்டீஸ் கட்டு ஒன்றைக் கையில் கொடுத்து, "இன்னிக்கே இதை எல்லா இடத்திலேயும் விநியோகம் செய்யணும். கடைத்தெரு, ஸ்டேஷன் ஒரு இடம் விடக்கூடாது. தெரிஞ்சுதா?" என்றார்.

கணபத் குடிசைக்குள்ளே சென்றான். வெட்டிச்சாய்த்த மரம் போல படுக்கையில் விழுந்தான். ஒவ்வொரு மயிர்க்காலையும் வசவுகள் தாக்கிக் கொண்டிருந்தன. சிவப்பு நோட்டீஸைப் படிக்கலானான். கட்சியின் பெருந்தலைவர்கள் மக்களை எச்சரிக்கின்றனர்—"பாட்டாளி மக்கள் பெயரைச் சொல்லிக்கொண்டு பணக்காரர்களின் பணப் பையினால் கட்சி நடத்தும் ஏமாற்றுக்காரர்களிடம் ஜாக்கிரதை-!"

இதற்குமேலே ஒருவரிகூடப் படிக்க முடியவில்லை. வசவுகள், திட்டுகள், சேற்றை வாரி எறிந்தாற்போல- எல்லாமே பாழ்.

கணபத்தின் வயிற்றில் பித்தம் அதிகரித்தது. வாயுத்தொல்லையும் சேர்ந்துகொண்டது. எட்டு வீட்டுக்குக் கேட்கும்படி ஏப்பம்வரும். வாந்தி- குமட்டலும்.

யார் அசல், யார் போலி? காம்ரேட் சோர்கடேயா, காம்ரேட் ஜாதவா? சென்ற வருடம் மாநில விவசாயிகள் மாநாட்டில் தலைமை வகிக்க வந்தவர் சோர்கடேஜி. அவரை வரவேற்றுப் பேசும்போது ஜாதவ்ஜி அவரைப் புகழ்ந்து தள்ளினாரே- எல்லாம் பொய்யா? இப்போது சோர்கடேஜி பிகார் கட்சியை தேசத்துரோகிகளின் கும்பல் என்று சொல்கிறார் இந்த நோட்டீஸில்.

கணபத் மனதிற்குள்ளே திட்டமிட்டான். பட்னா போகணும், டில்லி போகணும், எல்லா இடத்திலும் பார்ட்டிக்காரர்கள், தலைவர் களையெல்லாம் பார்த்துப் பேசணும். வயிற்றெரிச்சல் தீர கதறியழுது மக்களின் நிலைமையைப் புரியவைக்கணும். கஞ்சிரா தட்டி பாடணும் "பையா, ஜகட் ந ஜாஹு கசஹரியா-" (அண்ணன் தம்பிமாரே, குடுமிப்பிடிச்சண்டை வேண்டாம், கோர்ட்டுக்கும் போகவேண்டாம்)

ஜாதவ்ஜியும், சோர்கடேஜியும் கட்சிக்கட்டடத்தின்முன் வாளை வீசிப் போரிடுகின்றனர். கணபத் நடுவிலே பாய்ந்து விலக்குகிறான்— 'அமைதி, அமைதி'. இருவரின் கைவாள்களும் கணபத் கழுத்தில்-

கணபத்திற்கு பதினைந்து வருடங்களுக்கு முன்பு பார்த்த ஒரு நாடகத்தின் காட்சி விரிந்தது; பிறகு மறைந்தது. அவன் உடம்பு வெடவெடவென்று நடுங்கியது. மலேரியாக் காய்ச்சல் வருவதற்கு முன் இப்படித்தான் உடலெங்கும் நடுக்கம் எடுத்து தூக்கித் தூக்கிப்போடும்.

கணபத் கம்பளியைப் போர்த்திக்கொண்டான். எழுந்து வாந்தியெடுத்தான். பெருஞ்சீரகத்தூளை மென்றுகொண்டே படுத்தான். குளிர்நடுக்கம், கடுங்காய்ச்சல், வாயுத்தொல்லை வேறு! பிறகு புலம்பல். நாற்பது வருடம் கழித்து—அரசாங்கம் மலேரியாவை ஒழித்த பிறகு முதல் தடவையாக சுரம் பிடித்துக்கொண்டது. கடந்த நாற்பது வருடங்களில் அவனுக்கு ஒரு தலைவலிகூட வந்தது கிடையாது. வாயிலிருந்து ஈனக்குரல் எழும்பியது—"அம்மா-! பார்வதீ-ஈ-ஈ-!"

கண் விழித்தான். அதோ சர்மாஜி. கையில் சிவப்பு ஆப்பிள், கமலா ஆரஞ்சு, பழச்சாறு பிழிந்து கணபத் கையில் தருகிறார். "காம்ரேட், குடிங்க! உள்ளே குளிர்ச்சி தரும்." கணபத் ஒருவாய் அருந்துகிறான். அவனுடைய தொண்டை புண்ணாக எரிகிறது. கசப்பான நஞ்சு!

பர்வதியா வந்தாள். கால்மாட்டில் அமர்ந்து காலைப் பிடித்து விட்டாள். ஆனால் கணபத்தின் அண்ணனும், அப்பாவும் கையில் ஈட்டியுடன் வந்து கண்களை உருட்டி விழித்தனர்.

பாகல்பூர் பட்டுத் தொழிலாளர்கள் ஹர்த்தால்' கணபத் கஞ்சிரா அடித்து ஊர்வலத்தின் முன்னே பாடிக்கொண்டு போகிறான். "உலகத் தொழிலாளிகளே, ஒன்று சேருங்கள்-!"

போலீஸ் கண்ணீர்ப்புகை வீசுகிறது. குதிரைப்பட்டாளம் வேலை நிறுத்தக்காரர்கள் மீது சவுக்கை வீசுகிறது. அவர்கள் மீது குதிரையை ஏற்றி மிதித்துக்கொண்டு பாய்கிறது.

கணபத் சிறையின் ஒரு அழுக்கடைந்த அறையில் கிடக்கிறான். தலையில் கட்டு. பர்வதியா- பர்வதியா- பாரோ-ஓ-ஓ-!

'ஏழு நாள் காய்ச்சல்' ஏழுநாள் தொல்லை தந்தபிறகு விட்டது. ஆஸ்பத்திரி டாக்டர் கருத்தாக சிகிச்சையளித்தார். "ஒரே நேரத்தில் இரண்டு ஊசி போட்டாராக்கும்" என்று குஸுாம் சொன்னாள். பலராம் சொன்னாரென்று; கணபத் இந்த டாக்டரைப்பற்றி என்னென்னமோ அவதூறுகளை அச்சடித்து சுவரில் ஒட்டினான்—அரசாங்கமே! பிஸன்பூர் ஆஸ்பத்திரி கொடுமைக்கார டாக்டரை வேலைநீக்கம் செய்!

காய்ச்சல் இறங்கியதும், தன்னைவிட்டது ஏழுநாள் சுரமல்ல, முப்பத்தைந்து வருஷமாகப் பீடித்திருந்த கட்சிக்காய்ச்சல் என்று கணபத்துக்குத் தோன்றியது. இத்தனை காலமாக அவன் ஒரு இருட்டுக் குகையில் அல்லவா கழித்தான் - தம்படிக்குப் பிரயோசனமில்லாமல்!

குஸுாம் சூடான பாலில் நெல்பொரி போட்டுக்கொண்டுவந்தாள். "பத்தியச் சாப்பாட்டில் 'மாங்குர்'மீன் சேர்க்கணும்னு டாக்டர் அய்யா சொன்னாங்க. சோபித்கிட்ட சொல்லி இருக்கேன். அந்திக்குள் ஒருசேர் மீனாச்சும் கொண்டு வந்துடுவான்."

அப்புறம் குஸ்மி சொன்னாள், "இந்த ஏழு நாளிலே கிராமத்திலே ஒரு குஞ்சு குளுவான் பாக்கி இல்லே, எல்லாரும் வந்து பாத்துட்டுப் போனாங்க. ஆனா, கட்சித்தோழருங்க ஒருத்தன்கூட எட்டிப்பாக்கலே. நேத்து பலராம்பாபு வந்தாரு, கணபத்தை உன் ஊட்டுக்கு நாளைக்குக் கூட்டிட்டுப் போயிரு. கட்சி ஆபீஸைக் காலிபண்ணிடணும் நாளைக் குள்ளாற- அவனை கட்சியிலிருந்து நீக்கியாச்சு- அப்படீன்னாரு-"

குடும்பம், சாதி—மதம், சமூகம், அரசு அநியாயம் எல்லாவற் றையும் தொடர்ந்து எதிர்த்துநின்ற சூரப்புலி கணபத் இன்று குத்துச் சண்டை மைதானத்தில் தோற்றுப்போன பயில்வானைப்போலச் சோர்ந்து கிடந்தான். வருவோர் போவோர் எல்லாம் அவன் முதுகில் உதைத்து திட்டிவிட்டுச் செல்கின்றனர்- முப்பத்தைந்து ஆண்டுகளாக அவன் ஒரு துறவியைப்போல கோவணம் மட்டும் உடுத்து வாயையும், வயிற்றையும், மனதையும் கட்டி மக்களுக்காக சேவை செய்தான். எவருடைய சொத்தையும், ஒரு புல்லைக்கூட திருடவில்லை. அப்பா, அம்மா, அண்ணன், தம்பி சாதி—இனம், பார்வதியாவைவிட அதிகமாக கட்சியையும், கட்சிக் கொடியையும் நேசித்தான். எல்லாம் பாழ்!

சூரியனும், சந்திரனும் இரண்டாகப் பிளந்துவிட்டதுபோல, உலகிலுள்ள எல்லாப் பொருட்களும் இரண்டாகப் பிளந்துவிட்டது போலத் தோன்றியது. ஒவ்வொரு மனிதனும் இரண்டாக- இரண்டு முகங்கள், பிளந்துவிட்டது இதயம் இரண்டாக-

இதுவரையிலும் கண்டும், காணாமலும், கேட்டும் கேளாமலும் விட்ட பல விஷயங்கள் நினைவிற்கு வந்து சிந்தையைக் கிளறின.

கணபத், உன்னுடைய தலைவர்கள் மதம் ஒரு போதை, சாதி என்பது சாக்கடைக்குப்பை என்றெல்லாம் வாய்கிழியப்பேசுகிறார்கள். உன்னுடைய கட்சி சாதி—மதங்களைச் சாடுகிறது. ஆனால் உன் கட்சித் தலைவர்கள் தங்கள் வீட்டில் மட்டும் கலப்புத் திருமணத்தை ஆதரிப்பதில்லை. வேறு சாதியிலிருந்து பெண் எடுப்பதும் இல்லை. மகனின் திருமணத்தின்போது காம்ரேட் ராம்லகன் சர்மா இருப்பத் தையாயிரம் ரூபாய் கறந்து வாங்கவில்லையா? உன்னுடைய தலைவர் களின் குழந்தைகள் டார்ஜிலிங்கிலும், டேராடூனிலும் படிக்கிறார்கள். கட்சிச் செயலரின் துணைவியார் காங்கிரஸ் மந்திரி பதவியை அடைய சாதிக்குத் துணை போகிறாள். உன்னுடைய தூபான்ஜி மில் முதலாளி யுடன் சேர்ந்துகொண்டு ஏழைத்தொழிலாளிகளின் கழுத்துக்குக் கத்தி-!

கணபத்தின் மனக்கண் முன்னால் ஆனானப்பட்ட காம்ரேடு களின் உருவங்கள் தெரிகின்றன—சோர்கடேஜி, ஜாதவ்ஜி, கோபால்ஜி, சின்ஹா சாகேப், டாகுர்ஜி, தூபான்ஜி எல்லா உருவங்களும் ஒரே ராகம் பாடுகின்றன; "நாங்கள் வழிதவறிப் போனாம்-"

கணபத் இருள் மண்டிய சுரங்கப்பாதைக்கு வெளியே வந்து கிடக்கிறான். ஆனால் அவன் உடலில் எழுந்துநிற்க வலுவில்லை.

வெளிறிப்போன முகத்தில் கறுப்பும் வெள்ளையுமாக பாதி நரைத்த மீசை. பச்சாத்தாபத்தினால் குமுறிக் கொண்டிருந்தான். முப்பத்தைந்து வருடங்களாக தவறான வழியில், தவறான திசையில் அல்லவா போய்க்கொண்டிருந்தேன். செய்த தவறுகள் எத்தனை? எத்தனை எத்தனை இளைஞர்களை வழிதவறச் செய்தேன்!

பர்வதியாவின் கருவைக் கலைக்காமல் இருந்தால் அவன் குழந்தைக்கு இன்று 35 வயது ஆகியிருக்கும். மகனாக இருந்தால் வளர்ந்து பலராம்போல பெரியவனாக இருப்பான்.

பர்வதியாவை அவன் மோசம் செய்தான். முதல் தவறு அது. இன்றளவும் அந்தப் பாவத்தின் பலனை அனுபவிக்கிறான்.

கடந்த ஐந்து வருடங்களாக குஸும் அவனுக்குப் பணிவிடை செய்து வருகிறாள். கணபத் இதை அறிந்தும் கண்டு கொள்ளாமல் இருக்கிறான். விதவையான குஸும் பத்தினிப்பெண் போல் அவனை வைத்தகண் வாங்காமல் பார்க்கிறாள். அன்று அகாலு மெஹ்தாவின் குடிகாரப்பையன் நாக்கில் நரம்பில்லாமல் திட்டவில்லையா?—அந்தத் துலுக்கச்சிக் கம்மனாட்டியோட கொஞ்சல் ஒரு கேடா?

குஸும் பர்த்து நாவிதனை அழைத்து வந்தாள். அவன் முகச் சவரம் செய்யும்போது சொன்னாள், "அண்ணே, அந்த மீசையையும் ஒட்ட வெட்டிவிடுங்க. இல்லேன்னா, பார்லி கஞ்சி குடிக்கறப்ப மீசையிலே கஞ்சிப் பசை ஒட்டிக்குது."

உருளைக்கிழங்கு மசியலும், சுடுசோறும் சாப்பிட்டபோது வாய்க்கசப்பு நீங்கியது. வறுத்த பெருஞ்சீரகப்பொடியை மென்று கொண்டு கணபத் கண்ணாடிமுன் நின்று பார்த்தான். வேடிக்கையாக இருந்தது. மூஞ்சி நல்ல நீளமாகத் தெரிந்தது, நோஞ்சான் குதிரையின் வற்றிப்போன முகம்போல. (35 வருடம் முன்பு) அடையாளச் சூடுபோட்ட எஜமானர் செமைவேலை வாங்கினார். அதன் முன்னங் கால்கள் இரண்டும் ஏலாமற்போகிவிடவே தெருவில் இறக்கிவிட்டார். உடம்பெல்லாம் காயம். காகங்கள் கொத்தி காயங்கள் தெரிதாகவே, பாவம் குதிரை காலைப்போட்டு அடித்துக்கொண்டு கீழே கிடக்கிறது—அதற்கு மூச்சிறைக்கிறது. அப்போது பர்வதியா ஓடிவந்தாள்—கையில் அரிவாளுடன். கால்கட்டுகளை அவிழ்த்து விடவே சாகப்போகிற குதிரை மெதுவாக எழுந்து தலைகுனிந்து அமர்ந்தது. பிறகு மெதுவாக தரையை முகர்ந்து பார்த்தது.

கணபத் மெல்லக் காலை நீட்டினான்.

வெளியே காம்ரேட் சந்திரிகா பாபுவின் குரல்கேட்டது. சிவப்புத் தொப்பி போலீஸ் எட்டிப்பார்த்து, "திருவாளர் பியூன் பாயிலே ஹாய்யா காலை நீட்டிப்படுத்திருக்காரு" என்றது.

காவல் நிலைய அதிகாரியையும், போலீஸ்காரரையும் பார்த்து கணபத் துணுக்குற்றான். அவனுடைய நரம்புகள் புடைத்தன. காம்ரேட் சந்திரிகாவை ஒருமுறை ஏற இறங்கப்பார்த்தான், 'இதப்பாரு கணபத், நீ ஆசிரமத்துப் பியூன்தானே!' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"அதென்ன ஏகவசனத்திலே 'நீ' போட்டுப் பேசறீங்க. நான் யாருக்கும் பியூன் இல்லே."

இன்ஸ்பெக்டர் சந்திரிகாவைப் பார்த்தார்.

சந்திரிகா ஆரம்பித்தார், "இதப்பாரு கணபத், இன்ஸ்பெக்டர் ஆசிரமத்துலே 144 போட வந்திருக்காங்க. நீயானா-!"

கணபத் இதற்குள் சுதாரித்துக்கொண்டுவிட்டான். அவன் தெளிவான குரலில் பட்டென்று பதில் சொன்னான். "இதை எப்படி ஆசிரமம்னு சொல்றீங்க? இது என்னுடைய வீடு. என் நிலம். இது பொதுச் சொத்தல்ல, கட்சி நடத்தும் இடமும் அல்ல."

போலீஸ்காரர் சாளரத்தின் வழியாக உள்ளே நோட்டம் விடுவதைக் கவனித்த கணபத் அவனை அதட்டினான். "ஏன்யா, பொம்பிளைங்க இருக்கிற பக்கம் என்ன பார்வை-? வேலைக்கு வேட்டு வச்சிருவேன்."

"உன்- உங்ககிட்டே அத்தாட்சி ஏதாவது இருக்கா?" இன்ஸ் பெக்டர் கேட்டார்.

"அத்தாட்சியா... எழுத்து மூலமான அத்தாட்சி, ஆதாரம் வேணுமா? சோபித் அம்மா- என் பையக் கொஞ்சம் எடுத்தா-"

சோபித் அம்மா, அதாவது குலசும், தலையை சேலைத்தலைப் பால் மறைத்துக்கொண்டு வெளியே வந்தாள். கணபத் பையிலிருந்து ஏதேதோ புத்தகம், காகிதங்களை எடுத்தான்—'மார்க்ஸியம்–ஒரு விளக்கம்', 'பாட்டாளி மக்களுக்கான பாடல்கள்', 'கொடுமைக்காரப் பண்ணையாரே-' பாட்டுப்புத்தகம், 'பைஜ்வாடா தீர்மானங்கள்', 'தெலுங்கானா செங்காளியம்மன்', 'நாட்டின் துரோகிகள்' "—ஆங், இதோ எழுத்து மூலமான ஆதாரம்- வாய்மொழியா சாட்சி வேணுமா? கிராமத்துல யாரை வேணும்னாலும் கேட்டுப் பாத்துக்கலாம்-"

இன்ஸ்பெக்டர் பத்திரத்தைப் பிரித்து ஆதியோடந்தமாகப் படித்துப் பார்த்தார். பிறகு சந்திரிகாவைப் பார்த்து "இந்த ஆளு- இவரு சொன்னது சரிதாங்க. இந்த நிலம் பூரா இவர் பேருக்குத்தான் பதிவாயிருக்கு-"

சந்திரிகா பாபு கூச்சல் போட்டார், "மானங் கெட்டவனே, துரோகி! பொதுச் சொத்தை முழுங்கி ஏப்பம் விடலாம்னு நெனப்பா? நானும் பாக்குறேன்-"

கணபத் எழுந்து நின்றான். "மக்கள் பெயர நீங்க சொல்ல வேண்டியதில்ல. மக்களை ஏமாத்த முடியாது. மக்கள் எல்லாத்தையும் பார்த்துக்கிட்டுத்தான் இருக்காங்க. சுயநலத்துக்காக கட்சியைத்

துண்டாடறவங்கதானே நீங்க!"

"எதுக்கு இவங்ககிட்டப்பேசப்போகிறீங்க? டாக்டர் அய்யா சொல்லியிருக்காங்க இல்லே.." உள்ளேயிருந்து குஸும் சொன்னாள்.

ஆனால் கணபத் விடுவதாக இல்லை. வீராவேசமாக கோஷமிட லானான், "இன்குலாப் சிந்தாபாத்! கலகக்காரர்கள் ஒழிக! கட்சித் துரோகிகளைவிட மாட்டோம்."

குழுமியிருந்த மக்களும் ஆவேசமடைந்து கணபத்துடன் சேர்ந்து கோஷமிடலானார்கள். நிலைமையை உணர்ந்த இன்ஸ்பெக்டர் நடையைக் கட்டினார். சந்திரிகாவிடம் ஆங்கிலத்தில் ஏதோ கூறினார்.

"சார், இது கட்சிக்குள்ளே நடக்கிற உட்பூசல். நாம இனிமே இங்க நின்னிட்டிருந்தா, நெலமை கெட்டுப்போயிரும்." என்று போலீஸ் சிப்பாய் கூறினான்.

இன்ஸ்பெக்டரும், சந்திரிகாவும் போனபிறகு மக்கள் வெற்றி முழக்கமிட்டனர், "தோழர் கணபத் வாழ்க! விவசாயிகள் தலைவர்—கணபத்ஜி! பாட்டாளிமக்கள் தலைவர்—கணபத்ஜி! வாழ்க!"

முப்பத்தைந்து வருஷங்களில் இன்று முதல்தடவையாக மக்கள் தன் பெயரைச்சொல்லி வாழ்த்தக்கேட்டு கணபத் நன்றிப்பெருக்கில் மூழ்கித் திணறினான்.

ஆரவாரத்தினிடையே ஒருவர் எழுந்து உரையாற்றத் தொடங்கி விட்டார்—"சகோதரர்களே, அடுத்து வரும் பஞ்சாயத்துத் தேர்தல்லே. தலைவர் தேர்தல்லே பைஜாமா குர்த்தா ஆசாமிகளுக்கு, ஒட்டுண்ணிக் கும்பலுக்கு ஆதரவு தராதீர்கள்.. இன்றிரவு இங்கே பாட்டாளி மக்கள் பாட்டு கோலாகலமாக நடக்கும்."

அனைவரும் விடைபெற்றுச் சென்று தனிமை கிடைத்ததும் கணபத் குடிசைக்குள்ளேயிருந்து குரல்கொடுத்தான், 'சோபித் அம்மா! கொஞ்சம் இங்கே வா."

குஸும் உள்ளே வந்தாள். கணபத்தின் முகத்தைப் பார்த்து பயந்து விட்டாள்—திரும்பியும் சுரம்வந்துவிட்டதா? அவள் கணபத்தின் நெற்றியைத் தொட்டுப்பார்த்தாள். கணபத் அவள் கையைப் பிடித்துக் கொண்டு நடுங்கும் குரலில் கூறினான், "குஸும்.. இது பாவச்செயல், அநியாயம், பொதுச்சொத்து, கட்சியின் இடத்தில்.. ஆசிரமத்தில்.. இது பெரிய பாவம்..!"

கணபத் பேசுகையில் வறுத்த பெருஞ்சீரகத்தின் வாசனை வந்தது. குஸ்மிக்கு அந்த வாசனை மிகவும் பிடித்திருந்தது. செல்லமாகக் கடிந்து கொண்டாள், "பாவமாவது, புண்ணியமாவது. சந்திரிகா பாபு கட்சிச் சந்தாவை வைத்து புரைனியாவிலே வீடுகட்டியாச்சு. ராம்லகன் பாபு பண்ணையாருங்ககிட்டேயிருந்து லஞ்சம் வாங்கிட்டு விவசாயிகள் வழக்கைக் கெடுக்கவில்லையா? அதெல்லாம் சரின்னா.."

"குஸும், மத்தவங்க எதை வேணா செய்யட்டும். நான் இந்தப்

பாவத்திலே போகமாட்டேன். நான் உயிரோடிருக்கணும்னு நீ விரும்பினா, என்னை உன் குடிசைக்கு இட்டுட்டுப்போ."

குஸுமம் கணபத்தின் குளமாக நிறைந்த கண்களை, ஜிவ்வென்று சிவந்த முகத்தை ஒருகணம் பார்த்தாள். தயங்கிய குரலில் "அப்ப-இந்த ஆசிரமம்?" என்று கேட்டாள்.

"நான் இதை மக்களுக்கே திருப்பிக்கொடுத்துருவேன். பத்துபேர் சேர்ந்துதந்த நிலம் 'தர்மச்சொத்து'தானே. தர்மச்சொத்தை ஓராள் மட்டும் அனுபவிச்சா நிம்மதியா இருக்கமுடியாது- அப்புறம் முன்ன மாதிரி மக்களுக்குச்சேவை செய்ய உடம்பிலே தெம்பு இல்லை-கட்சியும் உடைஞ்சிபோச்சு-!"

அவன் சிறுகுழந்தைபோல அழலானான்.

குஸுமம் தன் அழுக்கு முந்தானையால் அவன் கண்ணீரைத் துடைத்தாள். "அழுவாதீங்க" என்று சமாதானப்படுத்தினாள்.

கணபத் குஸுமை மார்புடன் சேர்த்து அணைத்துக் கொண்டான்-! ஆகா! முப்பத்தைந்து வருடங்களுக்குப் பிறகு பெண்ணின் மார்புச்சூடு! இதமாகத் தெரிந்தது. அவளுடைய இதழ்களை முத்தமிட நினைத்தவன் அப்படியே நின்றுவிட்டான்.

"வேண்டாம் குஸுமம்; இங்கே கூடாது. நம்ம வீட்டுக்குப் போகலாம் வா. இங்கே ஒரு கணமும் இருக்க எனக்கு உரிமையில்லை."

குஸுமம் எழுந்தாள். கைத்தாங்கலாக அவனை எழுப்பி, "வாங்க போகலாம்" என்றாள்.

"அம்மா, அண்ணே! எத்தனை மீன் கொணாந்திருக்கேன் பாருங்க!"

சோபித் மூங்கில் கூடையை முன்னே வைத்தான். கன்னங்கரேலென்ற 'மாங்குர்' மீன்கள் பளபளத்தன.

"மீன் வந்தா நல்ல சகுனம் அப்படீம்பாங்க" என்றாள் குஸுமம்.

கணபத் சிரித்தான்.

குஸுமம் தன் வளர்ந்த மகனைப் பார்த்துக் கூறினாள், "மகனே, அண்ணனைக் கூட்டிட்டுப்போ. நான் படுக்கையை மடக்கி எடுத்தாறேன்."

சோபித் தாயின் முகத்தை நோக்கி 'எங்கே'? என்று கேட்டான்.

"உன் விருப்பம் மகனே!" என்றான் கணபத்.

சோபித்தின் தோளில் சாய்ந்தவாறு சென்று கொண்டிருந்த கணபத் திரும்பிப் பார்த்தான். வெளிறிப்போன கட்சிக்கொடி காற்றில் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது. கணபத் தன்னை அந்தக் கொடியாகவும், சோபித் அந்தக்கொடியை ஏந்திச் செல்வதாகவும் உருவகப்படுத்திக் கொண்டான்.

(1965)

# தர்ம சங்கடம்

திக்விஜய் பாபுவுடன் நெருங்கிப் பழகியவர்கள் அவரை திக்கோ பாபு என்று அன்புடன் அழைப்பார்கள். அவரிடம் எல்லாருக்குமே அலாதியான மரியாதை. அஜாதசத்ரு—எதிரியே இல்லாதவர் என்று வருணிப்பார்கள். அப்படியே தப்பித்தவறி யாரேனும் எதிரியாகி விட்டால்கூட திக்கோபாபு அவரிடம் உரத்த குரலில் பேசினார் என்ற வரலாறு கிடையாது. அவருக்கு கடுமையான குரலில் பேசவே தெரியாது. கோபமே வராதவர் என்ற குணநலன்தான் அவரது வெற்றியின் ரகசியம். அப்பேர்ப்பட்ட திக்கோ பாபு கோபவெறியுடன் பைத்தியக்காரனைப்போல நடுத்தெருவில் நின்றுகொண்டு உரத்த குரலில் கெட்ட வார்த்தைகள் பேசி யாரையோ திட்டினார் என்றால் அவரை நன்கு தெரிந்தவர்கள் யாராவது நம்புவார்களா?

ஆனால் உண்மையாகவே அது நடந்தது. கண்ணால் கண்டதைப் பொய் என்று ஒதுக்க முடியுமா? வேலைக்காரனைக் கண்டபடி திட்டி பிரம்பால் அடித்த மனிதர் திக்கோ பாபுவேதான். எல்லாரும் கண்களைக் கசக்கிவிட்டுப் பார்த்தார்கள். சந்தேகமில்லை, அவரேதான். ஒருநாளும் இல்லாத திருநாளாக அவருக்கு வந்த மூர்க்கத்தனமான கோபத்தின் காரணத்தைக் கேட்க அருகே சென்றவர்களும் திக்கோ பாபுவின் முதல் வசைமாரியில் குளித்தார்கள். தன்னைச் சுற்றிக் கூடிய ஜனங்களை 'ஸாலே!' என்று திட்டினார். பிறகு, "எனக்கு எல்லாம் தெரியும். ஒருத்தனையும் விடமாட்டேன் நான். பார்த்துக்கிட்டே இருங்க, பொறுமையா. எல்லாரையும் வழிக்குக் கொண்டு வருவேன்" என்று உறுமினார்.

இப்படிச் சொல்லிவிட்டு அவர் பங்களாவுக்குள் சென்றார். பங்களா வராந்தாவில் வரிசையாக வைத்திருந்த பூச்சட்டிகளை காலால் உதைத்துக் கீழே உருட்டிய பிறகுதான் உள்ளே புகுந்தார். என்றும் சத்தமில்லாமல் திறந்து மூடும் கதவு இன்று அவர் கையில் அகப்பட்டு முதல்முறையாக 'கீ கீ' என்று கத்தியது. அடிவாங்கிய வேலையாள் ராம்டஹல் துண்டினால் உடம்பைத் தட்டிக்கொண்டு அவர் பின்னாலேயே சென்றான். ஜனங்கள் பொறுமையாக இருக்க வேண்டுமாம்? இன்னும் வேடிக்கைகாட்ட அவர் திரும்பியும் எப்போது வருவாரோ? எத்தனை நேரம் பொறுக்க வேண்டுமோ?

ஊர்மக்களைப் பற்றி திக்கோ பாபுவுக்கு நன்றாகத் தெரியுமாம். ஆனால் தாங்கள் திக்கோ பாபுவுக்கு என்ன தவறு இழைத்தோம் என்று ஜனங்களுக்குத் தெரியவில்லை. அவர் வீட்டுக்குள் தாராளமாகப் போய் வருபவர்கள் இன்று சாந்தி குடீரில் (அமைதிக் குடிலில்) கால் எடுத்துவைக்க அஞ்சினார்கள். அப்படியிருக்கையில் அவர் கோபத்தின் காரணத்தை எப்படித் தெரிந்துகொள்வது?

வேறுவேலை உள்ளவர்கள் தங்கள் வேலையைப் பார்க்க நடந்தார்கள். வேலை இல்லாதவர்கள் தங்கள் நேரத்தை வீணாக்காமல் மணிக்கணக்காக எதிரே உள்ள பூங்காவில் அமர்ந்து சீட்டு விளையாடலானார்கள். ஆனால், வாசல் வழியாகவோ, சன்னல் வழியாகவோ யாருமே வெளியே வரவில்லை. எந்தப் பிராணியோ, பொருளோ அசையும் சத்தம் கேட்கவில்லை. பூசசட்டிகளை உதைத்து விட்டு உள்ளே போன வேகத்தைப் பார்த்தால் அடுத்தவினாடியே வீட்டுக்குள்ளிருந்து பூகம்பம் வெடித்துக் கிளம்பியிருக்க வேண்டும். குறைந்தபட்சம் பட்டாசு வெடிக்கும் சத்தமோ, கண்ணாடி சாமான்கள் உடையும் ஒலியோ, யாராவது விம்மி விம்மி அழும் ஓலமோ கேட்டிருக்க வேண்டும். ஆனால் இரண்டு மணி நேரமாகியும் எதுவும் நடக்கவில்லை. ரகசியம் இன்னும் செறிவடைந்தது.

இரவு பத்துமணிக்கு இந்த ரகசியத்தைப் பிளந்துகொண்டு ஒரு செய்தி பரவியது: திக்கோ பாபுவின் வீட்டில் மௌனமாக மறியல் போராட்டம் நடக்கிறது. திக்கோபாபு தவிர வீட்டிலுள்ள அனைவரும் அவருக்கு எதிராக ஒத்துழையாமை அறப்போராட்டத்தில் இறங்கி விட்டார்கள். அவருடைய சகதர்மிணி தனது பருத்த தேகத்தைச் சுருட்டி எடுத்துக்கொண்டு புறக்கடைக் குச்சுவீட்டில் நுழைந்து விட்டார்களாம். பிரஜைகள், அதாவது புதல்வன் அராஜகத்தில் இறங்கி விட்டானாம். வேலையாள் சொன்ன பேச்சைக் கேட்பதில்லை. சமையல்காரர் தன்னிஷ்டம்போல சமையல் செய்கிறாராம். இத்தனைக்கும் மேலே வீட்டிலுள்ள பூனைகூட யாரைக்கண்டாலும் உர்-ரென்கிறதாம்- அய்யோ பாவம். திக்கோ பாபுவின் அமைதிநிறைந்த உலகம் இப்படியாகிவிட்டதே. பாவம் அவருடைய 'சாந்தி குடில்'! நியூ படேல்புரியில் புதிதாகக் கட்டிய திக்கோ பாபுவின் பங்களா!

மறுநாள் சூரியோதயத்திற்கு முன்பே வேடிக்கை ஆரம்பித்து விட்டது.

திக்கோ பாபுவின் அருமை மகன் ஸ்ரீஹர்ஷன் தன்னுடைய மென்மையான குரலை கரகரப்பாக்கிக்கொண்டு, சாதுவான முகத்தை கொடூரமாக வைத்துக்கொண்டு பேப்பர் போடும் பையனிடம் உறுமினான், "இனிமே தினமும் பேப்பர் 'சின்ன பங்களா'வில் தரணும் தெரிஞ்சுதா?"

'சின்ன பங்களா' என்றால் ஸ்ரீஹர்ஷன் குடியிருக்கும் பகுதி. தினசரி, வார, மாத சஞ்சிகைகள் எல்லாவற்றையும் கையில் இடுக்கிக் கொண்டு ஸ்ரீஹர்ஷன் பகிரங்கமாக சிகரெட பற்றவைத்துக் கொண்டான். பிறகு சிகரெட் புகையை அனாயாசமாக ஊதியவாறு சின்ன பங்களாவைப் பார்த்து நடந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் ஸ்ரீஹர்ஷனின் தாயார் அதாவது திருமதி தருமசீலை எதற்காகவோ தன் கணவனைத் திட்டியவாறு வராந்தாவுக்கு வந்தாள். ஊர் மக்கள், இந்த அம்மையார் பிரதி ஏகாதசியன்றும் சந்தியாகாலத்தில் தன் கணவனின் கால்களைக் கழுவிப் பாததீர்த்தத்தைப் பருகும் புனிதக் காட்சியையே கண்டிருக் கிறார்கள். இன்று அதே அம்மணி தலையில் அடித்துக் கொள்கிறார், "காலங்காத்தாலே எவனாவது இவர் பேரைச் சொன்னா அவனுக்கு அன்னிக்கு முழுவதும் ஒண்ணுமே வெளங்காது!"

நேற்று அடி வாங்கிய அதே வேலையாள் ராம்டஹல் முற்றத்துப் புல்வெளியில் ஈஸிசேரில் ஹாய்யாகப் படுத்துக்கொண்டு பீடி குடிக்கிறான். சமையல்காரர் பற்குச்சியால் தன் நீண்ட பற்களை சாவகாசமாக நோண்டித் தேய்த்தவாறு கண்ட இடத்தில் துப்புகிறார். "நான் யாருக்கும் வேலைக்காரன் இல்லை. யாருக்கு டீ குடிக்கணுமோ ஓட்டல்லேயிருந்து வரவழைச்சுக்கட்டும். நான் இதோ, கங்கையிலே ஸ்னானம் செஞ்சுட்டு பிர்லாமந்திருக்குப் போகப் போகிறேன். ஆக்தூ."

ஆச்சரியம்தான்! திக்கோ பாபுவின் வாழ்க்கையில் நேற்றுத்தான் முதலும் இறுதியுமாகக் கோபம் வந்தது. இன்று அவர் மீண்டும் சாந்த கம்பீரமாக அமர்ந்திருக்கிறார். இதையெல்லாம் கண்டும் கேட்டும்கூட அசையாமல் உட்கார்ந்திருக்கிறார்.

தோளில் துண்டைப்போட்டுக் கொண்டு திக்கோபாபு வெளியே உள்ள குழாயடிக்கு வந்தார். வீட்டுக்கு வெளியே உள்ள குழாயடியில்—வேலைக்காரி பாத்திரங்கள் தேய்க்கும் குழாயடியில்—குளிப்பார் என்று யாரும் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை.

தெருவெல்லாம் திரிந்து பூரிமசால் விற்கும் ஆளைக் கூப்பிட்டார் திக்கோபாபு. தெருவோரத்து வண்டிகளிலிருந்து வடை-பக்கோடா வாங்கித்தின்னும் இளவட்டங்களுக்கு தினமும் சுத்தம், சுகாதாரம் பற்றிப் பாடம் புகட்டும் திக்கோபாபு இந்த மாதிரி ஆறின பூரி-மசாலா வாங்கித் தின்பதைப் பார்த்த அண்டை வீட்டுக்காரரின் மனம் உருகி விட்டது. அவர், "அடாடா- இதென்ன-" என்று ஏதோ சொல்ல வாயெடுத்தார். ஆனால் திக்கோபாபு ஓர் ஆங்கில வாக்கியத்தை அப்படியே மொழிபெயர்த்து, "ஐயா! நீங்க உங்க வீட்டுக் கதவுக்கு எண்ணெய் போடுங்க!" என்று போலியான மரியாதையுடன் கூறினார்.

மதியம் அவருடைய மற்றொரு அண்டை வீட்டுக்காரர் 'பொருள் பொதிந்த' ஒரு புதிய செய்தியை வெளியிட்டார், அதாவது ரூபாய்

பைசா சம்பந்தமான செய்தி: "ஸ்ரீ ஹர்ஷன் ஐந்தாம் நம்பர் ரோடு ஃபிளாட்டுகளில் குடியிருக்கும் வாடகைக்காரர்களுக்கு, இனிமேல் வீட்டுவாடகையைத் தன்னிடம் கொடுக்க வேண்டும் என்று நோட்டீஸ்."

திக்கோ பாபு இடைமறித்துக் கூறினார். "ஆமா, அதற்கென்ன? ஐந்தாம் நம்பர் பிளாட்டும் நிலமும் ஸ்ரீஹர்ஷன் பெயரில்தானே இருக்கிறது. வாடகை அவனுக்குத்தானே கிடைக்க வேண்டும்!"

ஸ்ரீஹர்ஷன் திக்கோ பாபுவுக்கும் நோட்டீஸ் விட்டிருக்கிறான்— "உங்க இன்சூரன்ஸ் பாலிஸியிலே இனிமே நான் 'நாமினி' இல்லே. எனக்கு அந்தப் பைசா வேண்டியதில்லை."

—அதாவது அவன் யாரையும் அண்டிப் பிழைக்கவில்லை.

திருமதி தருமசீலை இதே ராகத்தில்தான் பாடினாள். 'திக்கோ பாபுவை அண்டியிருப்பதை நான் சாபமாகவே நினைக்கிறேன்' என்பது அதன் பொருள்.

திக்விஜய் பாபு பேசவில்லை. மவுனமாக இருந்தார். அவருடைய இந்த அக்கிரமத்தனமான நெடிய மவுனத்தினால் தாயும், மகனும், வேலையாட்களும் மூண்டெழுந்தார்கள். "இவருக்கென்ன வந்தது? மவுனமா இருந்தாலும் சரி, பேசினாலும் சரி—குஷாலாகத்தான் இருப்பார். கஷ்டம் எல்லாம் எங்க தலைமேலேதானே!"

"தான் சௌக்கியமா இருந்தாப் போறும் இவருக்கு. மத்தப்பேர் எக்கேடு கெட்டுப் போனா என்ன? யார் வாழ்ந்தாலும், யார் செத்தாலும் இவருக்கு ஒண்ணுமில்லை!"

திக்விஜய்பாபு தன் விரலைக் கடித்துக்கொண்டு பார்த்தார். காண்பது கனவா? நிஜமா?

அப்படியாக ஊரெல்லாம் பலவிதமான செய்திகள் பரவின. ஊரெங்கும், ஒவ்வொரு 'நகரி'லும், ஒவ்வொரு 'புரி'யிலும் செய்திகள் பரவின. இவற்றைக்கேட்டு திக்விஜய்பாபுவின் நண்பர்கள்—பல்வேறு சாதி இனத்தைச் சார்ந்த நண்பர்கள்—ஒவ்வொருவராக வரலானார்கள்.

'சாந்தி குடிலி'ல் நுழைபவர்களின் பார்வை முதலில் ராம் டஹலின் அழுக்குக் கோவணத்தின்மீதுதான் விழுந்தது. அவன் அதை சன்னல்மேலே போர்க்கொடிபோல உயர்த்தியிருந்தான்.

திக்கோபாபுவின் ஒரு வக்கீல் நண்பர் குறுக்கு விசாரணைக்கு முன்பு வழக்கின் மூலகாரணத்தைப் பிடிக்க முயன்றார். வேலையாளை அடித்த பிறகுதான் மனைவியும், மகனும் புரட்சியில் இறங்கினார்களா அல்லது அதற்கு முன்பா? வேலையாள், அதாவது ராம்டஹல், வெகுநாட்களாக இருக்கும் வேலையாள். திக்கோபாபு கல்லூரியில் படிப்பதற்காக இங்கு வந்தபோது ராம்டஹலையும் உடன் அழைத்து வந்தார். திக்கோபாபுவின் படிப்பு முடிந்தது, உத்தியோகம் ஆரம்பித்தது—அவர் ஓய்வு பெற்றார். இன்றும் ராம்டஹல் கூடவே

இருந்தான். திருமணத்திலும், 'கௌனா' (மணப்பெண் பூப்பெய்திய பிறகு கணவன் வீட்டுக்கு வரும் சடங்கு)விலும் அவன் திக்கோ பாபுவுடன் சேர்ந்து நின்றான்.

திக்கோபாபுவின் இன்னொரு நண்பர் புலனாய்வுத்துறையில் வேலைபார்க்கிறார். உலகில் நடக்கும் குற்றங்கள், விபரீதங்கள் அனைத் தையும் துருவிப் பார்த்தால் அவற்றின் பின்னால் ஒருபெண்ணின் கரங்கள் இருப்பதைக் காணலாம் என்பது அவரது துணிவு- இந்த விவகாரத்திலோ, ஒரு மாது நேர் எதிரே நிற்கிறாள். ஆனால் இவளன்றி வேறொருவன் எங்கேனும் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும்.

திருமதி தருமசீலையிடம் நெடுநேரம் வேறுபல விஷயங்களைப் பற்றிச் சுற்றிவளைத்துப் பேசிப் பார்த்தார். ஊஹு¬ம், அவருக்குத் தேவையான செய்தி வெளிவரவே இல்லை. கணவருக்கெதிராக இந்த 'வைராக்கியமும்' ஒத்துழையாமைப்போரும் வரவேண்டிய காரணத் தைப் பற்றி நேரடியாகக் கேட்டபோது திருமதி தருமசீலை ராம்டஹல் பக்கம் பார்த்து வாளாவிருந்தாள்.

இதன்பின், திக்கோபாபுவின் உளவுத் துறை நண்பர் மறுமுனை யிலிருந்து பணியை ஆரம்பித்தார்- அப்படியானால் திருமதி தரும சீலையே 'அந்தப் பெண்'ணாக ஏன் இருக்கக் கூடாது? ஆகவே கூரான கேள்வி அம்புகளைத் தொடுத்து ராம்டஹலின் உடலைத் துளைத்து 'ஆழம் காணத்' தொடங்கினார்- ஒருதடவை இப்படித்தான். பலாக் காய்க்குள் இரும்புக் கொரடாவைச் செலுத்தி அவர், களவுபோன தங்கத்தை வெளியே எடுத்தார்.

ஆனால் ராம்டஹல் முதலிலிருந்து கடைசிவரை ஒரேபாட்டைத் தான் பாடினான்; "எசமானியம்மா அப்பழுக்கில்லாத பதிவிரதை."

அதன்பிறகு அவர் திக்கோபாபு காலால் உதைத்த பூச்சட்டிகளை ஆராய்ந்தார்; ஆனால் ஒன்றும் புலப்படவில்லை.

மூன்றாவதுநாள் பெயர் தெரியாத 'நலன் விரும்பி' ஒருவர் திக்கோ பாபுவின் மூத்தமகனுக்குத் தந்தி கொடுத்தார்— "அப்பாவின் உடல்நிலை கவலைக்கிடம், உடன் வரவும்."

திக்கோபாபு அன்ன ஆகாரமின்றி மவுனவிரதம் இருப்பது ஜனங்களை பெருவியப்பில் ஆழ்த்தியது. இவர்கள் செய்த குற்றங் களுக்காக வேறுயாரானாலும் மனைவி மக்கள் வேலையாட்களை வீட்டைவிட்டுத் துரத்திவிடுவார்கள். ஆனால் திக்கோபாபு அனைத் தையும் பேசாமல் பொறுத்துக் கொண்டிருப்பதன் மர்மம் என்ன? இவருக்கு மூளை கெட்டுவிட்டதா அல்லது அதோ அந்தச் சுவர்க் கடிகாரம்போல அதுவும் வேலைசெய்யாமல் நின்றுவிட்டதா?

துர்க்காபுரிலிருந்து திக்கோபாபுவின் மூத்தமகன் ஸ்ரீபார்த்தன் தன்னுடைய இல்லாள் திருமதி பவானியுடன் ஓடிவந்தான். அவனை வரவேற்க திருமதி தருமசீலையும் ஸ்ரீஹர்ஷனும் ஒரே நேரத்தில்

ஓடினார்கள். ஸ்ரீ ஹர்ஷன் சொன்னான், "அண்ணா, டோன்ட்-"

"அப்பா எப்படி இருக்கிறார்?"

"அவருக்கு ஒண்ணும் வரலே கண்ணா! நாங்கதான் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறோம். அவர் குஷாலாத்தான் இருக்கார்."

ஸ்ரீபார்த்தனும், மனைவியும் ரெயில் நிலையத்தில் வந்து இறங் கியதுமே, அப்பா ஆபத்தான் நிலையில் இல்லை, அவருக்குப் பித்துப் பிடித்திருக்கிறது என்பதைத் தெரிந்துகொண்டார்கள்- 'பித்து' பிடித்தது என்றால் பைத்தியமாகிவிட்டாரா? இதைக்கேட்டதுமே திருமதி பவானியின் நெஞ்சும் மார்பும் படபடவென்று அடித்துக்கொண்டன. உடலெங்கும் நடுக்கம், தொண்டை அடைப்பு, தலை சுற்றல்—எல்லாம் ஏககாலத்தில் ஏற்பட்டது. ஸ்ரீபார்த்தன் அவளுக்கு ஆறுதல் கூறி ஒருவாறாகத் தேற்றி அவள் மனதை வலுப்படுத்தினான்— "பைத்தியமே பிடித்தால்தான் என்ன- நம்ம அப்பாதானே!"

ஆனால் பங்களா வாசலை அடைந்ததுமே எல்லாரும் வாசலை நோக்கி வரக்கண்டபோது பவானிதேவி மீண்டும் பயத்தினால் நிலை குலைந்தாள்... ஸ்ரீஹர்ஷன் பரிதாபமாக "அண்ணா, டோன்ட்" என்கிறான். தருமசீலையின் அரண்ட கண்கள் சன்னலில் தொங்கும் ராம்டஹலின் எண்ணெய்ச் சிக்குப்பிடித்த கோவணம், கிசுகிசுத்த குரலிலும் சைகை மொழியிலும் ஏதேதோ பேச்சு இதையெல்லாம் கண்டு ஸ்ரீபார்த்தனின் நிலையும் கவலைக்கிடமானது.

எல்லாரும் கூட்டமாக. ஆனால் சத்தமின்றி வராந்தாவுக்கு வந்தனர். எல்லாருக்கும் பின்னால் திருமதி பவானி. ராம்டஹல் திக்கோபாபுவின் அறைக்கதவைத் திறந்தான்—ஏதோ பயங்கரமான மிருகத்தின் அறைக்கதவைத் திறப்பதுபோல. அவன் முகத்தில திகில். திக்கோ பாபு 'கீதா ரகசியத்தில்' புதைந்த தன் கண்களை வெளியே எடுக்க முயலவே இல்லை. ஸ்ரீபார்த்தன் தொலைவிலிருந்தே மவுனமாக அவருக்கு வணக்கம் செலுத்தினான். திருமதி பவானி துணிவுடன் உள்ளே புகக் காலடி எடுத்து வைத்தாள். ராம்டஹல் 'பட்'டென்று கதவைச் சாத்திவிட்டான்.

எல்லாரும் ஏககாலத்தில் நீண்ட பெருமூச்சு விட்டனர்.

திருமதி தருமசீலை சொனனாள், 'மகனே, நீ இவரை "அண்டிப் பிழைப்பவன்' அல்ல. உங்க ரெண்டுபேருக்கும் என்ன பயம்? நான்தான் சங்கடத்தில் மாட்டிக்கொண்டேன்."

அந்த நேரத்தில் சமையலறையில் உட்கார்ந்து சமையல்காரர் 'ஹனுமான் சாலீஸா'வை ராகம்போட்டு பாராயணம் செய்யத் தொடங்கினார், "சங்கட் மோசன் நாம தி ஹாரோ."

ஐந்து நிமிடத்திற்குள் ஒவ்வொருவரும் 'சங்கடம்' என்ற வார்த்தையை 25 தடவையாவது உச்சரிக்கவே ஸ்ரீ பார்த்தனின் மனதில் அது முள்போலத் தைத்தது. சங்கடம்-கடம்-சங்-கடம்! தரும சங்-கடம்!

அவன் கேட்டான் "என்ன சங்கடம்?"

ராம்டஹல் ஏதோ சொல்ல வாயைத் திறந்தபோது ஸ்ரீஹர்ஷன் அவனை அடக்கிவிட்டான். ஸ்ரீ ஹர்ஷன் இந்த சங்கடமான நிலைமை வந்ததன் காரணங்களை தானே சாங்கோபாங்கமாக விவரிக்க ஆசைப் பட்டான். அதனால்தான் ராம்டஹலைப் பேசவிடவில்லை. ஆனால் ஸ்ரீபார்த்தன் தான் ஒவ்வொருவரிடமும் தனித்தனியாகப் பேச விரும்புவதாக ஆங்கிலத்தில் தெரிவித்தான். ஆகவே, தாயைத் தவிர அனைவரும் அந்த அறையைவிட்டு வெளியே வந்தனர். கூப்பிடுபவர் மட்டும் வந்தால்போதும். யாரும் யாரையும் சைகை மூலமாகவோ, வேறுவிதமாகவோ அச்சுறுத்தக்கூடாது.

பரபரப்புடன் எதிரேயிருந்து வந்தாள் பவானி. அவள் முகத்தில் மகிழ்ச்சியும், கலவரமும் மாறி மாறித் தாண்டவமாடின. வந்தவள் தன் கணவரை அணுகி, "அப்பா என்னைக் கூப்பிடறாங்க. நான் சன்னல் வழியாகப் பார்த்தபோது 'மகளே!' என்று அன்பாகக் கூப்பிட்டாங்க. போகட்டுமா?"

ஸ்ரீபார்த்தன் தாயைப் பார்த்தான். திருமதி தருமசீலை இதற்கு எந்தவிதமான பதிலையும் கூறாமல் தன் வாக்குமூலத்தை அளித்துக் கொண்டிருந்தாள். பவானி என்ன செய்யவேண்டும் என்று புரியாமல் குழம்பிப்போய் அங்கேயே நின்றாள்.

திருமதி தருமசீலை, ஸ்ரீ ஹர்ஷன், ராம்டஹல், சமையல்காரர் எல்லாரையும் தனித்தனியாக விசாரித்த பின்னர் ஸ்ரீபார்த்தன், சிக்கலின் மூலகாரணத்தைக் கண்டுபிடித்தான். அப்போதுதான் தன்னுடைய தகப்பனார் எப்பேர்ப்பட்ட அபூர்வமான ஞானி என்ற உண்மை தெள்ளத் தெளிய விளங்கியது. தொடர்ந்து மூன்று-நான்கு தினங்கள் இந்த மாதிரி சிக்கல்கள் சங்கடங்களுக்கு நடுவே இருந்தும் அவருடைய மூளை பிறழாமல் சரியாக இருக்கிறது என்றால் அவர் உண்மையிலேயே மகான்தான், ஞானிதான்.

ஸ்ரீபார்த்தன் துன்புறுத்தப்பட்ட தன் தந்தையின் சன்னிதி நோக்கி ஓடலானான்—அவருடைய பாத தூளியை சிரமேற்கொள்வதற்காக. அதற்கு முன் அவன் பவானியை அழைத்து ஏதோ சொன்னான். இதைக்கேட்ட திருமதி பவானி அரண்டுபோய் ஸ்ரீ ஹர்ஷன், ராம்டஹல், பிறகு தருமசீலை இவர்களைப் பார்த்தாள்– இத்தனை பைத்தியங்களுக்கு நடுவில்– அட கடவுளே!

திருமதி பவானி தன் கணவன் பின்னால் ஓடினாள்.

சிக்கலின் மூலக்கதை இப்படி ஆரம்பிக்கிறது.

எட்டுக் கிரகச் சேர்க்கையினால் விளையக்கூடிய ஆபத்துக் களைப் பற்றிய வதந்திகள் ஊரில் உலவிக்கொண்டிருக்கையில் ஒருநாள்

இந்த ஊரிலுள்ள 'பூடி-சேடானி-சத்திர'த்தில் முக்காலும் உணர்ந்த ஒரு சோதிடர் வந்தார். 'நான் இந்த ஊரில் ஒரு பட்சத்துக்கு (பதினைந்து தினங்கள்) மேல் தங்கமாட்டேன். அதற்குள் என்னை வந்து சந்திப்பவர்களின் கடந்தகால, நிகழ்கால, எதிர்கால உண்மை களைக் கூறுவேன். கெட்ட காலத்தை நல்லகாலமாக மாற்றவேண்டு மானால் விரைவில் வாருங்கள்' என்று அறிவிப்பு விடுத்தார்.

பக்திப்பாடல்களும், 'பகவன் நாம பஜனை'களும் விதவிதமான வாத்திய கோஷங்களுடன், ரகரகமான ஒலிப்பெருக்கிகள் மூலமாக செவிகளைப் பிளந்தன. இடையிடையே மந்திர உச்சாடனங்களுடன் 'ஹா—ஹா ஸ்வாஹா' என்று வேள்வித் தீயில் ஆகுதி வழங்கும் ஒலிகள். ஓமப்புகையின் கடுமையான ஆனால் புனிதமான புகை மண்டலத் தால் சூழப்பட்ட இந்த நகரத்தில் முக்காலமும் உணர்ந்த ஞானி நம்பிக்கைக் கதிரைப் பரப்பினார் என்றால் போதாது, நம்பிக்கை என்ற சூரியனாக உதித்தார் என்று சொல்லவேண்டும். மக்களுக்கு தங்கள் கேடுகாலம் நல்லகாலமாக மாறப்போகிறது என்ற நிம்மதி.

அப்போது ஒருநாள் நல்லநேரம் பார்த்து திருமதி தருமசீலை தன் கணவரிடம், "ஏங்க, இங்க பாருங்க, நீங்களும் ஒருநடைபோய் அந்த மகானை—முக்காலமும் உணர்ந்த ஞானியை தரிசனம் செஞ்சுட்டு வாங்களேன்." என்று வேண்டினாள்.

திருமதி தருமசீலை கணவரின் முகத்தைப் பார்த்து சற்றே பயந்தாள். ஆனால் திக்விஜய்பாபு திட்டவில்லை, அன்பு கலந்த குரலில் கேட்டார், "புத்தியைவிட பெரிசு உண்டா?"

திருமதி தருமசீலை புன்னகை புரிந்தாள். 'கருமயோகி'யான தன் கணவர் இப்படித்தான் சொல்லுவார் என்று அவளுக்குத் தெரியும். திக்கோபாபு அன்றைய செய்தித்தாளில் ஜவஹர்லால் நேருவின் அறிக்கையை வாசித்துக்காட்டினார்.

ஆனால் பி.ஏ. தேர்வில் மும்முறை படையெடுத்துத் தோல்வி கண்ட ஸ்ரீஹர்ஷனுக்குத் 'தலையெழுத்தில்' அபாரமான நம்பிக்கை வந்துவிட்டது. அவன் மறுநாளே காசியிலிருந்து வெளியாகும் ஒரு பிரபல தினசரியிலிருந்து ஒரு செய்தியைக் கத்தரித்துக் கொணர்ந்தான், "இதப்பாரும்மா, நேருவுக்கு சம்பூர்ணானந்தர் எச்சரிக்கை விடுத்திருக் கிறார். கொஞ்சம் அப்பாவுக்குக் காட்டு, படிச்சுப் பார்க்கச் சொல்லு."

திக்கோபாபு மேலெழுந்தவாரியாக அந்தச் செய்தியைப் பார்வை யிட்டார். பிறகு ராகம் போட்டு ஒரு பாட்டை முணுமுணுத்தார்; 'எல்லாம் எனையாளுமீசன் செயலாமே'

திருமதி தருமசீலைக்குச் சற்று தெம்பு வந்தது. ஆனால் ராம் டஹலும் சமையல்காரர் ஜாவும் காலையிலும் மாலையிலும் அஷ்ட கிரகச் சேர்க்கை பற்றிய பயங்கரச் செய்திகளுடன் வரலானார்கள். இதையெல்லாம் கேட்டு ஸ்ரீஹர்ஷன் இரவில் உறக்கம் வராமல்

திண்டாடினான், தூக்கத்தில்கெட்ட கனவு கண்டு அலறுவான்.

திருமதி தருமசீலையின் கவலை அதிகரித்தது. ஸ்ரீஹர்ஷன் அவ்வப்போது செய்தி தெரிவித்து வந்தான். "இன்று முன்சீபும் வேறு சில அதிகாரிகளும் சோதிடரைப் பார்க்கப் போனார்கள். சிவில் சர்ஜன் இரவுபகலாக அங்கேயேதான் முகாம் போட்டிருக்கிறார். கல்கத்தாவிலிருந்து ஒரு கொழுத்த சேட் தனி விமானத்தையே அமர்த்திக்கொண்டு குடும்பத்துடன் சோதிடரைக் காணவந்தார்."

வாழ்நாள் முழுதும் கோர்ட்டில் பேஷ்கார் வேலைபார்த்த திக்கோபாபு விதியைவிட மதிவலியில் நம்பிக்கை உள்ளவராயினும் பெரிய அதிகாரிகளின் பெயரைக்கேட்டதும் கொஞ்சம் செவிசாய்க்க ஆரம்பித்தார். முன்சீபு, கலெக்டர், சிவில் சர்ஜன் இவர்கள் எல்லாம் அந்த சோதிடரைக் காணச் சென்றார்கள் என்றதும் சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு, "என்னிடம் ஜாதகமே இல்லையே, என்ன செய்ய?" என்றார் அக்கறையுடன். அதற்கு தருமசீலை, "அதனால் என்ன? ஏதாவது பூவின் பெயரைச் சொன்னால் போதுமாம், ஜாதகம் கணித்து விடுகிறாராம்" என்றாள். "அதுசரி, ஆனால் நான் ஜோசியம் பார்க்க சத்திரத்துக்கோ, சாவடிக்கோ போகத் தயாராக இல்லை" என்று தீர்மானமாகக் கூறிவிட்டார் அவர். "இரட்டிப்பு கட்டணம் கொடுத்தால் சோதிடர் நம்ம வீட்டுக்கே வருவாராம்."

அப்படியாக கடைசியில் ஸ்ரீஹர்ஷனை இருமடங்கு கட்டணத்துடன் குதிரைவண்டியில் அனுப்பி சோதிடரை உரிய மரியாதையுடன் பங்களாவுக்கு அழைத்து வருவது என்று முடிவெடுக்கப்பட்டது.

அனைவருக்கும் பெருமகிழ்ச்சி. 'குடும்பத்தலைவரின்' எதிர்காலம் நன்றாக இருந்தால் போதும், மற்றவர்களின் எதிர்காலம் அதில் அடக்கம்தானே. குடும்பத்தலைவர் தலையசைத்தாரே, அதுவே பெரிய காரியம் என்று எண்ணினார்கள்.

ஸ்ரீஹர்ஷன் சோதிடரை அழைத்துவர குதிரைவண்டியுடன் கிளம்பினான், திருமதி தருமசீலை ஒரு அருமையான யோசனை கூறினாள். "இரட்டிப்புக் கட்டணம்தான் கொடுக்கிறோமே, அதுக்கு ஏத்தமாதிரி பலனையும் இரட்டிப்பாகக் கேளுங்கள்."

"இரட்டிப்பாக என்றால்?"

"அதாவது உங்களைப் பத்திக்கேளுங்க, கூடவே வீட்டிலே மத்தவங்க எதிர்காலத்தையும் கேட்கலாமே."

சோதிடர் வந்தார். தாடி வளர்த்து நெற்றி நிறைய திருநீறு அணிந்த சோதிடர்களைப் பார்த்திருக்கிறோம். சூட்டும், கோட்டும் அணிந்த இந்த சோதிடரைக் கண்டதுமே எல்லாருக்கும் எதிர்காலம் ஒளிமயமாகத் தெரிந்தது. இவருக்கு நிச்சயமாக செப்பிடுவித்தை தெரிந்திருக்க வேண்டும்.

டாக்டர் போல ஒருகையில் சிறிய 'பிரீஃப்கேஸ்'; கண்டிராக்டர்

பாணியில் இன்னொரு கையில் பெரிய 'பிரீஃப்கேஸ்' சமேதராக குதிரை வண்டியிலிருந்து இறங்கினார் சோதிடர். எடுத்த எடுப்பிலேயே திக்கோ பாபுவை வியப்பில் ஆழ்த்திவிட்டார், "நான் சயன்டிஃபிக்கா பார்க்கிறவன். அதனாலே லென்ஸ், ஸ்டெதாஸ்கோப், பிளட்பிரஷர் அளவிடும் கருவிகள், தெர்மாமீட்டர் எல்லாம் தயாராக இருக்கும். சோதிடக் கட்டங்களை துல்லியமாகப்போட இன்ஸ்ட்ருமெண்ட் பாக்ஸ், அட்சாம்சம் மற்றும் தீர்க்கரேகைகளைக் கணிக்க தேசப் படங்கள் எல்லாமே வேணும்தானே."

திக்கோ பாபுவின் சாந்தி குடில்வாசிகள் இறைவனை மனமார வாழ்த்தினர். ஆனால் திக்கோ பாபு திடீரென ஒரு நிபந்தனை விதித்தார், "நான் எதிர்காலத்தை ஆராயும்போது யாரும் உள்ளே வரக்கூடாது."

திக்கோபாபுவின் அறைக்கதவு மூடப்பட்டது. வெளியே நிற்கும் பிரஜைகளின் நெற்றியும புருவங்களும் குறுகுறுத்தன. தம்மையறியாமலேயே எல்லாரும் இறைவனை மீண்டும் வாழ்த்தினர்.

முழுதாக மூன்று மணிநேரத்துக்குப் பின் சிரித்த முகத்துடன் சோதிடர் வெளியே வந்தார். அவரைத் தொடர்ந்து வந்த திக்கோ பாபுவின் முகமும் மலர்ந்து காணப்பட்டது. அந்த முகமலர்ச்சியிலே எல்லாரும் ஒளிமயமான எதிர்காலத்தைக் கண்டு மகிழ்ந்தனர். ஆகவே ஸ்ரீஹர்ஷன் சோதிடருடன் குதிரை வண்டியில் அமர்ந்தபோது அவனுடைய முகத்தில் இரட்டிப்பு மகிழ்ச்சி காணப்பட்டது.

திக்கோபாபுவிடம் முதலில் விசாரித்தது தருமசீலைதான், "கடவுள் கிருபையில் எல்லாம் நல்லாத்தான் சொல்லியிருப்பாங்க, இல்லே?"

"உடைப்பிலே போடு. எல்லாருமே ஏமாத்துக்காரனுகதான்."

"ஏன்? சும்மா ஏதேதோ அளந்திட்டுப்போனாரா என்ன?"

"அவர் எதுக்கு அளக்கணும்? மேப்பையும், தெர்மாமீட்டரையும் வெச்சு எதிர்காலம் கணிக்கக் கூடியவருக்கு இது கூடத் தெரியாதா என்ன? இங்கே எல்லாமே வெட்டவெளிச்சமாத் தெரியுதே! பென்ஷன், மூத்தபையன் கலெக்டர், இளையவன் நல்ல வாட்ட சாட்டமான, பார்க்க லெட்சணமான முட்டாள், அப்புறம் பெண்சாதி பேரு தருமசீலை."

திருமதி தருமசீலை கணவரின் குறும்புப் பேச்சைக்கேட்டு புளகாங்கிதமடைந்தாள். "அப்ப உண்மையிலேயே முக்காலமும் உணர்ந்தவர்தான். இல்லே-"

வீடு திரும்பிய ஸ்ரீஹர்ஷன் அம்மாவிடம் சென்றான்; "அப்பாவின் எதிர்காலம் எப்படி?" என்று கேட்டான்.

"அவரா? முப்பத்தஞ்சு ரூபாயை இப்படி இனாமா தூக்கிக் கொடுத்திட்டோமேன்னாரு."

"அப்ப, ஒண்ணுமே சொல்லலியா?"

"ஏமாத்துக்காரனுங்க, அப்படீன்னாரு."

"ஹூம்- சமயம் பார்த்து இன்னொரு தடவை அப்பாகிட்டக் கேட்டுப் பார்ப்பியா? ஏன்னா, சோதிடரிடம் பேச்சுக் கொடுத்தப்ப எதிர்காலத்திலே ஏதோ 'கோளாறு' இருக்கிற மாதிரிதான் தெரிஞ்சுது-"

"கோளாறா?" திருமதி தருமசீலையின் களங்கமற்ற வதனத்தில் கவலையின் நிழல் படர்ந்தது. திகிலுடன் கேட்டாள் "என்னடா சொன்னார் கண்ணா?"

"அம்மா, காலைத்தொட்டு வணங்கறப்ப அஞ்சு ரூபா காணிக்கை வைத்தும்கூட விளக்கமா எதுவும் சொல்லலே. 'இருள்-வெளிச்சம் இரண்டும் சேர்ந்து நெய்யப்படுகிறது மானுடர்களின் எதிர்காலம் என்ற மாயத்திரை. இருந்தாலும் இருட்டின் உபாதையிலிருந்து தப்பித்துக் கொள்ள வழியும் உண்டு', அப்படீன்னாரு."

திருமதி தருமசீலையும் ஸ்ரீஹர்ஷனும் சோதிடரின் இந்த 'ஐந்து வெள்ளிப் பொன்மொழியின் அந்தரங்கத்தில் மூகிழ்ந்து கண்டு கொண்ட சாராம்சம்—எதிர்காலத்தில் ஏதோ கோளாறு வரப்போகிறது. இதைத் தவிர்ப்பதற்கான வழியையும் அவர் நிச்சயம் சொல்லியிருப்பார். ஒருவேளை இதற்கான பரிகாரம் செய்ய பொருள் அதிகம் செலவிட வேண்டியிருக்கும். அதனால்தான் குடும்பத் தலைவருக்கு அங்கலாய்ப்பு போல-

தாயும், மகனும் ஒரேபோல முகவாட்டத்துடன் இருப்பதைக் கண்ட ராம்டஹலும் முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டான். எசமானியம்மாள் மற்றும் சின்னதுரையின் கண்களைச் சந்திக்கும் போதெல்லாம் அவன் ஏதோ கேட்க விரும்புவதுபோல இருந்தது. கடைசியில் கேட்டேவிட்டான், "சின்னதுரை- 'அண்டியிருப்பவர்' அப்படீன்னா என்ன? சொல்லுங்க."

"என்னது? அண்டியிருப்பவரா, அண்டையிலே இருப்பவரா?"

ராம்டஹல் சற்றே யோசனை செய்து அந்தச் சொல்லை நினைவிற்குக் கொண்டுவர முயன்றான். பிறகு 'அண்டியிருப்பவர் தான்' என்றான். அக்கம் பக்கம் பார்த்துவிட்டு மெல்லிய குரலில் கூறினான், "சோதிடருக்கு டீயும், வெற்றிலைபாக்கும் கொடுக்க உள்ளே போனப்ப சோதிடர் எசமானரிடம் "உங்களுக்கு அஷ்டகிரகத்தினால் எந்தத் தொல்லையும் இல்லை, நன்மையே கிடைக்கும். ஆனா அண்டியிருப்பவங்களுக்குத்தான் தொல்லைகள் வரும்' அப்படீன்னார்."

"ஓ, அண்டியிருப்பவர்களுக்கா?"

ஸ்ரீஹர்ஷன் பெரிய அகராதியை எடுத்து தூசுதட்டி, அந்தச் சொல்லுக்கான பொருளைத் தேடத் தொடங்கினான். திருமதி தருமசீலை தன் இஷ்ட தெய்வத்தின் பெயரை ஜெபிக்கலானாள். ராம்டஹல் மிரள மிரள விழித்தபடி நின்று கொண்டிருந்தான்.

ஐந்து நிமிடம் விடாமுயற்சியுடன் தேடிய பிறகு ஸ்ரீஹர்ஷன் வெற்றியடைந்தான். "ஆமாம். அண்டியிருப்பவர்- பெயர்ச்சொல்— யாரையாவது அண்டி, அதாவது அடைக்கலமாகக் கொண்டு- பிழைப்பவர்- தன் வாழ்க்கை, பிழைப்புக்காக இன்னொருவரை அடைக்கலமாகக் கொண்டவர்—மனைவி, மக்கள், பணியாட்கள்-"

திடீரென நடுவில் ஒரு குண்டு விழுந்து பேரொலியுடன் வெடித்ததுபோல மூவரும் உணர்ந்தனர். நினைவு திரும்பியதும் விழுந்தது குண்டு அல்ல, ஸ்ரீஹர்ஷன் கையிலிருந்த பேரகராதிதான் என்பது புரிந்தது. இப்ப என்ன செய்ய? அண்டியிருப்பவர் என்றால்- மனைவி, மக்கள், வேலையாட்கள்- எல்லாரும் மாட்டிக் கொண்டார்கள். இதிலிருந்து ராம்டஹலும் தப்பமுடியாது, சமையல்காரர் ஜாவும் தப்பமுடியாது- நரசிம்மப் பெருமாளே, நீயே துணை!

அண்டியிருப்பவர்களுக்கு நேரவிருக்கும் தொல்லையைத் தவிர்க்க குடும்பத்தலைவர் ஏதாவது பரிகாரம் செய்யப் போகிறாரா இல்லையா என்பதை எப்பாடுபட்டாவது கண்டுபிடிக்க வேண்டும் என்று கிலிபிடித்த 'அண்டியிருப்பவர்கள்' முடிவு செய்தார்கள்.

மதியம் சாப்பாட்டு நேரத்தில் திருமதி தருமசீலை அன்புடனும், அக்கறையுடனும் விசிறியை எடுத்துக்கொண்டு கணவர்முன் அமர்ந் தாள். பிராணநாதர் முதல் கவளத்தை வாயில் போட்டுக்கொண்டதும் திருமதி தருமசீலை வினயத்துடன் ஆரம்பித்தாள், "ஏங்க- கோளாறாக ஏதாச்சும் நடக்கும்னா அதுக்குப் பரிகாரமும் சொல்லியிருப்பாரே, அதாவது உங்களை அ-ண்-டி-யி-ரு-ப்-ப-"

திக்கோபாபுவின் முகம் கோபத்தினால் சிவந்தது, "த்ஸொ, த்ஸொ, ஒரே காரம். என்ன, கறியா இது? மிளகாய்ப் பொடியை அப்படியே அள்ளிப்போட்டுட்டார். இது சாப்பாடு இல்லை, விஷம்- விஷம். எதிர்கால பலனைத் தெரிஞ்சுக்க இத்தனை பைத்தியமா இருக்கியே, சமையற்கட்டிலேபோய் கொஞ்சம் கவனிக்கக் கூடாது-? ஐயையோ- கொன்னுட்டாங்களே-"

திக்கோபாபுவுக்கு சாப்பிட முடியவில்லை. கோபப்படவும் முடியவில்லை. 'சூ, சூ' என்று நாக்கை நீட்டியவாறு எழுந்தார், வாயை பலமுறை கொப்பளித்தார்.

சாயங்காலம் டீ வேளையிலும் முயற்சி வீணானது. டீயில் மிளகாய்ப்பொடி விழுந்திருக்கவில்லை. இனிப்பு சரியாகத்தான் இருந்தது என்றாலும் திக்கோபாபு முகம் கொடுக்கவில்லை.

ஸ்ரீஹர்ஷன் இரவுச்சாப்பாட்டுக்கு முன்பு இந்த இக்கட்டிலிருந்து மீள ஒரு உத்தியைக் கண்டுபிடித்தான்—ஆம், அதைத்தவிர வேறு வழியில்லை. சாந்தி குடிலில் அண்டியிருக்கும் பிரஜைகளின் முன்பு அவன் தன் இரகசியத்திட்டத்தை வெளியிட்டான். முக்கியமாக தாயிடம் எடுத்துக் கூறினான், "நமக்குத்தொல்லை வராமல் காக்க

அப்பா எதுவும் செய்யமாட்டார். அவரை நான் சுயநலக்காரர் என்று சொல்லவிரும்பவில்லை. ஆனால் நிச்சயமாகவே அவருக்கு கல்மனசு தான், ஈவிரக்கமே கிடையாது. இதற்காக நாம் என்ன பரிகாரம் செய்ய வேண்டும் என்றுகூட அவர் தெரிவிக்கத் தயாராக இல்லை. அப்பா குஷாலாகத்தான் இருப்பார். எந்த விதத்தில் பார்த்தாலும் நாம் அவரை அண்டியிருப்பவர்கள்தான். இனியும் இதேநிலையில் இருந்துதான் ஆகவேண்டும். நமக்கு வேறுவழியில்லை. ஆகவே, 'பாம்பும் சாகக் கூடாது. கழியும் உடையக்கூடாது' என்ற முறையில் 'சயன்டிபிக்' உபாயத்தைக் கையாளவேண்டும். எல்லாரும் சரின்னு சொன்னா—"

அண்டியிருப்பவர்கள் அனைவரும் ஒருமனதுடன் முடிவெடுத்தனர்—தற்காப்புக்காக குடும்பத்தலைவருக்கு எதிராக 'ஒத்துழையாமை இயக்கம்' நடத்துவோம். அதாவது தற்காப்புக்காக அகிம்சை முறையில் அவரை எதிர்ப்போம். உண்மையில் அண்டியிருப்பவர்கள் ஆனாலும் அண்டிப் பிழைக்காதவர்கள்போல நடந்துகொள்வோம். எப்படியானாலும் குடும்பத்தலைவர் சுகமாகவே இருக்கப்போகிறார், அவருக்கு எந்தவிதமான கஷ்டமும் வரப்போவதில்லை.

இந்தத் தீர்மானம் எடுத்தபிறகு ஸ்ரீஹர்ஷன் தன் 'செயல் திட்டத்தின்' 'நேரடி நடவடிக்கை'ப் பகுதியை விளக்கினான்.

மறுநாள் காலையில் ராம்டஹல் போர்க்கொடி உயர்த்துவது என்று முடிவாயிற்று. ஏனெனில் விடிகாலையில் அவன் பெயரை உச்சரித்துக் கொண்டுதான் குடும்பத்தலைவர் எழுந்திருப்பார். திருமதி தருமசீலை தகுந்த விளக்கம் அளித்து ஐயப்பாடுகளை நீக்கியவாறு அறிவித்தாள், "அவருக்கு காலை 'டீ' நிச்சயம் கிடைக்கும், ஆனால் லேட்டாக. அவருக்குத் தொல்லை தருவதற்காக அல்ல, தொல்லையிலிருந்து நாம் விடுபட அவரை எதிர்ப்போம். எதிர்ப்பைத் தொடங்குவதற்கு முன் நாம் எல்லாரும் நெஞ்சைத் தொட்டுப் பார்த்துக் கொள்வோம்."

ராம்டஹலுக்கு நெஞ்சைத் துழாவவேண்டிய அவசியம் இருக்கவில்லை.

காலையில் குடும்பத்தலைவர் அவன் பெயரைச் சொல்லி அழைத்ததும், உடனே பதில் குரல் தர வாய் எழும்பியது. பற்களை இறுக்கிப்பிடித்து அவன் தன் நாவைக் கடிவாளமிட்டு அடக்கினான். இருபத்தைந்து வருடப் பழக்கம் அல்லவா!

மூன்றுமுறை எசமானர் குரல்கேட்டும் ராம்டஹல் வாய் திறக்கவில்லை. திக்கோபாபு சற்றே வியந்தார். உடலை ஒருக்களித்தவாறு தலையைத் தூக்கிப் பார்த்தார், ராம்டஹல் எதிரே வராந்தாவில் தான் படுத்திருக்கிறான், வழக்கமான இடத்தில். இந்தத் தடவை அவர் தொண்டையைத் திறந்து கத்தினார், "ராம்டஹல்!"

"காலங்கார்த்தாலே ராம்டஹல், ராம்டஹல்னு ஏன் கத்துறீங்க? சொல்லுங்க, என்ன வேணும்?"

திக்கோபாபுவுக்கு இன்னும் தாம் தூங்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது, அதனால் பேசவில்லை. ஆனால் ராம்டஹல் நிறுத்த வில்லை. அவன் தொடர்ந்து கூறினான், "டீ வேணும்னா சமையற் காரரைக் கூப்பிடுங்க, தெரியுமா?"

திக்கோபாபு கனவு உலகத்திலிருந்து சாந்தி குடிலில் தன் அறையில் இறங்கினார். ராம்டஹல் தன் இடது உள்ளங்கை மீது புகையிலைத்-தூளை வைத்து சுண்ணாம்புடன் சேர்த்து பெருவிரலால் அதை அழுத்தித் தேய்த்துக் கொண்டிருந்தான். முப்பதுகளில் கேட்ட ஏதோ 'சுதேசி கீத்'த்தை நினைவுபடுத்திக் கொண்டான். நெஞ்சை உரத்துடன் வைத்திருக்க அந்தப்பாட்டை ராகமாக இசைத்தான்— "குரங்கைப்போல ஆட்டுவேன் அண்ணே, இந்த பிரிட்டிஸ்காரனை, குரங்கு போல ஆட்டுவேன் அண்ணே!"

ராம்டஹல் இப்போது கஞ்சா குடிக்க ஆரம்பித்துவிட்டான் என்பது திக்கோபாபுவுக்கு சந்தேகமில்லாமல் தெரிந்துவிட்டது. அவமானம், கோபம் வருத்தம் எல்லாம் சேர்ந்து எதிர்பாராதவிதமாக ஒரே நேரத்தில் தாக்கியதால் உடம்பு பற்றி எரிவதுபோன்ற உணாவு ஏற்பட்டது. அவர் எழுந்தார்; நீண்ட கழியைக் கையில் எடுத்துக் கொண்டு ஒரு பாய்ச்சல். ராம்டஹல் ஏற்கெனவே ஓடத் தயாராக இருந்தான். எழுந்து ஓடலானான். ஆனால் வீதியைக் கடக்க முடியவில்லை. நடுவீதியிலேயே திக்கோபாபு அவனைப் பிடித்துக் கொண்டார். செம்மையாகப் புடைத்தார். அவர் பொழிந்த சரமாரி யான திட்டுகளைக்கேட்டு தெருஜனங்கள் விழித்து எழுந்தார்கள்; கண்களைக் கசக்கிக்கொண்டு பார்த்தார்கள். ஆமாம், சந்தேகம் இல்லை திக்கோபாபுவேதான்.

அக்கம்பக்கத்தில் வந்துகூடிய ஜனங்களுக்கு எச்சரிக்கை விடுத்து, இன்னும் வேடிக்கை காட்டப்போவதாக அவர்களைப் பயமுறுத்தி விட்டு திக்கோபாபு பூச்சட்டிகளைக் காலால் உருட்டிக்கொண்டே உள்ளே போனார். விசுவாசமான பழைய வேலைக்காரனை இவ்வாறு தூண்டிவிட்டது அண்டை அயல்வீட்டுக்காரர்கள்தான் என்பதைப் புரிந்துகொள்ள அதிகநேரம் பிடிக்கவில்லை. இந்த அடாவடித் தனத்துக்காக அவர்களைப் பழிவாங்குவது பற்றி யோசிக்கலானார். அப்போது சமையற்கார ஜா அறையினுள் நுழைந்தார், கையில் ஒரு நோட்டீசுடன்—அண்டியிருப்பவர்கள் சார்பாக வரலாற்று முக்கியத் துவம் வாய்ந்த நோட்டீசு- திக்கோ பாபு வாசிக்கலானார்—"இத்தனை காலமும் நம்பிக்கையுடனும், விசுவாசமாகவும் உழைத்துவந்த உங்கள் வேலையாள்மீது நீங்கள் இன்று கோபமடைந்து வன்முறையில் இறங்கியதைக் கண்டு வேதனையடைந்துள்ளோம். உங்களை அண்டி

நிற்பவர்களாகிய நாங்கள் இந்தக் கொடூரச் செயலை வன்மையாகக் கண்டிப்பதுடன் இனிமேல்-”

திக்கோபாபுவால் மேலே படிக்க இயலவில்லை. காரணம், ‘சின்ன பங்களா’விலிருந்து கீச்சுக்குரலில் ஒரு பழைய பாட்டின் ரிக்கார்டு ஒலித்து அவர் கவனத்தைத் திருப்பியது—‘ஹோ பாபீ- ஜோபனா கா தேக்கோ பஹார்- ஹோ பாபீ- ஹோ பாபீ-!

இந்த மாதிரி மூன்றாந்தர ரிக்கார்டுகளைப் போட்டுக்கொண்டும், கவர்ச்சிக்கன்னியர் படம்போட்ட புத்தகங்களை (ஆரோக்கிய நூல் களாம்!) படித்துக்கொண்டும், தன்னுடைய ஊர்சுற்றி நண்பர்களுடன் சீட்டாடிக்கொண்டும் ஸ்ரீஹர்ஷன் தன் எதிர்ப்பை வெளியிட்டான். அண்டிப் பிழைப்பவர்கள் எல்லாருக்கும் அவரவர் செய்ய வேண்டிய செயல்திட்டத்தை அவன் தயாரித்துக் கொடுத்திருந்தான்.

ஸ்ரீஹர்ஷன் தாய்க்கு நினைவூட்டினான். “அம்மா இதப்பாரு. தப்பித் தவறி அப்பா காலைத்தொட்டு வணங்கிவைக்கப்போறே, அப்பாவின் படத்தை வைத்துக்கொண்டு பூசனையும், வழிபாடும் செய்துகொள், பாதகமில்லை. ஆனால் அப்பாவிடம் மரியாதை யில்லாமல் நடந்துகொண்டால்தான் வரவிருக்கும் சங்கடத்தைத் தவிர்க்க முடியும்- ஆமாம்!”

அண்டியிருப்பவர்கள் மூன்று நாள் வரையிலும் உறுதியுடன் எதிர்ப்புத் தெரிவித்தனர். குடும்பத் தலைவரைச் சினமடையச் செய்ய புதுப்புது உத்திகளைக் கையாண்டனர். ஆனால் திக்கோபாபு மௌன விரதம் பூண்டு ‘கீதா ரகசிய’த்தில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். மெயின் ஸ்விட்சை அணைத்துவிட்டால் ரேடியோவை எத்தனை உரக்க அலறவிட்டாலும் ஒலி கேட்காததல்லவா- ராம்டஹல் தன் நீண்ட கோவணத்தைப் பறக்கவிட்டு அவருடைய சினத்தீயை எழுப்ப மீண்டும் மீண்டும் முயன்றான். ஊஹூம், பயனில்லை.

கடவுளுக்குச் சமமான தன் மாமனாருக்குப் பணிவிடை செய்ய திருமதி பவானிக்கு இதுவரை வாய்ப்புக் கிடைத்ததில்லை. மருமகள் மீது ஏதாவது குறை கண்டுபிடித்து கணவரிடம் கோள் சொல்லிக் கொண்டிருப்பது திருமதி தருமசீலையின் வழக்கமாக இருந்தது.

இந்தத் தடவை திருமதி பவானி தன்னுடைய நற்குணங்களால் திக்விஜய் பாபுவின் மனதை இரண்டே நாட்களில் கவர்ந்துவிட்டாள்.

அன்று ஸ்ரீபார்த்தன் தகப்பனாருக்கு எதிராகக் கொடிபிடித்த ‘அண்டிப் பிழைப்பவர்’களை ஒன்று சேர்த்து தன் முடிவை வெளி யிட்டான். “இன்றிலிருந்து நீங்கள் என் தந்தையை ‘அண்டிப் பிழைப்பவர்கள்’ இல்லை. ஆகவே உங்களுக்கு ஆபத்துநேரும் என்ற அச்சத்துக்கே இடமில்லை. அப்பா இனிமேல் துர்காப்பூரில் என்னுடன் இருக்கப்போகிறார். அவர் இனிமேல் மற்றவர் ஆதரவில் வாழ்வது நல்லது என்றும் சோதிடர் கூறியிருக்கிறார்.”

'சமூக வேலை'யில் ஈடுபடச் சொல்லி அம்மாவுக்கும், வீட்டு வேலைக்காரர்களை ஒன்று திரட்டி தொழிற்சங்கம் நடத்தச் சொல்லி ஸ்ரீஹர்ஷனுக்கும், வேர்க்கடலை விற்கச்சொல்லி ராம்டஹலுக்கும், கங்கைக்கரையில் பிச்சை எடுக்கச்சொல்லி சமையற்கார ஜாவுக்கும், அவரவர் தகுதிக்கேற்ற பயனுள்ள அறிவுரைகள் கொடுத்த பிறகு ஸ்ரீபார்த்தன் துர்க்காப்பூர் திரும்புவதற்கான ஆயத்தங்களை தீவிரமாகச் செய்யும்படி தன் மனைவி பவானிக்கு கட்டளையிட்டான்.

திக்விஜய்பாபு சின்னக்குழந்தைபோல மகிழ்ச்சியுடன் தன் சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தார். அப்போது வீட்டு முற்றத்தில் ஆரவாரம் கேட்டது. திருமதி தருமசீலை கோபா வேசத்துடன் சமையற்கார ஜாவை அதட்டினாள், "சொல்லு, நீ வேணும்னுதானே இதையெல்லம் செஞ்ச? இது உனக்கு அடுக்குமா? நாங்க சந்தோஷமா வாழறதை உன்னாலே பொறுத்துக்கொள்ள முடியலியா- இந்த மாதிரியெல்லாம் செய்தால் வீட்டிலே உள்ளவங் களுக்குப் பைத்தியம் பிடிக்காமல் வேறென்ன நடக்கும்-"

ஸ்ரீபார்த்தன் புறப்படுவதற்கு முன் சண்டையின் மூலகாரணத்தை அறிய விரும்பினான். திருமதி தருமசீலை கூறினாள், "மகனே, நீ கலெக்டர் உத்தியோகம் பார்க்கிறே. அதனாலே இந்த விஷயத்திலே நீதான் தீர்ப்புச் சொல்லணும். இந்தத் தடவை உங்கப்பா கீரை விதை வாங்கி வந்தார். இந்த ஜா கீரைவிதையோடுகூட ஒரு சிமிட்டா அளவு பங்கி விதையும் சேர்த்து விதைச்சுட்டாரு. இப்ப நாலஞ்சு நாளாக வேலைக்காரி கீரையோடுகூட தெரியாமலேயே பங்கி இலைகளையும் பறிச்சுட்டு வராளா, ஜாவும் கண்ணை மூடிட்டு அதைச் சமைச்சு வைக்கிறாரு- இந்த கதியிலே எல்லாருக்கும் பைத்தியம் பிடிக்காம எப்படியிருக்கும் சொல்லு."

"அப்படியா சேதி, என்னடா இது எப்பப் பார்த்தாலும் தலை சுத்துதுன்னு தெரியாம தவிச்சிட்டிருந்தேன்," என்றான் ராம்டஹல்.

"ராம்டஹல், போயி போலீசைக் கூட்டிவா" என்றான் ஸ்ரீஹர்ஷன்.

சமையற்காரர் கைகூப்பிக்கொண்டு நடுங்கும் குரலில் மன்னிப்புக் கேட்டார், "பெரிய அய்யாவும், அம்மாவும், சின்ன துரைங்களும் இந்த முறை மன்னிக்கணும், இனிமேல் இது மாதிரி தப்பு நடக்காது. தெரியாமல் செய்துட்டேன்-"

தர்மசங்கட நிலைக்கான காரணத்தைக் கண்டறிந்தபிறகு திருமதி தருமசீலை ஒரு டம்ளர் குளிர்ந்த நீருடன் கணவரின் அறையை நோக்கி நடந்தாள்

(1965)

# உருக்குலையும் கணங்கள்

ராணிடீஹ் கிராமத்தின் மேட்டுப்பாங்கான செம்மண் நிலத்தில் ஆங்காங்கே நிலத்தில் அட்சதையும், குங்குமமும் சிதறிக் கிடக்கின்றன. குருவியும், மைனாவும், குயிலும், புறாவுமாக ஆயிரக்கணக்கான புள்ளினங்கள் வயல்நடுவே 'கீச் கீச்' என்று கத்துகின்றன. நேற்றிரவு மூன்றாம் சாமம் வரையிலும் கிராமத்துக் கன்னிப்பெண்கள் கும்மி, கோலாட்டம் என்று கும்மாளமடித்தனர்.

இரவு 'சியாமா-சகேவா' பண்டிகை நடந்தது. பிறகு பதுமைகள் நீரில் கரைத்து 'விஸர்ஜனம்' செய்யப்பட்டன.

சியாமா (கருங்குருவி), சக்ரவாகம், கஞ்சனப்பட்சி, சிட்டுக்குருவி, வெட்டுக்கிளி, குயில், சிவப்புக்கொண்டை, அன்னப்பட்சி, நீர்ப்பறவை, காட்டு அன்னம்—இவை போதாதென்று பலதரப்பட்ட புழு பூச்சி களின் உருவங்களை மண்ணினால் செய்து வண்ணம் தீட்டினார்கள். உழுதநிலத்தில் இரண்டு இரவுகள் அவற்றை 'மேய' விட்டார்கள். இவ்வாறு பட்சிகளுக்கு பக்தியுடன் பூசை நடந்தது. பிறகு 'விஸர்ஜனம்' (நீரில் கரைத்தல்) செய்யப்பட்டது.

பிறகு 'பிர்னாவன்' எரிக்கும் சடங்கு—நூற்றுக்கணக்காக. கோள் சொல்லிகளின் கொடும்பாவிகள் எரிந்தன. கொடும்பாவி எரியும்போது பாட்டு—"கோள்மூட்டியே, கலக மூட்டியே, கலகம் செய்தாய் வீடு வீடாய், தடியெடுத்தான் தனயன் தந்தைதன் மண்டை பிளந்தது; நீரிலும் கொளுத்தினாய் தீயை, மூட்டினாய் சண்டை; காரணமில் லாமலே. தீ மூள்க உன் மண்டை பற்றி எரியவே; மாண்டுபோவாய் நீ, கோள்சொல்லிக் குடுக்கையே- மூஞ்சூறு நீ- வெந்துபோக உன்வாய், கோள் சொல்லும் வாய்- ஹா ஹா ஹா!"

எண்ணற்ற பெண்களின் கைதட்டல், கும்மியடித்துக் கும்மாளம்.

விண்மீன்கள் உதிர்ந்தன. சிலம்புகள் ஒலித்தன. மருதாணிக் கிளைகள் பெருமூச்செறிந்தன. பனிபெய்து இரவு நனைந்தது-

தரையில் சிதறிய அட்சதை, குங்குமம், அருகம்புல்மீது முத்துத் துளிகள்- வானவில்லின் மெல்லிய கீற்றுகள்போல மின்னின.

-திடீரென ஒரு பறவை சிறகடித்தது. குருவிகள் எல்லாம் பயந்துபோய் ஒன்றாகப் பறந்தன. குருவிக்கூட்டம் கடுகு விளைந்து நிற்கும் வயலில் சென்று அமர்ந்தது.

ஐந்து வருஷங்களுக்குப் பிறகு—'சியாமா—சகேவா' பண்டிகையை கோலாகலமாகக் கொண்டாடினர் ராணிடீஹ் கிராமத்துப்பெண்கள்.

வெள்ளைத் துகில் விரித்தாற்போல பனிப்படலம். மார்கழி நெற்பயிரில் இலேசான செம்மை. அதாவது தானிய மணிகளில் பால்வற்றிக் கொண்டிருக்கிறது. உருளைக் கிழங்குச் செடிகளில் சின்னச்சின்ன இலைகள். காலைவேளையில் 'முட்டைக்கோசு'க்கு நீர் பாய்ச்சுகின்றனர்.

"விஜயாக்கா! வெளுக்க முன்னமே நீ 'கோசு' வளர்த்து என்ன பயனைக் காணப்போறே? எல்லாம் வீணாத்தானே போகப்போவுது! நீயோ 'பட்னா' போகப்போறே..."

"வாயை மூடு சிறுக்கி!" கங்காபுர்காரி பாட்டி சுர்முனியாவை அதட்டினாள், "முளைச்சு மூணு இலை விடலே, இந்த இம்மாத்தூண்டு சிறுக்கி நாள்பூராவும் சலம்பிட்டே கிடக்கு, மூடு வாயை!"

இம்மாத்தூண்டுச் சிறுக்கி சுர்முனியா வாயை மூடவில்லை. கண்ணைச் சிமிட்டி உதட்டைப் பிதுக்கிக்கொண்டு "உன் பாடு கொண்டாட்டம்தான் அத்தே! கோசுபோட்டு கும்பாரமாக் குவிக்கிறது. விஜயாக்கா, அதையெல்லாம் கூடை கூடையா கொண்டுபோய் [illegible]த்துக் காசாக்குறது நீ. நானும்தான் பார்த்துக்கிட்டிருக்கிறேன். [illegible]னியம்மா வந்து கேக்குறப்ப இந்த விரலை மடக்கி ஒடிப்பே, ஆனா மறந்தும்கூட கணக்குச் சொல்லமாட்டே ஹி-ஹி-ஹி-ஹி!"

பாட்டி ஒரு மோசமான வசைமொழியை உதிர்த்தாள். வசவைக்கேட்டு சுர்முனியா விஜயாவைப் பார்த்தாள். ஏற்கெனவே முறுவலித்துக் கொண்டிருந்த விஜயா சிரித்தாள்.

இந்தக் கருத்த பெண்ணின் குறும்பை அவள் நன்றாக அறிவாள். அப்படியே காந்தாரி மிளகாய்தான். லெட்சுமணனின் பேத்தி!

சுர்முனியாவின் சொல்லம்பு தன்னைத் தாக்கியதாகக் காட்டிக் கொள்ளவில்லை கங்காபுர் பாட்டி. இருந்தாலும் மூக்கால் ஏதோ முனகினாள். சுர்முனியா அதைப் புரிந்துகொண்டாள். இருந்தாலும் விட்டுக்கொடுக்காமல், "ஏன்க்கா, நான் தப்பாப் பேசிட்டேனா? நீயே சொல்லு, எண்ணிக்கையே தெரியாத இந்த கங்காபுர்காரப் பாட்டியிடம் எசமானியம்மா வந்து 'நூத்துக்கு அஞ்சு ரூபா வச்சு 150 மாங்காய்க்கு என்ன விலை ஆச்சு'ன்னு கேப்பாங்க. இந்தப் பாட்டி கெக்கெ—பெக்கென்னு உளறுவா, திருதிருன்னு விழிப்பா ஹிஹிஹி!"

"சரி சரி, சீக்கிரமா தொட்டியை நிரப்பு" என்றாள் விஜயா.

எட்டு-ஒன்பது பிராயமே ஆன இந்தச் சின்னப் பெண்ணை ஜெயிக்க யாராலும் முடியாது. விஜயாவைத் தவிர வேறு யாரும் இவளிடம் வேலை வாங்க முடியாது. இவள் தாயால்கூட முடியாது. தந்தையைப் பேசவே விடமாட்டாள்.

விஜயா ராணிடீஹ் வந்ததிலிருந்து பெரியவீட்டு

பங்களாவில்தான் இருக்கிறாள்.

நேற்று சுர்முனியா சொன்னாள், "விஜயாக்கா, நீ வந்ததிலிருந்து கிராமத்திலே ஏதோ திருவிழா வந்த மாதிரி இருக்குது—நவராத்திரிப் பண்டிகையின் தேவி வந்ததுபோல. இனிமேல் நீ கஞ்சனப்பட்சிபோல ஆண்டுக்கொருதடவை கிராமத்துக்குப் பறந்து வருவே, எசமானியம்மா வந்து போறாகளே அது மாதிரி. பட்டணத்துக்குப் போயி நீயும் 'புது மோஸ்தர்' ரவிக்கை போட்டுப்பே."

"என்னா பேச்சுப் பேசறே? உதை வாங்கப் போறே நீ" கீரையை ஆய்ந்துகொண்டிருந்த பாட்டி அவளை எச்சரித்தாள், "இந்தச் சிறுக்கிக்கு கொஞ்சமாவது மருவாதை தெரியுதா பாரு!"

பாட்டி அவ்வப்போது சுர்முனியாவின் தலைமயிரைப் பிடித்திழுத்து அவளை அடிப்பதுண்டு. அப்படி நடக்கும்போதெல்லாம் சுர்முனியா தெருவில் நின்று ஓலமிட்டு ஊரையே கூட்டிவிடுவாள்; ஏதாவது சாம்பல் குழியில் புரண்டு 'பேயன்' உருவெடுப்பாள்; பிறகு அடுக்கு மொழியில் அமைந்த அழுகைப் பாட்டு—"ரீ-ஈ-ஈ- புடியா கங்கபரனி, படகரியா கீ கர்னீ, ஹம்ரோ சௌத்னி-ஈ-ஈ-" (ஏ. என்னைப் பெத்த ஆச்சியம்மா, கெயவி இவள் கொல்றாம்மா. பெரிய வீட்டுப் புழுக்கச்சி- கங்காபார்னிக் கெயவி- வாய்த்தாளே சக்களத்தி-)

அப்போது கங்கை தாண்டி வந்த பாட்டியின் பொக்கை வாயில் தவழும் சிரிப்பைப் பார்க்க வேண்டுமே. சிரித்துக்கொண்டே "அந்த பாகல்புர்க்காரியை இந்தப் பொல்லாத பொண்ணு என்ன பாடு படுத்திச்சு தெரியுமா விஜயா?"

கங்காபுர்காரப்பாட்டி தாழ்ந்த குரலில் கதையை விவரித்தாள், "போனவருசம் புரட்டாசி மாசம் வந்தா பாகல்புர்காரி. ஒரு நாளைக்கு என்னாச்சு, பெட்டியிலிருந்த துணிமணிகளை வெயிலில் உலர்த்தச் சொல்லி இதுகிட்டக் கொடுத்தா பாரு, கொடியிலே துணியெல்லாம் பரத்திப் போடறப்ப இந்தக் காந்தாரி மிளகாய் உரத்த குரல்லே பாடிச்சு—"யாருக்கு வேணும்- ஜெர்மன் சரக்கு- ரப்பர் சரக்கு- பந்து கணக்க- அழகு பறக்க- யாருக்கு வேணும்- ஜெர்மன் சரக்கு-" நான் எட்டிப்பார்த்தா, ஒரு மூங்கில் கழியிலே பாகல்புர்காரியின் 'உள்பாடி' யைத் தொங்கவிட்டு இந்தச் சுர்முனியா ஆட்டம் போடுது. வாசல் முழுக்க பஞ்சாயத்து மெம்பருங்க- பாகல்புர்காரி எரியற கொள்ளிக் கட்டையைக் கையிலே எடுத்திட்டு ஓடிச்சு, இதை வெரட்டிக்கிட்டு."

விஜயாவுக்கு சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாயிற்று.

சுர்முனியா தேடிப்பிடித்து ஒரு பெரிய பக்கெட்டை எடுத்துவந்தாள்.

எட்டு மணி வண்டி வருவதற்கு முன்பே முட்டைக்கோசுக்கு நீர் பாய்ச்சி முடிந்தது. வாளி—கயிறு குவளையைக் கையில் எடுத்துக் கொண்டு விஜயா வேகவேகமாக ஓடி தோட்டத்துக்கு வெளியே

வந்தாள். வெளியே வந்ததும் சுர்முனியா பறந்து கொண்டிருந்த தன் தலைமுடியைக் கைகளால் கோதியவாறு, "விஜாயாக்கா நெசமாலே நீ நாளைக்குப் புறப்பட்டிருவியா-? போகவேண்டாம் விஜயாக்கா-" என்றாள்.

விஜயா ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

பெரிய வீட்டு ஹவேலி. முன்பெல்லாம் 'பெரிய வீடு'ன்னு சொன்னாலே ராணிடீஹ் சௌத்ரி குடும்பத்தின் வீடு என்று எல்லாரும் புரிந்துகொள்வார்கள். இப்பொழுதோ, ஹவேலி என்று சேர்த்துச் சொல்லவேண்டும். ஏனெனில் ராணிடீஹில் இப்போது ஒன்றல்ல, பல 'பெரிய வீடு'கள் எழுந்துவிட்டன.

பெரியவீட்டு பங்களாவின் ஏகவாரிசான ராமேஸ்வர் சௌதரி எம்எல்ஏ. கடந்த பல வருடங்களாக குடும்பத்துடன் பட்னாவிலேயே வசிக்கிறார். கங்காப்பூர்காரப் பாட்டி அவருக்கு தூரத்து உறவு. பாட்டி தான் இப்போது பங்களாவுக்குக் காவல். விவசாயி ஸீப்பிரசாத் (ஸ்ரீபிரசாத்) பயிர்களைக் கவனித்துக் கொள்கிறான். ஊர்க்காரர்கள் அவனை 'மனீஜர்' (மேனேஜர்) என்று அழைப்பார்கள். பரிகாசம் செய்வதற்காக வைத்தபெயர் இப்போது நிலைத்துவிட்டது. ஸீப்பிரசாத் போய் 'மனீஜர்' ஆகிவிட்டது.

குத்தகைக்கு விட்டிருந்த நிலங்களை ஒவ்வொரு வருடமும் விற்று ராமேஸ்வர் பாபு கொஞ்சம் கொஞ்சமாகத் தொல்லையைக் குறைத்து வந்தார். இப்போது சொந்தப் பயிரில் கொஞ்சம் நிலமும், குளங்கரை மற்றும் தோப்புகள் மட்டும் இருக்கின்றன. யாராவது பெரிய கிராக்கி கிடைத்தால் எல்லாவற்றையும் விற்று முழுக்குப்போட எண்ணம் உண்டு. பிறகு இந்த ராணிடீஹ் கிராமத்துப் பக்கம் தலைவைத்துப் படுக்கக்கூட அவருக்கு விருப்பம் இல்லை.

கடந்த பதினைந்து வருடங்களாக ராமேஸ்வர் பாபு பட்னாவில் வசிக்கிறார்—பட்னா எம்எல்ஏ ஹாஸ்டலில். தற்சமயம் ராஜேந்திர நகரில் வீடு கட்டிக்கொண்டிருக்கிறார். இம்முறை அவருக்கு தேர்தலில் நிற்க பார்ட்டி டிக்கெட் கிடைக்கும் என்று சொல்லமுடியாது. கிடைக்காவிட்டாலும் கிராமத்துக்குத் திரும்பப் போவதில்லை. இனி மேல் எந்தக் கிராமத்திலும் அவரால் இருக்க முடியாது-!

காலஞ்சென்ற அண்ணன் சித்தேஸ்வர் சௌத்ரியின் மனைவியும் இறந்துவிட்டாள். தமையனாரின் மகள் விஜயா ஏழெட்டு வருடங்களாக தன் தாயுடன் மாமாவீட்டில்தான் இருந்தாள். அவள் பதினாறு வயதைத் தாண்டியதும் விஜயாவின் பெரிய மாமா அவளுடைய சித்தப்பாவுக்குக் கடுமையாக எழுதிவிட்டார்—"நீங்கள் எந்த சொத்து சுகங்களை அனுபவிக்கிறீர்களோ அவையெல்லாம் உங்கள்

தலைமையனாரின் உழைப்பினாலும், தியாகத்தினாலும் கிடைத்தவை. அவருடைய மனைவியை நீங்கள் துடைப்பததினால் அடிக்காத குறையாகத் துரத்தினீர்கள்- அவள் இறந்துவிட்டாள், துன்பத்திலிருந்து விடுபட்டாள். ஆயினும் நீங்கள் 'தலைவலி' ஒழிந்தது என்று நிம்மதியாக இருக்க முடியாது. உங்கள் 'கஷ்டதசை' இன்னும் சற்று மீதி இருக்கிறது. விஜயா இப்போது திருமண வயதை எட்டிவிட்டாள்- நீங்கள் இந்தக் கடிதத்தை அசட்டை செய்தால் நான் உங்கள் கட்சித் தலைவருக்கு எழுத வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளாவேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

அந்த வருடம் நவராத்தரி விடுமுறையின்போது ராமேஸ்வர் பாபு தன் துணைவியாருடன் (பாகல்பூர்காரி) ராணிடீஹ வந்தார். நாராயண் கஞ்ச் கிராமத்துக்கு ஆள் அனுப்பி விஜயாவை வரவழைத் தார். நவராத்திரி காளிபூஜை முடிந்து பட்னா திரும்புவதற்கு முன் கங்காபுர்காரக் கிழவி "வேணும்னா விஜயா இங்கே பத்துநாள்கூட இருக்கட்டுமே! காய்கறித் தோட்டத்தைப் பார்க்க கொள்ள வசதியாக இருக்கும். அப்புறம் ஒரு மாசத்திலே பாகல்புர்காரி மருமக அறுப்புக்கு வருவா இல்லே, அவளோட வந்துடுவா."

ராமேஸ்வர் பாபுவுக்கு இந்த யோசனை சரியாகப்பட்டது. "சரி, விஜயா நவானா பண்டிகைக்குப் பிறகு பட்னா வரட்டும். பரவாயில்லை" என்றார்.

ஆனால் முந்தாநாள் கடுதாசி வந்திருக்கிறது—அறுப்புக்கு பாகல் புர்காரி சித்தி வரமாட்டாளாம். அங்கே வீடு கட்டுகிற வேலை நடக்கிறது. வேலைக்காரர்களை மேற்பார்வை பார்க்கவே நேரம் சரியாக இருக்கிறதாம். அதனால் 'சியாமா-சகேவா' பண்டிகைக்குப் பிறகு விஜயா தன் சின்னமாமாவுடன் பட்னா வரணுமாம்- கண்டிப்பாக-

இன்று சாயங்காலத்துக்குள் விஜயாவின் சின்னமாமா நாராயண் கஞ்சிலிருந்து வந்துவிடுவார். நாளை மாலையில் விஜயா பட்னாவுக்கு செல்லும் வண்டி ஏறிவிடுவாள்.

சுர்முனியா தினமும் செய்யும் வீட்டு வேலை ஒன்று உண்டு. அந்தி சாய்வதற்கு முன்பு கிழக்கு வீதி சாஹுவின் கடையிலிருந்து சாமான் வாங்கி வருவதுதான் அது- எண்ணெய், சோளம், கடலை, உப்பு- கணக்கில் அவள் புலிதான். கூட்டல், கழித்தலில் பெரியவர் களுக்குக் கூட விடுதல் வரலாம்; ஆனால் அவளுக்குப் பிசகே வராது. ஒரு பைசாகூட விட்டுக்கொடுக்கமாட்டாள். மாலை நேரத்தில் சாஹு கடைவாசலில் கூடும் 'ஊர் வம்பு'க் கச்சேரியிலும் சுர்முனியா சளைக் காமல் சேர்ந்துகொள்வாள். அவள் ஒருநாள் வரவில்லையென்றால் பேச்சு களைகட்டாது, இதோ, ஆரம்பித்துவிட்டாள், "இப்ப விஜயாக்காவும் போயிடப்போவுது. ஆமாம். நாளைக்கே."

"கங்காபுர்காரி போகலியா?"

“அவ போனா இங்கே ஒட்டுமாங்காத்தோப்பை யாரு பாத்துக் கறது, ராப்பூரா தூக்கம் விழிச்சு?”

சுர்முனியாவின் பேச்சைக்கேட்டு எல்லாரும் சிரித்தார்கள். ராம்பலின் வீட்டுக்காரி கேட்டாள், “ஏண்டீம்மா உன்னை அழைச் சிட்டுப் போகலியா விஜயா?”

“ஐய, நான் என்னத்துக்குப் போகணும்?”

சச்சிதா ஐந்து பைசாவுக்கு கற்பூரம் வாங்க வந்தான். விஜயா மறுநாளே போகப்போகும் விபரம் தெரிந்து அப்படியே நின்று விட்டான்.

பாழடைந்த ஹிங்கானா மடத்தில் கஞ்சிரா அடித்து சத்குரு புகழ்பாடும் சாமியார் சூரத்தாஸ் சொன்னான், “ஆமாம், எல்லாரும் போயிடுவாங்க, கிராமத்திலே ஒருத்தர் பாக்கியில்லாம எல்லாரும் போயிடுவாங்க...”

கிராமத்திலேயே பெயர்போன சண்டைக்காரி பண்டா அம்மா அலுத்துக்கொண்டாள், “இந்தச் சாமியார் வாயிலே நல்ல வார்த்தையே வராது. எப்பப்பாரு அபசகுனம் மாதிரி இதேபாட்டுத்தான்—எல்லாரும் போயிடுவாங்க. எப்பப்பிடிச்சு இவர் இந்த மாதிரி சொல்ல ஆரம்பிச் சாரோ கிராமத்து வாலிபப் பசங்க பட்டணத்தைப் பார்க்க ஓடறாங்க. அப்படி என்னதான் இருக்குதோ பட்டணத்துத் தண்ணிலெ, ஒரு மடக்கு குடிச்சவங்களுக்கு கிராமத்துத் தண்ணி ஒத்துக்கறதில்லே. கோவிந்த் போனான், பஞ்ச்கௌடியாவையும், சுக்வாவையும் கூடவே இழுத்திட்டுப் போயிட்டான். அப்புறம் பிராமண்டோலாவிலிருந்து இரண்டு கிழடுகள் அர்ஜுன் மிஸ்ராவும், கேந்தா ஜாவும்...”

ராம்பலின் வீட்டுக்காரி இடையிலே புகுந்து, “பெரிசா பேச வந்துட்டியே அர்ஜுன் மிஸ்ரா, கேந்தா ஜாவைப்பத்தி! கிராமத்திலே இரண்டு பேரும் தின்னுட்டுத் தின்னுட்டு வெட்டியா சுத்திட்டுக் கிடந்தாங்க; சுண்ணாம்பைப் புகையிலைலே வெச்சு நெரடறதும், பல்லை இளிச்சுக்கிட்டு இங்கேயும் அங்கேயும் யாசகம் பண்றதும்தான் வேலை. இப்ப பட்டணத்துக்குப்போயி ஓட்டல்லே சோறு ஆக்கறாங்க. போனமாசம் அர்ஜுன் மிஸ்ரா வந்திருந்தாரு. கைப்பைக்குள்ளே சின்னதா வெத்திலை பாக்குப் பெட்டியும், புகையிலையும் வெச் சிருக்காரு. கொஞ்சம் தொந்தியும் வந்திருக்குது...”

“அப்படீன்னா, நீயும் ராம்பலை அனுப்பறதுதானே! அவனுக்கும் தொந்தி வருமே!”

“சீ, அதுவும் ஒரு பொளைப்பா... பட்டணத்துக்குப்போயி இவனுக ‘ரிஸ்கா வண்டி’ அல்ல இளுக்குறாங்க! கடவுளே, இப்படி ஒரு காலமா” என்று ஒருவர் குறைபட்டார்.

“ஏன்ய்யா... ரிக்ஷா இளுக்கறது என்ன, அப்படிக் கேவலமான தொழிலா? பெரிசா பேச வந்துட்டீரே! அஞ்சு ரூபா கிடைக்குது

தினமும். எந்தத் தொழில்லே இவ்ளோ கிடைக்குது?" இது இன்னொருர்.

தோணிக்காரத் தெரு சச்சிதா, அஞ்சு பைசாவுக்குக் கற்பூரம் வாங்க வந்தவன், நீட்டி முழக்கிக் கேட்டான், "பதில் சொல்லுங்க பாப்பம்."

யாரும் பதில் சொல்லவில்லை.

சச்சிதா போனபிறகு சுர்முனியா உதட்டை வலித்துக்கொண்டு, "இந்தப் பறவையின் சிறகும் கிடந்து அடிச்சுக்கிட்டு இருக்குது- இதுவும் பறந்துடும்-விர்ர்-னு-"

'அஹ்ஹஹ்ஹஹா' என்று எழுந்த சிரிப்பொலி அடங்க வெகுநேரம் பிடித்தது. சுர்முனியாவின் வக்கணையான பேச்சை நினைத்து நினைத்து அவர்கள் சிரித்தனர். சுர்முனியாவின் பாட்டி அவளை அழைத்தாள், "ஏ குட்டீ, சுர்முனியா, இங்கே வாயேன்."

இரவில் சுர்முனியா பெரிய வீட்டில்தான் தூங்குவாள், கங்கா புர்காரப் பாட்டியுடன். பாட்டி இரண்டு வேளையும் டீ போட்டுக் குடிப்பாள். சுர்முனியாவையும் 'டீ' பழக்கம் பிடித்துக் கொண்டது. இன்று ஞாயிற்றுக்கிழமை. இரவிலும் இரண்டு தடவை டீ குடிப்பாள் கங்காபுர்காரி பாட்டி.

ஆனால் சுர்முனியாவுக்கு இன்று டீயில் நாட்டம் இல்லை. தன் கந்தைப்பாயில் சுருண்டு கிடக்கும் சுர்முனியா அடுப்பில் கண கணக்கும் கெட்டிலின் ஓசையைக் கேட்டுக்கொண்டு மௌனமாகப் படுத்திருக்கிறாள். பாட்டி அவளைச் சீண்டினாள், "ஏண்டீம்மா, இன்னிக்கு யாருடைய பிரிவிலே வாடிட்டிருக்கே-?"

சுர்முனியாவுக்குப் பற்றிக்கொண்டு வந்தது, "கொஞ்சம்கூடப் பிடிக்கலே, இந்த வேண்டாத பேச்சு."

"அடி நல்லபேச்சுக்காரி! இன்னிக்கு உனக்கு என்ன ஆச்சு?"

சுர்முனியா என்ன பதில் சொல்லுவாள்?

சொல்லி வைத்தாற்போல எல்லாரும் கிராமத்தை விட்டுப் போகிறார்கள். சச்சிதாவும்போய்விட்டால் கிராமத்தில் நடக்கும் 'சடுகுடு' போட்டியிலே ஒரே மூச்சிலே அஞ்சுபேரை அடித்து யார் ஜெயிக்க முடியும்? வானளாவி வளர்ந்த நாவல் மரத்திலே ஏறி தேன்கூட்டை யார் உடைக்க முடியும்? ஹோலிப்பண்டிகையின்போது குதித்துக் கும்மாளமடித்து ஜோகீடா, படௌவா பாட்டுகள் பாடத் தெரிந்தவன்- குஸ்தி மைதானத்தில் சண்டையின் மும்முரத்துக்கு ஏற்றபடி தாளமடிப்பவன்- சச்சிதா!

-போன வருடமே ஹோலிப்பண்டிகை களை கட்டவில்லை. எட்டு—ஒன்பது பிராயமே ஆன சுர்முனியா என்ற சின்னஞ்சிறு பெண் கிராமத்துப் பொது நிகழ்ச்சிகளை எண்ணி கவலையடைகிறாள்— எல்லாருமே போனால் என்ன ஆவது?

சுர்முனியா பாடிக்கொண்டே அழ விரும்புகிறாள் வேதனை

நிரம்பிய குரலில்—ஒவ்வொரு வரியாகச் சேர்த்துச் சேர்த்து அழுது கொண்டே பாடவிரும்புகிறாள், மெல்லிய குரலில் ஆரம்பித்தாள்—ஆ-கே மயியோ-ஓ (அய்யகோ- என்னைப் பெத்த ஆத்தா-ஆ-ஆ)

கங்காபுர்காரப்பாட்டி அதட்டினாள், "ஐய, இந்த இம்மாத்தூண்டு சிறுக்கியைப் பாரு! வெளக்கு வச்ச நேரத்திலே மூக்காலே அழுது பாரு. எந்திரிடீ, போயிருப்பாரு, விஜயா உன்னைக் கூப்பிடுது."

"ரவுண்டாணான்னா என்னண்ணே?"

கிராமத்து இளவட்டங்கள் மனசிலே இனந்தெரியாத குறு குறுப்பு—புல்கன் பட்டணத்தைப் பற்றி அளக்கிற அளப்பைக் கேட்டு. சுவாரசியமான வம்பு. இந்த வம்புப் பேச்சிலும் ஒரு வாசம்—புல்கனின் தலையிலிருந்து வரும் தைலவாசனை போல.

புல்கன் புருடாவிடுகிறான். "ராஜின்னர் நகரா. இப்ப அதைப்பத்தி ஒண்ணும் கேக்காதே தம்பி! என்னா பட்டணம் அது! தரையைப் பிளந்திட்டு நாய்க்குடைகள் வர்ர மாதிரி தினமும் கட்டிடங்கள் எழும்புது! எப்படி நடக்கும்னு கேக்குதியா? அங்கே ஒரு வேலையும் கையாலே செய்யுறதில்லே. செம்மண் இடிக்குறதிலிருந்து சிமெண்டு தேய்க்குறது, வெள்ளையடிக்குறது—எல்லாமே 'மிஷின்'தான்- தலை மயிரை வெட்டப்போனா நாவிதர் மிஷினை எடுக்கிறாரு- மினிட்டிலே 'கரீட்டா' வெட்டிடும்- நூறு அடி நடந்தா ஒரு ரவுண்டாணா-"

"ரவுண்டாணான்னா என்னண்ணே?"

"எப்படிச்சொல்லி புரிய வைக்குறதுன்னே தெரியலே தம்பி! நேரிலே வந்து பார்த்தாத்தான் தெரியும். அதனோட அழகை வாய் வார்த்தையாலே சொல்ல முடியாதப்பா. வட்டமா ஒரு பூக்கூடைன்னு நெனச்சுக்க-பச்சைப் பசேல்னு செடிங்க. கொத்துக்கொத்தா பூக்கள்-கலர் கலரா-காத்திலே ஆடிக்கிட்டு- இந்தப் பூக்கூடையைச் சுத்தி கம்பி அழி போட்டிருக்கும். சாயங்காலமாச்சுன்னா 'மெர்க்குலி' லைட்டு வெளிச்சம் பால்போல விழுந்திட்டிருக்கும் நிலாக்காயுற மாதிரி- காத்து பிச்சுக்கிட்டுப்போகும். அப்ப அங்கங்கே உடம்பைத் தொறந்து போட்டுக்கிட்டு சின்னக்குட்டிங்க- பொண்ணுங்களா அதுங்க? இல்லே பிலிம் இஸ்டாருங்க-"

"இன்னா அண்ணே பிலிம்-?"

"தீயை வை. பிலிம் இஸ்டாரு தெரியாது? அட, பிக்சர்லே நடிக்குற பொண்ணுங்க"

"பிக்சரா?"

"உங்களுக்கெல்லாம் எப்படிச் சொல்லி புரியவைக்குறது-. பிக்சர்னா, சினிமாப்படம். சுவத்திலே போஸ்டர் பாத்ததில்லே- அளகிங்க படம்! இப்பப் புரிஞ்சுதா?"

டபிக்சர் பொண்ணு- சினிமாக் குட்டியாம். என்னென்னமோ பேசுறானே. எப்படி இருந்த பய ஒருவாட்டி பட்டணம்போயி வந்ததும் எந்தமாதிரி மாறிட்டான்! கிராமத்து இளவட்டங்கள் உடம்பெல்லாம் புல்லரிப்பு. புல்கன் பட்னாவிலே 'ரிக்ஷா வண்டி' இழுக்குறானாம். இழுக்கலே, ரிக்ஷாவிலே டெலிவரி செய்யுறானாம். புல்கன் ரிக்ஷா டெலிவராம், அது என்ன மாயமோ?

"அது சரி, 'ரிக்ஸா டெலிவரி' எத்தினி நாளிலே கத்துக்கலாம்?"

"சொல்லிக்குடுக்குற ஆசான் கெட்டிக்காரரா இருந்து, படிக்குற வனுக்கும் 'கூறு' இருந்தா மூணே நாளிலெ 'ஹேன்டில்' சொன்னபடி கேக்கும்—இதிலே முக்கியமான 'அயிட்டம்' ஹேன்டில்தான்!"

கிராமத்துப் பொடியன்கள் கவனித்தார்கள். 'இந்த புல்கன் அடிக்கொரு தபா இங்கிலீசு வார்த்தை போட்டுப் பேசுறான்—டெலிவரி, ஹேன்டில், கரீட்டு, அயிட்டம்!'

புல்கன் பையிலிருந்து மடித்த சினிமா போஸ்டர், நோட்டீசுகளை எடுத்தான்.

நோட்டீசைப் பிரித்துக்காட்டி, "யார் யாருக்குப் பாக்கணுமோ அல்லாரும் பாருங்க."

"அடேங்கப்பா-!"

"சினிமா அளகிங்க படம்டா!"

"ஐய, நடுரோட்டிலேயும், ஆத்தோரத்திலேயும் இப்படி பாதி உடம்பை காட்டிக்கிட்டா போகுங்க? யாரும் ஒண்ணும் சொல்ல மாட்டாங்களா?"

இளவட்டங்களின் எண்ணமெல்லாம் சினிமா அழகிகளைச் சுற்றிச் சுழன்றது. மனக்கண்ணில் அழகு சுந்தரிகளின் ஆட்டம்-! இரவில், சொப்பனத்திலும் போஸ்டர் சுந்தரிகள் சுழன்று ஆடினர்.

விஜயாவுக்கு ஒரே வியப்பு! கிராமம் ஆளரவமற்றுப் போய்விடப் போகிறதே, உடைந்து சின்னா பின்னமாகிவிடப்போகிறதே என்று இந்தச் சின்னஞ்சிறு சுர்முனியா எத்தனை கவலைப்படுகிறாள். இந்த அளவு அக்கறையும், கவலையும் யாருக்கும் இல்லை. விஜயா ஏழெட்டு வருடங்கள் கழிந்து இந்த கிராமத்துக்குத் திரும்பியிருக்கிறாள். அதனாலென்ன? அவளும் இந்தக் கிராமத்துப் பெண்தானே!

பட்னா போகவேண்டும் என்ற விஷயம் உறுதியானது முதல் அவள் உள்ளுக்குள்ளேயே மருகிக் கொண்டிருக்கிறாள். பன்னீர்ப்பூ போல. அவளுக்கு பட்னா செல்ல விருப்பமே இல்லை. இந்த கிராமத் திலேயே இருக்கத்தான் அவளுக்கு விருப்பம். அவளுக்கு தந்தையின் நினைவு வருகிறது, இதயம் வெடித்துவிடும்போல ஆகிறது. அதைக் கண்டு இந்தக் கிழட்டுப் புளியமரம், தோப்பு, பறவைகள், மிருகங்கள்

எல்லாம் அவளுக்கு ஆறுதல் கூறுகின்றன. கண்ணுக்குப் புலப்படாத ஒரு முந்தானை தலைக்கு மேலே விரிந்து நிழல் தருவதுபோல, அபயமளிப்பதுபோலத் தோன்றுகிறது. இங்கே வந்ததுமே, அப்பா தோட்டத்தில் எங்கேயோ உட்கார்ந்திருப்பது போலவும், அம்மா சமையலறையில் சோறு ஆக்கிக்கொண்டிருப்பது போலவும் தோன்றுகிறது. மாமாவின் கிராமமும், வீடும் கூட அவளுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அப்பாவின் கிராமத்தில் ஒரு சின்னக் குச்சுவீடு கிடைத்தால் கூடப்போதும், அவள் மகிழ்ச்சியாக இருப்பாள் வாழ்நாள் முழுதும்–

"விஜயாக்கா!"

சுர்முனியா இன்றைக்குக் கையும் களவுமாகப் பிடித்துவிட்டாள். விஜயா இங்கே வந்ததிலிருந்தே இரவெல்லாம் அழுகிறாள், யாருக்கும் தெரியாமல். தினமும் காலையில் எழுந்ததும் நனைந்த தலையணை உறையை மாற்றிவிடுகிறாள்.

"விஜயாக்கா!" சுர்முனியா எழுந்து உட்கார்ந்து விட்டாள்.

கங்காபுர்காரி பாட்டி புரண்டு படுத்தவாறு முணுமுணுத்தாள், "எதுக்கு ராத்திரி எழுந்திரிச்சு இப்படி ஓலம் போடுறே, சும்மாத்தானே கிடக்கணும்?"

சுர்முனியா உதட்டைக் கோணி கிழவியை அழகு காட்டுவதை விஜயா ஓரக்கண்ணால் கவனித்தாள். "உனக்கென்ன வந்தது? நீ பாட்டுக்கு ரெண்டு தபா டீ குடிச்சுட்டுக் கிடக்கே. இந்த விஜயாக்கா பாரு, ரெண்டு நாளா சோறு தண்ணி இல்லாம கிடக்குது." என்று சொல்லாமல் சொல்லிக்கொண்டிருந்தாள் அந்தச் சின்னக்குட்டி

சுர்முனியா எழுந்து வெளியே போவதைக் கவனித்தாள் விஜயா. வெளியே போய் வானத்தை அண்ணாந்து பார்த்தவள், "உம், இரவுப் பொளுது இன்னும் நிறைய இருக்குது," என்று சொல்லிக்கொண்டே உள்ளே வந்தாள்.

உள்ளேவந்த சுர்முனியா விஜயாவின் கால்மாட்டில் அமர்ந்தாள், மெதுவாக அவள் பாதங்களை வருடலானாள்.

இந்தக் குட்டி என்னை என்னமா சொக்க வைக்குது, மாய வலையிலே சிக்க வைக்குது! விஜயா கால்களை இழுத்துக்கொண்டாள், "என்ன செய்யுறே குட்டீ!"

சுர்முனியா சிரித்தாள், "அட, அக்கா முழிச்சிட்டிருக்கியா. நான் கூப்பிட்டப்ப, ஏன் குரல் கொடுக்கலே?"

'உனக்குத் தூக்கம் வரலே, சுர்முனியா?"

சுர்முனியா கங்காபுர்காரி பாட்டியின் பக்கம் சைகை காட்டிக் கொண்டு, "இந்தப்பாட்டியின் குறட்டை, அப்பப்பா, ரம்பத்தாலே மரம் அறுக்கறமாதிரி!" என்றாள்.

விஜயாவுக்குச் சிரிப்புதான் வந்தது. சுர்முனியாவைக் கடிந்து கொண்டாள், "என்னத்துக்குப் பொய் சொல்றே? பாட்டி இன்னிக்கு

ஒரு தடவைகூட குறட்டை விடலியே!"

"அக்கா, நீ தூங்கிட்டிருந்தா உனக்கு எப்படித் தெரியும்?" சுர்முனியா ஜெயித்துவிட்டாள், "தெரியுமா விஜயாக்கா? சச்சிதாவும் இப்ப பட்டணத்தைப் பார்க்க போயிடுவான்- போங்கப்பா, எல்லாரும் போங்க. இங்கே கிராமத்துலே என்ன வெச்சிருக்கு? பட்டணத்துலே போனா பயாஸ்கோப்பு பார்க்கலாம், சினிமா உண்டு, சர்க்கஸ் உண்டு-"

"தூங்க விடுவியா மாட்டியா?"

"மாட்டேன்."

"ஏன்?"

"நாளை ராத்திரி நீங்க எங்கே கிடைக்கப் போகறீங்க? அதாலே இன்னிக்கு ராத்திரி பூரா தொந்தரவு பண்ணுவேன்."

சற்றுநேரம் மவுனம் நிலவியது. இருவரும் பெருமூச்சு விட்டனர்.

"விஜயாக்கா!" சுர்முனியா அவளை ஒட்டிக்கொண்டு படுத்தாள்.

"என்னம்மா?"

"பட்டணத்துப் பையனைக் கண்ணாலம் கட்டக்கூடாது-"

விஜயாவுக்கு கடகடவென்று சிரிக்க வேண்டும்போல இருந்தது. கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக்கொண்டு கேட்டாள், "ஏம்மா, பட்டணத்துக்காரங்க உனக்கு என்ன கேடு செஞ்சாங்க?"

"எனக்கு என்ன கேடு செய்வாங்க?"

"அப்ப, யாருக்குக் கேடு செய்வாங்க?"

"உனக்குத்தான்- விஜயாக்கா! நீ கண்ணாலம் கட்டிக்காதே. அவங்க உன்னை கிராமத்துப் பக்கமே வரவிடமாட்டாங்க."

"ஏன்?"

"கிராமத்து ஆளுங்க கிராமத்தைவிட்டு பட்டணத்துக்கு ஓடிப் போறாங்க. பட்டணத்துக்காரன் தன் பொஞ்சாதியை கிராமத்துக்கு அனுப்புவானா என்ன?"

"என்னைப் பிடிச்சு கட்டிப்போட்டுருவாங்களா?"

"ஆமாம், கட்டித்தான் போடுவாங்க. அறையிலேபோட்டு அடைச்சி வெப்பாங்க."

கங்காபுர்காரி பாட்டி எழுந்து உட்கார்ந்து 'ஜெபம்' செய்ய லானாள். இரண்டுபேரும் வாயை மூடிக்கொண்டனர்.

பாட்டி எழுந்து வெளியே போனாள். அதற்குள் சுர்முனியா தூங்கிவிட்டாள். விஜயா மெதுவாக அவளுடைய பறந்த தலைமுடியை வருடலானாள்.

காலையில் எழுந்து வெளியே வந்ததும் சுர்முனியா கத்தினாள் "விஜயாக்கா, வந்து பாரு, நீலகண்டப் பறவை!"

கோடி டீலா பக்கம் ஓடும் வாய்க்காலிலிருந்து சுர்முனியா உயிருடன் மீனைப்பிடித்து வந்தாள். வாயகன்ற பாத்திரத்தில் தண்ணீர் பிடித்து மீனை அதில் விட்டாள். பிறகு கிராமத்துக்கு வடக்கே,

பீர்பாபா சமாதியிலிருந்து சிறிதளவு மண் எடுத்துவந்தாள். காலையிலிருந்து அவள் ஏதோ வேலையில் மும்முரமாக இருக்கிறாள். விஜயாவின் மாமா வந்து பலமுறை அவளைச் சீண்டப்பார்த்தார். விஜயாவும் பலமுறை அவளை வம்புக்கிழுத்தாள். ஆனால் அவள் பேசவேண்டுமே, ஊஹூம்! இன்று அவள் கங்காபுர்காரி பாட்டியின் வசவுகளுக்குக்கூடப் பதிலளிக்கவில்லை. உதட்டைக்கோணி அழகு காட்டவும் இல்லை. நேற்று சொல்லிக் கொண்டிருந்தாள், "விஜயாக்கா, நீ இங்கிருந்து போனா, நாளையிலிருந்து பாட்டி திட்டவே மாட்டா தெரியுமா? எப்பப் பார்த்தாலும் முகத்தைத் தூக்கி வெச்சிட்டு உக்காந்திருப்பா. இல்லேன்னா கண்ணை மூடிட்டு செபிச்சிட்டிருப்பா."

மதியம் விஜயாவின் மாமா சாப்பிட உட்கார்ந்தார். அப்போது தான் சுர்முனியா வாயைத் திறந்தாள், "மாமா விஜயாக்காவையும் உங்ககூட உட்கார்ந்து சாப்பிடச்சொல்லுங்க, பாவம், ரெண்டுநாளா தண்ணிகூட_"

மணலால் கட்டிவைத்த அணை பொலபொலவென்று உடைந்து போன மாதிரி குலுங்கிக் குலுங்கி அழுதாள் சுர்முனியா. அழுகைக் கிடையில், "விஜயாக்கா_ இங்கிருந்து_ பட்டினியா போகப்போறா ஊ_ஊ_"

சுர்முனியாவின் அழுது சிவந்த கண்களில் விஜயா ஏதோ ஒன்றைக் கண்டாள். நடுங்கிவிட்டாள். அழுதழுது சாகப்போவது இந்தச் சின்னப்பொண்ணு! துக்க மிகுதியினால் தொண்டை அடைத்துக்கொண்டது. இடறிய தொண்டையுடன் சின்னப்பெண்ணுக்கு ஆறுதல் கூறினாள், "போ, மொதல்லே போயி குளிச்சிட்டு வா. நான் இன்னிக்கு உன்கூட உட்கார்ந்து சாப்பிடுறேன். எந்திரி!"

விஜயாவின் மாமாவுக்கு ஒரே ஆச்சரியம். விஜயா இன்று வரையிலும் எந்தக் குழந்தையையும் இந்த மாதிரிக் கொஞ்சிப் பார்த்ததே இல்லை. அவர் சீக்கிரமாகச் சாப்பிட்டுவிட்டு முற்றத்துப் பக்கம் சென்றுவிட்டார்.

விஜயா சுர்முனியாவை நன்றாகத் தேய்த்துக் குளிப்பாட்டினாள். கங்காபுர்காரப்பாட்டி வெளியே வந்து பச்சை பச்சையாகத் திட்டினாள். ஆனால் இன்று அந்த வசவுகளைக் கேட்டும் சுர்முனியா அழுதுகொண்டிருக்கிறாள். நாளையிலிருந்து பாட்டி திட்டுவதை நிறுத்திக் கொள்வாள்.

சாப்பிடும்போது விஜயா குறுக்கிட்டாள், "வயிறு நிரம்பச் சாப்பிடும்மா!"

"நானும் அதையேதான் சொல்றேன்" என்றாள் சுர்முனியா.

பிறகு இருவரும் சிரித்தனர். சிரித்துக்கொண்டே அழுதனர்.

வெளியேயிருந்து மாமா அறிவிப்புச் செய்யும் குரலில் கூறினார், "மணி மூணு ஆவுது." அதாவது இன்னும் இரண்டு மணிநேரம்தான்.

ஐந்தரை மணி ரெயிலைப் பிடிக்க ஐந்து மணிக்கே வீட்டிலிருந்து கிளம்ப வேண்டும்.

சுர்முனியா சொன்னாள், "எமதர்ம ராஜன்போல!"

விஜயாவுக்குச் சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகியது.. அவள் நினைத்ததை அப்படியே சொல்லிவிட்டாள் சின்னக்குட்டி.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே பகல்பொழுது சாய ஆரம் பித்தது. இன்னும் ஒரு மணிநேரம்.

சாமான்களை வெளிமுற்றத்துக்கு அனுப்பியபின் விஜயா சுர்முனியாவை 'பூஜை அறை'க்கு அழைத்தாள். கங்காபுர்காரி பாட்டி சமையலறையில் ஏதோ பலகாரம் தயாரித்துக் கொண்டிருந்தாள். சுர்முனியா உள்ளே சென்றாள்.

"இதப்பாரு, சுர்முன். இந்த அறையை நெதம் நல்லா துடைச்சு வெளக்கு ஏத்தி வெக்கணும், மறக்காம.."

"நீ சொல்லவே வேண்டியதில்லை. வீட்டிலுள்ள தெய்வங்கள், பிதிருக்கள் முதல் கிராமத்து கோயில், பீர்பா சமாதி எல்லா இடத்திலேயும் போய்கூட்டுவேன், தண்ணி தெளிப்பேன். நான் எல்லா தெய்வங்கள் கிட்டயும் வேண்டிட்டிருக்கேன்.. தாயே பார்வதி!.. பீர்பாபா.. எங்க விஜயாக்காவை யாரும் பட்டணத்திலே கட்டிப் போடக்கூடாது. நீ திரும்பி வர அன்னிக்கு நான் தேவி கோயில்லே ஆடுவேன். தலையில் இம்புட்டு பூ வெச்சுக்கிட்டு. நீ திரும்பி வந்தா எல்லாரும் திரும்பி வருவாங்க. நீ வரலேன்னா அப்புறம் இந்த கிராமத்துலே என்ன வெச்சிருக்கு? பொறவு கிராமமே பாழாப் போயிடும்.. குட்டிச்சுவருங்க மட்டும்.."

"வேண்டாம் சுர்முன், இப்படி எல்லாம் பேசாதே."

"நீ சத்தியம் பண்ணித்தா. தலையைத்தொட்டு சத்தியம் செய்."

கண் கொட்டாமல் சுர்முனியா விஜயாவைப் பார்த்துக் கொண்டிருந்தாள். விஜயாவும் அந்தக் கண்களில் மூழ்கிவிட்டாள், "சுர்முன், என்னாலே பட்டணத்துலே இருக்க முடியாது. நான் திரும்பி வந்திருவேன். இங்கேயே வாழ்வேன், இங்கேயே சாவேன்.."

"வேண்டாம்க்கா. பயணம் போறப்ப இந்த மாதிரி வார்த்தையெல்லாம் பேசக்கூடாது.. எனக்கு இப்ப எப்படித்தோணுது தெரியுமா, விஜயாக்கா! நீதான் என் மகளாம், நான்தான் அம்மாவாம். நீ என்னை.. அதாவது இந்த அம்மாவைத் தனியே விட்டுட்டுப்போறே."

விஜயாவுக்குத் தூக்கிவாரிப்போட்டது. சுர்முனியாவின் சிறிய வதனத்தில் திரண்ட கருமேகங்களை அவள் கண்டாள். தழுதழுத்த குரலில், "ஆமாம், நீ என் அம்மா.. நீ தான் என் அம்மா" என்றாள்.

சுர்முனியா மகிழ்ச்சிக் கடலில் தத்தளித்தாள். "விஜயாக்கா, வருத் தப்பப்படாதே. அழாதே.. தைரியமா இரு. தப்பா ஏதாச்சும் சொல்லி யிருந்தா மன்னிச்சிரு.. நில்லு, காலைத்தொட்டு வணங்குறேன்."

காளைவண்டிகள் ஜல் ஜல் என்று கிளம்பின. முற்றத்தின் அருகே பாட்டி பக்கத்தில் நின்றுகொண்டு சுர்முனியா பார்த்துக்கொண்டே இருந்தாள், கண் கொட்டாமல்.

விஜயா விரலை மடக்கிக் கூட்டுகிறாள்— பதினோரு மாதங்கள்! பதினொண்ணு—முப்பது, முந்நூற்று முப்பது நாட்கள்..!

சுர்முனியா சரியாகத்தான் சொன்னாள். சச்சிதாவும் பட்டணம் வந்துவிட்டான். ஒரு பிரைவேட் கம்பெனியில் 'தர்பானா'க (வாட்ச் மேன்) வேலைக்குச் சேர்ந்திருக்கிறான். கிராமத்திலிருந்து யார் வந்தாலும் விஜயா அவர்களிடம் முதலில் சுர்முனியாவைப் பற்றி விசாரிப்பாள்; பிறகு கேட்பாள்: "கிராமத்தைவிட்டு ஏன் வந்தே?" சச்சிதா சொன்னான், "சுர்முனியா 'பக்தை'யாக மாறிடிச்சு. தினமும் காலையிலே தலைமுழுகிட்டுக் கோவிலுக்குப் போவுது.. ஏதோ சாமியோ பூதமோ புகுந்திருக்குன்னு எல்லாரும் சொல்றாங்க."

...திருமண நிச்சயம் நடந்த அன்று விஜயாவின் நெஞ்சு படபடத்தது. சுர்முனியா சொன்னது நினைவுக்கு வந்தது. திருமண நாளன்றும் சுர்முனியாவின் வார்த்தைகள் செவியில் முழங்கின.

..சச்சிதா சொன்னது சரிதான். சுர்முனியா மேலே ஏதோ 'சாமி'தான் புகுந்திருக்கும். திருமணமாகி முழுதாக ஐந்துமாதம்கூட நிம்மதியாக இருக்க முடியவில்லை. விஜயா கைவிரல்களை மடக்கி ஏதோ கணக்குப்போட்டுக் கொண்டிருக்கிறாள்.

..விஜயாவுக்கு கிராமத்தில் ஏதோ ஒரு இளைஞன் மீது காதல் என்றும் திருமணமானபிறகும் அவனைப் பிரிந்த சோகத்தில் பித்துப் பிடித்துவிட்டது என்றும் அடித்துக் கூறுகிறான் அவள் கணவன்..

இந்த மாதிரி மோசடி செய்து திருமணம் செய்து வைத்ததற்காக பிள்ளை வீட்டார் சித்தப்பாவுக்கு வக்கீல் நோட்டீசு அனுப்பினார்கள். அதில் அவர்மேல் சட்டப்படி ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது என்று கேட்டனர்.

விஜயாவின் கணவன் அவள் சித்தப்பாவிடமிருந்து நஷ்ட ஈடாக ஐயாயிரம் ரூபாய் கோரியிருக்கிறான்.. விஜயாவுக்கு எதுவும் புரிய வில்லை. ஒன்றும் தெரியவில்லை. எதையும் தெரிந்துகொள்ள முயலவும் இல்லை. எப்பொது பார்த்தாலும் கைவிரல்களை மடக்கி ஏதோ எண்ணுகிறாள். என்னமோ கணக்குப் போடுகிறாள்.

ஹிங்னா மடத்து சாமியார் சூரத் தாஸைக்கொண்டு ஒரு தபால் கார்டு எழுதிப்போட்டிருக்கிறாள் சுர்முனியா. எங்கெல்லாமோ பல அஞ்சலகங்களில் சுற்றியபிறகு அந்தக் கடிதம் நேற்று விஜயாவின் கணவனுக்குக் கிடைத்தது. "விஜயாக்கா, நீ எப்ப வரப்போறே? இனிமே வரவே மாட்டேன்னு தோணுது." இதற்குக் கீழே சூரத் தாஸ் தன்

சார்பில் எழுதியிருக்கிறார். "சுர்முன் ஒரு மாதமாக படுத்த படுக்கை. சாகும் தருவாயில் கிடக்கிறாள். இரவும் பகலும் உன் பெயரையே சொல்லிக்கொண்டு-"

சுர்முன் படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள் என்பதையறிந்து விஜயா துடித்துப் போனாள். இந்த அளவுக்கு அவளைப் பாதிக்கும் சுர்முன் யார் என்று கணவனுக்குப் புரியவைக்க அவளால் இயல வில்லை. அவனும் புரிந்துகொள்ளத் தயாராக இல்லை. 'நான் இன்னிக்கே போகணும், இப்பவே-' என்று அடம் பிடிக்கலானாள்.

வழக்கம்போல அவளை அறையில் போட்டு அடைத்தார்கள். விஜயா அழவும் இல்லை, கூச்சலிடவும் இல்லை. கதவைப்போட்டுத் தட்டவில்லை. பாத்திரங்களை விசிறி எறியவும் இல்லை. பரிதாபமாகக் கெஞ்சலானாள், "நான் உங்க காலிலே விழுந்து கும்பிடறேன். நீங்க என்ன சொன்னாலும் கேட்கிறேன்- என்னை ஒரு தடவை உங்க கூடவே அழைச்சிட்டுப்போங்க. நான் நின்னபடியே அந்தக் குட்டியைப் பார்க்க விடுங்க. பிறகு அவ பொழைக்கட்டும் இல்லே சாகட்டும். உடனே திரும்பி வந்திடுவேன்—உங்க கூடவே."

"இந்த சுர்முனியா யாருன்னு சொல்லு."

"எங்க கிராமத்துலே- ஒருபக்கத்து வீட்டுப்பொண்ணு."

"ஆனா, அவ உன் வயத்திலே பிறந்த மாதிரி தோணுதே!"

"ஆமா, அவ எனக்கு அம்மா, அம்மாதான்-"

"யாரையடீ ஏமாத்தப் பார்க்குறே. நான் நாட்டுப்புறத்து ஆந்தை இல்லை தெரிஞ்சுக்க."

என்றும்போல விஜயா திடீரென மவுனமானாள். கண்ணை மூடிக்கொண்டு தன் பிறந்த கிராமம் ராணிடீஹை நோக்கிப் பறந்தாள். இனி அவளை யார் அடித்தாலும், வெட்டினாலும் தெரியாது. மணிக் கணக்காக தன் கிராமத்திலேதான் கிடப்பாள். அதோ- தொலை விலிருந்தே தெரிகிறதே கிராமத்துக் கிழட்டுப் புளியமரம். இதுதான் பீர்பாபா சமாதி. அதோ சுர்முனியா- ராணிடீஹின் மேட்டுப்பாங்கான செம்மண் நிலத்தில் ஆங்காங்கே அட்சதையும், குங்குமமும் சிதறிக் கிடக்கின்றன. குருவியும், மைனாவும், குயிலும், புறாவுமாக ஆயிரக் கணக்கான புள்ளினங்கள் வயல் நடுவே 'கீச் கீச்' என்று கத்துகின்றன. சுர்முனியாவும் பறவைகளோடு பறவையாகிவிட்டாளா? பறந்தல்லவா வருகிறாள், கஞ்சனப்பட்சி போல- விஜயாவின் உள்ளங்கையில் அந்தச் சின்னப்பட்சி வந்து அமர்ந்தது- சுர்முன்-! அம்மா-!

டாக்டர் ஊசி போட்டாரா இல்லை கத்தியை உடலிலே செலுத்தினாரா அவளுக்கு எதுவும் தெரியாது. யார் அடித்தாலும், வெட்டினாலும் விஜயா தன் கிராமத்திலிருந்து திரும்பப் போவதில்லை, இப்போதைக்கு!

(1966)

# லீலை

பாத்திமாக்காவை மீண்டும் சந்திப்பேன் என்று நான் நினைக்கவில்லை. அதுவும் இந்த மாதிரி வேடத்தில் அவளைக் காண்பேன் என்று கனவிலும் நினைத்திருக்கவில்லை. எனவே, பட்னா மார்க்கெட்டில் அவளை எதிர்பாராதவிதமாகப் பார்த்தபோது அது செருப்புக்கடை என்பதை மறந்து கனவுலகுக்கே போய்விட்டேன்.

உச்சி முதல் உள்ளங்கால்வரை கறுப்பு 'புர்க்கா' அணிந்த இரு பெண்மணிகள்; அவர்களுடன் ஒன்பது-பத்து வயதான சின்னஞ்சிறு சிறுமி—அழகுப்பதுமைபோல. "ஏன் மாமா, நீங்க பட்னாவுக்கு எப்ப வந்தீங்கன்னு எங்க சித்தி கேக்கறாங்க" என்று சிறுமி கேட்டாள். இந்தக் கேள்வியை அவள் இரண்டாவது முறையாகக் கேட்டிருக்க வேண்டும்; கனவுலகிலிருந்த எனக்கு சட்டென எதுவும் புரியவில்லை.

சில்லறைகளை எண்ணிக்கொண்டிருந்த வியாபாரியும் "ஆமாம், உங்களைத்தான் கேக்கறாங்க" என்றார். நான் விழித்தேன்.

சிறுமி நகைத்தாள். கறுப்பு புர்காவினுள்ளேயிருந்தும் கலகல வென்று சிரிப்பொலி—முத்துத் தெறித்தாற்போல. பழக்கமான அதே சிரிப்பு. சிறுமி, சித்தி ஏதோ சொன்னதைக்கேட்டு மீண்டும் சிரித்தாள். "எங்க சித்தி உங்களுக்கு பாத்திமாக்காவாம்," என்றாள் என்னிடம்.

புர்க்காவினுள்ளே இருந்து பாத்திமாக்காவின் பழக்கமான குரல் தெளிவாகக் கேட்டது, "நீ டில்லிலேயோ, பம்பாய்லேயோ இருக்கறதாக் கேள்விப்பட்டேனே!"

"பத்து வருசமா நான் பட்னாலேதான் இருக்கேன்."

"அப்படியா? ஆச்சரியம்! ஒரு தடவைகூட தட்டுப்படலியே!"

"நீங்க கூடத்தான்_" இப்போதுதான் என் மூச்சு இயல்பாகத் தொடங்கியது.

பாத்திமாக்கா இடைமறித்தாள், "என்னை, விட்டுத்தள்ளு. நீ எப்படி இருக்கே? கல்யாணம் ஆயிடுச்சில்லே?"

நான் மிரள மிரள விழித்தேன். அவள் புரிந்துகொண்டாள். "பாக்கர் கஞ்ச் வீதியிலே 'தானிஷ் மன்ஸில்'னு போர்டு பார்த்திருக்கிறே இல்லே? நான் இருக்கிறது அந்த வீட்டிலேதான். பெண்சாதியை அழைச்சிட்டு ஒருநாள் வாயேன். ஏன், நாளைக்காலை எட்டுமணிக்கு வரலாமே!"

"சித்தி, நாளைக்கு காலையிலே நாம ஹபீதாவைப் பார்க்கப் போறோம்லே?" சிறுமி நினைவுபடுத்தினாள்.

"ஓ.. மறந்திட்டேன். அப்ப நீ நாளை மறுநாள் வா, நிச்சயமா."

விடைபெறுகையில் என்னையறியாமலேயே 'நமஸ்தே' என்றேன்.

"நல்லா இருப்பா" ஆசி வழங்கினாள்.

பாத்திமாக்காவுக்கு வணக்கம் செலுத்தும்போது நான் 'ஆதாப்' என்றோ, 'சலாம்' என்றோ கூறும் பழக்கம் இல்லை. 'நமஸ்தே' என்று தான் சொல்லுவேன். பாத்திமாக்காவும் என் 'நமஸ்தே'யே ஏற்றுக் கொண்டு 'நல்லா இருப்பா' என்று ஆசி வழங்குவாள். ஆனால் உச்சிமுதல் உள்ளங்கால்வரை அவள் அணிந்திருந்தாளே 'புர்க்கா' அது வித்தியாசமாகத் தெரிந்தது. ஒருபோதும் நான் அவளை இந்தக் கோலத்தில் பார்த்ததில்லை. அறிமுகமானவர்களிடமிருந்து சற்று விலகி இருக்க நேர்ந்த காலத்தில்கூட அவள் இந்தமாதிரி உடை அணிந்திருக்கவில்லை.

அன்று இரவு முழுதும் எனக்கு உறக்கம் வரவில்லை. சற்றே கண்ணயர்ந்தால் பாக்குநிற புர்க்காவில் போர்த்தி மூடிய நிழலுருவம் தென்பட்டது- வலைக்குள்ளிருந்து பளிச்சென்று மின்னும் இரண்டு கண்கள். எத்தனை முயன்றும் புர்க்கா அகன்று பாத்திமாக்காவின் அன்புமுகம் காணப்படவில்லை. சலிப்படைந்து விழித்துக்கொள்வேன்.

கணவன் அடிக்கடி பெருமூச்செறிந்து கொண்டும், எதையோ இழந்ததுபோல தவித்துக்கொண்டும் இருந்தால் எந்தப் பெண்சாதிக்கும் சந்தேகம் வருவது இயல்புதான். ஆனால் படுக்கையில் கிடைகொள் ளாமல் புரண்டு படுக்கும் கதாசிரியன்மீது அவனுடைய மனைவிக்கு சந்தேகம் வரவே வராது. இதெல்லாம் அவளுக்கு வெகு சகஜம். எனவே அவள் என்னைக் கண்டுகொள்ளாமல் நிம்மதியாகத் தூங்கிவிடுவாள்.

ஆனால் அன்றிரவு ஏனோ என் மனைவிக்கும் உறக்கம் வரவில்லை. நான் ஆரம்பித்தேன், "உன்னிடம் எப்பவாவது நான் பாத்திமாக்காவைப் பத்திச் சொல்லியிருக்கேனா?"

"இல்லையே! எந்த பாத்திமாக்கா?"

"ஒரு கதையிலே வருகிற பாத்திமாக்கா" தட்டிக் கழித்துவிட்டு புரண்டு படுத்தேன்.

கதையிலே வருகிற பாத்திமாக்கா! இதுவரை பாத்திமாக்காவைப் பற்றி மனைவியிடம் எதுவுமே சொல்லாதது விந்தைதான். இதில் ஆச்சரியப்பட ஒன்றும் இல்லை. என் மனைவியின் குடும்பத்தினர்கள் சமயச் சடங்குகளிலும், பழைய ஆசாரங்களிலும் பற்றுதல் கொண் டவர்கள், அதோடு மட்டுமல்ல, ஹிந்து மகாசபை உறுப்பினர்களும்கூட இந்தப் பின்னணி காரணமாகத்தான் நான் மனைவியிடம் பாத்திமாக்காவைப்பற்றி எதுவுமே சொல்லவில்லை. சொன்னால் பிடிக்காது, "அப்ஸர்டு, நான்சென்ஸ்" என்பாள் கடுப்புடன்.

அப்ஸர்டு அல்ல! அசாதாரணமானவள் அவள்!

இன்றைக்கு 36 வருடங்களுக்கு முன்பும் ஜனங்கள் அவளை 'அப்நார்மல்! அரைப்பைத்தியம்!' என்று இழிவாகப் பேசினார்கள்.

இந்த அசாதாரணமான பெண்மணியுடன் மிக அணுக்கமாகப் பழகும் வாய்ப்புக் கிடைத்ததை பெரும்பேறாகவே கருதுகிறேன்.

..1930ல் நடந்த அந்தக் கூட்டம் நினைவிற்கு வருகிறது. பள்ளியின் பின்புற மைதானத்தில் கூட்டம் நிரம்பி வழிகிறது. கோயில் சதுக்கத்தில் காந்தி தொப்பி அணிந்துகொண்டு பலர் உட்கார்ந்திருந்தனர். பதினோரு வயதே ஆன ஒரு சிறுமி மேடையேறி வீராவேசத்துடன் பேசுகிறாள். ஒரு பெண் பைஜாமாவும். குர்த்தாவும் அணிந்திருப்பதைக் கண்டு மக்களுக்கு ஒரே வியப்பு! அவள் சோன்புர் மௌலவி சாகபின் மகள் என்று பேசிக் கொண்டார்கள். மௌலவி சாகபும் 'கிலாபத்' இயக்கத்தில் சேர்ந்ததிலிருந்து கதராடையே அணிகின்றாராம்; தினமும் சர்க்காவில் நூல் நூற்கிறாராம். வெள்ளைப் பைஜாமா குர்த்தா அணிந்து, தோளில் மூவர்ணக்கொடியுடன் அந்தச் சின்னப்பெண்!

..1934ல் நடந்த பூகம்பத்துக்குப் பிறகு அவளை மீண்டும் பார்த்தேன். நாலே வருடத்தில் வாளிப்பாக வளர்ந்துவிட்டாள். பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட இடங்களில் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்த காந்தியடிகள் எங்கள் ஊருக்கும் வருகை தந்தார். மேடை மீது காந்தியடிகளின் அருகே நின்றிருந்த அந்தப் பெண்ணை அடையாளம் கண்டுகொள்வதில் சற்றும் சிரமம் இருக்கவில்லை. பிரார்த்தனைக் கூட்டத்தில் பரிசுத்த குரானின் அடிகளை அழகாக ஓதிக்கொண்டிருந்தாள் மௌலவியின் மகள்! இரண்டு ஆண்டுச் சிறைவாசத்துக்குப் பிறகு சமீபத்தில்தான் வெளியே வந்தாளாம். கைதாவதற்கு முன் போலீஸ் தடியடியில் நல்ல காயமாம்.

..மூன்றாவது முறை சந்திப்பு 1937இல் அணுக்கத்தில் சென்று பார்க்கவும், பேசவும் கிடைத்த வாய்ப்பு. எங்கள் பள்ளி மைதானத்தில் மாவட்ட அரசியல் மாநாடு ஏற்பாடாகி இருந்தது. மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி மந்திரிசபை அமைத்திருந்த நேரம். பள்ளிச் சாரணர்கள், காங்கிரஸ் சேவாதள் தொண்டர்களுடன் சேர்ந்து பணியாற்றினார்கள். சேவாதள் அணியின் தலைவி வீரம் செறிந்த அந்தப் பெண்தான். அவளை 'பாத்திமாக்கா' என்று முதல் முறை நான் அழைத்ததும் அப்போதுதான். புரொபசர் அஜீமா பேசுகையில் முஸ்லீம் லீகினர் குழப்பம் விளைவிக்கத் தொடங்கினர். பாத்திமாக்கா ஒரேதாவலில் மேடையை அடைந்தாள். அடுத்த கணம் அவளுடைய வெண்கலக்குரல் மேடையிலிருந்து முழங்கியது—"துரோகிகளே, உங்களுக்கு வெட்கமில்லையா?"

..பிறகு 1943இல் ஐந்து மாதங்கள் இரவும் பகலும் அவளுடனேயே கழிக்கும் வாய்ப்பு கிடைத்தது. பனாரஸ், லக்னௌ, அலகாபாத்,

கோரக்பூர் என்று ஊர் ஊராக, தெருத்தெருவாக அலைந்து சுதந்திரப் போராட்டத்தின் புரட்சிகரமான திட்டங்களை அவள் மக்கள்முன் வைத்தாள். அவள் பயணம் செய்த இடங்களிலெல்லாம் விழிப்புணர்வு ஏற்பட்டது. அப்போது பாத்திமாக்காவைப் பல்வேறு கோணங்களில் கண்டு வியந்தேன். அந்த உருவங்கள் ஒவ்வொன்றாக இப்போது என் கண் முன்பு புலப்படுகின்றன... கைது செய்கையில் போலீஸ் சார்ஜென்டு உதிர்த்த பச்சையான வசவுமொழிக்கு வெட்டென்று பதிலளித்தாள் பாத்திமாக்கா. அப்போது அவளுடைய முகத்தில் மின்னொளி பாயக்கண்டேன்; 1947இல் ஹிந்து-முஸ்லிம் கலவரத்தின் போது கலகக்காரர்களை எதிர்க்கும்போது அவளுடைய முகத்தில் அலாதியான ஓர் ஒளி- இந்த முகபாவங்களை அவள் எப்படி இந்தக் கறுப்பு புர்க்காவில் ஒளித்துக்கொண்டாள்? இது எப்படி முடிந்தது?

நான் அவளுடைய முகத்தை மறைத்திருந்த அந்தப் படுதாத் துணியை நார்நாராகக் கிழித்துப் பறக்கவிட விழைகிறேன். நான் பாத்திமாக்காவின் பரிவான முகத்தைக்காணத் துடிக்கிறேன். ஆனால் அவளோ, தன் முகத்தை மறைத்துக்கொண்டு, “வேண்டாம் ஓஜூ- அஜீத்- என் முகத்தைப் பார்க்காதே!” என்கிறாள்.

கனவு கலைந்த பின்னும் வெகுநேரம் வரையில் நான் மௌனமாகப் படுத்திருந்தேன். வானொலியிலிருந்து உதயகீதத்துக்கு முன் ‘சிக்னேச்சர் டியூன்’ ஒலித்தது. வானொலியிலிருந்து ‘சிக்னேசர் டியூன்’ ஒலிப்பதற்குப் பதிலாக ‘பிரளய நாதம்’ ஏன் எழவில்லை? என்ற எண்ணம் தோன்றியது. உதயகீதம் ஒலித்தது. பிடில் தந்திகளில் ஏறி இறங்கும் பிரார்த்தனை நாதம்!

‘தானிஷ் மன்ஸிலின் மாடிப்படிகளில் ஏறுகையில் அந்தப் பழைய கட்டிடத்தின் ஒவ்வொரு செங்கல்லும் என்னை வியப்புடன் நோக்குவதாகத் தெரிந்தது.

“யாரைப் பார்க்கணும்?”

“பாத்திமாக்காவை”

“யாரு?”

“பாத்திமாக்காவை.”

கேள்வி கேட்ட நபர் வியப்புடன் உற்றுப் பார்க்கிறார். பிறகு தனக்குத்தானே “பாத்-த்தி-மா-க்கா-வா?” என்று கூறிக் கொள்கிறார்.

அதற்குள் அழகுப் பதுமைபோன்ற அந்தச் சிறுமி வந்து எனக்கு சலாம் தெரிவிக்கிறாள். “உங்க வீட்டுக்காரி வரலியான்னு கேக்கறாங்க சித்தி” என்றாள் அந்தப் பெண்.

பாத்திமாக்கா இன்றும் முன்னே வரமாட்டாள். இந்தச் சிறுமி மூலமாகவே பேசப்போகிறாள் என்பது எனக்குப் புரிந்துவிட்டது.

கட்டிடத்தின் பல கதவுகளும் சன்னல்களும் பட்பட் என்று அடைக்கப்பட்டன. மெதுவாக ஒலித்துக் கொண்டிருந்த வானொலிப் பெட்டிகள் திடீரென மௌனமாயின. காற்றும் பிசுபிசுத்தது. பிறகு அந்தக் காற்றிலும் மௌனத்தின் கனம்.

"நீ கதையெழுதறேன்னு கேள்விப்பட்டேன்" படுதா மறைவிலிருந்து வந்தது பாத்திமாக்காவின் குரல்.

தரையில் விரித்திருந்த கிழிந்த சமுக்காளத்தை நோக்கியவாறு நான் பதிலளித்தேன், "ஆமாம், பொய் சொல்கிற பழக்கத்தை இப்ப நான் தொழிலாக-"

கலகலவென்ற நகையொலியைக் கேட்டு 'தானிஷ் மன்ஸிலி'ல் மூடிய பல கதவுகளும் சன்னல்களும் திறந்துகொண்டன. வாணலியில் வதங்கிக் கொண்டிருந்த வெங்காயத்தின் நெடியில் அந்த அறையின் கனம் மேலும் அதிகரித்தது. இந்த வெங்காய நெடி அண்மையில் நடந்த ஒரு நிகழ்ச்சியை என் நினைவிற்குக் கொணர்ந்தது- என்சிசி. கேம்ப் நடக்கும்போது சமையலறையில் நஞ்சு நிரம்பிய பாட்டிலுடன் பிடிபட்ட அந்த முஸ்லிம் இளைஞனின் பெயர் என்ன-?

அழகுப்பதுமை போன்ற சிறுமியின் பெயர் 'நக்மா'. அவள் 'டீ' கப்புடன் வந்தாள். நான் பொய் சொல்லத்தான் விரும்பினேன், ஆனால் இயலவில்லை. கோப்பையைக் கையில் வாங்கிக்கொண்டு கேட்டேன், "பாத்திமாக்கா... நீங்க இத்தினி நாளா எங்கே மறைஞ்சிருந்தீங்க?"

பதில் கேள்வியுருவெடுத்து வந்தது, "நீ உன் பெண்சாதியை எப்ப அழைச்சிட்டு வரப்போறே?"

நான் கண்களை மூடிக்கொண்டு டீ குடித்து முடித்தேன். பாத்திமாக்கா என் கேள்விக்குப் பதில் கூற விரும்பவில்லை என்பதைப் புரிந்துகொண்டேன். புர்க்காவினுள் ஒளிந்திருக்கும் இந்த உருவம் என்னுடைய பாத்திமாக்கா அல்ல, வேறு யாரோ என்று ஒரு சந்தேகம் என் மனதில் எழுந்தது.

நான் நாற்காலியிலிருந்து எழுந்தேன். நக்மா தட்டத்தில் பீடா கொண்டுவந்தாள். 'நான் பீடா சாப்பிடுவதில்லை' என்று இம்முறை துணிந்து ஒரு பொய் கூறினேன்.

விடைபெறும்போது துணிந்துகேட்டே விட்டேன், "மன்னிச்சுக்குங்க, நீங்க என்னோட அந்த பாத்திமாக்கா இல்லேன்னு தோணுது-"

"நீ சரியாத்தான் நினைச்சே, அஜீஸ்!"

"அஜீஸ்?" எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. பாத்திமாக்கா என்னை ஒருபோதும் அஜீத் என்று அழைத்ததில்லை, அஜீஸ் என்றே கூப்பிடுவாள் என்பது நினைவிற்கு வந்தது. நான் பேசாமல் நின்றேன். படுதாவுக்குள்ளிருந்து மீண்டும் சிரிப்பு—முத்துத் தெறித்தாற்போல!

தானிஷ் மன்ஸிலின் படிகளில் இறங்குகையில் அந்தப் பழைய கட்டிடத்தின் ஒவ்வொரு செங்கல்லும் என்னை வெறுப்புடன் நோக்குவதாக உணர்ந்தேன். ஓராயிரம் என்சிசி மாணவர்களின் சாப்பாட்டில் நஞ்சைக் கலக்க முயன்ற அந்த இளைஞனின் பெயரை நினைவிற்குக் கொண்டுவர முயன்றேன்.

அம்ஜதியா ஓட்டலின் எதிரேயுள்ள சுவரில் உருது மொழியில் ஒருபோஸ்டரை எவனோ ஒட்டிக் கொண்டிருக்கிறான். அதில் கொட்டை எழுத்தில் எழுதியிருந்த வாசகம்—'தேசியவாதி முஸ்லிம் மாநாடு ஒழிக ஒழிக-! துரோகிகள் ஜாக்கிரதை.'

துவேஷம் கக்கும் அந்தப் போஸ்டரைப் படித்த ஒரு மௌலானா கோபத்துடன் முணுமுணுத்தார், "மெத்தையிலே பஞ்சடைக்கிற இந்தப் பயலுவ பஞ்சு கடையற வேலையை விட்டுட்டு சமூகத்தைக் கடைய கிளம்பிட்டானுக. இவனுகளுக்கு நல்லா பாடம் கற்பிக்கணும்."

எனக்கு குமட்டிக்கொண்டு வந்தது. ரிக்ஷாவில் உட்கார்ந்தபடி நான் என்னுடைய நாடியைப் பிடித்துப் பார்த்தேன். நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. குப்குப் என்று வியர்த்துக் கொட்டியது. டீயில் துத்தநாகம் போல என்னமோ கலந்திருந்தார்களோ-? வலது கைப்பக்கம் போனால் ஜெனரல் ஆஸ்பத்திரி. இடது கைப்பக்கம் திரும்பினால் போலீஸ் ஸ்டேஷன். முதலில் எங்கே போவது சரியாக இருக்கும் என்று எண்ணமிட்டேன்.

ஆனால் ரிக்ஷா ஓட்டுநர் கேட்டபோது 'ராஜேந்தர்நகர் போப்பா' என்றேன்.

மாலையில் நடந்த சிறுகதை விமர்சகர் வட்டத்தில் 'புதுக்கதை', 'இன்றைய கதை', 'நாளை வரப்போகும் கதை' என்பன பற்றி நாலைந்து மணிநேரம் சொற்போர் கேட்டபிறகு நான் நேராக வீடுதிரும்பும் மனநிலையில் இல்லை. கங்கைக் கரையிலோ, ஏதாவது 'பாரி'லோ சற்றுநேரம் அமர்ந்தால் என்ன என்று தோன்றியது. ஆனால் ரிக்ஷா ஓட்டுநரின் கேள்விக்கு நான் அளித்த பதில்—"ராஜேந்திர நகர் போப்பா."

"கோல் மார்க்கெட்" பகுதி வந்ததும் வழக்கம்போல கண்கள் தொலைவிலிருந்தே என் ஃபிளாட்டை—என் அறையை நோக்கின. என் அறையில் மின்விளக்கு எரிந்துகொண்டிருந்ததைக் கண்டு நெற்றி நரம்பு புடைத்துக் கொண்டது. இப்போது எங்கே போவது?

மனதைக் கெட்டியாக்கிக்கொண்டேன்—காத்திருப்பது யாரானாலும் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்வேன். ஏதாவது சொல்லி தட்டிக்கழித்து அனுப்பிவிட வேண்டியதுதான்.

மாடிப்படி ஏறும்போதே வையகத்தின் இடுக்கண்களை எல்லாம்

ஒருசேர எடுத்து உடலில் போர்த்திக்கொண்டேன். உலகிலேயே சோகமிகுந்த மனிதனின் முகமூடியை அணிந்துகொண்டு கதவைத் தட்டினேன். ஆனால் கதவைத் திறந்த மனைவியின் முகத்திலோ குதூகலம் தாண்டவமாடியது. தொங்கிக் கொண்டிருந்த என் முகத்தை அவள் கண்டுகொள்ளவே இல்லை. உல்லாச அலைகள் பொங்க அவள் கேட்டாள் "யார் வந்திருக்காங்க, சொல்லுங்க பார்ப்போம்" என்றாள்.

யோசிக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை. உள்ளேயிருந்து குடுகுடுவென்று ஓடிவந்தாள் சின்னப்பெண் நக்மா. மனைவி அதே உற்சாகத்துடன் தொடர்ந்தாள். "அப்பப் பிடிச்சு நாங்க சிரிச்சுப் பேசிட்டே இருக்கோம். மூணு மணிநேரம் போனதே தெரியலே. நீங்க எங்கே போயிருந்தீங்க- அதிருக்கட்டும். 'பெரிய ஆளு' தான் நீங்க! இத்தினி நாளா சொல்லவே இல்லியே!"

"என்ன சொல்லலே?" நான் திருப்பிக் கேட்டேன்.

"நீ ஹிந்து இல்லே, ஒரு முஸ்லீம் அப்படீன்னு-" என் அறைக் குள்ளேயிருந்து குரல் கேட்டது.

உள்ளே போய்ப்பார்த்தால், பாத்திமாக்கா, அந்த 'ஃப்ளேட்' டையே ஒளிமயமாகச் செய்துகொண்டு கம்பீரமாக வீற்றிருக்கிறாள். புர்க்கா தரையில் சுருண்டு கிடக்கிறது. புர்க்காவா அது! தார் தாராகக் கிழிந்த கந்தைத் துணி!

இது யார் செய்த காரியம்? எப்படி நடந்தது?

மனைவி சொன்னாள், "வேறு யாரு? உங்க செல்லப்பொண்ணு நவமிதான்- புர்க்காவைக் கழட்டறவரையிலும் குரைச்சிட்டே நின்னுது. புர்க்காவைக் கழட்டிக் கீழே வெச்சதும் பல்லாலே கடிச்சுக் குதறி தார்தாராக்கிப் போட்டுடிச்சி."

"இப்ப எங்கே அது?"

பார்த்தால், பாத்திமாக்காவின் மடியில் முந்தானையில் பதுங்கிக் கிடந்தது. பொல்லாத்தனம் ஏதாவது செய்துவிட்டால் இது இப்படித் தான் சாதுமாதிரி முகத்தை வைத்துக்கொண்டு படுத்துக்கிடக்கும்.

"மடியைவிட்டு இறங்காமல் சண்டித்தனம் பண்ணுது. அதட்டினா முறைக்குது." நக்மா கூறினாள்.

மனைவி நினைத்து நினைத்துச் சிரித்துக் கொண்டிருந்தாள். குபீர் குபீர் என்று சிரித்தவாறு கதைபோலச் சொன்னாள், "நவமியைப் பிடிச்சுக் கட்டிட்டு கதவைத் திறந்தேன் பாருங்க, 'அஜீஸ் வீட்டிலே இருக்கானா?' அப்படீன்னு இவங்க கேட்டாங்க. "அஜீஸா? எந்த அஜீஸ்- அஜீஸ் இல்லே அஜீத்" அப்படீன்னு பதில் சொன்னேனா?- 'ஆமா அவன் தன்னோட பேரிலே கடைசி எழுத்தைமட்டும் மாத்தி 'அஜீத்'னு வெச்சிட்டு ஒரு ஹிந்துப் பொண்ணைக் கட்டிட்டிருக் கான்னு கேள்விப்பட்டேன்' அப்படீன்னாங்களே பார்ப்பம்- நான்

அப்படியே வாயடைச்சுப்போயி நின்னுட்டேன்–"

"சரியான ஆளப்பா நீ! இத்தினி நாளா விசயத்தை மறைச்சு வெச்சு கதை பண்ணிட்டே! இந்த மாதிரி மத்தப்பேர் மதநம்பிக் கையோட விளையாடறது பாவச்செயல் இல்லியா? ஆனாலும் அஜீஸ், நீ பலே கைகாரன்தான். உருவ வழிபாட்டை ஏத்துக்கறேன் பேர் வழின்னு குரான்படிச்ச நீ சாமியார் படத்தை மாட்டி வெச்சிருக்கியே."

இப்படிச் சொல்லிக்கொண்டே பாத்திமாக்கா ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின் படத்தைக் காட்டியபோது நாங்கள் விழுந்துவிழுந்து சிரித்தோம்.

சிரிப்பு அலைகள் ஓய்ந்ததும் நான்கேட்டேன், "இப்பச் சொல்லுங்க, இத்தினி நாளா எங்கே இருந்தீங்க?"

"கல்லறைக்குள்ளே இருந்தேன். இப்பவும அங்கேதான் இருக்கேன்."

என் மனைவி சமையலறையைப் பார்க்கப் போய்விட்டாள். இந்தக் கேள்வியைக் கேட்டிருக்க வேண்டாம் என்று தோன்றியது எனக்கு.

"ஏம்பா, நீ என்ன நெனச்சே.. நான் பாகிஸ்தானுக்குப் போயிட்டேன்னு நெனச்சியா?" பாத்திமாக்கா என்னிடம் கேட்டாள்.

"நீங்க அரசியலை ஏன் விட்டு–?"

"எங்கிட்ட கேக்குற கேள்வியா இது? ராவோடு ராவா 'தேசபக்த'ங்களாக மாறி காங்கிரசிலே சேர்ந்திருக்காங்களே அந்த ராசகுமாரர்களைப் போயிக்கேளு– 'உதட்டிலே வேதம் இடுப்பிலே கத்தி'ன்னு சொல்ற வசனம் இவங்க விஷயத்திலே சரியா இருக்கும்– தலைவருங்க கிட்டப்போயி கேக்குறதுதானே! நேத்து வரையிலும் காந்தி, நேரு, பட்டேல் மாதிரி தலைவருங்களை பட்டப்பகல்லே திட்டி தேசியக்கொடியை அவமதிச்ச பிரிவினைவாதி லீகுகாரங்களுக்கு இன்னிக்கு ஏக மரியாதை. தேசத்துக்காக உயிரையே தியாகம் செய்யத் துணிஞ்சவங்களை இன்னிக்கு கறிவேப்பிலை மாதிரி தூக்கிப் போட்டுட்டாங்க. இந்தக் கேள்வியை உன்னிடமே கேட்டுப்பாரேன்." படபடப்புடன் பேசும்போது பாத்திமாக்காவின் முகம் சிவந்துவிட்டது.

நான் இடைமறித்தேன், "ஆனாலும் நீங்க இப்படி வாயைமூடிட்டு இருக்கிறது–"

"என்ன சொன்னே?" அடிபட்ட பெண்சிங்கம்போல சாடினாள். "இந்தப் படுபாவிங்க என்னைப் படுத்தி வெச்சபாடு உனக்கு என்ன தெரியும்– அப்படியும் நான் எவருடைய தயவையும் நாடிப்போகலே. டில்லியிலேருந்து பட்னா வரையிலும் பல பெரிய மனுசங்க மூளைக்கு சிகிச்சை செய்துகொள்ளும்படி எனக்கு ஆலோசனை சொன்னாங்க. கல்யாணம் செஞ்சிட்டு பிள்ளை குட்டி பெத்துக்கச்சொல்லி உபதேசம் வேறு. அப்புறம் பயமுறுத்தல்கள்– அப்பப்பா– அஜீஸ்–"

துக்க மிகுதியினால் பாத்திமாக்காவுக்கு மேலே பேசமுடியாமல் தொண்டை இடறியது. கடந்தகால நினைவுகளில் மூழ்கிய நாங்கள் அங்கே மனைவி வந்துநின்றதைக் கூடக் கவனிக்கவில்லை. என்னைப் பார்த்து, "நீங்க வேடிக்கையான ஆளுதான்-" என்றாள்.

இத்தனைநேரம் பதுங்கியிருந்த நவமி பாத்திமாக்காவின் முகத்தை முகர்ந்து பார்த்து குய்-குய்- என்று ஓலமிட்டது.

"இன்னமும் இவங்க புத்தி சரியாகலே. கேவலம் நாற்காலிக்கு வேண்டி ஆலாய்ப் பறக்கிறாங்க. நாடு எப்படிப்போனா இவங்களுக்கு என்ன?" வேதனையின் ஆழத்திலிருந்து பாத்திமாக்காவின் குரல் வெடித்துக் கிளம்பியது. "நீ- நீ வந்து- கதை எழுதறே இல்லே- சுதந்திரம் அடையுறதுக்கு முன்னாலேயே முன்னேற்றத்தை நாடும் படைப்பாளி களின் கதையிலேயும், கவிதையிலேயும் இந்து-முஸ்லீம் ஒற்றுமை, மனிதத்தன்மை எல்லாம் உசத்தியாகப் பேசப்பட்டது. சுதந்திரம் வந்த பிறகு அந்தப் படைப்பாளிகளின் குரல் மௌனமாயிடுச்சி. மத ஒற்றுமைவாதிங்க எதுவும் செய்ய முடியாம வெலவெலத்து நின்னுட் டாங்க. பிரிவினைவாதிங்க சமூகத்தை நடத்த ஆரம்பிச்சுட்டாங்க."

"பாத்திமாக்கா, சாப்பாடு எல்லாம் ஆறிட்டிருக்கு" மனைவி நினைவுபடுத்தினாள்.

டவுன்ஹாலில் நடக்கவிருக்கும் 'தேசியவாதி முஸ்லீம் மாநாட்டு' ஆயத்தங்கள் பற்றிய செய்திகளை தினமும் பத்திரிகைகள் விபரமாக வெளியிடுகின்றன. மாநாட்டுக்காக வந்துள்ள பிரமுகர்கள், பிரதிநிதிகள் பற்றிய செய்திகள். அதேநேரத்தில் மாநாட்டை எதிர்த்தும் செய்திகள் வெளியாகின்றன. இருதரப்பிலிருந்தும் தினமும் காரசாரமான அறிக்கைகளும், கண்டனங்களும் பிரசுரமாகின்றன.- "இங்கே தேசியத்துக்குப் புறம்பாக எவரும் இல்லை. எல்லா முஸ்லீம்களும் தேசியவாதிகள்தான்" என்பது எதிர்ப்பாளர்களின் வாதம். தேசிய வாதிகள் என்று சொல்லிக்கொள்ளும் முஸ்லீம்களே இதை ஏற்கத் தயாராக இல்லை. "பழைய முஸ்லீம்லீகுக்காரர்கள் நெஞ்சிலும், எண்ணத்திலும் இன்னமும் பிரிவினை வாதத்தின் விஷம் இருக்கிறது. இவர்களை நம்ப முடியாது" என்று எதிர்வாதம் செய்கின்றனர். வெகுநாளாக நான் எந்தக் கட்சிக் கூட்டத்திலும் கலந்து கொள்ள வில்லை. ஆனால், இந்த மாநாட்டில் பங்கெடுப்பை என் கடமையாக எண்ணி டவுன்ஹால் பக்கம் சென்றேன். அங்குள்ள காட்சியைக் கண்டதும் உள்ளே நுழையாமல் நடைபாதையில் நின்றுவிட்டேன்.

டவுன் ஹாலின் முன் சாலையின் இருமருங்கிலும் ஆயிரக் கணக்கானவர்கள் நின்று கோஷமிட்டுக் கொண்டிருந்தனர். வசைமொழிகள், கோஷங்கள், இடையிடையே கல்வீச்சு.

போலீஸ் ஜவான்கள் பேசாமல் அணிவகுத்து நின்றிருந்தனர். ஏனெனில் ஆர்ப்பாட்டக்காரர்களுக்கு தலைமையேற்று நின்றவர்கள் 'மேற்குடி முஸ்லிம் தலைவர்'களின் குமாரர்கள், உயர் அதிகாரிகளின் செல்லப்பிள்ளைகள். நாம் மீண்டும் 1947க்குத் திரும்பிவிட்டோமோ என்று எனக்குத் தோன்றியது. சுற்றுச்சூழலில் மீண்டும் அதேவெறி, அதேமாதிரி கோஷங்கள், அதே காட்சிகள், அதே முகங்கள்!

"விடாதே, விடாதே. அதோ காபிர் மகன் போகிறான்."

"தடக்-தடக்" (துடியோசை)

"இதோபார், கயவாளிப்பய! அடிடா இவனை!"

"தடக்-தடக்"

மாநாட்டுக்கு வந்த பிரதிநிதிகளைச் செம்மையாக அடித்து உதைத்தனர். ஆவேசமும், பரபரப்பும் அதிகரித்தது. உரத்த கோஷங்கள், பச்சையான வசவுகள், சரமாரியான கல்வீச்சுகள்!

"மகாத்மா காந்தி கீ ஜெய்!"

ஒரு மெல்லிய, ஆனால் செறிவு மிகுந்த குரல்! ஒரு கணத்துக்கு எல்லாம் ஸ்தம்பித்ததுபோல ஆயிற்று. அஞ்ஜீமன் இஸ்லாமியா ஹாலின் நுழைவாயில்—அப்துல் பாரிவாசல் முன்பு ஒரு பெண்மணி நின்று கோஷமிடுவதை அனைவரும் நோக்கினர்.

பாத்திமாக்கா? முதலில் எனக்கு என் கண்கள்மீது நம்பிக்கை வரவில்லை. சந்தேகமே இல்லை, பாத்திமாக்காதான்.

"யார் இந்தப் பொம்பளை?"

"ஏதோ, ஹிந்துவா..."

"அட, இன்னும் புரியலையா உனக்கு? அதே நாய்தான்."

"பாத்திமா-? பாழாப்போறவ எங்கிருந்து வந்துட்டாடா?"

"நாயே!"

வெறிபிடித்த ஓர் கூட்டம் தரக்குறைவான பாட்டுகளை பாடிக் கொண்டு பாத்திமாவை நோக்கிப் பாய்ந்தது. பாத்திமா புன்னகை நிறைந்த முகத்துடன் அசையாது நின்றாள். பார்த்துக்கொண்டிருக்கும் போதே மனித விலங்குகள் அவளைக் கீழே தள்ளின. தலைமயிரைப் பிடித்து இழுத்தன. ஜனங்கள் கைதட்டி ஆரவாரம் செய்தனர்—'சபாஷ்!' சம்பவம் நடக்கும் இடத்திற்கு போலீஸ் புலிகள் விரைவதற்கு முன்பே அவளுடைய ஆடைகளைக் குதறிவிட்டனர்- இதற்குமேல் எதையும் பார்க்கும் துணிவு எனக்கு இருக்கவில்லை.

பல நாட்களுக்குப் பிறகு ஒருநாள் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நானும் மனைவியும் மருத்துவமனையில் பாத்திமாக்காவைக் காணச் சென்றோம்.

கேபின் வாசலிலேயே நக்மா நின்று கொண்டிருந்தாள்.

எங்களைக் கண்டதும் குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

"அந்த ராட்சதங்க பாத்திமாக்கா மூஞ்சியிலே 'ஆசிட்' புட்டியை எறிஞ்சுட்டாங்க. முகமெல்லாம் வெந்து புண்ணாயிடுச்சி. ஒரு கண்ணு போயிடுச்சி- ஒரு பக்கம் கையெலும்பு முறிஞ்சி போச்சி."

எங்கள் காலடி ஓசைகேட்டு பாத்திமாக்காவின் உதடுகள் படபடத்தன. புன்னகைபுரிய முயன்றாள். பிறகு மெல்லிய குரலில், "அட பைத்தியமே! இங்கே அழவா வந்திருக்கே! லீலையடா இது; ஆண்டவன் லீலை- அண்ணி! நாளைக்கு ரவைப் பாயசம்- அப்புறம் அதுக்குப் பேரென்ன- 'பரமான்னம்'- எல்லாம் பண்ணி எடுத்திட்டு வா. நவமியையும் அழைச்சிட்டு வா!

பாத்திமாக்காவை இந்த நிலையில் பார்ப்போம் என்று நாங்கள் கனவில்கூட கருதவில்லை.

(1966)

# கோடுகள்—வட்டங்கள்

ஆஸ்பத்திரி, சர்ஜிகல் வார்டு என்ற சொற்களைக் கேட்டாலே எனக்கு வயிற்றைக் கலக்கும். அந்தப்பக்கம் தலைவைத்துப் படுக்கக்கூட அஞ்சுவேன். ஆனால் யாராவது உறவினர் விபத்தில் அடிபட்டு மருத்துவமனையில் கிடந்தால் பார்க்கப்போகாமல் இருக்கமுடியுமா? நான் என்ன செய்யட்டும்? மருத்துவமனையின் வராந்தாவைப் பார்க்கும்போதே எனக்கு வேர்த்துக்கொட்டும். தலைசுற்றல்வரும். மண்பாண்டங்கள் உடைந்து நாலாபக்கமும் சிதறிக் கிடப்பதுபோல அங்கங்கள் முறிந்து கிடக்கும் நோயாளிகள். உடைந்த கைகால்கள்மீது வெள்ளை நிறக்கட்டுகள் அல்லது பூசிமெழுகியது போன்ற பிளாஸ் டர்கள். வயிற்றில் பொருந்திய ரப்பர்குழாய். கட்டிலருகே ஸ்டாண்டில் தொங்கும் பாட்டில். கவிழ்த்த இரத்தம், ப்ளாஸ்மா அல்லது சலைன் வாட்டர். உள்ளே நுழையும்போதே காற்றில் கலந்துவரும் ஈதரின் பயங்கர நெடி- அய்யோ- அம்மா- என்ற தீனக்குரல்கள், முனகல்கள்-ஆனால் பாருங்கள், சமீபத்தில் உடம்புக்கு வந்து நானே சர்ஜிகல் வார்டில் 'அட்மிட்' ஆக நேர்ந்தது. இப்போது எல்லாம் சாதாரண மாகவே தெரிகிறது. இனந்தெரியாத பயமோ, தலைசுற்றலோ இல்லை. துர்நாற்றம் எங்கே போயிற்றோ தெரியவில்லை. என்னை இந்த வார்டில் எப்பொழுது கொண்டுவந்து போட்டார்கள் என்று தெரியவில்லை. சுயநினைவு வந்ததும் என் நிலையை நினைத்து எனக்குள்ளே சிரித்துக் கொண்டேன். வலியைப் பொறுத்துக்கொண்டு படுத்திருக்கும்போது இன்று எனக்குத் திடீரென பீஷ்ம பிதாமகரின் நினைவு வந்தது. பாரதப் போரின் காட்சிகள் மனக்கண் முன் விரிந்தன. இரத்த பாட்டில், பெட்ரெஸ்ட், ரைஸ் டியூப், என் கால் நரம்பில் செருகி வைத்திருக்கும் ரப்பர் குழாய், அது வழியாக உடம்பில் ஏறும் சலைன் வாட்டர்-மனைவியிடம் கேட்டேன்—'இப்போது என்னைப் பார்த்தால் அம்புப் படுக்கையில் கிடக்கும் பீஷ்ம பிதாமகர்போல இருக்கிறது அல்லவா?'

உமாவின் உதடுகளில் மெல்லிய புன்னகை இழையோடியது—'தாடி ரொம்ப வளர்ந்துடுச்சி- நாளைக்கு வரச்சொல்றேன்' என்றாள்.

நான் முதலில் மறுப்புத் தெரிவித்தேன். பிறகு ஏதோ யோசனை வரவே, "இன்னிக்கே அழைச்சிட்டு வரலாமே" என்றேன்.

மனதில் வந்த நினைப்பு இதுதான். நாளைக்கு ஷேவ் செய்து

கொள்ளலாம் என்று எண்ணியிருந்து, இன்றைக்கு எனக்கு ஏதாவது ஆகிவிட்டால்- 'ஏதாவது' என்ன ஆக இருக்கிறது? எதற்கு சுற்றி வளைக்கவேண்டும்- ஷேவ் செய்யாமல் செத்துப்போய்விட்டால் கடைசியாக எடுக்கப்படும் புகைப்படம் எத்தனை அலங்கோலமாக இருக்கும்! காடுபோல் வளர்ந்த தாடிரோமங்கள், திறந்தநிலையில் வாய், கிலிபிடித்த முகம்- அய்யோ வேண்டாமே! என் இறுதிப் படத்தில் உதட்டில் புன்னகை தவழ வேண்டும், சாகும்போது எனக்குள்ளேயே சொல்லிக்கொள்வேன்—ஸ்மைல் ப்ளீஸ்.

ஜல்தர்ஜியின் நினைவு வந்தது. ஜல்தர்ஜியின் இறுதியாத்திரைப் படங்கள் 'மாதுரி', 'ஃபிலிம் ஃபேர்', 'சித்ரபட்' போன்ற பத்திரிகைகளில் வெளியாயின. முகத்தில் அதீதமான ஓர் அமைதி. உதடுகளில் அபூர்வமான புன்னகை. நெற்றியில் பெரிதாகச் சந்தனப்பொட்டு. பூமாலைகளால் மூடப்பட்ட பிரபல சினிமா பின்னணிப் பாடகர் ஜல்தர்- கண்ணை மூடிக்கொண்டு ஏதோ ஓர் இனிய கீதத்தின் முதல் அடியைத் தேடுகிறாரோ! ஆனால் புஷ்பலால் கதையோ? அவன் பழைமையைச் சாடும் புரட்சிப்பாடகன், சினிமாவுக்குக் கதை எழுது பவன். புஷ்பலாலுக்குத் தெரியாத போட்டோகிராபரே கிடையாது எனலாம். அவன் உயிரோடு இருந்தவரை அவர்கள் மாறிமாறிப் படம் எடுத்துத் தள்ளினார்கள். ஆனால் அவனுடைய இறுதிப்படம் எடுக்க வேண்டிய நேரம் வந்தபோது ஒருத்தனையும் அங்கே காணவில்லை, படம் எடுக்கவும் இல்லை. புஷ்பலால் விநோதமான பேர்வழி. இரண்டு 'பெக்' உள்ளேபோனால் போதும், அக்கணமே அவனுக்கு குஷி பிறந்துவிடும். அப்போது அவன் வாயிலிருந்து மைதிலி மொழியில் பச்சையாக ஒரு வசவுமொழி உதிரும் பாருங்கள்- கீசோ-ஓ-ஓ-ஓ-! சாவதற்கு முன்பும் அவன் வாயிலிருந்து இந்த வசவுமொழி உதிர்ந்த தாம்! அவன் அப்போது கடவுளை வைததாக அவனுடைய நெருங்கிய நண்பர்கள் கூறினார்கள். யாரையோ திட்டட்டும், இப்படி திட்டும் போது அவன் முகமும், உதடுகளும் எப்படி இருந்திருக்கும் என்பதைக் கற்பனை செய்து பார்க்கிறேன். உதடுகளைச் சுருக்கி சற்றே குவித்து வைத்துக்கொண்டு வசவுக்கணையை ஏவியிருப்பான், கீசோ-ஓ-ஓ-! இதோ, இந்த எதிர் வார்டில்தான் புஷ்பலால் உயிரை விட்டான். ஒருவருஷம் ஓடிப்போச்சு. நான் படுக்கையில் விழுந்ததை அறிந்ததும் நண்பர்களுக்கு ஜலதர்—புஷ்பலாலின் நினைவுதான் வந்திருக்கும். செய்தியைக்கேட்டு யார், என்ன 'கமென்டு' அடித்திருப்பார்கள் என்பதையும் என்னால் திட்டமாகக் கூறமுடியும். இதோ, உமா கவலையுடன் வருகிறாள். காரணம் என்ன?—'இரத்த பேங்கில் 'ஓ' க்ரூப் இரத்தம் இல்லை. நேற்று இரத்தம் வழங்க 'ஓ' க்ரூப்காரர்கள் யாருமே வரலே. நாளைக்கும் 'ஓ' க்ரூப்காரர் யாரும் வராவிட்டால்-?' உமா கவலையுடன் மீண்டும் அந்தப் பக்கம் சென்றாள்.

கேடுகாலம்தான்! யார் ரத்தமோ எந்தத்தொழில் செய்பவனின் ரத்தமோ- கண்ட கண்ட ரத்தமெல்லாம் உடம்பில் ஏற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஒருநாள் விட்டு ஒருநாள் 300 சி.சி. ரத்தம் என்னுடைய நரம்புகள் வழியே சொட்டுச்சொட்டாக என் உடலில் செலுத்தப்படுகிறது. அந்த ஒன்றரை மணி நேரமும் நிமிர்ந்து படுத்த வாறு நான் ஸ்டாண்டில் தலைகீழாகத் தொங்கும் பாட்டிலைப் பார்த்துக்கொண்டே இருப்பேன். ரப்பர் குழாய் நடுவே பொருந்திய கண்ணாடிக் குமிழியில் சொட்டும் கெட்டியான ரத்தத் துளிகளை எண்ணிக்கொண்டே இருப்பேன். பிறகு துளிகள் சொட்டும் தாளத்துக்கு ஏற்றபடி மனதில் உருவாகும் வார்த்தைகளைச் சத்தமாக இணைத்து மெல்லப்பாடுவேன்:

'ஏறுதே ரத்தம் அனுதினம் சிரைகளிலே
எவனுடைய ரத்தம் யாருடைய ரத்தம் யாரறிவார்
எத்தனை அவன் முரடனோ புரட்டனோ
கட்டைப் பிரமசாரியோ கருணைமிகு ஈசனோ?

இந்த நேரத்தில் எனக்குள்ளே இருந்து யாரோ, 'படவா! இந்த நேரத்திலும் உனக்குக் கவிதையா தோணுது?' என்று இடித்துரைப்பதை உணருகிறேன்.

மருத்துவமனையில் இம்முறை சுயநினைவு வந்ததிலிருந்து இப்படித்தான் ஏடாகூடமாக ஏதேதோ நினைப்புகள் வருகின்றன. மனதுக்குள்ளேயே சில வரிகள் ஓடுகின்றன. எதுகை மோனையுடன் அமையும் வரிகள்; ஆபாசமான பொருள்தரும் சொல்லடுக்குகள். இது என்னுடைய அடிப்படை நோயில் கிளைத்த கோளாறோ? பெருத்த வியாதிகளைத் தொடர்ந்து இம்மாதிரி விளைவுகள் உண்டாகுமாம். நகத்தைக் கடித்தல், அடிக்கடி மூக்கைச் சிந்துதல், கைவிரல்களை அவசியமின்றி ஆட்டுதல், நாக்கினால் உதட்டை நக்குதல்_!

உமா ப்ளட் பிரச்சினைக்குத் தீர்வுகண்டுவிட்டாள் போலத் தெரிகிறது. அவளுடன் வருகிற மாது நடுவயதுக்காரி, இரட்டை நாடி சரீரம், முகத்தில் புன்னகை.

"இவங்களும் 'ஓ' க்ரூப் தானாம். வருசக்கணக்கா ப்ளட் பேங்கிலே இரத்ததானம் செய்யறாங்க" என்கிறாள் உமா.

மாது தன் கைப்பையைத் திறக்கிறாள். சிவப்பு நிறக்கார்டை எடுத்து உமாவிடம் நீட்டி 'ரொம்ப அவசரக்கேசுன்னா என்னைத்தான் கூப்பிடுவாங்க' என்றாள்.

உமா அவளிடம் பேசி விஷயங்களைத் தெரிந்துகொண்டாள். அவள் நாளைக்காலையில் எட்டுமணிக்கே வந்து இரத்ததானம் செய்வாளாம். பிறகு பனிரெண்டு மணியிலிருந்து என்னுடைய நரம்புகளில் இந்த ஸ்கூல் டீச்சரின் இரத்தம் ஏறத்தொடங்கும். டீச்சரம்மா வணக்கம் தெரிவித்துவிட்டுப் போனதும் நான் வாயைத்

திறந்தேன்—"பொம்பளை ரத்தமா? அதிலேயும் இந்தப் பெண்மணியின் உடலிலிருந்தா-? வேண்டாம். வேண்டவே வேண்டாம். நான் ஏத்திக்க மாட்டேன்."

உமா பேசவில்லை. நான் திருப்பி அதையே சொன்னேன்— "ஏத்துக்க மாட்டேன், எடுத்துக்க மாட்டேன்-வேண்டாம் ரத்தம்-!"

"என்ன இது? சின்னப்பிள்ளைபோல பாடுபடுத்தறீங்களே!" உமா மெல்லச் சிரித்தவாறு என்னைக் கடிந்துகொண்டாள்.

"ஒருபோதும் ஏத்துக்கமாட்டேன்!"

"ஏத்துக்க வேண்டாம். இப்பக் கொஞ்சம் பேசாம இருங்க!"

"நடவாதம்மா, முடியாதம்மா! பாலும் வேண்டேன், மருந்தும் வேண்டேன்."

உமா ஃபீடிங் கோப்பையில் பால்விட்டு அதில் மருந்தைக் கலக்கிக் கொண்டிருக்கிறாள். நான் கீறல் விழுந்த ரிக்கார்டு மாதிரி திருப்பித் திருப்பிச் சொல்கிறேன்—"மருந்தும் வேண்டாம், பாலும் வேண்டாம்! மருந்தும் வேண்டாம், பாலும் வேண்டாம்-!"

நைட் டியூட்டி நர்ஸ் நீலம்மா மட்டும் அப்போது வந்திரா விட்டால் தொடர்ந்து பத்துப்பதினைந்து நிமிடங்கள் இதே பாட்டைப் பாடிக்கொண்டிருந்திருப்பேன்; உமாவும் கையில் கோப்பையில் ஸ்பூனைச் சுழற்றி மாறி மாறி என்னைக் கடிந்து கொண்டும், கெஞ்சிக் கொண்டும் இருந்திருப்பாள். சிட்டுப்போல சுறுசுறுப்பாக இயங்கும் நீலம்மா குட்டிக்கு நான் என் மனதுக்குள்ளே இட்ட பெயர்— பன்னீர்ப்பூ இரவு முழுதும் ஓடியாடி வேலை செய்தாலும் அன்றலர்ந்த மலர்போல சிரித்துக்கொண்டே இருப்பாள் அவள்; கமகமவென்று வாசம் பரப்பிக் கொண்டேயிருப்பாள்.

'யஹ் கோன்ஸா கானா சல்ரஹா தா?'— (என்ன பாட்டு ஓடிட் டிருக்கு?) நீலம்மா மலையாளச் சுவை கலந்த இந்தியில் கேட்கிறாள்.

என்னுடைய வாயில் கோப்பையின் குழாயைப் பொருத்தியபிறகு உமா சிரித்துக்கொண்டே பாடிக்காட்டுகிறாள் "பாலும் வேண்டாம், மருந்தும் வேண்டாம்-"

"சபாஷ், பாட்டு ஜோராக இருக்குதே! நாளையிலிருந்து ஒண்ணு செய்யுங்க. ஃபீடிங் கப் வேண்டாம், ஃபீடிங் பாட்டிலைக் கொண்டு வாங்க!" நீலம்மா தெர்மாமீட்டரை உதறிக்கொண்டு நகருகிறாள். சொன்ன பேச்சைக் கேட்கும் நல்லபையன் மாதிரி நான் பால் குடிப்பதைப் பார்த்து, "பால் குடிச்சிட்டுப் பாட்டுப்பாடு!" என்று கொஞ்சலாகச் சொல்கிறாள்.

உமாவும், நீலம்மாவும் சேர்ந்து சிரிக்கின்றனர்.

தெர்மாமீட்டரில் சுரத்தை அளந்து குறிப்பிட்டுவிட்டு நீலம்மா அகன்றபிறகு உமா என் முகத்தைப் பார்த்து "பால் குடிச்சிட்டு பாட்டுப்பாடு!" என்றாள் கொஞ்சலாக—நீலம்மா மாதிரியே.

இதைக்கேட்டு நான் சிரிக்கவில்லை. பாட்டு, கீதம், ஸாங், மியூசிக், டேக், ரிக்கார்டிங், ப்ளேபேக் போன்ற சொற்களைக் கேட்டாலே எனக்கு விக்கல் வர ஆரம்பித்துவிடுகிறது. விக்கல் அதாவது ஹிக்கப்! ஏழு நாள் வரையிலும் டாக்டர்கள் ஓயாமல் பாடுபட்டு என்னென்னமோ உத்திகள் செய்து என் விக்கலை கட்டுப்படுத்தினர். விக்கலுக்குப் பிறகு குமட்டல் அதாவது நாஸியா! பிறகு குடல்களில் மறைந்திருக்கும் வலி மெதுவாக எழும்பி சூலம்போல குத்தத் தொடங்குகிறது. இதைத் தொடர்ந்து வாந்தி. சாப்பிட்ட மருந்து, பத்தியச்சாப்பாடு, மாத்திரை, கிரான்யூல், கேப்ஸ்யூல், பில்ஸ், டிராப்ஸ் எல்லாம் வெளியே! வாந்தியைத் தொடர்ந்து கோமா, அதாவது நினைவிழத்தல்!

விக்கல் தொடங்கியதும் உமா டியூடி ரூமை நோக்கி ஓடினாள். உமாவுடன் நீலம்மா டக் டக்கென்று ஸ்லிப்பர் ஒலிக்க விரைந்து வருகிறாள். மணிக்கட்டின் மீது விரல்வைத்து நாடித் துடிப்பை உற்றுக் கேட்கிறாள். பிறகு டியூடி ரூமுக்கு விரைகிறாள். டாக்டருக்கு போன் செய்வதற்காகத்தான் இருக்கும்.

"சிபூ ஊஊ" கங்கைக்கு அக்கரையிலிருந்து யாரோ என்னை அழைப்பதுபோல உணர்கிறேன். நான் பதில் சொல்ல நினைக்கிறேன், ஆனால் நா எழவில்லை. கண்களைத் திறந்து பார்க்கிறேன். என் மூக்குத் துவாரத்தில் பொருந்தியுள்ள ரைஸ் டியூபில் கனமான சிரிஞ்சைச் செலுத்தி நீலம்மா என் குடல்களில் தேங்கியுள்ள பித்த நீரை இறைத்துக்கொண்டே இருக்கிறாள். பக்கத்தில் நிற்கும் சீனியர் சர்ஜன் டாக்டர் அஜய் பேசாமல் என்னையே பார்க்கிறார்.

வயிற்றுவலி மெதுவாகக் குறைகிறது. ஒருவேளை விக்கலைத் தடுக்க ஊசி போட்டாரோ என்னமோ? இந்த ஊசிபோட்டால் ஸ்காச் விஸ்கியில் ஒரு பெக் அடித்த மாதிரி தோன்றும். இன்று நான் 'கோமா'வில் ஆழ்ந்து போகவில்லை. கோமா! பனாரஸ்கார நகைச் சுவைக்கவிஞர். பெயர் மறந்துவிட்டேன். பாடியிருக்கிறாரே 'வாழ்வு ஒரு காப்பியம்—அதில் கமா, ஒரு வாக்கியம். அப்போ, ஃபுல்ஸ்டாப்?

என் கருத்தின்படி 'கோமா' என்பது சமாதிநிலை. மூர்ச்சை என்னும் நோயை சந்நியாச நோய் என்கிறார்கள் அல்லவா? மூர்ச்சை நிலையில் காணப்படும் கனவுக் காட்சிகளை எனக்கு அப்படியே நினைவுகூர முடிகிறது. இதுவும் விந்தைதான்.

இப்படி ஒரு சொப்பனம். எல்லாரும் வயிற்றைப் பிடித்துக் கொண்டு குனிந்து உட்கார்ந்திருக்கின்றனர். யார் எந்த நிலையில் எங்கெங்கே இருந்தார்களோ அதே இடத்தில் இடுப்பைப் பிடித்துக் கொண்டு குனிகின்றனர். வயல்களில் வேலை செய்பவர்கள், கால்வாய் பக்கம் நடப்பவர்கள், கடைக்கொல்லையில் கீரைபறிக்கும் பெண்கள், எல்லாரும் வயிற்றுவலியால் துடிக்கிறார்கள். காற்றில் ஒரு புளிப்பு வாடை கலந்து வருகிறது. மீண்டும் காற்று அலையலையாக—புளிப்பு

வாடையுடன். எல்லாரும் அலறியபடி மீண்டும் குனிகிறார்கள். உடல்கள் தாறுமாறாகச் சுருண்டு 'ஸ்வஸ்திக்' சின்னம்போல காட்சி யளிக்கின்றன. ஏதோ ஒரு வானொலி நிலையத்திலிருந்து அறிவிப்பு வருகிறது—'நேயர்களே! அணுமின்நிலையத்தில் ஏற்பட்ட கோளாறு இது. எல்லாரும் தரையில் குப்புறப்படுங்கள். வேக்குவம் வருகிறது. வேக்குவம்! உவ்வே! உய்க்! ஆயிரக்கணக்கான மக்கள் ஒரே நேரத்தில் வாந்தியெடுக்கிறார்கள். அனைவரின் உதடுகளும் முணுமுணுக் கின்றன—வேக்குவம்! வேக்குவம்! வேக்குவம். ஆனால் ஒன்றும் நேரவில்லை. உமா குத்துக்கல்போல இருக்கிறாள். ஓடிவருகிறாள்—'பயப்பட வேண்டாம். தவறுதலாக ஆயிடிச்சி.' இது யாருடைய தவறு? உயிருக்கு உலை வைக்கிற இந்தத் தவறைச் செய்தது யார்? அமெரிக்க விஞ்ஞானிகளா? ருஷ்ய-சீனர்களா, பாகிஸ்தானிகளா அல்லது இந்திய விஞ்ஞானிகளா? உயர்நீதி மன்றத்தின் நீதிபதியைக் கொண்டு விசாரணை செய்விக்க வேண்டும். அதிகாரிகளே! தவறு செய்தவர் களுக்கு கடுமையான தண்டனை வழங்குங்கள் அல்லது பதவியை விட்டு இறங்குங்கள்.

சமாதிநிலை சற்றுக் கலைந்தது. நாலாபுறமும் டாக்டர்கள் நிற்பதைப் பார்க்கிறேன். அவர்களிடம், 'இது யாருடைய தவறு?' என்று கேட்க விரும்புகிறேன். ஆனால் எதுவும் கேட்க முடியவில்லை.

ஆக்ஸிஜன் சிலிண்டரிலிருந்து வரும் குழாயுடன் என்னைப் பிணைத்து விட்டார்கள்.

அடுத்த காட்சி. அசோக் ராஜவீதியில் ஓர் ஊர்வலம் வருகிறது. கோஷமும் இல்லை, கூப்பாடும் இல்லை. ஊர்வலம் பக்கத்திலேயே வந்துவிட்டது. வீதியின் இரு பக்கமும் இந்த ஊர்வலத்தை எதிர்நோக்கி சாரிசாரியாக மக்கள் நிற்கின்றனர். ஆனால் இது மனிதர்களின் ஊர்வலம் அல்ல. தூய வெள்ளை நிற வாத்துகளின் ஊர்வலம் இது. முன்பக்கம் வளைந்த கழுத்து, பாலைத்தோற்கடிக்கும் வெண் சிறகுகள், ரோஜாநிற அலகுகள்.. ஆயிரமாயிரம் வாத்துகள்.. பெக்-பெக்-பெக்-பெக்-பெக்-பெக் என்று கத்தியவாறு. ஆஸ்பத்திரி பக்கமாக வந்து கொண்டிருந்த வாத்துக்கள் திடீரெனத் திரும்பின. கங்கைக்கரையை அடைந்து வரிசையாக தண்ணீரில் இறங்கின. கங்கையின் இக்கரையி லிருந்து அக்கரை வரையிலும் தண்ணீரில் வாத்துப்பாலம்... பெக்.பெக்.பெக். உமா என்னை எழுப்புகிறாள். சிபூ, சீக்கிரம் வாங்க, அக்கரைக்குப் போயிடலாம், சீக்கிரம். இல்லேன்னா, பாலம் உடைஞ்சி போயிடும் பெக், பெக், பெக். நான் துழாவிக் கொண்டே உமாவின் கையைப் பற்றுகிறேன். வாத்துக்களின் சிறகுகள் மீது என் கைபடும் போது அவை படபடவென்று சிறகை அடித்துக்கொண்டு மேலே போகின்றன, கூக்குரலுடன்... பெக்-பெக்-பெக் என்று நான் கூப்பிடுகிறேன், ஆனால் உமாவின் குரல் கேட்பதில்லை. 'உமா, உமா'

என்று உரக்கக் கத்துகிறேன். என்ன ஆச்சரியம்! என் தொண்டையிலிருந்து வாத்துக்குரல்தான் வெளிவருகிறது— பெக்-பெக்-பெக்_

நினைவு திரும்பியபோது நான் கண்டது, உமா என் தலைமாட்டில் கையை ஊன்றியவாறு ஸ்டூலில் குனிந்து அமர்ந்தபடி தூங்கிப்போய் விட்டாள். நான் உமாவைக் கூப்பிட்டேன். ஆனால் குரல் 'அம்மா', 'அம்மா' என்று வந்தது.

உமாவின் இடத்தில் அம்மாவாக இருந்தால், குனிந்தபடி என் தலைமுடியை வருடிக்கொண்டே 'அடே சிபூ! கிராமத்தைவிட்டு நீ ஏண்டா இங்கே வந்தே? மகனே. அங்கே நீ நல்லா மதமதனு இருந்தியே! இங்கே இப்படி ஆயிட்டியே! ஊருக்குப் போகலாம் வா மகனே. அங்கே கூழோ, கஞ்சியோ குடிச்சிட்டு மரத்து நிழல்லே கிடக்கலாம்_' என்று சொல்லி அங்கலாய்த்திருப்பாள்.

நேரம் நடுநிசியைத் தாண்டியிருக்கும் என்று தோன்றியது. பத்தாம் நம்பர் பெட் பக்கம் ஏன் இத்தனை கும்பல்? வார்டுப் பையன் என்னுடைய கட்டில் பக்கத்திலிருந்த ஆக்ஸிஜன் சிலிண்டரை இழுத்துக்கொண்டு போகிறான். 'கிரைசிஸ்' என்னுடைய கட்டிலை விட்டிறங்கி பத்தாம் நம்பர் பெட்டுக்குப் போய்க்கொண்டிருப்பதாகத் தோன்றியது. கனமான இரும்பைத் தரையில் இழுத்துச் செல்லும்போது எழுந்த கர்ண கொடூரமான ஓசை_ எல்லாரும் அரண்டுபோய்க் கிடந்தனர். பெட் நம்பர் ஐந்தில் கத்திக் குத்தில் காயமடைந்த பிஹார் ஷெரிப் டிரைவர் திடீரென்று ஓலமிடுகிறான்—"எங்கே அந்தக் குடுமிக் காரன்? தைரியமிருந்தா என் முன்னாலே வா, இப்ப எடு கத்தியை, பார்க்கலாம்_"

பத்தாம் நம்பர் பெட்பக்கத்தில் ஒரே களேபரம். கிட்னி பழுதான எண்பது வயதுக்கிழவர் இறந்துவிட்டார். மகள், மருமகள், பிள்ளை வயிற்றுப் பேத்திகள், பெண் வயிற்றுப் பேத்திகள் எல்லாரும் கும்பலாகக் கூடி ஒப்பாரி வைத்து அழத்தொடங்கினர். ஒப்பாரியைக் கொண்டு அவர்கள் வடபீஹாரில் ஏதோ கிராமத்தைச் சேர்ந்தவர்கள் என்று நான் ஊகித்தேன்.

புஷ்பலால் அடிக்கடி சொல்லுவான் கவிதை எழுதுவதற்குப் பொருத்த மான விஷயம்—'மரணம்'. இது அவனுடைய சொந்தக் கருத்தா அல்லது கேட்டதை படித்ததைச் சொல்கிறானா என்று தெரியாது.

புஷ்பலாலின் கதை—கவிதை எதுவுமே எனக்குப் புரிவதில்லை. அவனை முதன்முதலில் கல்கத்தாவில் ஒரு வங்காளிக்காரரின்

சுத்தமான கள்ளுக்கடையில் சந்தித்தேன். அந்தக் கடையில் ஒரு விசேஷம். ஸ்பெஷல் ஆர்டரின்பேரில் காளி மார்க் நாட்டுக்கள்ளுடன் எண்ணெயில் நன்கு பொரித்த பக்கோடாவும் கிடைக்கும். அங்கே பத்துப்பனிரெண்டு வங்காளி இளைஞர்களுக்கு நடுவே அமர்ந்து பஜ்ஜி-பக்கோடாவை 'பச் பச்' என்று தின்று கொண்டே மடக்கு மடக்காக நாட்டுச்சரக்கை விழுங்கியவாறு புஷ்பலால் தன்னுடைய ஆங்கிலக் கவிதையை உரக்கப் பாடிக்கொண்டிருந்தான். அந்தக் கவிதை எனக்குப் புரியவில்லை; அதிலிருந்து இரண்டொரு சொற்கள் மட்டும் புரிந்தன— 'ஓ லுமும்பா லுமும்மா லுமும்பா..', 'க்ராஸ் அண்ட் சிவலிங்க்.'

இன்று மதியம் நண்பர் ஒருவர் ஓய்ந்த நேரத்தில் உமா வாசிப் பதற்காக 'ஆர்ட் அண்ட் ஆர்டிஸ்ட்ஸ்' காலாண்டு பத்திரிகையின் இதழைக் கொடுத்துவிட்டுப் போனார். அதில் என் நலத்தை நாடும் ஓர் எழுத்தாளரின் கட்டுரை வந்திருக்கிறதாம். அதில் என்னைப் பற்றியும் எழுதியிருக்கிறாராம். நான் அதைப்படித்துக் காட்டும்படி உமாவிடம் பலமுறை சொன்னேன்; ஆனால் அவள் ஏதேதோ சொல்லித்தட்டிக்கழித்து விட்டாள்—"கேட்டு என்ன செய்யப்போறீங்க? பிரயோசனம்? தப்பா ஒண்ணும் எழுதலே. உங்களுக்குப் புகழாரம் தான் சூட்டியிருக்கிறார்!"

எனக்கென்னமோ உமாவின் இந்தப் பழக்கம் பிடிப்பதில்லை. அவள் சற்று நேரத்துக்கு வெளியே கிளம்பிப்போனதும் நான் பக்கத்து 'பெட்'காரரின் உதவியாளரைக் கூப்பிட்டு அந்தக் கட்டுரையைப் படிக்கும்படி சொன்னேன். படிக்கும்போது அந்த இளைஞனின் உச்சரிப்பில் மகஹி மொழியின் தாக்கம் காரணமாகவும், ஆங்கிலத்தில் என் புலமையின்மை காரணமாகவும் அதனை நான் முழுமையாக ரசிக்க இயலவில்லை. இருந்தாலும் உட்கருத்தை மனதில் வாங்கிக் கொண்டேன். விறுவிறுப்பான நடை. கட்டுரையின் சராம்சமாவது: மூன்று வருஷம் முன்பு பம்பாயில் பிரபல பின்னணி பாடகர் ஜலதரின் வீட்டில் பெயர்பெற்ற நான்கு கலைஞர்கள் மாலைநேரத்தில் கூடுவது வழக்கம். அவர்கள் பரீட்சார்த்தமாக ஒரு படம் எடுக்க விரும்பினர். அதன் திரைக்கதை, வசனம், பாட்டுகள் பற்றி விவாதிக்கத் தான் அவர்கள் அங்கே கூடினர். ஆனால் பேச்சு ஆரம்பிப்பதற்கு முன்பே பாட்டில் மூடி திறந்துவிடும். வந்த காரியம் நின்றுவிடும். அப்படியே பேச்சு தொடங்கினாலும் சண்டையில்தான் முடியும். 'அவர்கள்' என்றால் ஜலதர், கிராமியப்பாடல் கலைஞர் சிவநாத், வங்காளத்துச் சிற்பி ராமரஞ்சன், பர்மாவைத் தன் தாயகமாகக் கூறிக் கொள்ளும் மைதிலி கவி புஷ்பலால். இந்தக் கட்டுரையாளர் தவிர கலைப்படங்கள் மற்றும் 'புது சினிமா இயக்க'த்தை விரும்பும் எல்லா அன்பர்களும் இந்த நால்வர் குழுவிடமிருந்து கலையம்சம் பொருந்திய

படங்களை எதிர்பார்த்தனர். ஆனால் இது தற்கொலையாளர்களின் குழு என்று இப்போது நன்கு நிரூபணமாகிவிட்டது. இவர்கள் தினமும் மாலையில் அங்கே தங்களை அழித்துக்கொள்ளத்தான் குழுமிவந்தனர். சென்ற ஆண்டு லிவர் கோளாறினால் ஜலதர் இறந்துவிட்டார். மூன்றே மாதங்களில் வயிற்றில் புற்றுநோய் கண்டு புஷ்பலாலும் இறந்தார். இப்போது வயிற்று நோயினால் நினைவிழந்த நிலையில் சிவநாத் பட்னா ஆஸ்பத்திரியில் கிடக்கிறார். கல்கத்தாவில் ஒரு விலைமாதின் வீட்டு மாடிப்படியில் ராமரஞ்சன் குடிபோனதயினால் விழுந்து காயமடைந்த நிலையில் காணப்பட்டார் என்ற செய்தி வெளியாகியுள்ளது. இந்த இருவரின் நிலையும் கவலைக்கிடம்தான்.

இதன்பின் அடுத்த பத்தியில்—கட்டுரையின் முக்கியமான பகுதியில் 'ஏன் இப்படி நேர்கிறது'? என்ற கேள்வியை எழுப்பிய கட்டுரையாளரே உளவியல் மற்றும் தத்துவ அடிப்படையில் இதனை அலசி ஆராய்ந்து இதற்கான விடையும் தந்திருக்கிறார். முடிந்தால் இன்னொரு சமயம் சாவகாசமாக நானே படித்துப் புரிந்துகொள்வேன். இப்போது கட்டுரையில் சில சொற்களும், வாக்கியங்களும் என் மூளைக்குள் எதிரொலிக்கின்றன. பர்ஸனாலிடி டிஸாஸ்டர்- இடிபஸ் காம்ப்ளெக்ஸ்- டெத் விஷ்- செல்ஃப் டிஸ்டிரக்டிவ்- ஷாபென்ஹாவர் சூயிசைட் ஜஸ்டிஃபைட், பட்நெவர் கமிடட் இட்- ஐ மீன் இஸ் த ப்ராடக்ட் ஆஃப் ஹிஸ் கல்ச்சர் அண்ட் ஹிஸ் என்வயர்மெண்ட்—

நானோ, சாதாரண இலக்கிய வாசகன்! எனக்கு இந்த வாதங்கள் என்ன புரியும்? உமா, வங்கமொழியில் ஒரு பழமொழியைச் சொல்லுவாள். அதன் பொருள்: 'இஞ்சி வியாபாரி கப்பலைப் பற்றி எதற்கு விசாரிக்க வேண்டும்?' நான் இலக்கிய விமரிசனங்களில் இறங்கி மண்டையைக் குழப்பிக் கொள்ளவேண்டாம் என்று இதன்மூலம் மறைமுகமாகச் சொல்லுவாள். உமா எந்த அளவுக்கு விலக்கினாளோ அதைவிட இருமடங்கு உற்சாகத்துடன் நான் இலக்கியம் மற்றும் கலைத்துறையில் ஈடுபடலானேன். "சிபு அண்ணா, 'ஹையா—ஹோ ஹாய்-ஹாய்' என்று கிராமியப் பாடலை எழுதுவதை விட்டுட்டு தீவிரமாக ஏதாவது எழுதுங்களேன்" என்று புஷ்பலாலும் சொல்லலானான்.

நான் எழுத ஆரம்பிக்கவில்லை. ஆனால் தாடிவைத்துக்கொண்டேன். ராமரஞ்சன் அண்ணன் ஒருநாள் தன் திருக்கரங்களால் என்னுடைய தாடியை சற்றே செதுக்கி 'அல்ட்ரா மாடர்ன்' ஆகச் செய்தான். அதேதினம் புஷ்பலாலும் ராமரஞ்சனும் 'மாடர்ன்' 'கான்டெம்பரரி' என்ற சொற்கள் பற்றிச் சூடான விவாதத்தில் இறங்கினர்; அது அடிதடியில் முடிந்தது. புஷ்பலால் தன்னுடைய தவறான கருத்தை

சரியானதென்று நிரூபிக்க உரக்கக் கத்தும்போது ராமரஞ்சனும் குரலை உயர்த்துவார். எங்கள் குழுவில் வயதில் மூத்தவர் ராமரஞ்சன் அண்ணன், இளையவன் புஷ்பலால். இருவரும் சண்டைப் பிடித்துக் கொள்வதைக் காண சுவாரஸ்யமாக இருக்கும்—

அதெல்லாம் சரி, வாத்தியாரே, நீ எப்ப மாடர்ன் ஆனே?

உண்மைதான். நான் எதற்கு இவர்கள் சண்டையில் குறுக்கிட வேண்டும்? அதன் அவசியம் என்ன? எப்படி நடந்தது இது? குறுக்கிட்டது தவறா—

அப்போதெல்லாம் நான் அரசியல் கூட்டங்களில் பங்கெடுத்து வந்தேன். கூட்டங்களில் முக்கியமான பேச்சாளர்—தலைவர்களின் பிரசங்கம் தொடங்குவதற்கு முன்பாக குழுமியிருக்கும் மகாஜனங்களை மகிழ்ச்சியடையச் செய்வதற்காக என்னை மேடையேற்றுவார்கள். கையில் கஞ்சிராவை எடுத்துக்கொண்டு நான் மேடையில் ஏதாவது பாட்டுப் பாடுவேன்—பையா கிஸன்வா ஹோ, துஷ்மன் தோஹார் பட்கா. ஜ-மீ-ந்-தா-ர்! (பாரு தம்பி கிஸ்னையா— பண்ணையாரைப் பாரையா— மூக்கு மேலே கோபம் வந்து குதிக்கிறாரையா.)

என் குரலில் இனிமை இருந்தது; கிராமத்துப் பாடல்களைக் கேட்பது பட்டணத்தில் பாஷனாகியது. இல்லையென்றால் என்னை யார் தேடுவார்கள்? ஆனால் அந்த நிலையிலும் நான் அரசியலை விட்டிருக்க மாட்டேன். கட்சி மாறிக் கட்சிமாறி நான் இன்று எந்தக் கட்சியில் இருந்திருப்பேன் என்று சொல்ல முடியாது. பட்னாவில் வானொலி நிலையம் வந்ததால் எனக்கு பட்னா வரும் வாய்ப்புக் கிடைத்தது. இல்லையென்றால் நான் கிராமத்திலேயே இருந்திருப்பேன்.

முதல் முறையாக பட்னா வானொலியில் 'சாரங்கா சதாபுஜ்' கதைப்பாடலைப் பாடினேன். வானொலியில் என் முதல் நிகழ்ச்சி அது. நிலையத்திலிருந்து வெளியே வந்ததும் இந்தி தெரியாத ப்ரோக்ராம் எக்ஸிக்யூடிவ் மிஸ் நைனிக்குட்டி உணர்ச்சிபொங்க எனக்கு வாழ்த்துத் தெரிவித்தாள், "எனக்கு பாடலின் ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை. ஆனால் அதைக் கேட்கும்போது என் மனசை என்னமோ செய்தது—" என்றாள்.

இதன்பிறகு பட்னா நிலையத்திலிருந்து வாராவாரம் காலையிலும், மாலையிலும் என்னுடைய பாடல்கள் ஒலிபரப்பாயின. சில நாட்களிலேயே மக்கள் நாவில் என் பெயரும் பாடல்களும் தவழ்ந்தன. பட்னா நகரில் எந்தக் கலைநிகழ்ச்சி நடந்தாலும் நிகழ்ச்சி நிரலில் என் பெயர் நிரந்தரமாக இடம்பெற்றது, 'மண்ணின் சுகந்தம் வீசும் கீத மன்னன்', 'மிதிலையின் விரகிணி நாவில் நடமிடும் நாவலர்', 'வாழ்வின் கீதம் இசைக்கும் வித்தகன்' போன்ற அடைமொழிகளுடன் புகழப்பட்டேன் சினிமா உலகில் பஞ்சாபி பாங்கடாவின் அலைகள் அடித்து ஓய்ந்த நேரம் அது. மக்கள் மத்தியில் நாட்டுப்பாடலுக்கு

மீண்டும் மவுசு வந்த சமயம். அதோடுகூட என் வாழ்க்கையிலும் புதிய புயல்காற்று வீசத் தொடங்கியது- பம்பாய், சென்னை, கல்கத்தா. மது, மாது, சூது- நெறிகெட்ட வாழ்வு- வேலைசெய்யாமல் எத்தித் திரிதல், உருட்டுப் புரட்டு, ஏமாற்று- இதெல்லாம் எனக்கு அத்துப் படியாயிற்று. மண்ணிலே பொருந்திய கிராமியச் சொற்களை மண்ணிலிருந்து பிடுங்கியெடுத்து அரைகுறையாகச் செதுக்கி கதையாகவும், கீதமாகவும் மாற்றினேன்; பழமையும், பாரம்பரியமும் நிறைந்த பாடல் என்ற பெயரால் எதை எதையோ சாமர்த்தியமாக கலப்படம் செய்தேன். 'மஹுவா கட்வாரின்', 'நைனாஜோகி', 'மைனாவதி', 'டோலன் சர்தார்', 'துக்கா மாஞ்ஜி' என்று பல கதைப் பாட்டுகளை உருவாக்கினேன். ஒரு படத்துக்காக கொள்ளைக் காரிகளின் குழு நடனத்துக்குப் பாட்டு அமைத்து, படத்தயாரிப்பாளர், இயக்குனர் இவர்களை நன்றாக ஏமாற்றினேன். நேப்பாள் தேசத்து மோரங்க் பள்ளத்தாக்கில் வாழும் மலைஜாதி மக்களைக் காக்காய் பிடித்துப் பெற்றதை விற்றுக் காசாக்கினேன். இதன் புகழ் கோச், தாரு இனத்தைச் சேர்ந்த 'பக்ரா', 'கிராத்' 'காமி' வகுப்பினரைச் சேர வேண்டியது- ஆனால் இந்த க்ரூப் டான்ஸைப் பின்னர் சென்சார் போர்டு வெட்டிவிட்டது. காரணம், இதைக்கேட்டு சினிமாக் கொட்டகையில் குழந்தைகள் மட்டுமல்ல, முதியோர்களும், வாலிபர் களும்கூட மூர்ச்சைபோட்டு விழுந்துவிட்டார்களாம்.

உமாவின் பணிவிடை மட்டும் கிடைக்காமல் இருந்தால் ஜலதர் மற்றும் புஷ்பலாலுக்கு முன்பே நானும் காற்றோடு கலந்திருப்பேன். ஆனால் போனவருஷம் ஒருநாள் உமா அலுப்புடன், 'இனிமேல் உங்க இஷ்டப்படி நடங்க. எக்கேடு கெட்டுப்போங்க. நான் பேசமாட்டேன். என்னாலே தாங்கலேப்பா-' என்று சொல்லிவிட்டாள்.

அப்போது எனக்கு வீட்டைவிட்டு ஓடிப்போக வாய்ப்புக் கிடைத்தது. பத்துமாதம் வரையிலும் காட்மண்டு, காமரூப், காமாக்யா மற்றும் சிங்கப்பூரின் வனாந்தரங்களிலும், மலைப்பிரதேசங்களிலும் ஒரு புதிய நாகரிகத்தின்—புதிய தரிசனத்தின் தேவதூதனாகச் சுற்றித் திரிந்தேன். ஆண்களும், பெண்களுமாகப் பல நாட்டு இளைஞர்கள், என்னைச் சுற்றி வந்தனர்- கபாலிகர், தாந்திரிகர்கள்போல பேதமில்லா வாழ்க்கை.

படவா! இது மருத்துவமனை. மாதாகோயில் அல்ல.

இல்லை, இல்லை, நான் பாவமன்னிப்புக் கேட்பதற்காக இதையெல்லாம் சொல்ல வரவில்லை. நான் பாவம் செய்திருந்தால் தானே மன்னிப்புக் கேட்கவேண்டும்! உலகமென்னும் விசாலமான வேசி விடுதியில் நான் மட்டுமே புனிதன். ஏனெனில் நான் இதை ஒழிக்க விரும்புகிறேன் அடியோடு-

உமா எழுந்துவிட்டாள்.

"என்ன இது, டியூபை எடுத்துட்டீங்களே... என்னாலே முடியாதப்பா-" என்கிறாள் என்னைப் பார்த்து.

"மூக்கினுள் புண்ணாகிவிட்டிருந்தது."

"யார் சொன்னது?"

"யார் சொல்வாங்க!"

உமா எழுந்துபோனாள்; நீலம்மாவைக் கூப்பிடத்தான் போயிருப்பாள். பொழுது விடியும் நேரம் ஆகிவிட்டது. ஆனால், நீலம்மா அப்பொழுதே விரிந்த மலர்போல சிரித்த முகத்துடன் வந்தாள். வந்தவள் என்னைப் பார்த்து "சிவநாதனே, நந்தியம் பெருமானே, மூக்கணாங்கயிறு புடிக்கலையா? இப்படியா பிச்சுப் போடறது?" என்றாள். "உம்- விழுங்குங்க- இன்னும் கொஞ்சம்- இப்ப சரி- இதை வெளியே தள்ளினா என்ன செய்வேன் தெரியுமா?- சரி- அப்படித்தான்- 'லொக்கி சொயலே'- சமாத்துப் பையன்!"

நீலம்மா 'லொக்கி சொயலே' என்ற வார்த்தையை எங்கே கற்றாளோ தெரியவில்லை. பொருத்தமான இடத்தில் சரியாகப் பயன் படுத்துகிறாள்—"இனிமேல் குழாயை வெளியே தள்ளினீங்க, நான் வந்து ரெண்டு கையையும் கட்டிலோடு கட்டிப்போட்டிடுவேன்!" என்றாள்.

நான் நீலம்மாவைக் காதலிக்க ஆரம்பித்துவிட்டேனா? நான் நீலம்மாவைக் காதலிக்கிறேன் என்று உமா நினைக்கிறாளா? காதலிக்கப் பொருத்தமான இடம் மருத்துவமனைதானோ?

பாவி மகனே! நீலம்மாவையோ, கருத்தம்மாவையோ காதலிச்சு இனிமே என்ன செய்யப்போறே? மூச்சு ஓடிட்டிருக்கிற வரையிலும் இந்த நெருப்பும் அவியாதோ? நீலம்மாவைப் பார்க்கும்போதே என் ஒவ்வொரு மயிர்க்காலும் கூத்தாடுகிறது. பதினைந்து வருஷங்கள் முன்பு உமாவைப்பார்க்கும்போதும் இதே உணர்ச்சிதான் தோன்றியது.

நீலம்மா என் ஆக்ஸிஜன் சிலிண்டர்! காதலை மீண்டும் உசுப்பி எழுப்பும் மிதுன ராசிக்கன்னி- தன்னிகரற்ற கன்னி-!

ராஸ்கல்! இன்றும் கவிதையாடா?

புஷ்பலால் தன்னுடைய 'லெட்டர்பேட்' ஓரத்தில் மிதுனராசியைக் குறிக்கும் சின்னத்தைப் பொறித்திருந்தான்- கலவிக்குச் சித்தமான முத்திரையில் அரை நிர்வாணமாக அமர்ந்திருக்கும் ஆண்-பெண் ஜோடி! கடந்த ஐந்து வருடங்களாக உமா என்னுடன் உறங்குவதில்லை என்னுடன் உடலுறவு கொள்வதில்லை. என் உடலுறுப்புக்கள் புனிதம் கெட்டுவிட்டதாக அவள் நினைக்கிறாள். அப்போதிலிருந்து நானும் உமாவிடம் வெட்கம் பாராட்டுகிறேன். ஒருதடவை வாலிபப் பருவத்தில் காலடி எடுத்து வைக்கும்போது, அதாவது என்னுடைய பிறப்புறுப்பைச் சுற்றி சின்னஞ்சிறிதாக கறுத்துச் சுருண்ட ரோமங்கள் முதன்முறை பயிரானபோது, ஒருநாள் காலையில் என்னை எழுப்ப

வந்தாள் என் தாய். கொசுவலையை அகற்றிவிட்டு என் மேலிருந்து போர்வையை எடுத்தாள், போர்வையின் உள்ளே நான் அம்மணமாகப் படுத்திருந்தேன். பிறகு ஏழெட்டுநாள் வரை அம்மாவின் முகத்தைப் பார்க்கவே வெட்கமாக இருந்தது. அதே மாதிரி வெட்க உணர்வு உமாவைப் பார்க்கும்போதும் வருகிறது. ஆனால் இந்த விஷயத்தில் தான் ஜனங்கள் என்னை விவஸ்தை கெட்டவன், சூறில்லாதவன், உறவுகளின் புனிதத்தைக் காப்பாற்றத் தெரியாதவன் என்றெல்லாம் தூற்றுகிறார்கள்.

இதெல்லாம் ஒன்றுமே இல்லை. உடலும், உள்ளமும் சிதைந்து நொறுங்கி உருக்குலைந்து கிடக்கிறேன் என்பதே உண்மை. சாராயமா? எல்லா ரகத்தையும் சுவைத்துவிட்டேன். கருநாகத்தின் நஞ்சிலிருந்து செய்த ரகத்தையும் ருசி பார்த்தாயிற்று. சாராயம், கஞ்சா, அபினி போன்ற போதைப் பொருள்களை அளவுக்கு மீறிக்குடித்து, பீடி, சிகரெட்டுகள் புகைத்து வேணுநாதம் எழும்பும் என் குரலைக் கெடுத்துக்கொண்டேன். செண்பகமொட்டு விரியும் மெல்லிய நாதத்தைக்கூட தொண்டையில் நிரவல் செய்துகாட்டும் அளவுக்குத் திறமை பெற்றிருந்த என் தொண்டை இன்று உடைந்த கஞ்சிராபோல ஒலிக்கிறது. பாடும் திறமையை இழந்தபிறகு வாழ்ந்து என்ன காணப்போகிறேன்? ஃப்ளாட்டில் என்னுடைய அலமாரியில் டம்பிள் மதுப்புட்டிகள் இருக்கும். நான் இல்லாவிட்டால் அதெல்லாம் யாருக்குப் பயன்படப்போகின்றன? உமா புட்டிகளை அலமாரி யிலிருந்து எடுத்து சன்னல் வழியாக வீசி விடுவாள். இல்லை, அப்படிச் செய்யமாட்டாள். தூக்கி எறிய வேண்டும் என்று விரும்பினால்கூட அவளால் அப்படிச் செய்ய முடியாது. உயிர் உள்ளவரையிலும் பத்திரமாக வைத்திருப்பாள். அனேகமாக பூஜை அறையில் காளி தேவியின் சிலையருகேதான் வைப்பாள். கங்கை நீர் நிரம்பிய செம்பின் அருகே– கங்கை–கங்கை–

பட்னாவில் ஓடும் கங்கையை மகஹ் கங்கை அதாவது புண்ணியம் குறைக்கும் கங்கை என்பர். ஏனெனில் பட்னாவில் நல்ல ஸ்னானகட்டம் கிடையாது. இருக்கிற ஓரிரண்டு படித்துறையும் அசுத்தம் நிறைந்தது. யாரும் அதன் பக்கம் திரும்பிப் பார்க்கக்கூட விரும்பமாட்டார்கள். பட்னா கங்கைக்கரையில் எரிக்கப்படும் சடலங்களுக்கு ஆத்மசாந்தி கிடைக்காது, மோட்சமும் கிடைக்காது என்பார்கள். அதனால் புஷ்பலால் போன்ற புரட்சிக்காரனின் சடலத்தைக்கூட அக்கரைக்கு எடுத்துச்சென்று செமரியா படித்துறைப் பக்கம் எரித்தார்கள். ஆனால் இதே கங்கைக்கரையில் ‘புல்வெளியில் அமர்ந்து ஆனந்தமாக மது அருந்தும்போதும் பட்னா மெடிக்கல் கல்லூரி ஆஸ்பத்திரியின் பெட்டில் கிடந்து மருந்து குடிக்கும்போதும் மனிதமனம் பட்னா கங்கைக்கு ஜே என்றுதான் வாழ்த்துகிறது. இந்த

மருத்துவமனையில் 70 சதவிகிதம் நோயாளிகளும் சகல பிணிகளையும் தீர்க்கும் பவித்திர கங்கையின் புனிதமான காற்றின் மகிமையினால்தான் உடல்நலம் பெறுகிறார்கள், சாகப்போகிறவர்கள்கூட இங்கே வந்து பிழைத்துவிடுகிறார்கள். நாட்டில் இதேபோல ஆற்றின்கரையில் மருத்துவமனை எங்கேயாவது உண்டா எனக்குத் தெரியாது.

படித்துறைப்பக்கம் ஏதோ ஸ்டீமர் புறப்பட இருக்கிறது போலத் தெரிகிறது. இப்போதெல்லாம் புதுவிதமான 'சைரன்' ஒலி கேட்கிறது- ஆழமான நீரில் செல்லும்போது தொண்டை அடைக்கிறமாதிரி எழும்பும் சங்கொலி- இந்த சைரனுக்கு ஏதாவது பெயர் இருக்கும். கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும்.

இல்லை, இது ஸ்டீமர் இல்லை. ஆக்ஸிஜன் சிலிண்டரை அல்லவா கொண்டுவருகிறார்கள்! கனமான இரும்புப்பொருளைத் தரையில் இழுக்கும் ஒலி என் அருகே வந்துகொண்டிருக்கிறது. ஏன்? என் பக்கமாக இதைக்கொண்டுவரக் காரணம்? நான் சுயநினைவுடன்தான் இருக்கிறேன். கட்டிலுக்குப் பக்கத்தில் ஸ்டூலில் அமர்ந்து என் இடது பக்கத் தோளினருகே முகம் வைத்து உமா நிம்மதியாக உறங்குகிறாள். மெதுவாக அழைக்கிறேன்—"உமா!" வாயிலிருந்து குரல் எழும்புவதற்கு முன்பு சிலிண்டர் இழுத்துவரும் ஆள் என் வாயைப் பொத்துகிறான். சிலிண்டர் கொண்டுவந்தவன் ஆஸ்பத்திரி சிப்பந்தி அல்ல, போலீஸ்காரர்கள். எல்லாரும் என் கட்டிலைச் சூழ்ந்து நிற்கின்றனர்.. என்னைச் சோதனையிடப் போகிறார்களோ? மெத்தைக்குக் கீழே நான் ஒளித்துவைத்திருக்கும் ஆபாசப்புத்தகங்கள், சட்ட விரோதமான கஞ்சா, அபின், தவிர நர்ஸ் நீலம்மாவின் பிணம் ஒளித்துவைக்கப்பட்டிருக்கிறது. 'உமா, கேட்டியா இவங்க சொல்றதை?' என்று சொல்ல நினைக்கிறேன். இன்ஸ்பெக்டர் கூச்சலிடுகிறார்— 'பேசாமல் இருடா படவா ராஸ்கல்!' ஒரு சிப்பாய் என் மெத்தையை அப்புறப்படுத்த வருகிறான். நான் எதிர்ப்புத் தெரிவிக்கிறேன்— 'வேண்டாம், மெத்தைக்குக் கீழே நான் நிர்வாணமாகக் கிடக்கிறேன். அப்படியே அம்மணமாகக் கிடக்கிறேன்'. படுபாவிகளா- கிராதகர்களா- நாய்க்குப் பிறந்தவங்களா- என்று திட்டியவாறு துப்பாக்கியை எடுத்து படபடவென்று சுடுகிறேன்... இதேதாளத்தில் பறை ஒலிக்கத் தொடங்கியது. அவர்களைச் செம்மையாக உதைக்கிறேன். வயிற்றின் கீழேயும், ஆசனவாயிலும் உதைக்கிறேன்.. அவர்கள் பறையின் தாளத்துக்கு ஏற்றபடி ஓடுகிறார்கள். விந்தைதான்! உமா இன்னும் அதே நிலையில் தூங்கிக் கொண்டிருக்கிறாள். வார்டே அல்லோல கல்லோலப்பட்டது. செவியருகே போர்க்கருவிகள் ஒலிக்கின்றன.

அப்படியும் அவள் உறக்கத்துக்கு ஒரு குந்தகமும் வரவில்லை. அப்போது மெத்தையின் கீழேயிருந்து தலையைத் தூக்கி நீலம்மா கேட்கிறாள்—'போலீஸ் படை எப்பப் போச்சு? இப்ப நீ என்னையும் கொன்னுடு, வா!' பன்னீர் மலரின் வாசனை என் மூக்கைத் துளைக்கிறது. வாசம் என் உள்ளே நுழைகிறது. நீலம்மா மெல்லிய குரலில் கெஞ்சுகிறாள்--"ப்ளீஸ், கில் மீ- கில் மீ!" நான் உமாவை உலுப்பி எழுப்புகிறேன். அவள் தடாலென்று தரையில் விழுகிறாள். அவள் விழும் ஓசை ஜலதரங்கத்தின் இனிய நாதமாக ஒலிக்கிறது- அல்லது இது நீலம்மா சிரிக்கும் ஒலியோ? நானும் அவளுடன் சிரிக்க நினைக்கிறேன், ஆனால் சிரிப்பதற்குப் பதிலாக 'அம்மா, அம்மா' என்று அலறிக்கொண்டே அழுகிறேன். நான் அழுதுகொண்டே இருக்கிறேன். நீலம்மா அதே முகாரி ராகத்தில் வங்கமொழியில் 'ராம ப்ரசாதி' கீர்த்தனையை ஆலாபனம் செய்கிறாள்—மா—ஆ-ங்—ஆ-ங்-ங்-! நான் அழவில்லை, பாட அல்லவா செய்கிறேன்!

சமாதி நிலையல்ல, ஆனால் இது கனவோ? நனவோ? எது கனவு, எது நனவு என்று ஒன்றும் புரியவில்லை. எப்படியாயினும் சரி, நீலம்மா கொலை செய்யப்படவில்லை என்பது வரை நிஜம். அதோ, அவள் டாக்டருக்கு உதவிபுரிந்துகொண்டிருக்கிறாள். நான் கனவில் கை கால்களை அடித்துக் கொண்டிருந்ததாக டாக்டர் கூறுகிறார். நீலம்மா சிரித்துக்கொண்டே—'என் பக்கவாட்டிலே உதை விட்டீங்க பாருங்க, நோவால்ஜின் சாப்பிட்டுத்தான் சரியாச்சு' என்றாள்.

இப்போது ஊசி போடுகிறார்கள் என் உடம்பில்.

உமா ஏன் இத்தனை பயந்துபோய் நிற்கிறாள்? என்னை வெறித்துப் பார்க்கிறாளே! இந்த அளவுக்குக் கிலிபிடித்த நிலையில். நான் அவளைப் பார்த்ததே இல்லை. நாத்தழுதழுக்கக் கேட்கிறா —'கீ ஹேயேச்சே'? (என்ன ஆச்சு?) எதுக்கு இப்படிச் செய்யறீங்க? இப்ப என்னமா இருக்குது? சொல்லுங்களேன். ஏன் பேசமாட்டேங்கறீங்க? பாபு- என் சிவபாபு-!"

உமா திடீரென்று அலறுகிறாள். ஆகாயம் இடிந்து விழுவது போல. நட்சத்திரங்கள் பொலபொலவென்று உதிருகின்றன—'அம்மா-! எங்கே போவேன் நான்- டாக்டர்- நான் அனாதையாயிடுவேன்- யாருமில்லை டாக்டர் இவரைத்தவிர- அய்யோ- டாக்டர் அய்யா!-"

நான் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எல்லாம் கேட்டுக்கொண்டிருக்கிறேன். ஆனால் என்னால் எதுவும் செய்ய இயலவில்லை. நீலம்மா உமாவை இரு கைகளாலும் தாங்கி எடுக்கிறாள், அவளைத் தேற்றுகிறாள்—"ஒண்ணுமில்லே, பயப்படாதிங்க. ஒரு புது 'டிரக்' கொடுத்தோம். அதோட 'ரியாக்‌ஷன்'தான். இப்ப சரியாயிடும். ஊசி போட்டிருக்கோம் இல்லே-"

சர்ஜன் அஜய் உமாவைக் கடிந்து கொள்கிறார்—'உமா, என்ன

ஆயிடுச்சி, எதுக்கு ரகளை பண்றே?'

"என் சிபு பேசமாட்டேங்கறாரு, டாக்டர்!"

"பேசுவார், இப்பப் பேசுவார்- நீ பேசாம இரு."

"சரிங்க, நான் அழலே."

ஹார்ட் ஸ்பெஷலிஸ்டு டாக்டர் ஸ்ரீவாஸ் வந்திருக்கிறார். அவருடைய வெண்தாடியைப் பார்க்கும்போது எனக்கு கவிராஜ் சக்ரவர்த்தியின் நினைவு வருகிறது. கவிராஜ் சக்ரவர்த்தி முகர்ந்து பார்த்தே நோயைக் குணப்படுத்திவிடுவார் என்பார்கள். டாக்டர் ஸ்ரீவாஸ் சற்றுத் தொலைவிலிருந்தே என்னைப் பார்த்துக் கூறுகிறார்— ஹார்ட் நார்மலாக இருக்கிறது-

மெடிசின் டாக்டர் தாஸ் வந்தார். அவரும் என்னை எட்ட நின்று பார்த்தார். யாருமே என்னைத் தொடுவதில்லை. அவர்கள் என்னைப் பேசச் சொல்கிறார்கள். நான் சைகையினால் தெரிவிக் கிறேன். குரல் எழும்பமாட்டேன் என்கிறது. டாக்டர் தாஸ் கூறுகிறார்— "ஆமாம், இது ரியாக்ஷன்தான்."

தொண்டையில் கேன்சர் வந்தால் இப்படித்தான் ஆகும் என்று நான் அறிவேன்; பார்த்தும் இருக்கிறேன். பேச்சு திடீரென நின்றுவிடும். பேச்சு திரும்பாவிட்டால்? குரல்வளை நாளங்கள் பழுதுபட்டனவோ? நான் டாக்டரிடம் கேட்க நினைக்கிறேன்—டாக்டர்-

அப்போது அனைவரும் ஏககாலத்தில் கூவுகின்றனர்—'வந்துவிட்டது.'

கிரெண்டு போய்த் திரும்ப வந்ததும் ஆரவாரம் செய்வதுபோல எல்லாரும் ஆரவாரம் செய்கின்றனர்—'வந்துவிட்டது.'

ஆனால் உமாவுக்கு நம்பிக்கை வரவில்லை. அவள் என் பக்கம் வந்துகேட்கிறாள்—'சொல்லுங்க, நான் யாரு?'

எனக்குச் சிரிப்பு வந்தது. 'இதெல்லாம் கனவா நிஜமா?'

'உங்களுக்கு எப்படித் தோணுது?' உமா கேட்கிறாள்.

நான் திரும்பிப் படுக்க நினைக்கிறேன். உமா தடுக்கிறாள்- வயிற்றின் நடுவே பயங்கரமான வேதனை. இது என்ன? என் வயிற்றில் பாரமாக எதை ஏற்றி வைத்திருக்கிறார்கள்? கொஞ்சமும் அசைய முடியவில்லையே! நீலம்மா என்னை நிசமாகவே கட்டிலோடு சேர்த்துக்கட்டிவிட்டாளோ?

'பட்னா டைம்ஸ்' ஸ்டாஃப் ரிபோர்ட்டர் மித்தல் வந்திருக்கிறான். உமாவிடம் ஏதோ கேட்கிறான். அதற்கு உமா சொல்கிறாள்— 'ஆபரேஷன் முடிந்து பத்துமணி நேரத்துக்குப் பிறகு, இப்ப கொஞ்சம் முன்னாலேதான் நினைவு வந்திருக்குது. இப்ப சரியா இருக்கிறாரு.'

"ஆபரேஷனா? யாருக்கு? எனக்கு ஆபரேஷன் எப்ப நடந்தது?"

உமா சற்றே சிரித்தவாறு "டாக்டர் அஜய் பத்துமணிநேரத்துக்குப்

பிறகு இப்பத்தான் வீட்டுக்குப் போனார்" என்றாள்.

"அப்ப, டாக்டர் ஸ்ரீவாஸ், டாக்டர் தாஸ் அவங்க எல்லாம் எப்பப் போனாங்க?"

உமா ஆச்சரியத்துடன் கேட்கிறாள்—"டாக்டர் ஸ்ரீவாஸா, டாக்டர் தாஸா? அவங்க இங்கே எப்ப வந்தாங்க?"

நான் கேட்கிறேன்—"என்னுடைய குரல் பொத்தல் விழுந்த கஞ்சிரா மாதிரி கேட்கிறதா?"

"இல்லையே."

"எனக்கு 'டிரக் ரியாக்ஷன்' ஆச்சுல்லே? என் பேச்சு திடீர்னு நின்னு போகலியா?"

"உங்களுக்குத்தான் பத்துமணி நேரம் நினைவே இருக்கலியே!"

"அப்ப, நீலம்மா? அவளைக் கொஞ்சம் கூப்பிடேன்."

"நீலம்மாவா? யார் அது?" உமாவுக்கு வியப்பு!

நான் என் உடம்பைக் கிள்ளிப் பார்த்துக் கொள்கிறேன், நானாவது இருக்கிறேனா இல்லையா என்று பார்க்க. இதெல்லாம் கனவா- நானும் கனவா? —ஆனால் ஒரு சந்தேகம் எழுகிறது. பயந்து கொண்டே கேட்கிறேன்—"இதெல்லாம் போகட்டும் உமா. புஷ்பலால் அந்த எதிர்வார்டிலே தானே இறந்துபோனான்?"

இம்முறை உமா சற்றே புன்னகை புரிந்தாள்—"புஷ்பலால் யாரு? நீங்க என்னவெல்லாமோ பேசுறீங்க! பேசவே கூடாது, டாக்டர் சொல்லியிருக்காங்க."

கண்டதெல்லாம் கனவுதான் என்று எனக்குப் புரிந்துவிட்டது. இந்தமாதிரி கனவிலிருந்து எனக்கு விடுதலை கிடையாது! விடுதலை எதற்கு? கங்கைக் கரைக்குச் சென்று தண்ணீரில் இந்த உடலின் பிரதி பிம்பத்தைப் பார்த்தவாறு இந்த அழகிய உடலைத் துதி செய்ய வேண்டும் என்ற ஆசை எழுகிறது. வாழ்நாள் முழுதும் ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வொரு மனிதனிலும் என் பிரதிபிம்பத்தைத் தேடிக்கொண்டிருந்தேன், பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தேன். இந்த நினைப்புக்கு என்ன பெயர் சொல்லுவார்கள்- நார்சிசஸ் (ஆத்ம பூசனை) நான்சென்ஸ்? மீண்டும் கனவுக்குத் திரும்பி இன்னொருமுறை பாடிப் பார்க்க விரும்புகிறேன்—என்னுடைய குரல் எத்தனை தொலைவை எட்டுகிறது என்று பார்க்க விரும்புகிறேன்- கங்கைக்கு அக்கரை வரையில்- வெள்ளை மணலைத்தாண்டி, பசுமையான வயல்களைத் தொட்டுக்கொண்டு- அல்லது மிகுந்த நீரில் ஒலிக்கும் சங்கொலி போன்று ஆழம் காணமுடியாத நீரைக்கிழித்துக் கொண்டு-

(1970)

# தீவிழுங்கி

சூரியநாத் வெளியே செல்லப் புறப்பட்டுக்கொண்டிருந்தான். மனைவி தடுத்தாள், "எங்கே கிளம்பிட்டீங்க? பத்து நிமிசத்திலே ஆபாவின் மகன் வருவான் இல்லே?"

சட்டையில் பொத்தான் போட்டுக் கொண்டிருந்த சூரியநாத்தின் கை அப்படியே நின்றுவிட்டது. நேற்றிரவு வீடு திரும்பியதும் மனைவி சொன்னது நினைவிற்கு வந்தது. "இன்னிக்கு கடைத்தெருவிலே யாரைப் பார்த்தேன் தெரியுமா? ஆபாவின் மகன் திடீர்னு முன்னாலே வந்து நின்னான்– அட! ஆபா தெரியாது..? மறந்திட்டீங்களா? உங்க பிரிய சகி ஆபாராணி ராயை. அவ மகன் அப்படீன்னா, ஆமா.. அவ பையன்தான்!"

சூரியநாத் கேட்டான், "பார்க்க எப்படி இருக்கிறான்–? அதாவது முகம் யார் மாதிரி இருந்தது? ஆம்புலென்ஸ் டிரைவர் மாதிரியா, இல்லே அந்தத் துணிக்கடை முதலாளி மாதிரியா–?"

அவன் மனைவி அன்னபூர்ணா சற்றே யோசித்துவிட்டு, "நான் அவ்வளவு கவனமாப் பார்க்கலே. நாளைக்கு காலையிலே பத்து மணிக்கு அவனே வரப்போறானே. பார்த்து யாரப் போலிருக்கு, யாரைப்போல இல்லேன்னு ஒப்பிட்டுப் பார்த்துக்குங்க" என்றாள்.

"நீ ஏன் இப்ப வெளியே போயிட்டிருக்கே?" சட்டையைக் கழற்றிக் கொண்டே சூரியநாத் கேட்டான்.

"அவன் உங்களைத்தானே பார்க்க வர்றான். அவருக்கு ஒரு 'இன்பர்மேஷன் கொடுக்கணும்'னு சொன்னான்." அன்னபூர்ணா சிரித்துக் கொண்டே தொடர்ந்தாள். "அந்தப் பையன் நேற்று என்னைத் திணற அடிச்சிட்டான், கொஞ்ச நேரத்துக்கு. எங்கிருந்தோ வந்து என் வழியை மறிச்சிட்டு நின்னான். 'யாரடா இது'ன்னு நான் அசந்துட்டேன், "நீங்க அன்னபூர்ணா பெரியம்மாதானே? நான் யாருன்னு சொல்லுங்க, பார்ப்பம்–" பிறகு அவனே பதில் சொன்னான். 'எப்படி அடையாளம் தெரியும்? முன்னால பார்த்திருந்தாதானே! நான் உங்க ஆபாராணியின் மகன். இப்பத் தெரிஞ்சுதா–' நான் வாயடைச்சுப்போய் நின்னேன்!"

"உங்க பிரிய சகி ஆபாராணின்னு சொல்லலியா?" சூரியநாத் கேலியாகக் கேட்டான்.

அன்னபூர்ணா ஓர்க்கிங் விமென்ஸ் அசோசியேஷனின் சுற்றறிக் கையைக் கைப்பையில் வைத்துக்கொண்டே, "என் பிரிய சகியா? உங்க பிரிய சகியா?" என்றாள்.

"உன்னுடைய சகி."

"பாருங்க, இந்த வீண் பேச்செல்லாம் வேண்டாம்" அன்னபூர்ணா பொருள் பொதிந்த புன்னகையை உதிர்த்துவிட்டு கிளம்பிவிட்டாள். கதவைச் சாத்திக்கொண்டே, "பையன் முதல் தடவையா வர்றான். ஸ்வீட், பிஸ்கட் எல்லாம் இருக்கு. டீயும் கொடுங்க" என்றாள்.

மனைவி சென்றுவிட்டாள். சூரியநாத்தின் மனத்திரையில் பதினேழு-பதினெட்டு வருடங்களுக்குமுன் நடந்த பல நிகழ்ச்சிகள்--நினைவை விட்டு அகலாத கணங்கள் 'ஃபிளாஷ் பேக்' போல ஓடின-

...அன்னபூர்ணா அந்த வருடம் மெடர்னிடி சென்டரின் கௌரவச் செயலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டாள். அதனால் லேடி ஹெல்த் விசிட்டர், நர்சுகள், பயிற்சி தொடர்பாக பல பெண்கள் அடிக்கடி வீட்டுக்கு வரலாயினர். பின்னர் அன்னபூர்ணா அவர்களை வீட்டுக்கு வரவேண்டியதில்லை என்று தடுத்துவிட்டாள்.

-ஆனால் ஆபாராணி ராய் சென்டரில் பயிற்சிபெறச் சேர்ந்த போது, ஒருநாள் அன்னபூர்ணாவே அவளை வீட்டுக்கு அழைத்து வந்தாள் "பஜனைப்பாடல்கள் கேட்கணும்னு சொன்னீங்களே! எத்தனை பாட்டு வேணும்னாலும் கேட்டுக்குங்க- இதுதான் ஆபா ராணி. நம்ம சென்டர்லே பயிற்சிக்காக வந்திருக்கா. அகதி இல்லை; விதவை, பாவம். நல்லா பாடுவா."

"சியாமா கீர்த்தனையா- அல்லது." சூரியநாத் கேட்டான் ஆபா ராணி இடைமறித்து 'கிருஷ்ண கீர்த்தனை' என்றாள் மெல்லிய குரலில்.

சூரியநாத் தன் கண்களை உயர்த்தி ஆபாவின் நெற்றியைக் கூர்ந்து நோக்கினான். இளமை ததும்பும் நேரத்தில் விதவையாகிவிட்ட, அவனுக்குத் தெரிந்த சில பெண்களின் நெற்றியும் இதேபோலத்தான்- ஆபாவின் முகலாவண்யத்தைப் பார்த்து "பொருத்தமான பெயர்தான்" என்றான்.

சூரியநாத் பேச்சின் கருத்தை அன்னபூர்ணாவுக்கு முன்பே ஆபா புரிந்துகொண்டுவிட்டாள். மெல்லிய புன்முறுவலுடன் 'ஆபுனி கொயிமானு-' (நீங்க கவிஞர்தான்) என்றாள் வங்க மொழியில்.

"நான் கவின்னு யார் சொன்னது? அன்னபூர்ணாவா?" என்று கேட்டான்.

அன்னபூர்ணா சிரித்துக்கொண்டே "நான் கவிஞர்னு சொல்லலே. நீங்க எழுத்தாளர்னு சொன்னேன் அவ்வளவுதான்" என்றாள்.

"ஏகயீ கதா- ஒரே கதைதான்"

'ஏகயீ கதா' என்று கூறும்போது ஆபாராணி தன் வலது கண்ணை இறுக்கி அழகாகச் சிமிட்டியதை சூரியநாத் மட்டும் கவனித்தான்.

ஆபாராணி போனபிறகு அன்னபூர்ணா "இவள் விதவை இல்லை; கணவன் இவளை விட்டுட்டுப் போயிட்டான்" என்றாள்.

சூரியநாத் ஆபாராணியைப் போலவே வலது கண்ணைச் சிமிட்டியவாறு "ஏகயீ கதா–! ஒரே கதைதான்" என்றான்.

"இரண்டும் வேற வேற கதை இல்லியா? எப்படி ஒன்றாகும்?"

"கணவன் இவளை விடலேன்னு வச்சுக்க; அவன் பாவம் செத்துத்தான் போயிருப்பான், அப்ப இவள்தானே விதவை ஆயிருப்பா" என்று சூரியநாத் விளக்கம் தந்தான் ஏற்கெனவே ஆபா ராணியைப் பற்றி நன்கு தெரிந்தவன் போல. சட்டென்று அன்ன பூர்ணா கேட்டாள், "இவளை உங்களுக்கு முதல்லேயே தெரியுமா? உங்க பக்கத்து... அதாவது பூர்ணியா சகரஸா பக்கம் ஏதோ கிராமம்னுதான் சொல்லிச்சு."

"எந்தப் பக்கத்துக்காரியாகவும் இருக்கட்டும். இவ ஒருத்தனுக்கு மனைவியாக இருக்கப் பிறந்தவள் இல்லை. அவளுடைய சுபாவத்தில் 'சகி' பாவம் ததும்புவதை நீ கவனிக்கலே? 'சகி'யாக மட்டுமே இருக்கத் தகுந்தவள்," என்றான் சூரியநாத் சிரித்துக்கொண்டே.

கணவனின் குறும்பு கலந்த சிரிப்பைக் கண்டு அன்ன பூர்ணாவின் மனதில் இவர் ஏதோ நெறிகேடான சங்கதியைத்தான் குறிப்பிடுகிறார் என்ற சந்தேகம் எழுந்தது. "இதுக்கு என்ன அர்த்தம்?" என்றாள்.

"நான் இப்ப வைஷ்ணவ இலக்கியத்தின் சாரத்தை அப்படியே பிழிஞ்சி வெச்சாத்தான் தேவியாருக்கு இதன் அர்த்தம் விளங்கும்."

"சகியாக மட்டுமே இருக்கத் தகுந்தவள்– அப்படீன்னா என்ன அர்த்தம்னு கேக்கறேன்."

அவள் தன்னுடைய ஹாஸ்டல் நாளைய சகி ஆலிவ் டைசனைப் பற்றித்தான் சூசகமாகக் குறிப்பிடுவதாக நினைக்கிறாளோ என்று சூர்யநாத் எண்ணினான். ஹாஸ்டல் சகியின் நினைவு அவனுக்கு வந்ததாகத் தோன்றினால் இவள் சகிக்க மாட்டாள்; முகத்தைத் தூக்கி வைத்துக்கொள்வாள். பிறகு நாள் முழுதும் அவள் பின்னால் நடந்து, நூறு தடவை சத்தியம் பண்ணிக்கொடுத்து அவளைப் பழைய நிலைக்குக் கொண்டு வருவதற்குள் போதும் போதும் என்றாகிவிடும். அதனால் இன்று அவன் இயல்பான குரலில் "சகி என்றால் 'தோழி'ன்னு பொருள். இந்த மாதிரிப் பெண் ஒரு ஆடவனுடன் 'சினேகிதி' மாதிரி மட்டுமே இருக்க முடியும், இதைத்தான் சொல்ல வந்தேன்."

அன்னபூர்ணா இந்த விளக்கத்தை இயல்பான முறையில் எடுத்துக் கொண்டாள். ஆனால் அடுத்த கேள்வியைத் தொடுத்தாள்,

"கணவர் இவளைக் கைவிடலேன்னா, பாவம் அவன் செத்துப் போயிருப்பான்னு சொன்னீங்களே- அப்படி ஏன் சொல்லணும்?"

"அவளுடைய எடுப்பான நெற்றியைப் பார்த்துச் சொன்னேன்."

"பெரிசா வந்துட்டாரு, சாமுத்திரிகா லட்சணத்திலே புலிதான்!"

"முக்கோண வடிவமாக உயர்ந்து பரந்த நெற்றி, ஒளிரும் வகிடு- அபரிமிதமான மதமதப்பும், தெம்பும் நிரம்பிய உடல்வாகு, இதெல்லாம் சேர்ந்து காணப்பட்டால்- அந்த மதமுடைய நாயகி 'மத்தா, ப்ரமத்தா, அதிமத்தா, மகாமத்தா' எனப்படுவாள்."

"அந்த ஆபா உங்களைக் கவிஞர்னு சொன்னா இல்லே? அதன் பொருள் புரிஞ்சுதா?"

"கவின்னு சொன்னா ரசிகன், ரசிக்கத் தெரிஞ்சவன்னு அர்த்தம்."

"இல்லே, இது மட்டுமில்லே, இன்னும் கொஞ்சம் யோசிச்சா விளங்கும். இலக்கியக்காரங்க எல்லாம் கொஞ்சம் ஒழுக்கம் குறைஞ் சவங்களா இருப்பாங்க. இது உலகமறிஞ்ச உண்மையாச்சே!"

"கொஞ்சமா? முழுக்கன்னு சொல்லு" சூரியநாத் குற்றத்தை ஒப்புக்கொள்ளும் அப்ரூவர் பாணியில் கூறினான்.

அன்று இரவு இருவரும் இப்படியே ஒருவரையொருவர் சீண்டிக் கொண்டு வெகுநேரம் வரை தூங்கவில்லை.

—ஆபாவின் பக்திப்பாடல் நிகழ்ச்சி நடந்த மாலைநேரம்.

அன்று ஆபாராணி இசைத்த பக்திப்பாடல்களை முதன் முறையாகக் கேட்டு சூரியநாத்தும், அன்னபூர்ணாவும் அயர்ந்துபோய் விட்டனர்- ஆனால் ஆபா அவர்கள் வீட்டுக்குவந்து பஜனைப் பாடல்கள் பாட விருப்பம் தெரிவித்தபோது அன்னபூர்ணா மறுத்து விட்டாள், "பஜனையும், கீர்த்தனையும் கோயில்லே கேட்டாத்தான் நிறைவா இருக்கும்" என்றாள்.

அன்னபூர்ணாவின் சாமர்த்தியமான பேச்சின் பொருளை அவளைவிட சாமர்த்தியசாலியான ஆபா புரிந்துகொண்டாள். பல்லைக்கடித்துக்கொண்டு பேசாமல் இருந்துவிட்டாள்.

ஒருநாள் ஆபா தோள்பையை மாட்டிக்கொண்டு வந்துவிட்டாள். அதற்குள் கையை விட்டபடி "அக்கா- நான் உங்களுக்கும், 'ஜமாயி பாபு'வுக்கும் ஒரு கறி பண்ணித்தரப்போறேன், சாப்பிட்டுப் பாருங்க- 'வித் ட்யூ ரெஸ்பெக்ட் ஐ பெக்-" என்றாள்.

அன்று ஆபா 'மலாயி கறி' தயாரித்தாள். அன்னபூர்ணாவுக்கும் சூரியநாத்துக்கும் பரிமாறினாள். சூரியநாத் அதை ஒருகை பார்த்தான். விரல்களைச் சப்புக்கொண்டிக்கொண்டே பாராட்டாக ஏதோ சொல்ல நினைத்தான். அன்னபூர்ணா முந்திக்கொண்டாள், "எனக்குத் தெரியும் நீங்க என்ன சொல்லப்போறீங்கன்னு, 'சொமத்கார்'- அற்புதம்- அப்படீன்னுதானே? என்றாள்.

"இல்லை. நான் 'பயங்கரச் சாப்பாடு'ன்னு சொல்ல நெனச்சேன்.

நீ குறுக்கிட்டதாலே 'அபூர்வம்'னு சொல்லி நிறுத்திக்கறேன்."

தேங்காய்ப்பாலைக் கெட்டியாக எடுத்து அதில் ரோகித் மீனை முள்ளில்லாமல் நறுக்கிப்போட்டு பிரமாதமாக இருந்தது கறி. சூரியநாத் மகிழ்ந்துபோய் வங்காளி வைஷ்ணவ பரிபாஷையில் பாராட்டினான், "ஆகா, இது பாற்கடலில் பகவான் மத்ஸ்யாவதாரம் எடுத்த மாதிரியல்லவா இருக்கிறது."

"ஜமாயி பாபு, நீங்க வெறும் ரசிகர் இல்லே, மகா ரசிகர்" என்றாள் ஆபா.

"மகாரசிகர் இல்லே, மகா சாப்பாட்டுராமன், ஒரு தடவை டில்லியில இப்படித்தான் மூக்கு முட்டச்சாப்பிட்டுவிட்டு."

சூரியநாத் ஏப்பம் விட்டுக்கொண்டே சொன்னான், "அவஸ்திஜி வீட்டில்தானே? ஆமாம், இதே மாதிரிதான் அற்புதமான சாப்பாடு— ஆங், அங்கேயும் கறி, கூட்டு, பாயசம் எல்லாம் தயாரிச்சது அவஸ்தியின் மைத்துனிதான். அவஸ்திஜி மைத்துனிக்கு சமஸ்கிருதத்தில் 'கேலி குஞ்சிகா'ன்னு (விளையாடும் பூங்கா) ஒரு பெயர் உண்டுன்னு கூடச் சொன்னாரே!"

அன்னபூர்ணா சிரித்தவாறே "ஜாக்கிரதை ஆபா!" என்றாள்.

சிரிப்பு அலைகளின்மீது அடுத்த காட்சி விரிகிறது. பெருமழை பெய்து கொண்டிருந்த ஒரு மாலை நேரம்.

நனைந்துகொண்டே ஆபா தனியாக வந்தாள். "அக்கா! அக்கா வீட்டில் இல்லே?"

சூரியநாத் ஆச்சரியத்துடன் கேட்டான், "அட, நீங்க அங்கே போகலியா. உங்களை அன்னபூர்ணா அழைச்சிட்டுப் போகலியா? இன்னிக்கு ஒர்க்கிங் விமன்ஸ் சங்கத்தின் சார்பிலே 'சாரிட்டி ஷோ' நடக்குது இல்லே?"

"இன்னிக்கு எனக்கு 'ஆஃப்டர்நூன் ட்யூடி' நான் தொப்பலா நனஞ்சிட்டேன் ஜமாய் பாபு."

அன்னபூர்ணாவின் சாரி-ப்ளவுசை அணிந்துகொண்டு பாத்ரூமிலிருந்து ஆபா வெளியே வந்தாள். சூரியநாத் கையில் டீயுடன் நின்று கொண்டிருந்தான், "இது டீ இல்லே, குல்பன் பசாவின் சத்து இது. இஞ்சி எலுமிச்சம்பழச் சாறுடன். ஊர் பூராவும் 'ஃப்ளூ' காய்ச்சல் பரவியிருக்குது. மடமடன்னு குடிச்சுடுங்க. ஒண்ணும் வராது."

ஆபா கொஞ்சம் குடித்துப் பார்த்தாள். உண்மையிலேயே கஷாயம்தான். சூரியநாத் கேட்டான், "என்ன, அப்படிப் பார்க்குறீங்க? நான் இதிலே ஏதாச்சும் சேர்த்துட்டேனோன்னு சந்தேகமா? சொல்லுங்களேன்."

"அதிருக்கட்டும், எதுக்கு என்னை எப்பவும் 'நீங்க நீங்க'ன்னு

கூப்பிடுறீங்க?" ஆபா சற்றே சினத்துடன் கேட்டாள்.

"நான் டீயிலே ஏதாவது போதைப் பொருள் சேர்த்திருப்பேன்னு சந்தேகம் தோணுதா?"

"உங்களையெல்லாம் எப்படி நம்பறது? நீங்கள்ளாம் எது வேணும்னாலும் செய்வீங்க!" அவள் ஆளைக்கொலை செய்கிற குறும்புச் சிரிப்புடன் கூறிவிட்டு சூரியநாத்தையே கண்கொட்டாமல் பார்த்தாள்.

"உங்களுக்கும் துணிச்சலுக்குக் குறைவு இல்லை."

"என்கிட்ட 'நீங்க' போட்டுப் பேசினா, இனிமேல் பதில் சொல்ல மாட்டேன்."

சூரியநாத் அவள் அருகே அமர்ந்தான். நீண்ட தலைமுடியை முதுகில் விரித்துப்போட்டுக் காயவைத்துக் கொண்டிருந்தவள் திடீரென்று, "நிசம்மாச் சொல்லுங்க, டீயிலே நீங்க அந்த மாதிரி ஒண்ணுமே சேர்க்கலியா? அப்ப, என் நரம்புகளிலே விர்ர்னு ஒரு உணர்ச்சி ஏன் வருது? மயக்கம்போல வருதே!"

சூரியநாத் பால்சேர்க்காத வெறும் தேநீரில் குல்பன் பசா, இஞ்சி, எலுமிச்சம்பழச்சாறு தவிர வேறு எதுவுமே சேர்த்திருக்கவில்லை. அப்படி இருந்தும். ஆபாவின் உடம்பில் போதையேறினால், சூரியநாத் அவளிடம் எதற்கு நிரூபிக்க முயலவேண்டும்?

"ஆபா ராணி!"

ஆபா திறமைமிக்க நடிகையைப்போல சூரியநாத்தின் தோளில் தன் தலையை வைத்தாள். சூரியநாத்தின் உடலில் திடீரென்று உஷ்ணம் பரவியது. தானியங்கி இயந்திரம்போல அவனுடைய கரங்கள் ஆபாவை இறுக அணைத்துக் கொண்டன. வெளியே ஆகாயம் மின்னிக் கொண்டிருந்தது. தடதடவென்று இடி முழங்கியது. சூரிய நாத்தின் சூடேறிய நரம்புகள் திடீரெனக் குளிர்ந்தன. அவன் வெடுக்கென்று ஆபாவிடமிருந்து சற்று அகன்று கொண்டான். ஆபா மெல்ல முணுமுணுத்தாள், "யாரும் வரலே- காற்று வேகத்திலே சன்னல் திரை திறந்திருக்கு- சூர்யோதய- ஜமாய் பாபு- நீங்க எங்கே போயிட்டீங்க"

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஆபா சூரியநாத்திடம் பேசுவதை நிறுத்திக்கொண்டாள். நாட்கள் ஓடின. அன்னபூர்ணாவும் அவளை வீட்டுக்கு வரக்கூடாது என்று கண்டிப்பாக விலக்கியிருந்தாள். ஒருநாள் பக்கத்துவீட்டில் வேலை செய்யும் வயதான வேலைக்காரி அன்ன பூர்ணாவிடம் கிசுகிசுத்தாள், "அந்தச் சிறுக்கி மகாமோசம், அம்மா, வீட்டுப் படியேத்த லாயக்கில்லே-"

அவமானமடைந்த ஆபா வேறு சென்டருக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு போய்விட்டாள். எப்பொழுதாவது இந்த சென்டருக்கு வர நேர்ந்தால் அன்னபூர்ணாவுக்கு வணக்கம்கூட தெரிவிப்பதில்லை.

பத்துப் பதினோரு மாதங்களுக்குப் பிறகு ஒருநாள் மாலையில் ஆபா திடீரென்று வந்தாள். அன்னபூர்ணாவின் காலைத்தொட்டு வணங்கினாள். அன்னபூர்ணா மகிழ்ச்சியுடன் கேட்டாள், 'நீ பாஸாயிட்டே, இல்லே?"

ஆபா தலைகுனிந்தவாறு அதே வினயத்துடன் "ஆமாம், அக்கா!" என்றாள்.

அன்றிரவு அன்னபூர்ணா சூரியநாத்திடம் தெரிவித்த செய்தி, "நீங்க அன்னிக்கு சரியாத்தான் சொன்னீங்க. இந்தப் பொண்ணோட துணிச்சலைப் பார்த்தீங்களா? ஆறுமாச கர்ப்பத்தை வயத்திலே தூக்கிட்டு வெட்கமில்லாமெ சுத்திட்டிருக்கு- கருவைக் கலைக்க நினைக்குது. எப்படியாவது கைதூக்கிவிடுங்கன்னு அழுதிட்டிருந்தது. அதுட்டி விரட்டலேன்னா இன்னமும் இங்கியே அழுதிட்டு கிடக்கும்."

"நான் அவளை ஆம்புலன்ஸ் டிரைவரோட சினிமா தியேட்டர்லே பலதடவை பார்த்திருக்கேன்" என்றான் சூரியநாத்.

"அந்தத் துணிக்கடை கிழட்டு முதலாளி பசப்பு வார்த்தை பேசிப் பேசிக்கெடுத்துட்டான்னு சொல்லிச்சு" என்றாள் அன்னபூர்ணா.

சூரியநாத் ஏதோ கூற நினைத்தான், ஆனால் அன்னபூர்ணா பேசிக்கொண்டே போனாள், "கருமம், இங்கேயிருந்து மாத்தல் வாங்கிட்டு தொலைஞ்சது நல்லதாப்போச்சு. இல்லேன்னா யார் யாருக்கோ அல்ல கெட்டபேரை உண்டாக்கிட்டுத் திரியும்!"

சூரியநாத் பிறகு எதுவும் பேசவில்லை. அன்னபூர்ணா சோக மாகச் சிரித்துக்கொண்டே சொன்னாள், "அது பாடிட்டிருந்தது இல்லே- மரிபோ மரிபோ சகி நிஸ்சய மரிபோ- (சாவேன் சகியே நிச்சயம் சாவேன்)- இப்ப நிசம்மாச் சாகத்தான் போவுது அந்த ஓடுகாலி."

ஆனால் ஆபாராணி சாகவில்லை. ஹோலி ஃபேமிலி ஆஸ்பத் திரியில் ஆண்குழந்தையைப் பெற்றுப்போட்டுவிட்டு எங்கேயோ மறைந்துவிட்டாள்—'மதர்' பெயருக்கு ஒரு கடுதாசி வைத்திருந்தாள்.

—ஆபாராணியின் அதே மகன் இன்று சூரியநாத்துக்கு ஒரு அவசியமான செய்தி தெரிவிக்க வரப்போகிறான்.

சூரியநாத்தின் மனத்திரையில் லாவண்யம் நிறைந்த ஆபா ராணியின் முகம் தோன்றி அங்கேயே நிலைத்து நின்றது. பின்னணியில் பக்திப்பாடலின் ஆலாபனை— "ஆமார்- சகலி- கரல-பேல்-"

"டிர்-டிரிர்-டிர்-ர்-ர்-"

காலிங்பெல் இயற்கைக்கு விரோதமான ஸ்வரத்தில் ஒலித்தது. யாரோ அதனுடன் விளையாடுகிறார்கள்போல. சூரியநாத் விரக்தி யுடன் கதவைத் திறந்தான். காலிங்பெல்லை அழுத்தியநிலையில் ஓர் இளைஞன் அங்கே சிரித்துக்கொண்டிருந்தான், "ஹௌ ஃபென் டாஸ்டிக்-! நான் ஆபாராணியின் மகன்-"

“உள்ளே வாங்க.”

கோதுமை நிறம், சன்னமான உடம்பு, நடுத்தர உயரம், காற்றில் பறக்கும் தவிட்டு நிறத்தலைமுடி, வணங்காமுடி போல- முகம் அப்படியே ஆபாராணியை உரித்து வைத்திருக்கிறது- ஆபாராணி சாயல்தான் அவள் மகன்-

உள்ளே நுழைந்ததுமே அவன் சொல்லிவிட்டாள். “பாருங்கள், முட்டி அல்லது வேறு எந்த உறுப்பையும் தொட்டு யாரையும் நான் வணங்கறது இல்லே. நிசமாத்தான் சொல்றேன். இன்னிவரையும் எந்த ஆளையும் வணங்கினது இல்லே. நீங்க எப்படி நெனச்சாலும் எனக்கு அக்கறையில்லே! ஐக்-ஸ்லா!”

சூரியநாத்தைத் தொடர்ந்து அவன் வரவேற்பறையில் நுழைந்தான். அறையில் காலடி எடுத்து வைத்ததுமே இடிஇடியென்று சிரித்தான், “சார்-நீங்க டீக்கா உடுத்திட்டு தயாரா உட்கார்ந்திருப்பதைப் பார்த்தா, யாரோ உங்களை இன்டர்வ்யூ செய்ய வரப்போறாங்கன்னு நெனச்சிருக்கிற மாதிரி தெரியுது—ஐக்-ஸ்லா- இப்பல்லாம் எந்தப் பத்திரிகையைப் புரட்டினாலும் உங்க இன்டர்வ்யூதான் கண்ணிலே படுது. இன்னும் திருப்தி வரலியா என்ன? ஆனா, நான் உங்ககிட்டே எந்த—ஐக்-ஸ்லா- இலக்கிய நேர்முகப் பேட்டிக்கோ, செய்தித்தாள் ரகமான நேர்முகப்பேட்டிக்கோ வரலே. அதோட, உங்களுடைய அல்லது உங்க தலைமுறைக்காரங்களோட எந்தக் குப்பையையும்—ஐக்-ஸ்லா- இலக்கியத்தையும் நான் படிக்கிறதில்லே. உங்க தலைமுறைக்காரங்க அத்தனை பேரும் இறந்துபோய் அந்த இடத்திலே புல் முளைச்சாச்சுன்னு அதையெல்லாம் படிக்காமலேயே என்னாலே சொல்ல முடியும்- கமர்ஷியல் எழுத்தை எல்லாம் நான் படிக்கிறதில்லே. இட் இஸ் நாஸியேடிங்- வாந்தி வரவழைக்கிற இலக்கியம்- ஐக்-ஸ்லா- அப்பட்டமாகச் சொல்லிட்டதுக்காக வருந்தாதீங்க. நான் உங்களுக்கு ஒரு செய்தி சொல்ல மட்டும்தான் வந்திருக்கிறேன்.”

சூரியநாத் பேச்சிழந்துபோய் சிரிக்க முயன்று கொண்டிருந்தான். கேட்டான், “நீங்க நடுநடுவிலே ஒரு வார்த்தை பயன்படுத்தறீங்களே- ஐக்-ஸ்லா-அப்படீன்னா என்ன?”

“அது என் தனிப்பட்ட அகராதியிலுள்ள சொல், அதுக்கு என்ன அர்த்தம் வேணும்னாலும் வெச்சுக்கலாம்.” சோபாவில் உட்கார்ந்தபடி அலட்சியமாகக் கூறினான்.

அவன் அறைச்சுவர்களை நோட்டம் விட்டான். பிறகு வில்லன் சிரிப்பு சிரித்துக்கொண்டே கூறினான். “ஹௌ டிஸ்கஸ்டிங்—ஐக்-ஸ்லா- நீங்க உங்களோட சகல போட்டோக்கள், வாழ்த்துப் பத்திரங்கள், பட்டங்கள் முதல் நற்சான்றிதழ் வரையிலும் எதையும் விட்டுவைக்காமல் கண்காட்சி மாதிரி மாட்டி வெச்சிருக்கீங்க-! அறையிலே ஆள் நுழைஞ்சதுமே உங்களோட ஆளுமை சிறுத்தைப்

புலிபோல பாய்ஞ்சு அந்த ஆளை அப்படியே அமுக்கிடும்போல, ஆனா, ஒண்ணு கேட்கட்டுமா? உங்களுக்கே இதெல்லாம் 'வல்கரா'த் தோணலியா?"

"இல்லவே இல்லை" என்றான் சூரியநாத் சுருக்கமாக

"ஐக்-ஸ்லா- ஏன் தோணும்? தொழில் பிரச்சினை அல்லவா இது. கமர்ஷியல் எழுத்தாளர்னா இதெல்லாம் செஞ்சுதான் ஆகணும். வேறே வழி இல்லே. ஆனா, உங்க இலக்கியத்தைப் பற்றி நான் எதுவும் பேசமாட்டேன். அப்படியே தப்பித்தவறிப் பேசிட்டா, நீங்க உடனே தடுத்துடுங்க."

படிப்படியாகக் களையிழந்து போகும் சூரியநாத்தின் முகத்தைப் பார்த்து அவனுக்கு மேலும் தெம்பு ஏறுகிறது. "பெரியம்மா வெளியே போயிருக்காங்க இல்லே? எனக்குத் தெரியும். உங்களை தனியா வீட்டிலே விட்டுட்டு வெளியே போகிற பழக்கம் அவங்களுக்கு உண்டுன்னு எனக்கு நல்லாத் தெரியும். எனக்கு எல்லாம் தெரியும். உங்களோட ஃபிளாட், இட் இஸ் ஆன் ஐடியல் ப்ளேஸ் ஃபார் 'ஆத்ம ரதி'- தன்னிலே மகிழ்ந்திருக்க- நல்ல இடம்- ஐச்-ஸ்லா!"

சூரியநாத் தொண்டையை காறிச் சரிசெய்து கொண்டே, "அப்ப, நீங்க ஆபாராணியின் மகன்னு சொல்லுங்க" என்றான்.

அவன் அலட்சியமாக, "ஆமாம். இப்போது தன்பாதில் வசிக்கிறேன். எனக்குப் பல பெயர்கள் உண்டு. எதுவுமே புனைப்பெயர் இல்லை; எல்லாம் நிஜப்பெயர்தான். இப்போது உங்களுடன் பேசிக் கொண்டிருப்பது சூதபுத்திரன் என்ற பெயரில்" என்றான்.

சூரியநாத் சிரிக்க முயன்றான் ஆனால் முடியவில்லை. சூதபுத்திரன் தொடர்ந்து பேசினான். "கவிதை எழுதுகையில்— ஐக்-ஸ்லா- என் பெயர் சிவலிங்கா."

சூதபுத்திர சிவலிங்கா சூரியநாத்திடம் கேட்டான், "ஏன், திகைச்சுப் போயிட்டீங்களா?"

"திகைக்கவோ, திடுக்கிடவோ இதில் என்ன இருக்கிறது? என் பக்கத்து வீட்டிலே நிஜலிங்கான்னு ஒருத்தர் இருக்கிறார்." சூரியநாத் கம்பீரமான குரலில் சொன்னான், "இப்ப நீங்க வந்ததற்கான நோக்கத்தைச் சொல்லுங்க—ஐக்-ஸ்லா- அதாவது தயை செய்து."

சூதபுத்திரன் ஓரக்கண்ணால் சூரியநாத்தைப் பார்த்தான். ஆபாராணியும் இப்படித்தான் ஒரு கண்ணைச் சற்றே சிமிட்டியபடி பார்ப்பாள். அவன் சொன்னான், "நோக்கம் சுலபமானதுதான். உங்களுக்கு ஒரு செய்தி சொல்ல வந்தேன். அவ்வளவுதான்-"

"உங்கள் தாயார்-"

சூரியநாத்தின் வாக்கியம் முடிவதற்குள்ளாகவே சூதபுத்திரன் கூறினான், "உங்களுடைய 'கேலிகுஞ்சிகா'வான ஆபாராணியைப் பத்தி எந்தத் தகவலும் எனக்குத் தெரியாது. என்னைப் பிறப்பித்தவளுக்கு

சொந்தமான ஒரு தடித்த டைரி என்னிடம் இருக்கிறது—1955-56ஆம் வருடத்திய டைரி–ஹோலி ஃபேமிலி ஆஸ்பத்திரியின் 'மதர்' பத்திரப் படுத்தி வைத்திருந்து தந்த டைரி– தெரிந்ததா?"

"தெரிந்தது—ஐக்-ஸ்லா–! இப்ப நீங்க செய்தியைத் தெரிவிக்கலாம்" சூரியநாத்தின் குரலில் பழைய திடம் தெரிந்தது.

"செய்தி தெரிவிக்கும் முன்பு நான் உங்கள் மனோதிடத்தை அளவிட முயல்கிறேன்—அந்தச் செய்தியை ஏற்றுக்கொள்ளும் மன உறுதி உங்களுக்கு இருக்கிறதா என்று பார்க்க நினைக்கிறேன். இதப் பாருங்க, நான் உங்க இலக்கியத்தைப் படிச்சதில்லே. அதனாலே உங்களை எந்த ரகத்திலே சேர்க்கலாம்னு எனக்குத் தெரியலே. ஆனால் ஒட்டுமொத்தமாகப் பார்த்தா உங்க தலைமுறையினர் பூராவுமே படிப்பில்லாதவங்க, அறைகுறைப் படிப்பாளிங்கன்னு தெரியுது. இப்ப முதல்லே உங்க மனசிலே இருக்கிற ஆவலைத் தணிக்கிறேன். சரிதானே! ஹோலி ஃபேமிலி ஹாஸ்பிடல்லேயிருந்து அனாதாசிரமம், ஜபல்புர், அலகாபாத் இந்த ஊர்களில் என்னுடைய குழந்தைப்பருவம் கழிந்து இளமை வந்தது. படிப்பும் மோசமில்லை. தொழில் முறையிலே நான் கவி, சிறுகதை எழுத்தாளன், நாடகாசிரியன், ஓவியக் கலைஞன். ஆனால், இதெல்லாம் உங்க புத்திக்கு எட்டாத சமாசாரம். ஐக்-ஸ்லா– நான் இப்ப தன்பாதிலே வசிக்கிறேன், ஒரு குறைவுமில்லை. பணம் தந்தால் என்னைப் பயன்படுத்தலாம். அதுசரி—உங்க பாத்ரூம் எங்கே?"

சூதபுத்திரன் டாய்லெட்டில் புகுந்தான். சூரியநாத்துக்கு மூச்சு விட நேரம் கிடைத்தது. முகத்தை இயல்பாக வைத்துக்கொண்டான். முகம் சகஜ நிலைக்கு வந்தது. உள்ளத்தில் புதிய தெம்பு. சூதபுத்திரன் படிப்படியாக ஐக்-ஸ்லாவைக் குறைவாகப் பயன்படுத்துவதையும் கவனித்தான்.

சூரியநாத் அந்தப்பையனை அளவிட முயன்றான். ஆம், இவன் புது யுகத்தின் படைப்பு—மாடர்ன் 'சரக்கு'. இவனுடைய தலைமுடி, நடையுடை, உடல்நலம் இதெல்லாம் 'பீட்டில்ஸ்' மற்றும் 'ஹிப்பி'களி லிருந்து தனியானவை; ஆனால் உக்கிரம் அதேபோலத்தான். சூரியநாத் சிரித்துக்கொண்டான்—வந்தது முதல் இந்தப் பையன் நிறுத்தாமல் சவுக்கடியல்லவா தருகிறான்! அப்படித்தான் இருக்கும். நேச்சுரலி–

குளியலறையிலிருந்து வந்த சூதபுத்திரன் யோசனையை உதிர்த் தான்—"நீங்க பாத்ரூமிலே படிக்கிற சில பத்திரிகைகளின் ஆசிரியர் களிடம் இனிமேல் வேட்கையை திசைதிருப்பக்கூடிய படைப்புகளை வெளியிடச் சொல்லுங்கள். இன்னொரு விஷயம்! ஏகத்துக்கு மாட்டி யிருக்கீங்களே புகைப்படங்கள் பலநாட்டு பிக் பகர்ஸ்—ஐக்-ஸ்லா– வி.ஐ.பின்னு சொல்லப்படறவங்களோட சேர்ந்துநின்னு எடுத்த போட்டோக்கள்!—ஓய் நாட் யூ நியூட்? பச்சையாச் சொல்றேன், நிர்வாண நிலையிலே ஒரு படம் எடுத்து மாட்டிவைக்கலாமே.

அதுக்குக் கீழே 'வித் மை செல்ஃப்' அப்படீன்னு எழுதலாமே. எப்படி யோசனை?"

சூரியநாத் ஆச்சரியமடையவில்லை. பாத்ரூமிலிருந்து வெளியேறி வரவேற்பறைக்கு வந்தபிறகு கொஞ்சமும் கூச்சமில்லாமல் பேண்ட் பட்டன் போட்டுக்கொள்கிற இந்தப்பையன் இதுவும் பேசுவான். இன்னமும் பேசுவான். இதில் ஆச்சரியப்பட எதுவும் இல்லை. சூரியநாத் மெல்லச் சிரித்துக்கொண்டிருந்தான்.

அந்த நேரத்தில் சூரியநாத்தை வாயடைக்கச் செய்யும் நோக்குடன் அவன் ஒரு கேள்வியைத் தொடுத்தான்—"அது சரி, இப்பச் சொல்லுங்க, உங்களுக்கு இனிய ஸ்வீட்டியான மைத்துனி ஆபா ராணியோட உங்க தொடர்பு எப்படி எங்கே—ஐக்-ஸ்லா."

"முதல்ல, சொல்ல வந்த சேதியை சொல்லுங்க. நீங்க இங்கே என்னை நேர்முகம் காணவரல்லே இல்லே? பிறகு எதுக்கு இந்தக் கேள்வி எல்லாம்?" சூரியநாத் நாற்காலியில் சம்மணம் போட்டு உட்கார்ந்தான்.

"ஐக்-ஸ்லா, அதான் நான் முதல்லே சொன்னேனே. தெரிஞ்சுக்க விரும்பறேன்னு."

"ஐக்-ஸ்லா—நான் முதல்லே—ஐக்-ஸ்லா உங்க—ஐக்-ஸ்லா சேதியை முழுக்கத் தெரிஞ்சுக்க விரும்பறேன்—ஐக்-ஸ்லா அவ்வளவு தான்." சூரியநாத் சீரியஸாகச் சொன்னான்.

சூதபுத்திரன் சிரித்தான். அந்தச் சிரிப்பில் தெரிந்த துணிக்கடை முதலாளியின் சாயலை சூரியநாத் கவனித்தான்.

"நல்லது, உங்க தலைமுடி அப்படியே இயற்கையான கறுப்பு நிறம்தானா? நீங்க 'டை' செய்திருப்பீங்கன்னு நெனச்சேன். ஏன்னா, எங்கம்மா டைரிலே உங்க கேசத்தை அப்படிப் புகழ்ந்திருக்கா. இப்பவும் மயிரெல்லாம் அதேமாதிரி கறுப்பா இருக்கே! உங்க பல் வரிசையும் பொய்ப்பல்செட் போலத் தெரியலே. அப்படீன்னா நீங்க இன்னும் பத்து வருசத்துக்கு காதல் கதைகளை எழுதியே ஆனந்தமாகக் காலம் தள்ளலாம். ஐம்பது வயதிலும் இத்தனை கருமையான கேசமும், இரும்பைக் கடிச்சுத்தின்னும் பல்வரிசையும் ஐஸ். அதாவது இதுக்கும், யோகாவுக்கும் தொடர்பு உண்டா? நீங்க ஹெர்ப்ஸ் ஏதேனும் பயன் படுத்தறதுண்டா?"

இந்தப் பிள்ளைக்கு 'சபர்கனாத்தி' மருந்துக் குறிப்பைத் தரலாமா என்று சூரியநாத் ஒருகணம் எண்ணமிட்டான். அதாவது நீலத்துத்த நாகத்தை தயிரில் கலக்கி. ஆனால் சுருக்கமாகப் பதிலளித்தான்—"இது என்னுடைய தொழில் ரகசியம்."

இடி இடியென்று சிரித்தான் சூதபுத்திரன். சூரியநாத் புரிந்து கொண்டான்—இந்தப் பையனுக்குத் தான் பெரிய ஃபயர் ஈட்டர் (தீவிழுங்கி) என்ற நினைப்பு போலும். 'ஸெல்ஃப் போஸ்ட் லோன்லி

ரிபெல்'னு சொல்லுவாங்களே, தன்னைப் பற்றித்தானே தம்பட்டம் அடித்துக் கொள்ளும் ரகத்தைச் சேர்ந்தவன் இவன். இன்னொரு எழுத்தாளரின் நினைவு வந்தது—ஐ ஆம் பார்ன் பிஃபோர் மை டைம்.

"நீங்க என்ன பண்றீங்க? அதாவது யாரு சோறு போடறாங்க?" சூரியநாத் சற்று உரிமையுடன் கேட்டான்.

"என்னை யார் பயன்படுத்தறாங்களோ அவங்கதான்."

"அப்ப, டிரேடு யூனியன் மெம்பரா நீங்க?"

"நான் வந்து ஆவாங்கார்டு. அதர்க்கவாதம் என்று நீங்க கேள்விப் பட்டதுண்டா?"

"அதர்க்க வாதமா? குதர்க்க வாதமா?"

"உங்களுக்குப் புரியவைக்கணும்னா குதர்க்கமும் வேணும்தான். நான் கேக்கறது என்னான்னா— நீங்க வில்லியம் ப்ளேக், ஜ்யான், கோக்தோ, ஜ்யான் ஜேன் பத்தி கேள்விப்பட்டிருக்கீங்களா? 'மெடமார் ஃபசிஸ்' எழுதியவர் யாருன்னு சொல்ல முடியுமா? அப்புறம் ஹென்ரி மில்லர்-"

"எனக்கு இந்த விஷயமெல்லாம் தெரிஞ்சுக்க வேண்டிய தேவை இல்லை. 'நீ என்ன செய்றே?' என்பதை மட்டும்தான் தெரிஞ்சுக்கணும்-"

"இதப்பாருங்க, இந்த நீ—ஙீங்கற பேச்செல்லாம் என்கிட்ட வாணாம். ஐக்-ஸ்லா"

"ஐக்—ஸ்லா!"

"அப்படீன்னா?"

"நீங்கதான் சொல்லிட்டீங்களே, இதுக்கு என்ன வேணும்னாலும் அர்த்தம் இருக்கலாம்னு, இப்பச் சொல்லுங்க, நீங்க-"

"நான் கவிதை எழுதுவதை தற்சமயம் ஒத்திவெச்சுட்டு, பிழைப் புக்காக காமெடியன் வேலை ஆரம்பிச்சிருக்கேன். தன்பாத், ஜரியா, ஜம்ஷெட்புர், கல்கத்தா இந்த ஊர்களில் எல்லாம் பல ரகசிய கிளப் களிலும் டிஸ்கோதெக்ஸ்களிலேயும் நிறைய ஷோ கொடுத்திருக்கேன்-"

"நான் ஒரு கூத்தாடின்னு நேரடியாகவே சொல்லலாமே." சூரியநாத் பிகாரி பாபுவின் பாணியில் இழுத்திழுத்துக் கூறினான்.

"இல்லே, கூத்தாடி இல்லே. இது அப்படியே நவீனமான கலை. இதனோட பெயரை உங்க கிரேட்—கிராண்ட் ஃபாதர்கூட கேட்டிருக்க மாட்டார். நான் வசவு மொழிகள் பொழியறேன். பச்சையான, அருவருப்பான, நாராசமான, ஆபாசம் நிறைந்த செவி கூசக்கூடிய வசவு மொழிகள்."

"ஆமாம், தெரியும். முராத்புர் தெருவுகளிலேகூட சாமியார் மாதிரி வேஷம் போட்டுட்டு ஒருத்தன் காலையிலும், மாலையிலும் திரிஞ்சிட்டிருக்கிறான்—ஓரணாவுக்கு அஞ்சு வசவு. பொறுக்கி எடுத்த வசவுங்க. 'அப்பன்-பாட்டனை திட்டற வசவுங்க யாருக்கு வேணும்' அப்படீன்னு கூவிட்டுப் போறதைப் பார்த்திருக்கேன்."

சூதபுத்திரன் சொன்னான், 'காமெடியன் தொழில்செய்யும்போது என்பேரு—டோக்லாஸ். அதாவது இப்ப நான் உங்களோட டோக்லாஸ் ஹோதாவிலே பேசப்போறேன். வசவுகளையும், கெட்டவார்த்தை களையும் போஜ்புரி மொழியிலிருந்து இங்கிலீஷ்லே மொழி பெயர்த்து பயன்படுத்துவேன். ஆனால், இது வந்து வீட்டுச்சூழல். அதனாலே மகஹி மைதிலி மொழிகளிலேகூட—"

இவனை மரியாதையாக ஃப்ளாட்டிலேயிருந்து வெளியே தள்ள வேண்டிய நேரம் வந்துவிட்டது என்ற எண்ணம் எழுந்தது. ஆயினும் ஏதோ ஒரு நினைப்புவரவே இன்னும் கொஞ்சநேரம் அவனைப் பொறுத்துக்கொள்ளத் தீர்மானித்தான். என்ன ஆனாலும் இவன் அந்த 'ஆராய்ச்சி' மாணவனைவிடத் தேவலாம்தான். சில நாட்களுக்கு முன்பு 'இந்தி இலக்கியத்தில் ராம குடும்பம்' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்ய 'மெட்டீரியல்' தேடி வந்தான் ஒரு மாணவமணி. ஆராய்ச்சிக்குப் பதிலாக அவன் என்ன வேண்டினான் தெரியுமா? "சார், தன் பெயரின் தலை-இடை-கடையில் 'ராம்' என்ற பெயர் வைத்திருக்கும் படைப்பாளிகளின் ஆளுமையில் ராமனின் தாக்கம் எந்த அளவுக்கு உள்ளது என்பதை ஆராய. உதாரணமாக உங்களைச் சிறுவயதில யாராவது, எப்பொழுதாவது, 'ராம் சூரியநாத்'னு கூப்பிட்டிருக்கலாம். இதை அடிப்படையாகக் கொண்டு உங்களையும் 'ராம குடும்பத்துடன் சேர்த்தால் உங்களுக்கு இதில் ஏதேனும் ஆட்சேபணை உண்டா?" என்றான்.

சூரியநாத் டோக்லாஸ்—சூதபுத்திரனைப் பார்த்து நிதானமாகக் கூறினான், "நீங்க யாரும் செய்யாத அபூர்வமான பணியைச் செய்யறீங்க. மக்களைத்திட்டி மகிழச் செய்யறீங்க. மக்களும் ஆனந்தப் பட்டு உங்களுக்குக் காசு கொடுக்கறாங்க."

"சாதாரணச் சிரிப்பல்ல. அப்படியே 'ரெக்டம்-ரப்சரிங் லாஃப்' தெரிஞ்சுதா?" டோக்லாஸ் சொன்னான்.

"எங்க மாவட்டத்திலே ஓர் அரசன் தன்னோட அரசவையிலே ஒரு 'புடிராஜ்' அதாவது ஒரு முட்டாள் ராஜாவை நியமிச்சிருந்தான்—"

"ஐக்-ஸ்லா.. யுவர் ராஜா சாகபா? நீங்க இன்னும் அரசபரம் பரையின் யுகத்துக் கதைகளைத்தான் சொல்றீங்க. அப்புறம்— திடீர்னு தாக்கி விஷயத்தை வாங்கிக்கறதிலேதான் எனக்கு நம்பிக்கை" டோக்லாஸ் கூறினான்.

"டோக்லாஸ் சாகப்! நீங்க என்ன 'ஷோ' கொடுக்கறீங்கன்னு எனக்குத் தெரியாது. ஆனா, முப்பது வருசத்துக்கு முன்னாலே அந்த 'புடிராஜ்' செய்த வேடிக்கைகளை நான் பார்த்திருக்கேன். அதிலிருந்து ஒண்ணே ஒண்ணு சொல்றேன். ஐடியா கிடைக்கும். வேணும்னா உங்க தொழில்லே பயன்படுத்திக்கவும் செய்யலாம்."

டோக்லாஸ் சம்மதித்தான். சூரியநாத் கூறலானான், "சமஸ்

தானத்தில் திருவிழா நடக்கும்போது குஸ்திச் சண்டையெல்லாம் நடக்கும். பெயர்பெற்ற மல்யுத்த வீரர்கள் வந்து கலந்துப்பான். ஒருநாள் ஒரு சாம்பியன் பயில்வான் மற்றவங்களை எல்லாம் தோற்கடிச்சிட்டு நெஞ்சை நிமிர்த்திக்கிட்டு குஸ்தி மைதானத்திலே சுத்திச் சுத்தி வந்தான். அதாவது 'என்னை ஜெயிக்க யாருக்காவது தைரியம் உண்டா? இருந்தா கோதாவிலே இறங்குங்க' என்கிற பாவனையில். புடிராஜ் ஒரேகுதியில் கோதாவிலே இறங்கினான். உடுத்தியிருந்த துணியை எல்லாம் காத்திலே கடாசிட்டு, 'ஆ-ஜா-ஆ-ஆ' என்று சாம்பியன் பயில்வான் மீது தாவினான் பாருங்க. ஜனங்க எல்லாரும் 'கொல்'லுனு சிரிச்சாங்க. சாம்பியன் பயில்வான் ஒரு கணம் திகைச்சுப் போய் நின்னான். பிறகு திடீர்னு ஓடிட்டான் யானைக்குட்டிபோல அசைஞ்சிட்டு சிங்கம்போல கர்ஜித்த பயில்வான் மூஞ்சூறு மாதிரி நோஞ்சானை நிர்வாணமாப் பார்த்துப் பயந்துபோய் அப்படியொரு ஓட்டம் ஓடினான் பாருங்க. அதைக்கண்டு ஜனங்க விழுந்து விழுந்து சிரிச்சாங்க."

டோக்லாஸுக்குக் கதை பிடித்துவிட்டது. "நான் இன்னும் கொஞ்சம் 'ஒர்க்' பண்ணி ரிஃபைன் செய்து பயன்படுத்திப்பேன்— சமீபத்திலே நான் ஒரு 'ஸ்கிட்' தயாரிச்சேன். ஒரு ஆளு சிறுநீர் கழிப்பதற்காக மதியத்திலேயும். இரவிலேயும் ஓட்டல் அறையிலே எப்படி வாஷ் பேசினிலே—"

சூரியநாத் இந்த மாதிரி வாய்ப்பைத்தான் எதிர்பார்த்திருந்தான். 'ஆம். இதுதான் பிரேக்கிங் பாயின்டு. புன்னகையுடன் அவன் டோக்லாஸை நோக்கி அலட்சியமாகப் பேசினான். "அட. இது அந்தப் பாதிரியாரின் ஹாஸ்ய நாடகம் ஆச்சே... ஆமாம். அமெரிக்க காமெடியன் லெனிப்ரூஸின் படைப்பு. பத்து வருசம் முன்னாலேயே இதை நடிச்சுக்காட்டி பேர் வாங்கிட்டான்— நீங்க என்னடான்னா, சொந்தப் படைப்புன்னு—"

லெனிப்ரூஸின் பெயரைக் கேட்டதுமே டோக்லாஸின் முகம் களையிழந்தது. "உங்களுக்கு லெனிப்ரூஸைத் தெரியுமா? ஐக்-ஸ்லா— நீங்க லெனிப்ரூஸைப் பத்தி எப்படித் தெரிஞ்சுக்கிட்டீங்க?"

"தெரியும்ங்கறது மட்டுமில்லே, 1964-லே அவனை விடுதலை செய்யக்கோரி எழுதிய அப்பீலிலே கையெழுத்துப் போட்டவங்களிலே நானும் ஒருத்தன். அப்படிக் கையெழுத்துப்போட்டதுக்காக இன்னி வரையிலும் என்னோட இலக்கிய நண்பர்கள் எல்லாம் என்னைத் திட்டறாங்க, நான் ஐக்-ஸ்லா— இப்ப அந்த லெனி சொர்க்கத்திலே தேவியர்-தேவர்களை வைது திட்டி ஆனந்தமடையச் செய்யறான். அதனாலே நீங்க ஒரிஜனல் 'ஆவாங்கார்டு' இல்லை. ஆவாங்கார்டின் இந்தியப் பதிப்புன்னு வேணுமானால் சொல்லிக் கொள்ளலாம்."

சூரியநாத் மணியைப் பார்த்தான். டோக்லாஸ் சாகப் மீண்டும்

தெற்றித் தெற்றிப்பேசினான், "இப்ப நான் வந்த விஷயத்தைச் சொல்றேன்- என்கிட்ட என் அம்மா டைரி இருக்குது. இந்த டைரியின் படி நீங்கதான் என்னைப் பிறப்பித்த தந்தை. நான் உங்க பிரஜை-"

"நடக்காத விஷயம்."

"நடக்காதது இல்லை. நடந்தது. நான் உங்க க்ரோமோசோம்தான். பயப்பட வேண்டாம். உங்க சொத்திலே பங்குக்கு வரமாட்டேன்."

"டைரி உங்கிட்டே இருக்கா, இங்கே இப்ப?"

சூதபுத்திரன் தன் பையிலிருந்து டைரியை எடுத்து பக்கங்களைப் புரட்டினான். "உங்களுக்குத்தான் வங்கமொழி நல்லாத் தெரியுமே. படிச்சுப் பார்த்துக்குங்க" என்றான்.

அது ஆபாராணியின் கையெழுத்துதான் என்பதை சூரியநாத் புரிந்துகொண்டான். "இன்றைக்கு சூர்யதா என்னுடன் செய்த காரியத்தை என் வாழ்நாளில் யாருமே செய்ததில்லை."

சூதபுத்திரனின் முகம் மீண்டும் பிரகாசமடைந்தது. சூரியநாத் கேட்டான், "உங்களுக்கு இந்த டைரியை ஒப்படைத்த 'மதர்' உங்க பிறந்த தேதியையும் சொல்லியிருப்பாங்க இல்லே?"

"அஃப்கோர்ஸ்- தெட் இஸ் தெயர். டைரியிலேயே இருக்கு."

"நீங்க இந்த டைரியிலே எழுதியிருக்கிற தேதியையும், உங்க பிறந்த தேதியையும் சேர்த்துக் கணக்குப்போட்டுப் பார்த்தீங்களா?"

"இவ்வளவு பலமான ஆதாரத்தை நீங்க பொய்-புரட்டுன்னு தள்ளமுடியாது தந்தையாரே!"

சூரியநாத் அவன் பேசும் பாணியிலேயே பதிலளித்தான். "சூதபுத்ர ஐயா, நீங்க ஒத்துக்கொண்டாலும் இல்லேன்னாலும் சரி, எனக்கு அக்கறையில்லை. ஆனா, உங்க நெனப்பு உண்மையில்லே. நிஜத்தைச் சொன்னா, ஆபாவோட கவர்ச்சியிலே அன்னிக்கு நான் மயங்கினது உண்மை, ஆனா உடல் தொடர்பு ஏற்படலே. காமவசப் பட்ட அழகியுடன் ஏகாந்தமாக இருக்கக் கிடைத்த அந்தக் கணத்தில் நானும் காமத்தினால் உன்மத்தம் கொண்டேன். ஆனால்- ஆனால்- அந்த லாவண்யவதியான எழிலரசியின் வாயிலிருந்து தாங்கமுடியாத துர்நாற்றம் வரவே, நான் பின்வாங்கிவிட்டேன்."

"துர்நாற்றமா?"

"ஆமாம், துர்நாற்றம்தான். அத்தனை அழகான முகம்- உடல்வாகு, ரம்மியமான குரல்- ஆனால் வாயிலிருந்து பொறுக்கமுடியாத நாற்றம். அப்பப்பா! இன்னிக்கு நெனச்சாலும் குமட்டிட்டு வருது."

சூதபுத்திரன் 'கிரீச்' என்று மெல்ல அலறினான். உடம்பு வெட வெடன்று நடுங்கியது. கண்கள் நிறைந்து ததும்பலாயின. அவனால் எதுவும் பேச முடியவில்லை-

நாம் ஏன் இவனை இத்தனைநேரம் பொறுத்துக் கொண் டிருந்தோம் என்பது சூரியநாத்துக்குப் புரிந்தது. சில நேரங்களில் இவன்

முகத்தில் ஆபாராணியைப்போல கள்ளங்கபடமற்ற சாயல். சூரியநாத் அமைதியாகக் கேட்டான், "அதுசரி, பண்பாட்டிலும், பாரம் பரியத்திலும் துளியும் நம்பிக்கையற்ற நீங்க ஏன் உங்க தகப்பனாரைத் தேடணும்?" என்று கேட்டான்.

"ஐக்-ஃஸ்லா- தேடவில்லை. கடந்த எட்டு-ஒன்பது வருசங்களாக என் தந்தை பிரபல இலக்கியகர்த்தா அப்படீன்னு ஒரு நம்பிக்கை என்னுள்ளே வேரோடிப் போயிருந்தது. என் நரம்புகளிலே ஓடற ரத்தத்துக்கு ஒரு பெரிய இலக்கியவாதியுடன் தொடர்பு இருக்குன்னு நெனச்சேன். அப்படி ஒரு தந்தையை என் எதிரியாக நினைச்சதிலே எனக்கு அபாரமான வலுகிடைச்சிட்டிருந்தது. இதன் வலிமை யிலேதான் நான் எல்லாம் செய்ய.. ஆனா இன்னிக்கு என்னுடைய தூண்டுதலின் அடிப்படையே வத்திப்போச்சு.

அவன் குலுங்கிக் குலுங்கி அழுதான். தொலைந்துபோன சிறுவன்போல அழுதான். "கவச குண்டலங்களை இழந்த கர்ணனும் இதுபோலத்தான் அழுதிருப்பானோ" என்று சூரியநாத் நினைத்தான். அழுகிற ஆபாராணி குமாரனின் தலைமுடியை வருடி, அவனைத் தேற்ற வேணடும்போல தோன்றியது. ஆனால், இந்தப் பையனுக்கோ, தயை, கருணை, கழிவிரக்கம் போன்ற உணர்வுகளின் வாசனையைக் கேட்டாலே வெகுண்டெழுகிற சுபாவம். வசவுமொழிகளைச் சரமாரி யாகப் பொழியக்கூடிய இயல்பு- சமயத்தில் 'வயலன்ட்' ஆகவும் கூடும். ஆகவே "இப்ப நீங்க போகலாம் அக்னிகோர்ஜி! (தீ விழுங்கியே) எனக்கு இப்போது தனிமை வேண்டும்" என்றான் சூரியநாத்.

சூதபுத்திரன் உடனே எழுந்து நின்றான், "ஆம், ஐ ஆம் எ ஃபயர் ஈட்டர்.. தீ விழுங்கி! சரி.. நான் இந்தப் பெயரையும் வெச்சுக் கறேன்—ஐக்-ஃஸ்லா-"

(1972)

# சுவர்ச்சித்திரப் பெண்மயில்

யானைத் துதிக்கைமீது கறுப்புநிறம் தீட்டியபிறகு பூல்பத்தியின் அம்மா குச்சியினால் சுவரில் பெண்மயிலின் இறகை வரைவதில மும்முரமாக இருந்தாள். திடீரென எங்கிருந்தோ மின்னல் பளிச்சிட்டதுபோல பின்பக்கம் திரும்பிப் பார்த்தாள். வெள்ளை உடைதரித்து ஏதோ அதிகாரிமாதிரி ஓர் இளைஞன். அங்கே கலக்கி வைத்திருந்த கறுப்புச் சாயத்தையே பார்த்தவாறு நிற்கிறான். பூல்பத்தியின் அம்மா அரண்டு போய் தன் உடையைச் சரிசெய்துகொண்டாள். மெல்லிய குரலில் 'அயயா' என்றாள்.

ஆனால் என்ன அதிசயம்! வந்த மனிதன் குனிந்து அவள் காலைத்தொட்டு வணங்கினான். "அம்மா, நான் அய்யாவும் இல்லை, அதிகாரியும் இல்லை, உங்கள் மகன்" என்கிறான்.

பூல்பத்தியின் அம்மா இன்னும் கலவரமடைந்தாள். உடம்பு வெடவெடவென நடுங்கியது. மிகுந்த சிரமத்துடன் மகளை அழைத்தாள், "பூல்பத்தி..."

இதற்குள் கிராமத்துக் குழந்தைகள் பத்துப் பதினைந்து பேர் சம்பவம் நடக்கும் இடத்துக்கு வந்தன. எட்டு-பத்து வயதான ஒரு சிறுவன் பூல்பத்தியிடம் ஓடிச் சென்றான். அவள் பின் முற்றத்தில் உட்கார்ந்து அம்மியில் பச்சரிசியை அரைத்துக் கொண்டிருந்தாள். ஓடிவந்த பையன் மூச்சிரைக்கச் செய்தி சொன்னான், "பூல்பத்தி அக்கா! நல்லா இருக்குது- நீ இங்கே குந்திக்கிட்டு அரிசி அரைக்கிறே. வாசல்லே இனிசிபட்டர் பெரியம்மாவக் கைது செய்ய வந்திருக்காரு."

"ஆங்- எந்த இனிசிபட்டர்? கால்வாய்காரரா?"

"கால்வாய் இனிசிபட்டரோ நிலவரிக்காரரோ எனக்குத் தெரியாது. நீதான் போய்ப்பாரேன், பெரியம்மா கூப்பிடறது கேக்குதா?"

"பூல்பத்தீ- ஏ-ஏ-ஏ."

அம்மாவின் கூக்குரல் கேட்டு பூல்பத்தியா கைகழுவாமலேயே வாயிற்பக்கம் ஓடினாள். அங்கே அந்த இன்ஸ்பெக்டர் தாயின் பக்கத்தில் முழங்காலை மடக்கி உட்கார்ந்து, "அம்மா, முதல்லே நீங்க உங்க வேலையைப் பார்த்து முடிங்க. அப்புறம் நான் வந்த விசயத்தைச் சொல்றேன்" என்று கூறிக்கொண்டிருந்தார்.

பூல்பத்தியாவுக்கு தன் உடலில் ஏதோ மாரியம்மன் ஆவேசம்

வந்தமாதிரி தோன்றியது. அம்மாவிடம் குப்பைக் குழியளவு நிலம் கூடக்கிடையாது. சொந்த நிலமும் இல்லை; குத்தகை நிலமும் இல்லை. அப்படியிருக்க, கால்வாய் இன்ஸ்பெக்டர் தண்ணீர் வரிக்காக தலையாரிமூலம் நோட்டீசு அனுப்பிவிட்டார். இந்த நோட்டீசைப் பெற்றுக் கொண்ட பதினைந்து தினங்களுக்குள் பணம் கட்டாவிட்டால் மாடுகன்றுகள் 'ஜப்தி' செய்யப்படும் என்று அதில் கண்டிருந்தது. தண்ணீரிலே தீயை வைப்பது என்பது இதுதானோ? இப்போ என்னடான்னா ஜப்தி செய்ய வந்துட்டாங்க! பூல்பதியா ஆவேசம் வந்தவள்போல குதித்தாள், "இதப்பாருங்க, என்னை வேணும்னா அரெஸ்டு பண்ணுங்க; அம்மாவை விட்டுடுங்க. ஜெயிலுக்கு என்னை இட்டிட்டுப போங்க. எங்க அம்மா கைக்கு வெலங்கு போட விடமாட்டேன்.. என்ன வேணுமானா ஆகட்டு.."

அந்நேரம் விபரம் அறிந்து கிராமத்து ஜனங்கள் வாய்க்கால, வரப்பு, தோப்பு துரவுகளிலிருந்து ஓடிவந்தனர். பதினெட்டு வயதுப் பெண் பூல்பத்தியா தன் தாயைக் காபந்து செய்தவாறு உரத்த குரலில் கத்திக் கொண்டிருந்தாள், "உயிரே போனாலும் சரி, பிணம் விழுந்தாலும் சரி.."

முதலில் ஓடிவந்தவன் கிராமத்தில் வேண்டியதற்கும், வேண்டாததற்கும் அர்த்தமில்லாமல் சிரிக்கும் தோஃபாலால் ஸாஹுதான். வந்தவன் அதிகாரியைப் பார்த்து மெல்லச் சிரித்துக்கொண்டே நின்றான், அவருடன் பேசும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டு. கிராமத்தில் யார் தலைக்கு ஆபத்து வந்தாலும், எந்த வீட்டில் அசம்பாவிதம் நிகழ்ந்தாலும், தகப்பனும்-மகனும் சண்டைபோட்டு மண்டையை உடைத்துக்கொண்டாலும், எவனாவது தன் பெண் சாதியைப் போட்டு அடித்தாலும்—முதலில் சிரித்துக்கொண்டே வந்து நிற்பவன் தோஃபாலால்தான். யாராவது துன்பப்படுவதைக் காண்பதில் அவனுக்கு அலாதியான ஆனந்தம் ஆனால் எவர் வீட்டிலாவது நல்லது நடந்துவிட்டாலோ, அவனுக்குக் கொஞ்சமும் பிடிக்காது. ஆளை அந்தப் பக்கம் காணவே முடியாது. பூல்பத்தியாவின் அம்மாவைக் கைது செய்கிறார்கள் என்ற சேதி தெரிந்ததும் தன் சுபாவத்தின்படி அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. அவனுடைய சகோதரி மகளின் திருமணம் நடந்தபோது பூல்பத்தி-அம்மாவிடம் வந்து "அண்ணி, நீ வந்து கல்யாண மண்டபச் சுவரிலே சித்திரம் மட்டும் போட்டுடு- அப்புறமா நேரம் கிடைக்கும்போது பூல்பத்தியா வந்து அதிலே சாயம் போடட்டும்" எனறு எவ்வளவோ கெஞ்சினான்.

ஆனால் பூல்பத்தியாவின் அம்மா அசைந்துகொடுக்கவில்லை. 'இடுப்பிலே வலிக்குது'ன்னு ஏதோ சாக்குப்போக்குச் சொன்னாள். பக்கத்தில் உட்கார்ந்திருந்த பூல்பத்தியாவும் "போயேன். தோஃபா பெரியப்பா பட்டணத்திலேயிருந்து டாக்டரைக் கூட்டியாந்து உன்

இடுப்புவலிக்கு வைத்தியம் செய்வாரு” என்று தன் பங்குக்குக் கேலி செய்தாள். இத்தனை நாளுக்குப் பிறகு இன்றுதான் பூல்பத்தி-அம்மா வையும், பூல்பத்தியையும் கேலிசெய்து சிரிக்க தோஃபாவுக்கு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. அவன் சிரித்துக்கொண்டே பூல்பத்தியைப் பார்த்து, “அடியே குட்டி, நீ என்னம்மா சொல்றே? 'நெறஞ்ச கன்னி' நீ எதுக்கு ஜெயிலுக்குப் போவணும்? உங்க ஆத்தா போவட்டுமே! ஜெயிலுக்குப் போனா அங்கே சர்க்காரு டாக்குடரு இனாமா வைத்தியம் வேற பண்ணுவாரு.” என்று கிண்டல் செய்தான்.

அவன் முடிப்பதற்குள்ளேயே, பூல்பத்தியா ஓர் அதட்டுப் போட்டாள், “எரியற வீட்டிலே வந்து பீடி பத்த வெக்கத் தீ கேக்கறவனாச்சே நீ! அதுக்குத்தானே வந்திருக்கே. உன் லெட்சணம் இங்கே எல்லாருக்கும் தெரியும். ஓடிப்போ.” இதைக்கேட்டு அவன் வாயை மூடிக்கொண்டான்.

அதற்குள் பஞ்சாயத்துத் தலைவர் தாஹாமியானும் வந்து சேர்ந்தார். வந்ததுமே மியான் கவர்மெண்டு உத்தியோகஸ்தர் கணக்காக பூல்பத்தியாவைத் திட்டினார், “ஏ புள்ளே, உன் தலை எதுக்குச் சூடு பிடிச்சிருக்கு? பேசாம கிடவேன்.”

மகா உக்கிரமாக நின்று கொண்டிருந்த பூல்பத்தியா இன்று யாரையும் விடுவதாக இல்லை—அது பஞ்சாயத்துத் தலைவரா இருந்தா என்ன, மணியக்காரராக இருந்தா என்ன? அவள் தாஹாமியானுக்கும் சூடாகவே பதில் சொன்னாள், “இன்னிக்கு என் விசயத்திலே தலையிடறவங்க யாரையும் சும்மாவிடமாட்டேன் 'தலை'வரானாலும் சரி, 'கழுத்த'ரானாலும் சரி.”

இந்த ஹாஸ்யத்தைக்கேட்டு சிறுவர் குழாம் விழுந்து விழுந்து சிரித்தது.

அப்போது அந்த அதிகாரியே பூல்பத்தியா பக்கத்தில் வந்து நின்றார். “இதக்கேளும்மா. நான் கால்வாய்த்துறை அதிகாரியுமில்லை. உங்களை 'அரெஸ்டு' பண்ண வரவும் இல்லை. நான் 'குடீர் சில்ப், (குடிசைத் தொழிலகம், பட்னா) சார்பில் வந்திருக்கேன். எதுக்குன்னா.”

அவர் கூறியதைக்கேட்டு அங்கு கூடியிருந்தவர்கள் அனைவரும் கொல்லென்று சிரித்தனர், “நாசமாப்போச்சு! விசயத்தை சரியாப் புரிஞ்சுக்காம வீண் சச்சரவு.”

ஆனால் விஷயம் சிரிப்பில் கலந்து மறையவில்லை, கொஞ்சம், கொஞ்சமாக கிராமத்தில் எங்கும் பரவிக்கொண்டே போனது, “கேட்டீரா கதையை? இப்படியும் நடக்குமா சொல்லுங்க. பட்னா விலிருந்து ஒரு 'ஜென்டில்மேன்' கணக்கா ஓராள் வந்திருக்கான் வே! பூல்பத்தியா கையாலே வரைந்த சித்திரங்களைப் பார்த்துட்டு, என்ன சொல்றான் தெரியுமா? அதை போட்டோ படம் எடுத்து அமெரிக்கா, ரஸ்யா, இன்னும் எங்கெங்கேயோ அனுப்பப் போறானாம்.”

“யாரை அனுப்பப்போறான் அமெரிக்கா-ரஸ்யாவுக்கு? பூல்பத்தி யோட அம்மாவையா?”

“சொல்றான், ரெட்டிப்பு சன்மானம் கிடைக்குமாம்.”

“அந்த ஆளைப் பார்த்தா நம்மநாட்டுக்காரன் போலத்தான் இருக்கான். அயல்நாட்டுக்காரன் போல ‘பூனை மூஞ்சி’ இல்லே.”

“அந்தக்குட்டி பூல்பத்தியா- அப்பாடி- ஆகாயத்துக்கும் பூமிக்கும் எகிறிக் குதிச்சிட்டிருந்தாளே- இப்ப என்னடான்னா பட்டணத் திலிருந்து வந்த விருந்தாளிக்கு வேண்டி ‘பூசனிப்பூ பஜ்ஜி’ சுடுது- சிரிச்சு மகிழ்ந்து போவுது-”

“அவன் சோறுதான் சாப்பிடுவானா? என்ன ‘சாதி’யோ?”

“பூல்பத்தியா அம்மாவுக்கு விடிவு காலம் வந்துடிச்சின்னு சொல்லு!”

“போகட்டும்ப்பா, வசதியா வாழ்ந்து கெட்டுப்போன குடும்பம். சொத்து சுகத்தையும், புருசனையும் இழந்து எத்தனை கஷ்டப்பட்டா, பாவம்! தீபாவளி, கார்த்திகை, பொங்கல் மாதிரி பண்டிகைக் காலங்களிலே அம்மாவும், மகளும் வீடு வீடாப்போயி சுவரிலே சாமி படம் போட்டுக்கொடுப்பாங்க. அதனோட புண்ணியம் பலிச்சிருக்குது. ஆண்டவனுக்குக் கண்ணில்லேன்னு யார் சொன்னது?”

“இனிமேல் பூல்பத்தியாவோட கல்யாணமும் நடக்கும். சீர் செனத்திக்கு வேண்டிய பணம் அமெரிக்கா, ரஸ்யாவிலே இருந்து கிடைச்சுடும்.”

“சரியான ஆளுங்கதான் போங்க.” கஞ்சா இலையைக் கத்தரித்துக் கொண்டே அனூரப்லால் கேட்டான்: “இப்பவே ஆகாசக்கோட்டை கட்ட ஆரம்பிச்சிட்டீங்களே. முதல்லே அந்த ஆளு அசலா இல்லே போலியான்னு பார்க்க வேண்டாமா? லப்டோலியா கிராமத்திலே மர்ச்சூ மஹத்தோவுக்கு லாட்டரி விழுந்திச்சுன்னு சொல்லி அவன் கிட்ட ஸ்டாம்புக்கு ஐம்பது ரூபா வாங்கிட்டு அந்தப் போலி லாட்டரி ஏசென்டு நாமத்தைப் போட்டானே. அந்தக் கதையை மறந்திட் டீங்களா? முதல்லே ஊர் பூராவும் பேச்சு அடிபட்டது, மர்ச்சூ மஹத்தோ பிட்சாதிபதி'யிலிருந்து லட்சாதிபதி ஆயிட்டான்னு. அந்த ஏஜென்டு ஐம்பது ரூபாய்க்கு ஸ்டாம்பு வாங்கி காகிதத்திலே ஒட்டினான், ஏன்னா கிராமத்திலே ரெண்டு மர்ச்சூ மஹத்தோ இருக்காங்க. ஸ்டாம்பு பேப்பர்லே ‘அஃபிடவிட்’ தயாரிச்சுக் கொடுத்தாத்தான் பாங்கிலேயிருந்து ஒரு லட்ச ரூபாய் நோட்டுக்கட்டு கிடைக்கும் அப்படீன்னு சொன்னான். அப்புறம் என்ன நடந் திச்சுன்னு எல்லாருக்கும் தெரியுமே. மர்ச்சூக்குப் பைத்தியம் பிடிக்காதது பாக்கியம்தானே.”

எல்லாரும் சிரிக்கிறார்கள். ராம்பலுக்கு இட்டுக்கட்டிப் பேசத்தெரியும். அவன் சொன்னான், “மர்ச்சூவுக்கு லட்ச ரூபா

கிடைக்கலே. ஆனா, 'வோட்டர் லிஸ்டி'லே அவன் பேரோட 'லட்சாதிபதி'ங்கற அடைமொழியும் சேர்ந்திருச்சி. ஒரே கிராமத்திலே ரெண்டு மர்ச்சூ, ரெண்டுபேருமே மஹத்தோவா? வோட்டர் லிஸ்டு எழுதறவர் சொன்னார்—ரெண்டு பேரு வயசும்கூட ஒண்ணாக அல்ல இருக்கு. பெரிய வம்பாப் போச்சே" என்று சொல்லவே சௌக்கிதார் கூறினான், 'ஒரு மர்ச்சூவை கிராமத்து சனங்க 'லட்சாதிபதி'ன்னு வேடிக்கையாச் சொல்லுவாங்க. அவ்வளவுதான், அந்த அதிகாரி பதிவேட்டிலே அப்படியே பதிஞ்சுட்டாரு."

நாகேசர்தாஸ் கிராமத்திலேயே பெரிய அண்டப்புளுகன் என்று எல்லாருக்கும் தெரியும். இருந்தாலும் அவன் பேச்சை எல்லாரும் சுவாரசியமாகக் கேட்பார்கள். அவன் சொன்னான், "மர்ச்சூ மஹத்தோ லாட்டரி சமாச்சாரம் எல்லாருக்குமே தெரிஞ்சுது. ஆனா, இந்த விஷயத்திலே திரைக்குப் பின்னாலே நடந்த விஷயம் எத்தனை பேருக்குத் தெரியும் சொல்லுங்க. மர்ச்சூபேரு லாட்டரி டிக்கட்டிலே வந்த விசயம் ஜோக்கன் சௌதரிக்குத் தெரிஞ்சுது. அவன் மர்ச்சூவை ஏமாத்த ஒரு வழிகண்டுபிடிச்சான். மர்ச்சூ கிட்டப்போயி, நீ ஒரு ஐயாயிரம் ரூபா செலவழிச்சேன்னா, நல்ல வாலிபக்காரி விதவையை உனக்கு கட்டிவைக்கறேன்னு ஆசைகாட்டினான். மர்ச்சூ உடனே சம்மதிச்சானா? அப்படீன்னா ஒப்பந்தப் பத்திரம் எழுதணும்னு சௌத்ரி சொன்னான். மர்ச்சூவுக்கு லாட்டரி கிடைக்கலே. ஆனா, அவன் காலிப்பத்திரத்திலே கையெழுத்துப்போட்டதாலே அவனோட ரெண்டு எருமையும்–"

"தம்பி, இந்தப் பட்னா ஆளு அசல்தான்னு எனக்கு நம்பிக்கை வரலே. நிச்சயம் இவன் சிஐடிதான். சந்தேகமே இல்லை. இல்லேன்னா, பட்டணத்திலே போட்டோ, படம், போஸ்டருக்கு ஏதாச்சும் குறைச்சல் உண்டா? எல்லா சாமிங்க படமும் ஒண்ணைப்பார்க்க ஒண்ணு அழகா கலண்டர்லே போட்டு சின்ன வெத்திலைபாக்குக் கடையிலே கூட மாட்டி வெச்சிருக்காங்க. அப்பேர்ப்பட்ட பட்டணத்து ஆசாமி கிராமத்துக்கு வந்து நாட்டுப்புறத்துச் சித்திரத்திலே இந்த அளவுக்கு மயங்குவானா? நம்பக்கூடிய கதையா இது?" என்றான் ஒரு வியாதிக் கார கிராமத்தான்.

தெருவெங்கும், வீடுதோறும் பூல்பத்தியா அம்மாவைப் பற்றியும் பூல்பத்தியா பற்றியும்தான் பேச்சு. இதற்குள் அந்த 'ஜெண்டுல்மேனோ' பூல்பத்தியாவுடனும், அவள் அம்மாவுடனும் பாலிலே சீனிபோலக் கலந்துவிட்டான்—நகமும் சதையும்போல, பிரிக்க முடியாதபடி.

மாலை வண்டியில் பட்னா திரும்புவதற்கு முன்பு அவன் பூல்பத்தியா அம்மாவிடம் "நான்போயி அடுத்தவாரமே எல்லா விசயத்துக்கும் கடுதாசி போடறேன்" என்றான்.

பூல்பத்தியாவின் அம்மா அவனிடம், "பாபு, நீ எல்லாம்தான்

சொன்னே, உன் பேரை மட்டும் சொல்ல மறந்திட்டியே" என்றாள்.

"அவன் சிரித்துக்கொண்டே, "என்பேரு சனாதன் பிரசாத் அம்மா!" என்றான்.

"தெரியாம, கோபத்திலே ஏதாச்சும் சொல்லியிருந்தா அதை மனசிலே வெச்சுக்காதீங்க" என்றாள் பூல்பத்தியா வெட்கத்துடன்.

சனாதன் முகத்தை சீரியஸாக வைத்துக்கொண்டு, குறும்புப் பார்வையுடன் அவளிடம் சொன்னான், "ஊஹூம், மனசிலே வெச்சுப்பேன். ஞாபகம் இருக்குதா? நீதானே சொன்னே—என்னை 'அரெஸ்டு' பண்ணுங்கன்னு?"

பூல்பத்தியாவின் முகம் வெட்கத்தினால் செம்பருத்திப்பூ போல சிவந்தது. அவள் முற்றத்துக்கு ஓடிவிட்டாள்.

'கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிச்சிட்டு கொடுக்கும்' என்று இதைத்தான் சொல்வார்கள்.

பூல்பத்தி அம்மா கையில் வீட்டின் கூரை வேய்வதற்கு ஓலை வாங்கக்கூடப் பணம் இல்லை. பதினெட்டு-பத்தொன்பது வருடங்களுக்கு முன்னால் பூல்பத்தியின் தந்தை வழக்கிலும், வியாஜ்ஜியத்திலும் நிலம், கரை, தோப்பு எல்லாவற்றையும் இழந்தார். அந்தத் தீயில் தானும் மாண்டு போனார். தோல்வியின் சோகத்தில் விஷம் குடித்து இறந்துவிட்டார். பூல்பத்தியின் அம்மா வீடு வீடாகச் சென்று நெல்குத்தியும், மாவு அரைத்தும் எடுபிடி வேலைகள் செய்தும் பூல்பத்தியை வளர்த்தாள். கையில் கலைத்திறன் இருந்தது; அதனால் கிராமத்தில் எல்லாரும் அவளுக்கு மதிப்புக் கொடுத்து வந்தனர். இப்போது அந்த மதிப்பும் குறைய ஆரம்பித்துவிட்டது. காலம் மாறியதுடன் கல்யாணம், கார்த்திகை, பண்டிகை திருவிழாக்களில் சுவரில் தெய்வங்கள்-இயற்கைக் காட்சிகளின் சித்திரம் தீட்டுவதற்குப் பதிலாக சினிமா நடிக நடிகையர் படங்கள் தொங்கவிடப்படுகின்றன. ஆனால் நேற்று, இருநூற்றைம்பது ரூபாய் மணியார்டர் பணத்தை தபால்காரர் பூல்பத்தி அம்மா கையில் கொடுத்ததைப் பார்த்ததும் பழைய காலத்துப் பொருள்கள் பயனற்றவை அல்ல, அவற்றுக்கு மதிப்புக் குறையவில்லை என்பதை கிராமத்தார் ஒப்புக்கொண்டனர். கூடவே, 'பட்னாவிலிருந்து வந்த நபர் அசல்தான் போலி அல்ல' என்ற கருத்தும் கிராமமெங்கும் பரவியது.

பத்து நாட்களுக்குப் பிறகு சனாதன் பிரசாத் மீண்டும் வந்தான். இப்போது கிராமத்தில் நாலுபேர் கூடும்போதெல்லாம் பூல்பத்தி அம்மாவுக்கு வந்த அதிர்ஷ்டத்தைப் பற்றியேதான் பேச்சு. இதில் கிராமமக்கள் எல்லாருக்குமே பெருமை. அவள் வீட்டு முற்றத்தில் எப்பொழுது பார்த்தாலும் பெண்களின் கூட்டம். வாசற்பக்கம் மணியக்காரரும் பஞ்சாயத்துத் தலைவரும் தினமும் ஒருமுறையாவது வந்து நலம் விசாரிப்பார்கள்.

ஒருநாள் திடீரெனச் செய்தி பரவியது—பூல்பத்தி அம்மா தன் தம்பியுடன் போனது பட்னாவுக்கல்ல; டில்லிக்கு. அவர்களை அழைத்துப்போனது சனாதன்தான். தெரியுமா சேதி? டில்லியிலே ஒரு சுவர் பூராவும் சித்திரம் வரைந்தால் ஆயிரம் ரூபாய் கூலியாம்.

"கூலி இல்லேப்பா, சன்மானம்னு சொல்லு!"

"பூல்பத்தி போகலியா அம்மாகூட?"

"இல்லை. அவளோட மாமி—டீச்சர் வேலை பாக்கிறவ—வந்திருக்கிறா. பத்துப் பதினஞ்சு நாள் இங்கே இருப்பா. லீவு எடுத்திட்டு வந்திருக்காளாம்."

"இனிமேல் பாரு, மாமா-மாமி, சித்தப்பா-சித்தி, அத்தை-அத்தை புருசன் இவங்கள்ளாம் தவிர தாய்வழி-தந்தைவழி தூரத்துச் சொந்தக் காரங்க எல்லாம் வந்து கூடுவாங்க—இத்தினி நாளா இந்தப் பக்கம் எட்டியே பார்க்காதவங்க."

சில நாட்களுக்குப் பிறகு ஸ்டேஷன் பஜாரிலிருந்து பத்ரி பகத் கையில் செய்தித்தாளுடன் வந்தான். அதில் பூல்பத்தியின் அம்மாவின் போட்டோ அச்சாகியிருந்தது. டில்லியில் மந்திரி கையால் பரிசைப் பெறுகிறாள் பூல்பத்தியின் அம்மா!

பத்ரி பகத் ஸ்டேஷன் பஜாரில் கடை வைத்திருக்கிறான். வசிப்பதும் அங்கேயே. பலசரக்கு வியாபாரியான பத்ரிக்கு எண்ணெய், தானியங்களின் விலை, போக்குவரத்து தவிர உலக நடப்புகள் எல்லாமே அத்துபடி. தினமும் பேப்பர் படிப்பான். கிராம மக்களுக்கு புகைப்படத்தைக் காட்டி, "சித்தி டில்லியிலிருந்து வர்ரப்ப, நம்ம எல்லாரும் சேர்ந்து அமர்க்களமா வரவேற்புக் கொடுப்போம். தோரண வளைவு கட்டி பூக்களாலே அலங்கரிப்போம். புல்தட்டி கட்டி அதன் மேலே கணிமண் பூசிவைப்போம். பூல்பத்தி அதிலே அழகா சித்திரம் போட்டுவைப்பா- பூலோ, அம்மா கத்துத்தந்த கலையை விருத்தி செய்திட்டிருந்தா உனக்கும் ஒருநாள் அரசாங்கத்திலிருந்து வெகுமதி எல்லாம் கிடைக்கும். இந்தியாவுக்குள்ளே மட்டுமில்லே, வெளி நாடுகளிலேயும் நம்ம கிராமத்துக்குப் புகழ் கிடைச்சிருக்கு. பேப்பர்லே என்ன போட்டிருக்கான் பார்த்தியா, 'திருமதி பனியா எனப்படும் பன்னாதேவி தான் போடும் சித்திரங்களின் பக்கத்தில் நாகரி எழுத்தில் தன் பெயருடன் தன் கிராமம், மாவட்டத்தின் பெயரை எழுத மறப்பதில்லை.' இப்பச் சொல்லு, கிராமத்தின் புகழ் ஓங்கியிருக்குதா இல்லியா?"

"நிச்சயமா ஓங்கியிருக்குது."

கிராமத்தின் இளைஞர்கள் இதைக்கேட்டு கோஷமிட்டார்கள்—"பன்னா தேவிக்கு-ஜே- பன்னாதேவி வாழ்க!"

பெண்கள் குழுவில் பூல்பத்தியின் மாமி கம்பீரமாக உட்கார்ந் திருக்கிறாள். 'கச்ராஹி' மொழியில் இலக்கண சுத்தமாகப் பேசுவாள்.

ஜாத்தி ஹாங்- காத்தி ஹாங்- பீத்தி ஹாங்- இதைக்கேட்டு கிராமத்துப் பெண்கள் தங்களுக்குள் மெல்ல நகைத்துக்கொள்வார்கள்.

"சுவர்ச்சித்திரக் கலையில் பூல்பத்திக்கு ரூபாய்க்கு எட்டணா அளவு தேர்ச்சி வந்திருக்குது."

"ஏன் வராது? அக்கா கையாலே இவ கொஞ்சமாகவா அடி வாங்கியிருக்கிறா?" பூல்பத்தியின் மாமி கூறுகிறாள்.

பூல்பத்தியின் மாமி போட்டியா கிராமத்துப் பெண்கள் பள்ளியில் ஆசிரியை. எப்பொழுதும் வெத்திலை பாக்கை மென்று கொண்டே இருப்பாள். வெளியாட்கள்-ஆண்பிள்ளைகளுடன் பேசுவதில் அவளுக்குக் கொஞ்சம்கூட கூச்சம் கிடையாது. பத்ரி பகத் அங்கே வந்தபோது அவள் மற்ற பெண்களைப்போல முந்தானையால் முகத்தை மறைக்கவில்லை. பேச்சு தொடர்ந்தது. மாமி சொன்னாள்—"அப்புறம் சித்திரம் போடறதுக்கு வேண்டிய நிறக் கூட்டுகளைத் தயாரிக்கறது எல்லாம் பூல்பத்திதானே. வெள்ளை நிறத்துக்காக அரிசியை அம்மியிலே வெச்சு மையாக அரைக்கிறதைப் பார்த்துட்டே இருக்கலாம். அதை பாலிலே கலந்து வைக்கிறது, பிறகு நல்ல பச்சைப் பசேல்னு இருக்கிற தளிர் இலையா பறிச்சிட்டு வந்து அதிலே போட்டு நல்லாக் கடையறது, துணியை நீளமாக் கிழிச்சு அதைக்குச்சியிலே சுத்தறது, ஒவ்வொரு நிறத்துக்கும் தனித்தனியா குச்சி வைக்கறது, நிறங்களைக் கலக்கி வைக்கிறது—இந்தமாதிரி எல்லா வேலையும் பூல்பத்தி சின்ன வயசிலிருந்தே கருத்தாச் செய்வா- என்னிக்காவது அரிசிமாவு கெட்டியாயிடிச்சின்னா- குச்சியிலே சுத்தின துணி இறுகலேன்னா நிறம் அதிகமாகவோ, மட்டாகவோ செஞ்சா அவ்வளவுதான். அக்கா இவளோட தலைமயிரைப் பிடிச்சு உலுக்குவா, செம்மையா அடிவிழும். ஆமாம்-"

"ஏன் மாமி, நீங்க பூல்பத்தியாவை உங்ககிட்டயே வெச்சிட்டு இன்னும் 'நாலு எழுத்து' கத்துத் தந்திருக்கலாம் இல்லே!" என்று கேட்டான் பத்ரி பகத்.

"தம்பி, நான் என்ன செய்யட்டும்? அஞ்சாவதுவரை படிப்புச் சொல்லிக்குடுத்து ராமாயணம் படிக்கவும் சொல்லிவெச்சேன். இவளை எட்டாவதுவரையாவது படிக்க வைக்கணும்னு எனக்கு ஆசை. ஆனா அதுக்குள்ளே இவ அம்மா, இனிமே ஒண்ணும் படிக்கவேண்டாம்னு அடம்பிடிச்சா. அக்காவுக்கு இவ ஒரே மகள். நாங்க என்ன செய்ய முடியும்?"

"இப்ப, நல்ல குடும்பத்துப் பையனைத்தேடி இவளுக்குக் கல்யாணம் செஞ்சி வெச்சிருங்க மாமி! சீர் வரதட்சிணை கொடுக்க வேண்டி வந்தாலும்-"

பத்ரி தந்த புகையிலையை வாயில் அடக்கிக்கொண்டு மாமி சொன்னாள், "பத்ரி பாபு! நல்லவீடு, குடும்பம் கிடைக்கிறது

ஆண்டவன் கையிலேதான் இருக்குது. சீர், செனத்திக்கு பணம் எங்கிருக்குன்னு இப்பக் கவலை இல்லை. சினிமாவிலே இவ பாட்டுக்கூட வந்திருச்சி தெரியும்லே—"பைசா பேங்கோ, தமாஷா தேக்கோ."

நாகேசர்தாஸ் கிராமத்தில் இன்னொரு கதை சொல்ல ஆரம்பித்துவிட்டான். "தெரியுமா சேதி? ஜோக்கன் இங்கேயும் வந்து மெள்ள வாலாட்டியிருக்கான். பூல்பத்தி அம்மா ஐயாயிரம் ரூபா அச்சாரம் கொடுத்தா அவன் அயனான மாப்பிள்ளையைக் கொண்டு நிறுத்துவானாம். பையிலே இருக்குன்னு நெனச்சிக்கங்க அப்படீன் னானாம். ஆனா பூல்பத்தியோட மாமிகிட்ட அவன் பருப்பு வேகலே."

பூல்பத்தியின் அம்மா டில்லியிலிருந்து திரும்பி வந்துவிட்டாள். பரிசுப் பொருள்களையும், வெகுமதிகளையும் மூன்று காளைவண்டி களில் ஏற்றிவந்தார்கள்.

ஸ்டேஷனில் வெகு ஆடம்பரமாக வரவேற்பு அளிக்கப்பட்டது. ஜேஜே என்று கூட்டம். 'பன்னாதேவி வாழ்க, வாழ்க பன்னாதேவி!' என்று கோஷங்கள். ஸ்டேஷன் வாசலில் தட்டி கட்டிய நுழைவு வாயிலும், தோரணங்களும் வெகு நேர்த்தியாக அமைந்திருந்தன. 'பூல்பத்தி கையிலே அம்மாவின் கலைத்திறமை ரூபாய்க்குப் பன்னிரண்டணா அளவுக்கு வந்துவிட்டது' என்று பேசிக் கொண்டார்கள். சனாதன் பிரசாதும் கூடவே வந்திருக்கிறான். ரெயிலிலிருந்து இறங்கியதும் அவனுடைய பார்வை முதலில் அலங்காரத் தட்டியின்மீதுதான் சென்றது. ஆகா, மங்கலச் சின்னங்கள், கலசம், மாவிலைக்கொத்து, நாலாபக்கமும் செடிகொடிகள் வண்ண வண்ணப்பூக்கள், நிஜக்காட்சிபோல அமைந்திருந்தது. வெகுநேரம் வரையிலும் அதையே பார்த்துக்கொண்டிருந்தான் சனாதன். வீட்டுக்கு வந்து பூல்பத்தியிடம், "அதுசரி, சிகப்பு நிற மீன் எந்த ஆத்திலே ஓடுது? சித்திரத்தில் கலசத்துக்கு ரெண்டு பக்கமும் போட்டிருந்த மீன்கள் சிவப்பு நிறமா இருந்ததே அதைப்பார்த்தது முதல் இந்தக் கேள்வி எழும்பிட்டே இருந்தது" என்றான்.

"ஏன், இந்த கிராமத்து சந்திரபாகா ஆத்துலே ஆனி-ஆடி மாசத்திலே முத மழை வருமே அதுக்குப் பிறகு வந்து பாருங்க அப்போது ஆத்துலெ நீரோட்டம் ஒரே சிவப்பாகத் தெரியும். ஆயிரக்கணக்கா சிவப்பு மீன்களையும் பாக்கலாம். இந்த மீன்கள் பட்னா பக்கத்திலே உள்ள ஆத்துக்குப் போகாதா?"

"எப்படிப்போகும்? சந்திரபாகா அல்லது கோஸியின் நீரோட்டம் அந்தப்பக்கம் வரவே இல்லையே."

பூல்பத்தியின் மாமா நரோத்தம் பாபுவை ஒருநிமிடத்துக்குக்கூட யாரும் ஓய்வெடுக்க விடவில்லை. "இன்னும் கொஞ்சம் சொல்லுங் களேன் டில்லிக்கதை!"

பூல்பத்தியின் மாமி உள்ளே இருந்து வந்தாள். "ஏம்ப்பா, இவருக்கு ஓய்வே வேண்டாமா? கொஞ்சம் வீட்டு சமாசாரமும் பேச விடுங்களேன்" என்றாள் மாமி.

பூல்பத்தியின் மாமி தன் கணவரை முற்றத்துப்பக்கம் ஏகாந்த மான இடத்துக்கு அழைத்துச்சென்று "இந்த சனாதன் சொல்றதைக் கேட்டீங்களா?"

"கேட்டேன். அவன் சொல்றது சரிதானே! பழைய குடிசைகள், ஹைதர் காலத்துக்கட்டிடங்களை விட்டா இங்கே என்ன இருக்குது. இது மேல நம்பிக்கை வெச்சிட்டு அக்கா இங்கேயே ஏன் கிடக்கணும்? கடவுள் கண்ணைத் திறந்து பார்த்திருக்கிறபோது பட்டணத்திலே போய் ஏன் இருக்கக் கூடாது? மாசம் ஐநூறிலிருந்து தொள்ளாயிரம் ரூபாய்வரை கிடைக்கும். இருக்கறதுக்கு லோகியாநகர் மாதிரி நல்ல பங்களா வீடு- சனாதன் சரியாத்தான் சொல்றான்." பூல்பத்தியின் மாமா சொன்னார்.

"சனாதன் எந்த சாதியோ?"

"இப்ப யாரு சாதியைப் பத்திக் கேக்கறாங்க? மனுசனையும், அவனுடைய ஹோதாவையும் தானே பார்க்கறாங்க! சனாதன் ஒரு பெரிய மனிதர் வீட்டுப்பிள்ளை. அப்பா நிறைய சொத்து விட்டுட்டுப் போயிருக்காரு. அப்பா கட்டின பங்களா இருக்குது, மோட்டார் காரும் இருக்குது. வருசத்துக்கு பத்தாயிரம் பனிரெண்டாயிரத்துக்குச் சித்திரங்கள் வாங்கறான். பட்னாவிலே படிச்ச பெரிய மனுசங்க மத்தியிலே நல்ல செல்வாக்கு. பட்னா கலா அகாடமியின் செயலர். இன்னும் என்ன வேணும்?

"அக்கா தயார்தானா- அதாவது அக்கா என்ன சொல்றா?"

"ஏன் சம்மதிக்க மாட்டாங்க? ஒருவேளை சம்மதம் இல்லேன்னா சம்மதிக்க வைக்க வேண்டியது நம்ம வேலைதானே?"

பூல்பத்தியின் அம்மா பசுவைப்போல சாது. அவள் மனதில் எந்தப் பிடிவாதமும் கிடையாது. எல்லா விஷயத்தையும் கேட்டு உடனே சம்மதித்துவிட்டாள். ஆனால் இந்தக்குட்டி பூல்பத்திதான்!

பூல்பத்தி ஒருவிதத்திலும் சம்மதிக்கவில்லை. இந்த மாதிரி ஒரு யோசனை இலேசாகக் காதில் விழுந்ததிலிருந்தே அவள் சாப்பாடு, குளியல் எல்லாவற்றுக்கும் முழுக்குப் போட்டு, வீட்டிலேயே உட்கார்ந் திருக்கிறாள். திரும்பத் திரும்ப எடுத்துக்கூறி அம்மாவுக்கு வாய் வலித்ததுதான் மிச்சம். மாமா உள்ளே போனவர் முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு திரும்பினார். அப்போது, "நானும்தான் பார்க்கிறேன் ஒரு தடவை" என்றாள் மாமி.

"மகளே பூல்பத்தீ!"

"மாமி! நீங்களும் வந்துட்டீங்களா என் வயித்தெரிச்சலைக் கொட்ட? உங்க மனசும் டில்லிக்கும் பட்னாவுக்கும் போகணும்னு அடிச்சுக்குதா? நல்லாக் கேட்டுக்குங்க, அப்பா தாத்தா காலத்துக் கிராமத்தைவிட்டு என்னாலே எங்கும் போகமுடியாது. இந்த வீட்டிலிருந்து என்னோட 'பிணம்'தான் வெளியே போகும்- ஆமாம்- சொல்லிட்டேன்" அவள் அழத்தொடங்கினாள்.

"சின்ன வயசிலேருந்தே ரொம்ப பிடிவாதம்-"

சனாதன் யோசனையில் ஆழ்ந்திருக்கிறான். கடந்த இரண்டு இரவுகளில் கண்களை மூடினால் உறக்கம் வரவில்லை. அவனுக்குள்ளே இருந்து யாரோ அவனை முறைத்துப் பார்ப்பதுபோலவும் 'நீ என்ன காரியம் செய்கிறாய்?' என்று இடித்துரைப்பதுபோலவும் தோன்றுகிறது. பலாத்காரமா? விருப்பமில்லாததைச் செய்ய வற்புறுத்தினால் அதற்கும் பெயர் பலாத்காரம்தானே! ஒரு கன்னியின் புனிதத்தைக் கெடுக்கவா போகிறாய்? உன்னுடைய ஆசைகளை நிறைவேற்றுவதற்காக கலையை வியாபாரப் பொருளாக மாற்ற எண்ணுகிறாயா? ஹா-ஹா-ஹ- பிக் ஸ்கேல் ஃபோக் ஆர்ட் இன்டஸ்ட்ரீ? ஹீ-ஹீ-ஹீ- கிராமியக் கலைத் தொழிற்கூடம் நகரத்திலா- பூல்பத்தியையும் அவள் அம்மாவையும் அங்கே மழுங்கிய கத்தியால் மெல்ல மெல்ல வதை செய்யத்தானே எண்ணுகிறாய்? மதுபனி பாணியிலே கைதேர்ந்த நிபுணன். கிராமியக் கலையின் புரவலன் என்று சொல்லிக்கொண்டு உன் ப்ரைவேட் சேம்பரில் அமர்ந்திருப்பாய்—மக்கள் சேவை என்ற அழகிய திரைக்குப் பின்னால் உன்னுடைய கசாப்புசாலையின் உள்ளே பூல்பத்தி, அவள் தாய் தவிர நூற்றுக்கணக்கான 'அசல்' கலைஞர்கள் வதையுண்டு கதறிக்கொண்டிருப்பார்கள்-"

இன்று அவனே பூல்பத்தியிடம் பேசுவான்.

பூல்பத்தி சற்று முகமலர்ச்சியுடன் இருப்பதை அவன் கவனித்தான். வீட்டுச் சுவரில் அம்மா கீறி வைத்திருந்த பெண் மயிலின் சித்திரத்தில் அவள் வண்ணம் தீட்டுகிறாள்.

சனாதன் அருகே சென்று "ஆண்மயில் ஆடுதா பெண்மயிலா?" என்று கேட்டான்.

"பெண் மயிலிடம் ஆடக்கூடிய அளவுக்கு அத்தனை இறகுகள் இருந்தாத்தானே ஆடும்!"

"மயில் ஆடக்கண்டதுண்டா, பூல்பத்தி?"

"இது காட்டுப்பாங்கான நாட்டுப்புறம்னு உங்களுக்கு இன்னும் தெரியலையா? இங்கே இருக்கிற ஒவ்வொரு குஞ்சு குளுவானும் மழைக்காலத்திலே மயிலின் அகவலைக் கேட்காம நடனத்தைப் பார்க்காம வளரவே முடியாது. அது சரி, நீங்க என்ன சொல்ல நெனக்கிறீங்களோ நெரடியாகச் சொல்லலாம்லே?"

"அதாவது- வந்து- நீங்க இன்னொரு தடவை யோசிச்சு-"

"திருப்பித் திருப்பி யோசிச்சு என்ன செய்ய? நல்லா ஒருதடவை யோசிச்சாலே போதும். இதப்பாருங்க, சனாதன் பாபு, அம்மா வராங்கன்னா நீங்க தாராளமாக் கூட்டிட்டுப் போங்க! என்கிட்ட எதுவும் கேட்கவேண்டியதில்லே."

"ஞாபகம் இருக்கா? அன்னிக்கு 'அரெஸ்டு' பண்ணிக்கச் சொன்னியே."

"உடுங்க அதை, உப்புப் பெறாத விஷயம். நாம இத்தோட நிறுத்திக்கலாம். இல்லேன்னா கோபத்திலே நான் ஏதாச்சும் தப்பாப் பேசிடுவேன்."

"அதெல்லாம் நான் வந்த அன்னிக்கே கேட்டுட்டேனே."

"நீங்க என்னை—எங்களை—சித்திரம்னு நினைக்குறீங்களா?"

"என்ன சொல்றே, புரியலியே!"

"எதை வேணுமானாலும் வாங்கிடலாம்னு நெனப்பான்னு கேக்குறேன்."

"இல்லையே. நானே வித்துப்போகத் தயாராக அல்லவா இருக்கிறேன்."

"சனாதன் பாபு, நீங்க படிச்சவங்க. இருந்தாலும் ஏன் புரிஞ்சுக்க மாட்டேங்கறீங்க?"

சனாதன் மவுனமானான், புரிந்துகொள்ள முயன்றான். பிறகு, "சரிதான் பூல்பத்தி! என்னோட ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் பதில் சொல்லு, போதும். யார் அந்த பாக்கியசாலி. யாருடைய அன்புப் பிணைப்பிலே நீ இருக்க விரும்பறே. அந்த பாக்கியசாலி யார்னு மட்டும் சொல்லு. நீ சந்தோசமா இருக்கணும். அதைத்தான் நான்."

பூல்பத்தி சுவர்ச்சித்திரத்தில் கொண்டையை உயர்த்தி, இறகுகளை அழகாக விரித்து ஆடும் மயிலைச் சுட்டிக்காட்டி "அதோ, பாருங்க. அது. ஆடுதே அந்த மயில்தான். தெரிஞ்சுதா?" என்றாள்.

சனாதன் நெடுமூச்செறிந்து, "தெரிஞ்சு என்ன ஆகப்போவுது? நல்லது. இப்ப இன்னொரு யோசனை சொல்றேன் அதாவது. இன்னொரு வேண்டுகோள்."

சனாதன் அவளிடம் தன் திட்டத்தை எடுத்துச் சொன்னான்—பூல்பத்தி மிகுந்த ஆவலுடனும், உற்சாகத்துடனும் கேட்டுக்கொண்டே சுவர்ச்சித்திரப் பெண்மயில்மீது வண்ணம் தீட்டிக் கொண்டிருந்தாள்.

பெண்மயில் இறகை விரித்துக்கொண்டு அகவுவதாக சனாதனுக்குத் தோன்றியது. மயிலின் அகவல்கேட்டு அவன் உள்ளமும் மெல்ல 'பிஜுவன்' பாட்டை மெல்ல இசைத்தது. மாந்தோப்பில் ஊஞ்சலாடியவாறு இளம் பெண்கள் பாடும்பாட்டு—மேகம் சூழ்ந்த அவனது இதய ஆகாயத்தில் வெகுநேரம்வரை ரீங்காரம் செய்து கொண்டிருந்தது—"பிஜுவன குஹுக் மயூர்."

கிராமத்தில் மீண்டும் ஒரு புதிய செய்தி. "இல்லேப்பா!

பூல்பத்தியின் அம்மா கிராமத்தை விட்டுப்போகமாட்டா! சனாதன் இந்த கிராமத்திலயே ஒரு சென்டர் திறக்க முடிவு எடுத்தாச்சு. பட்னா, டில்லி, கல்கத்தாவிலிருந்து தேர்ந்தெடுத்த பெண்கள் மூணுமாசம் பயிற்சிக்காக இங்கே வருவாங்க. பூல்பத்தி அம்மாவுக்கு வீட்டிலிருந்த படியே ஐந்நூறு–ஆயிரம் ரூபாய் சம்பளம் கிடைக்கும். அந்தப் பெண் குழந்தைகளுக்கு கட்டணம் வாங்காமல் பயிற்சி கொடுப்பாங்க."

இந்தச் செய்தி பேப்பரிலும் அச்சானது. பத்ரி பகத் கிராம மக்களுக்கு வாசித்துக் காட்டுகிறான். இம்முறை பேப்பரிலே கிராமத்தின் பெயரை முழுசா அச்சிட்டிருக்காங்க. மோகன்புரிலுள்ள மதுபனி ஆர்ட் சென்டரின் கட்டிடத்துக்கு அடிக்கல் நாட்டுவதற்காக பிரபல ஓவியர் ஹுசைன் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்."

செய்தியைக் கேட்டுக்கொண்டிருந்த கிராமவாசிகள் உற்சாகமாக கோஷமிட்டனர்—"மோகன்புர் கிராமத்துக்கு ஜே. ஜே."

(1972)

Laser typeset at Capital Creations, New Delhi and
printed at Shivam Offset, New Delhi